# இன்பரசக் கோர்வை.

இதன் விலை ரூபா 1.

இதில்
அடங்கிய புத்தகங்கள்
முழுதும்

சிறுமணவூர்,

## முனிசாமிமுதலியாரால்

இயற்றப்பட்டு



தமது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

நெ-12. சட்டண்ணனாய்க்கன் தெருவு
சூளை- மதிராஸ்.

**Pandit C. Munisawmy Mudaliar's Co.,**
**PERAMBUR BARRACKS POST MADRAS.**
**1909.**

சிறுமணவூர்

# முனிசாமிமுதலியாரவர்களது

# சொந்தப்பதிப்பு புத்தக விளம்பரம்.

| | ரூ | அ |
|---|---|---|
| பிரபஞ்சவுற்பத்தி தமிழ் | 2 | 0 |
| ஷை இங்கிலீஷில் | 2 | 0 |
| ஷை தெலுங்கில் | 1 | 0 |
| வைத்தியசிகாமணி இத | 3 | 0 |
| சோதிடசிகாமணி ஷ | 3 | 0 |
| வேதாந்தஜட்ஜிமெண்டு | 1 | 0 |
| உலகவிசித்திரக்கதை | 1 | 0 |
| இன்பரசக்கோர்வை | 1 | 0 |
| கைத்தொழில்சாஸ்திரம் | 1 | 0 |
| விஷவயித்ய சிந்தாமணி | 0 | 12 |
| சரீரசாஸ்திரம் | 0 | 8 |
| சுகந்தபரிமளசாஸ்திரம் | 0 | 8 |
| பதிவிரதை சரித்திரம் | 0 | 12 |
| மூலிகைமர்மம் | 0 | 8 |
| நவகண்ட ஆரூடம் | 0 | 8 |
| நஷ்டஜாதககணிதம் | 0 | 8 |
| சண்டாளர் சகவாசம் | 0 | 8 |
| தெய்வகுணவெளிச்சம் | 0 | 8 |
| இராஜ வம்ச பரம்பரை | 0 | 10 |
| கண்கண்டுவித்தை 1000 | 0 | 10 |
| நாரதர்கலகம் 2-பாகமும் | 0 | 8 |
| அகடவிகடசம்சாரி | 0 | 4 |
| சகுனசாஸ்திரம் | 0 | 4 |
| ருதுஜெனன ஜாதகம் | 0 | 4 |
| திருநேத்திர சிந்தாமணி | 0 | 4 |
| மதிகெட்டாநாடகம் | 0 | 5 |
| வன்னியநாடகம் | 0 | 8 |

| | ரூ | அ. |
|---|---|---|
| திருத்தணி சந்நதிமுறை | 0 | 8 |
| மாமாங்கபுராண வசனம் | 0 | 4 |
| சுருக்குப்பஞ்சபட்சி | 0 | 4 |
| வயித்திய சத்தகராதி | 0 | 4 |
| சகாதேவர்சோதிடநாடி | 0 | 6 |
| நூறுவருஷபஞ்சாங்கம் | 0 | 2 |
| நவக்கிரகபடம் | 0 | 2 |
| காசிபடம் | 0 | 1 |
| 1008-சிவாலிங்கம்படம் | 0 | 4 |
| மாமாங்கப்படம் | 0 | 1 |
| பரமபதப்படம் | 0 | 1 |
| ஏழுமலைவெண்பா | 0 | 1 |
| வியாசன் விபரீதப் | 0 | 4 |
| ருஷியாஜப்பான்யுத்தம் | 0 | 4 |
| கொழுத்தச்சிறிப்பு | 0 | 6 |
| யூநானி அனுபோகவயித் | 0 | 8 |
| ஜகந்தர்ஷா சரித்திரம் | 0 | 8 |
| சமயல் சாஸ்திரம் | 0 | 8 |
| சிவவாக்கியம் 1000. | 0 | 8 |
| இராமாயணம் சுத்தப் பதிப்பு படங்களுடன் | 4 | 0 |
| விராடபர்வம் படம் | 0 | 12 |
| பட்டணத்தார் புராணம் படம் | 0 | 12 |
| சாட்சி ஆக்ட்டு | 0 | 12 |
| தஸ்தாவேஜுகளின் சட்டம் | 1 | 4 |
| தேவஸ்தான ஆக்ட்டு | 0 | 4 |

சிறுமணவூர் - முனிசாமி முதலியார் கம்பேனி,

பேரம்பூர் பாரேக்ஸ் போஸ்டு, மதராஸ்.

உ

தெய்வமேதுணை.

# திருத்தணிகை

சிவசுப்ரமணியக்கடவுள்பேரில்

## மாதப்பதிகம், வாரப்பதிகம்,

தணிகாசலக்கண்ணிகள்.

இஃது,

சிறுமணவூர்,

## முனிசாமிமுதலியா

ரவர்களால் இயற்றப்பட்டு,

தமது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1905.

எமது அச்சுக்கூடத்தில் விற்பனைக்குத்தயாராயிருக்கும்

# புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| இராமாயணம் கிளேஸ் 2-வாலியம் ஒஸ்திபதிப்பு | 4 | 0 | 0 |
| சாதாரண பாரதம் 4-வாலியம் | 4 | 0 | 0 |
| இந்துலா [அச்சிலிருக்கிறது] | 4 | 0 | 0 |
| சோதிடசிகாமணி ஒஸ்திபதிப்பு | 3 | 8 | 0 |
| இங்கிலீஷ், தமிழ் வைத்தியசிகாமணி ஒஸ்திபதிப்பு | 3 | 0 | 0 |
| இந்தியன் பினல்கோட் ராயல் ஒஸ்திபதிப்பு | 3 | 0 | 0 |
| கிராம முனிசீப்கோர்ட் ராயல் கிளேஸ் | 3 | 0 | 0 |
| கிரிமினல்கோர்ட் சட்டம் [அச்சிலிருக்கிறது] | 2 | 0 | 0 |
| பிரபஞ்சவுற்பத்தி ஒஸ்திபதிப்பு | 2 | 0 | 0 |
| சாதாரண இராமாயணம் | 1 | 8 | 0 |
| உலகவிசித்திரக்கதை ஒஸ்திபதிப்பு | 1 | 0 | 0 |
| விக்கிரமாதித்தன் கதை கிளேஸ் | 1 | 0 | 0 |
| பதிவிரதைகள் சரித்திரம் | 0 | 12 | 0 |
| விராடபர்வம் ராயல் 8-பேஜ் லெத்தோபடத்துடன் | 0 | 12 | 0 |
| பட்டணத்தார்புராணம் ராயல் 16-பேஜ் லெத்தோபட | 0 | 12 | 0 |
| பார்வதிபரணியமென்னும் விஷவைத்தியசிந்தாமணி | 0 | 12 | 0 |
| நஷ்டஜாதகம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| நவகண்ட ஆரூடம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| மூலிகைமர்மம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| திருத்தணிகைச் சன்னதிமுறை திக்கு | 0 | 8 | 0 |
| சரீரசாஸ்திரம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| சிவவாக்கியம் 1000-ம்பாடல்கள் கிளேஸ் | 0 | 8 | 0 |
| மனமோகனக்கண்ணாடி கிளேஸ் | 0 | 8 | 0 |
| ஜெகந்தர்ஷா கிளேஸ் | 0 | 8 | 0 |
| புலவுநூல் இந்தியா சமையல்சாஸ்திரம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| கண்கட்டுவித்தை | 0 | 6 | 0 |
| ஷை 2-ம் பாகம் | 0 | 6 | 0 |
| சகாதேவர் சோதிடநாடி | 0 | 6 | 0 |
| திருநேத்திரசிந்தாமணி | 0 | 5 | 0 |
| பெண்கள் ருதுஜெனனஜாதகம் | 0 | 4 | 0 |
| சர்வபிரயாண சகுனசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| அகடவிகட சம்சாரி | 0 | 4 | 0 |
| வாந்திபேதி நிவாரணு | 0 | 2 | 0 |
| சுருக்குபஞ்சபட்சி | 0 | 2 | 0 |
| சைவானுஷ்டானவிதி | 0 | 2 | 0 |
| அவிவேகபூரணகுருகதை | 0 | 1 | 6 |
| விபூதி ருத்திராட்ச மகத்துவம் | 0 | 1 | 3 |

இப்படிக்கு,

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்,

நெ. 12. சட்டண்ண நாய்க்கன் வீதி,

தூனை போஸ்டு, மதிராஸ்.

உ

தெய்வமே துணை.

# தணிகாசலக்கடவுள்

பேரில்,

## மாதப்பதிகம்.



வேண்பா.

தணிகா சலமேவுந் தற்பரனை வேண்டித்
துணிவா யிருபதிகஞ் சொல்ல—மணிசேர்
பணிதுலங்கு தோளான் பகரானை மாமுகன்ற
ளணியாய் தலைக்கணிகு வாம்.

சித்திரைமாதம்.

அத்திமுகத்தோ னருந்துணைவாவிவ் வகிலமெல்லாஞ்
சுத்தியொருநொடிக் குள்ளேவலஞ்செய்த சூத்திரனே
முத்தமிழ்க்கீர னிடர்தீர்க்கத்தட்சண முயன்றதுபோல்
சித்திரை மாதம் வருவாய்தணிகையிற் சேவகனே.

## வைகாசிமாதம்.

கையாறநின்கழல் போற்றிசெய்தேனென் கனவிலெல்லாம்
மெய்யாகநீவந்த தின்மையென்றுலிந்த மேதினியில்
செய்யாவினையென்ன செய்திருந்தாலுமச் சிற்றமற்று
வையாசிமாதம் வருவாய்தணிகையில் வாழ்பவனே.

## ஆனிமாதம்.

மானிலமளந்த மான்மருகாயிந்த மானிலமும்
ஞானியுமுனிவரும் நான்முகனுந்தொழு நாயகனே
தேனில்விழுந்த யீப்போல்திகைத்துனைத் தேடுகின்றேன்
ஆனிமாதத்தில் வருவாய்தணிகையி லாண்டவனே.

## ஆடிமாதம்.

ஓடியுலாவும் பருவத்திலேயிந்த வூழ்வினைதா
னோடித்தொடர்ந்து தையோயிதற்கென்ன நானறிவேன்
பாடித்துதிக்கும் பதங்கொடுத்தாயந்தப் பக்குவம்போல்
ஆடிமாதத்தில் வருவாய்தணிகையி லாண்டவனே.

## ஆவணிமாதம்.

சேவலங்கொடியுடை சேவகனேதுதி செய்பவர்க்குங்
காவடிக்கொண்டு வருமடியார்க்குங் கருணைவைத்து
மாவினையாவையுந் தீர்க்கவென்றேமலே மேவிநின்றாய்
ஆவணிமாதம் வருவாய்தணிகையி லானந்தனே.

## புரட்டாசிமாதம்.

இருட்டானமேனி யசுரரைச்சாய்த்து யிமையவர்மேல்
அருட்பார்வைநோக்கிய யாண்டவனேயடி யேனேவினை
வெருட்டாமல்காக்க வேண்டுகின்றேன்வெற்றி மாமயில்மேல்
புரட்டாசிமாதம் வருவாய்தணிகையிற் புண்ணியனே.

## ஐப்பிசிமாதம்.

கப்பியவூழ்வினைத் தீர்ப்பையென்றேநின் கமலமதில்
ஒப்புவித்தேன்மனத் துள்ளதெல்லாமிகு வுத்தமனே
தப்பிதமெத்தனை செய்திருந்தாலுநின் தஞ்சமென்றேன்
ஐப்பிசிமாதம் வருவாய்தணிகையி லற்புதனே.

## கார்த்திகைமாதம்.

தீர்த்தமனேகங்கள் மூழ்கிவந்தேன்வினை தீர்ந்திலையால்
மூர்த்திகண்மூவர் முதல்வனுக்கேமறை முடிவுரைத்து
கீர்த்திவகித்த சண்முகனேகதி வேறறியேன்
கார்த்திகைமாதம் வருவாய்தணிகையிற் காவலனே.

## மார்கழிமாதம்.

சீர்மலிந்தோங்கு மூலகமெல்லாநின் சேவடிக்காய்
கார்மலிந்தோங்கு வண்ணமன்றேயின்பக் கட்டுரையால்
ஏர்மலிந்தோங்கு கவிவாணரன்பர்சொல் லேற்றதுபோல்
மார்கழிமாதம் வருவாய்தணிகையில் மன்னவனே.

## தைமாதம்.

பொய்யானவாழ்க்கையை மெய்யாகநம்பியிப் பூதலத்தில்
மையாடுகண்ணியர் மயலால்மெலிந்து மயங்குகின்றே
னையாவுனையன்றி திக்கறியேன்வினை யார்தவிர்ப்பார்
தைமாதந்தன்னில் வருவாய்தணிகைத் தயாபரனே.

## மாசிமாதம்.

பூசித்திறைஞ்சு மடியாரிருதயம் பூரிக்கவன்பு
நேசித்துவந்து வினையுங்கவலையும் நீக்குகின்ற
தேசிகனேதெய்வ நாயகனேயுனைத் தேடுகின்றேன்
மாசிமாதத்தில் வருவாய்தணிகையில் மாமணியே.

## பங்குனிமாதம்.

எங்கெங்குமோடியும் வினையகலாமலென் னிருதயத்தை
பங்கிட்டுநின்மலர் பதத்தில்வைத்தேனிது பத்தியமாம்
மங்களவள்ளியுந் தெய்வானையோடு மனமகிழ்ந்து
பங்குனிமாதம் வருவாய்தணிகையிற் பண்ணவனே.

## மாதப்பதிகம் - முற்றியது.



# வாரப்பதிகம்.



## ஆதிவாரம்.

நீதிக்கிசைந்த தெய்வமென்றேயிந்த நீணிலத்தோர்
ஓதித்துதிக்கு முண்மையினுலெந்த னூழ்வினையைச்
சோதித்துநீக்கிச் சுகத்தைக்கொடுக்கநற் றேகையுடன்
ஆதித்தவாரம் வருவாய்தணிகையி லாண்டவனே.

## சோமவாரம்.

பொங்குகடல்சூ ழுலகமெல்லாமுன்னைப் போற்றுதலால்
அங்கந்தளர்ந்துமிக மெலிந்தடியேனுனக் கபயமென்றேன்
எங்குந்திரிந்து உழலாமலென்முறை யேற்றருளித்
திங்கட்கிழமை வருவாய்தணிகையிற் றேசிகனே.

## மங்களவாரம்.

ஒவ்வாதவாசைப் பெருவாரியில்நெஞ்சு வூஞ்சலிட்டால்
எவ்வாறுநல்ல நிலையினிற்பேனென்ன வூழ்வினையோ
இவ்வாறுயென்னை யயலாய்நினைக்கிலிங் காருதுணை
செவ்வாய்க்கிழமை வருவாய்தணிகையிற் சேவகனே.

## புதவாரம்.

இதமாகநெஞ்சுக் கெத்தனைச்சொன்னு மிவ்வுலகைச்
சதமாகவேநம்பி வாதிக்குதேயிந்த சஞ்சலத்தை
பதமாகநீக்கி நினையேதொழப்பச்சை மாமயில்மேல்
புதவாரந்தன்னில் வருவாய்தணிகையிற் புண்ணியனே.

## குருவாரம்.

ஒருவருந்துணையில்லை யில்லையென்றேயுந்த னுயர்பதத்தை
மருவிப்பிடித்து மன்றாடுவேன்மன மேனிரங்காய்
அருமாமறைக்கு ஆதியனேயென்னை யாதரிக்கக்
குருவாரந்தன்னில் வருவாய்தணிகைக் கொற்றவனே.

### சுக்கிரவாரம்.

கள்ளமனத்தின் கவலையுந்தேகக் கடுவினையும்
எள்ளத்தனையு மில்லாமறக்காக்க யிதுசமயம்
வள்ளிப்புனத்தில் வெகுவித்தைசெய்த வாலிபனீ
வெள்ளிக்கிழமையில் வருவாய்தணிகையில் வேலவனே.

### சனிவாரம்.

அனியாயநவக்கிர கச்சேட்டையினல்நொந் தடுக்குலைந்தேன்
முனியாமலென்முறைக் கேட்டருள்வாய்குரு மூர்த்தியனே
இனியேதெமக்குக் குறையென்னவென்றிரு மாந்திருக்கச்
சனிவாரந்தன்னில் வருவாய்தணிகையிற் சண்முகனே.



பன்னிருமாதமும் வாரங்களேழும் பகலிரவும்
உன்னிருதாட்டொழுங் கடமையுள்ளேனிது வுண்மைகண்டாய்
என்னிருதயத்துக் கவலையுமூழு மெடுத்தெறிந்து
முன்னின்றுகார்க்குங் கடனெந்தகாலமு முன்னதுவே.

### வாரப்பதிகம்-முற்றிற்று.



# தணிகாசலக் கண்ணிகள்.

செல்வமணியே சிவமணியேபல்லுயிரும்
சொல்லுமணியேயென் சுவாமிதணிகாசலனே. (1)

போற்றவறியேன் புகழறியேனென்குறையை
சாற்றவறியேனென் சுவாமிதணிகாசலனே. (2)

பக்தியறியேன் பணியறியேன்வேறுவித
சித்தியறியேனென் சுவாமிதணிகாசலனே. (3)

ஓதவறியேனொன்றுநூலுங்கற்றறியேன்
சூதுமறியேனென் சுவாமிதணிகாசலனே. (4)

தருணமிதுவினையை தாளமுடியேனடியேன்
சரணஞ்சரணமையா சுவாமிதணிகாசலனே. (5)

பொருக்கமுடியேனென் பழவினையையாராய்ந்து
சுருக்கிலகற்றுமையா சுவாமிதணிகாசலனே. (6)

கல்லோயிரும்போதான் கடுமனமோதொண்டர்களால்
சொல்லுமுறைக்கேளாதோ சுவாமிதணிகாசலனே. (7)

நீதிக்கடவுளென்று நின்னடியைத்தேடிவந்தால்
சோதிக்கக்கூடாதென் சுவாமிதணிகாசலனே. (8)

மன்னுயிருக்கோரிடுக்கும் மனமறியநானறியேன்
என்னைவினைச்சூழ்ந்த தேதுதணிகாசலனே. (9)

பிறப்பதற்குமுன்னிழைத்த பாபமோதாய்வயற்றில்
உருப்பெடுத்தபின்னறியே னுண்மைதணிகாசலனே. (10)

வருமைப்பிடித்தாலும் வயிற்றைவளர்த்திடுவேன்
கருமவினைதீர்ப்பாய் கனகதணிகாசலனே. (11)

என்னையொருபொருட்டா யெண்ணிநீவந்துரைத்த
நன்மைமறந்துவிட்டேன் ஞானதணிகாசலனே. (12)

உன்னைச்சிலகா லுரைக்கமறந்ததினல்
முன்னைவினைக்காளானேன் மோனதணிகாசலனே. (13)

பட்டேன்வெகுகோடி பட்டுகெட்டுநின்னடியை
தொட்டேனினிகார்ப்பாய் துரியதணிகாசலனே. (14)

சிறுமணவூரொன்றளவிற் செகமறிந்ததல்லாது
ஒருமணமும்பெற்றேனோ வுரைசெய்தணிகாசலனே. (15)

தெய்வமே துணை.

உ

தெய்வமேதுணை.

திருத்தணிகை

சிவசுப்பிரமணியக்கடவுள்பேரில்,

# வேலாயுதக்கண்ணிகள்.

இஃது,

சிறுமணவூர்

## முனிசாமிமுதலியார்

அவர்களால்

இயற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1905.

உ

தெய்வமேதுணை.

திருத்தணிகை

சிவசுப்ரமணியக்கடவுள்பேரில்,

# வேலாயுதக்கண்ணிகள்.

சீர்பூத்தலோகமெல்லாஞ் சிவகுருவென்றுன்னுடைய
பேர்பூத்திருப்பதென்ன பெருமைவேலாயுதனே. 1

திருமருவுலோகமெல்லாந் தேடுமடியார்கள்முன்னே
குருவடிவங்கொண்டுலவுங் குருவேவேலாயுதனே. 2

அண்டர்முதலோர்தொழுமுன் னடியார்க்கடிமைசெயும்
தொண்டரொடுநான்கலக்க துணிந்தேன்வேலாயுதனே. 3

உன்னினைப்புமுன்றுதியு முன்புகழுமன்றியினி
பின்னையொருதெய்வமிலை பேசேன்வேலாயுதனே. 4

தினையளவுநேரமுந்தன் றிருமுகத்தைக்காட்டமனம்
நினையாதிருப்பதென்ன நெறியோவேலாயுதனே. 5

சத்தியமாய்நின்னடியைச் சார்ந்தேனென்றுசொன்னபின்னும்
இத்தனைக்கடூரகுண மேனோவேலாயுதனே. 6

கனியாதநெஞ்சமுனக் கல்லவென்றுநான்மறையும்
துணிவாகசொல்லுமெந்தன் துரையேவேலாயுதனே. 7

பொறிவழியேசென்றுயிந்த பொய்யுலகவாழ்வைநம்பி
அறிவழிந்தேன்றிருத்தணிகை யரசேவேலாயுதனே. 8

தாயுமிலை தந்தையுமிலை தான்றனியேனுன்னடிமை
சேயனெனைக்காருமையா சிவகுருவேலாயுதனே. 9

அன்னையுநீ தந்தையுநீ ஆதரிக்குந்தெய்வமுநீ
உன்னையன்றிவேறுதுணை யுண்டோவேலாயுதனே. 10

மைதிகழுமின்விழியார் மையலிலேசொக்கிமனம்
பொய்வழியேகெட்டலைந்துப் போனேன்வேலாயுதனே. 11

உன்னைநினைந்துநித முன்புகழைப்பாடாமல்
பொன்னைநினைந்துகெட்டுப் போனேன்வேலாயுதனே. 12

காசின்மேலாசையினாற் காலமெல்லாமென்மனதை
வேசிபோலேயலைய விட்டேன்வேலாயுதனே. 13

நல்லோருறவைநித நாடாமலென்மனதைச்
செல்லாதகாசுநிகர் செய்தேன்வேலாயுதனே. 14

பொல்லாதபுன்மனந்தான் போனவழிநானலைந்தேன்
எல்லாம்பொருத்தருள்செ யெந்தாய்வேலாயுதனே. 15

விட்டகுறையில்லையென்ற வீணர்களின்சொல்வழியே
தட்டலைந்துபோனேன் தடுத்தாள்வேலாயுதனே. 16

ஆறிரண்டுதோளுமுந்த னற்புதவேலாயுதமும்
நேரிருந்துநான்பார்க்க நினைத்தேன்வேலாயுதனே. 17

அன்றடியேன்மீதிருந்த வாசையெல்லாமுந்தனுக்கு
இன்றுரகலவைத்தா ரெந்தாய்வேலாயுதனே. 18

தீராப்பிணியதனால் திகைத்திருந்தபோதெனக்கு
ஆர்சொல்லிநீயவிழ்த மளித்தாய்வேலாயுதனே. 19

தர்மவைத்தியஞ்செய் தணிகைமலைவேலனென்று
சர்வவுயிர்சொல்வதிது சத்தியம்வேலாயுதனே. 20

பண்டிதனார்தொண்டனென்று பாரறியநானிருக்க
உண்டோவினையணுவு முனைசெய்வேலாயுதனே. 21

உன்னுடையதொண்டனென்று வூரறியநானிருக்க
என்வினைதீராவிடிலோர் யேச்சாம்வேலாயுதனே. 22

தீராதவியாதியெல்லாந் திருநீற்றினாலகற்றும்
பேறொடுத்தநீயெனது பிணிதீர்வேலாயுதனே. 23

பட்டதெலாம்போதுமென்றுன் பாதமலரைப்பிடித்தேன்
இட்டவழைத்தாளுமையா கதிர்வடிவேலாயுதனே. 24

மெய்சோரநின்னடியை மெய்யாகநான்பிடித்தேன்
கைசோரவிட்டுவிட்டால் கதியார்வேலாயுதனே. 25

நெஞ்சமறிவாயெந்த னினைப்பறிவாய்நானேழை
கொஞ்சமென்றுதள்ளாதே யென்குருவேலாயுதனே. 26

ஆராய்ந்துயென்பிணியை யணுவளவுமில்லாமல்
சீராகத்தீர்த்தருள்வாய் செந்தில்வேலாயுதனே. 27

கோடானகோடியுன்னைக் கூடுமடியார்களெல்லாம்
வாடாதிருக்கயென்மேல் வாதேோவேலாயுதனே. 28

தணியாதகோபமெல்லாந் தணிந்ததிருத்தணிகை
மணியேயுன்னடியைவிட மாட்டேன்வேலாயுதனே. 29

விடமாட்டேனுன்னடியை வினைப்பயனையெள்ளவும்
படமாட்டேனுன்கடைக்கண் பாரும்வேலாயுதனே. 30

ஆசாபாசங்களெனு மாழியிலேபாழுமனம்
மோசம்போகாமலொரு மொழிசொல்வேலாயுதனே. 31

இழுக்குடையவஞ்சநெஞ்ச யீனர்களைச்சேர்ந்துமனம்
அழுக்கடைந்துநின்றே னருள்செய்வேலாயுதனே. 32

ஆதாரமில்லையென்று ஆயிரம்முறையுரைத்தும்
சூதாயிருப்பதென்ன சொல்லும்வேலாயுதனே. 33

எத்தனையோவன்பிறவி யெடுத்தெடுத்துபட்டதுயர்
அத்தனையும்நீயறிந்த தன்றோவேலாயுதனே. 34

பதறுதிருக்கவெகு பாடுபட்டும்வஞ்சமனம்
சிதறியேபோகுதென்ன செய்வேன்வேலாயுதனே. 35

கொல்லாவிரதமதை கொள்ளவெகுவாசைகொண்டேன்
கல்லாதநெஞ்சுநில்ல காணேன்வேலாயுதனே. 36

ஆழியிலேவிட்டெறிந்த அருந்துரும்புபோலேமனம்
பாழிலலைவதென்ன பாவம்வேலாயுதனே. 37

வில்லானதைப்பழிக்கும் வேல்விழிசேர்மாதர்களின்
சொல்லால்மயக்கமுறுஞ் சூதேன்வேலாயுதனே. 38

வரைராஜன்கண்ணளித்த வாழ்வேதிருத்தணிகை
துரையேயுன்பாதமலர் தொட்டேன்வேலாயுதனே. 39

சொல்லாதுஞ்சொல்லிநிதஞ் சூழ்ந்தாலுமுன்மனது
கல்லோயிரும்போயென்ன காணேன்வேலாயுதனே. 40

கல்லேனுமெள்ளளவு கரையுமேயுன்மனது
பொல்லாதுபொல்லாதினி பொருக்கேன்வேலாயுதனே. 41

தாயாகுமுன்னருளைத் தாகமாய்நாடுமென்மேல்
ஆயாசமேன்தணிகை யையாவேலாயுதனே. 42

தீராவிசாரமென்னுந் திரைநடுவேசிக்கிமனம்
நீராய்க்கரையுதையோ நிலைசெய்வேலாயுதனே. 43

என்றுன்னருள்சுரக்கு மென்றுயென்மனம்பழுக்கும்
அன்றல்லோநான்மனித னானேன்வேலாயுதனே. 44

கல்லளவாம்நெஞ்சுடைய கன்னியர்கள்வஞ்சமனச்
சொல்லளவைநம்பில்வெகு சூதாம்வேலாயுதனே. 45

பாரைநிகர்வஞ்சநெஞ்சப் பாவையர்கள்சொல்லைநம்பி
யார்தான்கரையடைந்தா ரருமைவேலாயுதனே. 46

சேற்றிற்றவளைமிகச் சேர்ந்திருந்தாலுங்கமலம்
பூத்தகுணங்கண்டருந்தப் போமோவேலாயுதனே. 47

காமன்செயல்விளைத்துக் கண்மயக்கும்மாதர்களோ
ஏமனிடதூதுவரா மெந்தாய்வேலாயுதனே. 48

பட்டுபட்டுயேழைநெஞ்சம் பாவையர்கள்தன்வசமே
எட்டியெட்டிப்போகுதென்ன யெழுத்தோவேலாயுதனே. 49

கண்மயக்குமெய்மயக்குங் கட்டழகும்சேர்மடவார்
புண்ணிலழுந்திப்புண்ணாய்ப் போனேன்வேலாயுதனே. 50

ஆசைவலைவீசுமந்த ஆரிழைமார்மெய்மயக்க
மோசமதைநம்புவது மோசம்வேலாயுதனே. 51

பொன்னால்மிகமயக்கிப் பொய்வழியேதள்ளுமந்த
மின்னாரைவிட்டவரே மேலோர்வேலாயுதனே. 52

விதியாகிலுந்தடுக்க வழிதோற்றுமாதரின்சொல்
மதியைத்தடுப்பதொரு மலைதான்வேலாயுதனே. 53

பொய்யுறவுகொண்டுநிதம் பேசுமடவார்கள்விஷப்
பையுறவைத்தள்ளவழிப் பண்ணும்வேலாயுதனே. 54

நன்றியற்றவஞ்சநெஞ்ச நாய்களெனும்பெண்கள்தனக்
குன்றுகுறித்தேடுமெண்ணங் குறைப்பாய்வேலாயுதனே. 55

குன்றோபெருமலையோ கோளமோமாதர்மயல்
என்றேதுலைப்பதுநா னேழைவேலாயுதனே. 56

எள்ளளவுநீகிருபை யெண்ணினலென்னுடைய
கள்ளமனங்கடிகையிலே கட்டும்வேலாயுதனே. 57

அறியேன்சிறியேன னாதாரம்யாருமில்லேன்
தெரியேனொருவழியும் தேறேன்வேலாயுதனே. 58

பண்டுவிட்டயென்குறைதான் பற்றுமோபற்றியுன்னை
கண்டுவிட்டாலட்சணமே கனவான்வேலாயுதனே. 59

ஐயாவுன்றிருவருளை யணுவளவுவேண்டிமனம்
நெய்யாயுருகுதென்ன நேரம்வேலாயுதனே. 60

கையாறநின்னடியைக் கட்டிமனப்பூசைசெய்து
மெய்யாறயென்னினைவு மெய்தான்வேலாயுதனே. 61

கண்ணுறநின்னுடைய கமலமலர்கண்டழகை
பண்ணுறப்பாடவெகு பட்சம்வேலாயுதனே. 62

வானோர்துயரகற்றி வாழ்வளித்ததெய்வமென்னைத்
தானேவலையவைத்தாய் தருமோவேலாயுதனே. 63

இந்திரனைக்காத்தரசு யேற்றிவைத்தவுந்தனுக்கு
மைந்தனிடர்தீர்ப்பதொரு மலையோவேலாயுதனே. 64

நவின்றதிருமந்திரத்தை நாவிலெழுதாமல்
செவியிலுரைத்ததென்ன செயலோவேலாயுதனே. 65

ஓதத்துணிந்துனது வுள்ளமகிழ்ந்துவந்தும்
காதிலுரைத்ததென்ன கபடோவேலாயுதனே. 66

தெய்வமேநின்னருளை தேடுமிந்தநாளில்தயை
செய்யாதிருக்கிலென்ன செய்வேன்வேலாயுதனே. 67

அந்தநாள்வந்துரைத்த வருமையுபதேசமதை
இந்தநாள்சொல்லமன மேனிலைவேலாயுதனே. 68

அறிவென்பதில்லாத வந்நாளிற்சொன்னதினால்
குருவென்றறியாமல் குறைந்தேன்வேலாயுதனே. 69

சிறுவயதில்நீதயவு செய்தருளியென்தனுக்கு
இருவிசையிற்சொன்னதுவு மிழந்தேன்வேலாயுதனே. 70

திரண்டவுடனுயகனைத் தேடுதல்போலுன்னடியை
வரண்டுகிறேனினியொருக்கால் வருள்செய்வேலாயுதனே. 71

அறியாச்சிறுவயதி லாசையாய்ச்சொன்னதுமா
பிரியமென்றாலுமது பேதம்வேலாயுதனே. 72

அக்காலுரைத்ததென்மே லன்புகுறியாகிலதை
இக்காலுரைக்கில்வெகு வியல்பாம்வேலாயுதனே. 73

நானுமுரைத்தனென்று நாளில்லாநாளதனிற்
றானேவுரைப்பதது தகுமோவேலாயுதனே. 74

போனதெல்லாம்போகுதுன்னை போற்றமனம்பக்குவந்தான்
ஆனநாளாகையினா லருள்செய்வேலாயுதனே. 75

தொட்டகுறையில்லையென்ற துட்டர்களின்சொல்வழிநான்
பட்டதையும்விட்டதென்ன பாபம்வேலாயுதனே. 76

நம்புமடியார்முகமே நாடாமல்நீயிருந்தால்
அம்புவியிலுன்னடியா ரார்தான்வேலாயுதனே. 77

கலியுகமீதென்றுமுகம் காட்டாமல்நீயிருந்தால்
நலியாரோவுன்னடியார் நன்றேவேலாயுதனே. 78

ஆடிச்சலித்து வசையாதபம்பரம்போல்
பாடிச்சலிப்பதென்று பகராய்வேலாயுதனே. 79

உன்னைநினைத்துவுயர்பதவிபெற்றவர்கள்
தன்னைநினைக்குமதி தாராய்வேலாயுதனே. 80

கொடுமையறியேன் குறும்பறியேனென்னையுமோர்
அடிமைகொள்ளல்வேண்டு மையாவேலாயுதனே. 81

அடிமைத்திறந்தா னடைந்தேனில்லையெனினுங்
கடமையுனக்கலவோ கண்டாய்வேலாயுதனே. 82

புத்திமயக்கம் பெருமயக்கந்தீர்த்தெனக்கு
பத்திமயக்கம் பகராய்வேலாயுதனே. 83

நிமையளவுநேரம் நில்லாமனக்குரங்கை
அமைத்தலுனதுகட னன்றேவேலாயுதனே. 84

பாசவலையிற் படுமனத்தின்பின்றொடர்ந்து
நாசமடைதல் நன்றேவேலாயுதனே. 85

உரைக்கவுரைக்கவென துள்ளமுடம்பிலுமுன்
திறத்தினினிப்பு திகட்டேன்வேலாயுதனே. 86

பொய்யேதிரண்டுவந்த புழுமரத்தைநின்னடிமைச்
செய்யாதிருக்கிலிது சேதம்வேலாயுதனே. 87

பூர்த்தமலர்மணமே பொன்னொளியேவிண்ணவரைக்
கார்த்ததுரையேயென் கண்ணேவேலாயுதனே. 88

கண்ணேகருத்தேயென் கருத்திலடங்காச்சுகமே
விண்ணோர்கள்போற்றும் விளக்கேவேலாயுதனே. 89

விளக்கேயருள்திரண்ட வெள்ளமேயாராலும்
அளக்கறியாலோகமெல்லா மமர்ந்தவேலாயுதனே. 90

காணாத்திரவியமே கற்கண்டேசர்க்கரையே
சேணாடர்போற்றுமெழில் செல்வவேலாயுதனே. 91

தித்திக்குந்தேனே திகட்டாததெள்ளமுதே
முத்திப்பெருந்துணையே முருகாவேலாயுதனே. 92

உற்றதுணையில்லே னுறவில்லேனுண்மையிது
பெற்றதுணையே பெரியோய்வேலாயுதனே. 93

பெரியதுணையென்றே பிடித்தேனுன்கஞ்சமலர்
துரியநிலையெனக்குத் தூண்டாய்வேலாயுதனே. 94

தெய்வமுதலே திருவருளின்வித்தேநான்
உய்யும்வகைசற்றே யுரைசெய்வேலாயுதனே. 95

தாய்முகத்தைக்காணு தருங்குழவிபோலவேயும்
சேய்முகத்தைப்பாராய் சிவமேவேலாயுதனே. 96

செய்பிழைகளெத்தனைதான் செய்தாலுமீன்றெடுத்த
தாய்பொறுப்பளன்றோ தயைசெய்வேலாயுதனே. 97

என்னபிழைநா னிழைத்தாலுமுன்னையன்றி
பின்னைகதியுண்டோ பிரபுவேலாயுதனே. 98

பாயுமோநின்கருணை பாய்ந்தெனதுஆவலெல்லாம்
ஓயுமோநற்கதியு முண்டோவேலாயுதனே. 99

மன்னுயிரைத்தன்னுயிர்போல் மருவினினைக்குமந்த
நன்னெறியையென்னறிவில் நாட்டாய்வேலாயுதனே. 100

காதற்பெருகிக் கரையுமடியேற்குனது
பாதநிழலும் படுமோவேலாயுதனே. 101

படுமோநின்பாதநிழல் பட்டெனதுவூழ்வினையுங்
கெடுமோநினைவிடவுங் கதியார்வேலாயுதனே. 102

அல்லாதேயாகிலென தாசையெல்லாமுன்னடிமேற்
செல்லாதேசென்றதுநின் செயல்தான்வேலாயுதனே. 103

கல்வியறியேன் கருத்தறியேனுன்பெருமை
சொல்லவறிவேனோ ஜோதிவேலாயுதனே. 104

சொன்னதையேசொல்லும் சோலைக்கிளியதுபோல்
முன்னமடியார் முறைதான்வேலாயுதனே. 105

கொண்டிருக்குமெண்ணமெல்லாங் கூடவருள்செய்வதன்றி
கண்டிக்கவேண்டாமென் கர்த்தாவேலாயுதனே. 106

எண்ணியவென்னெண்ணமெல்லா மீடேறச்செய்யில்வெகு
புண்ணியமுண்டென்னைப் பெற்றவேலாயுதனே. 107

வஞ்சப்பொறிவழியே வாதாடுமென்மனதை
கொஞ்சந்திருப்புமையா குருவேவேலாயுதனே. 108

நில்லேனொருகடிகை நினையேனுன்றிருவருளை
பொல்லாமதியெனக்கேன் போட்டாய்வேலாயுதனே. 109

பெற்றதுணேயே பெருந்துணேயேபிறவியெலாம்
உற்றதுணேயேயென் னுயிர்த்துணேவேலாயுதனே. 110

நீலக்கலாபமிசை நின்னழகைப்பார்க்கவெகு
காலநினேப்பெனக்கு கண்டாய்வேலாயுதனே. 111

கணப்போதுமோர்நிலேயை கருதிநிலேநில்லாவென்
குணத்தைத்திருப்பிக் கொடுப்பாய்வேலாயுதனே. 112

காலேயிலும்வேல்மயிலுங் கடும்பகலும்வேல்மயிலும்
மாலேயிலும்வேல்மயிலும் மறவேன்வேலாயுதனே. 113

நின்றாலும்வேல்மயிலும் நிகழ்ந்தாலும்வேல்மயிலும்
உண்டாலும்வேல்மயிலு முண்மைவேலாயுதனே. 114

அடுத்தாலும்வேல்மயிலு மழைத்தாலும்வேல்மயிலும்
படுத்தாலும்வேல்மயிலும் பகர்வேன்வேலாயுதனே. 115

இருந்தாலும்வேல்மயிலு மெழுந்தாலும்வேல்மயிலும்
துறந்தாலும்வேல்மயிலுந் துறவேன்வேலாயுதனே. 116

குழைத்தாலும்வேல்மயிலுங் குறித்தாலும்வேல்மயிலும்
இழைத்தாலும்வேல்மயிலு மென்பேன்வேலாயுதனே. 117

சென்றாலும்வேல்மயிலுஞ் செய்தொழிலும்வேல்மயிலும்
நின்றாலும்வேல்மயிலும் நினேப்பேன்வேலாயுதனே. 118

நன்மலரைச்சாற்றிதொழும் நயமறியாப்பாவியென்றன்
சொன்மலரைச்சாற்றியருள் சுவாமிவேலாயுதனே. 119

பூத்தமலரெடுத்துப் போற்றவறியாவடியேன்
சாற்றுந்தமிழ்மலர்க்குச் சரணருள்வேலாயுதனே. 120

காலமலர்சாற்றக் கணக்கறியாவேழைதமிழ்க்
கோலமலரேற்பாய் குமரவேலாயுதனே. 121

சீதமலர்கொண்டுதொழுஞ் சிறப்பறியாவேழைநிதம்
ஓதுமலர்சாற்றியரு ளுண்மைவேலாயுதனே. 122

அஞ்சுமலர்தொடுக்கு மடியாருடன்கலக்கக்
கஞ்சமலர்தருவாய்க் கருணைவேலாயுதனே. 123

நருமலரால்நின்மலரை நாடித்தொழுமினிய
பொருமைதானென்றெனக்குப் பிறக்கும்வேலாயுதனே. 124

நித்தமலரெடுத்து நின்மலரைப்போற்றிசெயும்
புத்திதானென்றெனக்குப் பிறக்கும்வேலாயுதனே. 125

வேதமலர்தொடுத்து வீருபெற்றநின்னடியார்
பாதமலரொன்றெனக்குப் பலிக்கும்வேலாயுதனே. 126

மனத்தைப்பலிகொடுத்து மனக்கவலையற்றவர்கள்
இனத்தைக்கலப்பதுநா னென்றுவேலாயுதனே. 127

புல்லறிவாலின்னமென்னப் புகல்வேநானேழையந்தோ
சொல்லுமறிவிலையே சுந்தரவேலாயுதனே. 128

மனப்பழக்கமன்றியுந்தன் மலரடிக்குத்தொண்டுசெய்வா
ரினப்பழக்கமெள்ளளவு மில்லைவேலாயுதனே. 129

பாதநிழல்வேண்டியுன்னைப் பாடுமுனிசாமியென்னைச்
சோதனைச்செய்யாதேசிவ ஜோதிவேலாயுதனே. 130

தெய்வமேதுணை.

வேலாயுதக்கண்ணிகள்,

முற்றுப்பெற்றது.



உ

கடவுள் துணை.

திருவண்ணாமலை,

# உண்ணாமுலையம்மன் பதிகம்.

இஃது,

சிறுமணவூர்

## முனிசாமி முதலியார்

அவர்களால்

இயற்றப்பட்டு,



தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1905.

6

எமது அச்சுக்கூடத்தில் விற்பனைக்குத்தயாராயிருக்கும்

# புத்தகவிளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| இராமாயணம் கிளேஸ் 2-வாலியம் ஒஸ்திபதிப்பு | 4 | 0 | 0 |
| சாதாரண பாரதம் 4-வாலியம் | 4 | 0 | 0 |
| இந்துலா [அச்சிலிருக்கிறது] | 4 | 0 | 0 |
| சோதிடசிகாமணி ஒஸ்திபதிப்பு | 3 | 8 | 0 |
| இங்கிலீஷ், தமிழ் வைத்தியசிகாமணி ஒஸ்திபதிப்பு | 3 | 0 | 0 |
| இந்தியன் பினல்கோட் ராயல் ஒஸ்திபதிப்பு | 3 | 0 | 0 |
| கிராம முனிசீப்கோர்ட் ராயல் கிளேஸ் | 3 | 0 | 0 |
| கிரிமினல்கோர்ட் சட்டம் [அச்சிலிருக்கிறது] | 2 | 0 | 0 |
| பிரபஞ்சவுற்பத்தி ஒஸ்திபதிப்பு | 2 | 0 | 0 |
| சாதாரண இராமாயணம் | 1 | 8 | 0 |
| உலகவிசித்திரக்கதை ஒஸ்திபதிப்பு | 1 | 0 | 0 |
| விக்கிரமாதித்தன் கதை கிளேஸ் | 1 | 0 | 0 |
| பதிவிரதைகள் சரித்திரம் | 0 | 12 | 0 |
| விராடபர்வம் ராயல் 8-பேஜ் லெத்தோபடத்துடன் | 0 | 12 | 0 |
| பட்டணத்தார்புராணம் ராயல் 16-பேஜ் லெத்தோபட | 0 | 12 | 0 |
| பார்வதிபரணியமென்னும் விஷவைத்தியசிந்தாமணி | 0 | 12 | 0 |
| நஷ்டஜாதகம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| நவகண்ட ஆரூடம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| மூலிகைமர்மம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| திருத்தணிகைச் சன்னதிமுறை திக்கு | 0 | 8 | 0 |
| சரீரசாஸ்திரம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| சிவவாக்கியம் 1000-ம்பாடல்கள் கிளேஸ் | 0 | 8 | 0 |
| மனமோகனக்கண்ணாடி கிளேஸ் | 0 | 8 | 0 |
| ஜெகந்தர்ஷா கிளேஸ் | 0 | 8 | 0 |
| புலவுநூல் இந்தியா சமையல்சாஸ்திரம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| கண்கட்டுவித்தை | 0 | 6 | 0 |
| ஷை 2-ம் பாகம் | 0 | 6 | 0 |
| சகாதேவர் சோதிடநா | 0 | 6 | 0 |
| திருநேத்திரசிந்தாமணி | 0 | 5 | 0 |
| பெண்கள் ருதுஜெனனஜாதகம் | 0 | 4 | 0 |
| சர்வபிரயாண சகுனசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| அகடவிகட சம்சாரி | 0 | 4 | 0 |
| வாந்திபேதி நிவாரணி | 0 | 2 | 0 |
| சுருக்குபஞ்சபட்சி | 0 | 2 | 0 |
| சைவானுஷ்டானவிதி | 0 | 2 | 0 |
| அவிவேகபூரணகுருகதை | 0 | 1 | 6 |
| விபூதி ருத்திராட்ச மகத்துவம் | 0 | 1 | 3 |

இப்படிக்கு,

சிறுமணவூர்-முனிசாமிமுதலியார்,

நெ. **12.** சட்டண்ணநாய்க்கன் வீதி,

நூனை போஸ்டு, மதராஸ்.



உ

கடவுள் துணை.

# உண்ணாமுலையம்மன்பதிகம்.

பொன்னஞ்சுமேனியும் பொருப்பஞ்சுவடிவமும்
புவியஞ்சு கின்றநடையும்
புகழஞ்சுகரமுமிச் செகமஞ்சுமாய்கையும்
போரஞ்சு கின்றபடையும்
மின்னஞ்சுகூலமும் மீனஞ்சுபார்வையும்
மதியஞ்சு கின்றமுகமும்
மிடியஞ்சுகருணையுங் கொடையஞ்சுமீகையும்
மேதினி வளக்குமழகும்
பன்னஞ்சுபுகழுமிப் படியஞ்சுகமலமும்
பரமனொடு கொஞ்சுமொழியும்
பாரண்டமீரேழு மீன்றபார்வதியுனைப்
பாலனெவ் வாறுபுகழ்வேன்
அன்னமஞ்சுங்கிள்ளை புள்ளுமஞ்சும்அத்தி
அரியுமஞ்சும் சோலைசூழ்
அண்ணாமலைக்குரிய விண்ணோர்தமக்கரிய
உண்ணாமுலைக் கௌரியே 1

பரிதிமதியன்னைநீ பங்கயன்தாயிநீ
பாரே ழளந்தவளுநீ
பரமனதுமுடியிலுங் கையிலும்மெய்யிலும்
பாகத் தமர்ந்தவளுநீ
விரித்தமயிலேறிவிளை யாடுமுருகேசனொடு
விண்ணவரை யீன்றவளுநீ
வேதம்நீவேதமுத லாதிநீயென்னுடலி
லுறவாடு முயிரும்நீயே
கருவுநீகருவிலுறை யுருவுநீகடையிலே
காலனாய் வந்தவளுநீ
கருதரியரூபிநீ பொல்லாதநீலிநீ
கார்த்துரட் சிப்பவளுநீ

அறிவற்றசேயெனக் குறவுன்னையன்றியா
ரகிலத்தி லுரைசெய்யம்மே
அண்ணுமலைக்குரிய விண்ணோர்தமக்கரிய
உண்ணுமுலைக் கௌவுரியே. 2

கல்லாதபிள்ளைநெறி நில்லாதபிள்ளைநின்
கருணையறி யாதபிள்ளை
கற்றறிவிலாப்பிள்ளை சொற்சுவையிலாப்பிள்ளை
கஷ்டநிஷ் டூரபிள்ளை
பொல்லாதபிள்ளையறி வில்லாதபிள்ளையொரு
போக்குநீக் கற்றபிள்ளை
போக்கிரிப்பிள்ளையுனை நோக்காதபிள்ளைநான்
புத்தியில் லாதபிள்ளை
வில்லானதைப்பழித் திடுமடவரழலிலே
மெய்வலி வழிந்தபிள்ளை
மெய்யிலாப்பிள்ளையொரு பொய்விடாப்பிள்ளையெனின்
பெற்றாள் சலிப்புருவளோ
அல்லாதபிழைபொறுத் தாளுவார்பின்னெனக்
காருளா ருரைசெய்யம்மே
அண்ணுமலைக்குரிய விண்ணோர்தமக்கரிய
வுண்ணுமுலைக் கௌவுரியே. 3

மதியஞ்சிமனமஞ்சி மாய்கையெல்லாமஞ்சி
மண்டலச் செய்கையஞ்சி
மற்றுமுளகினைவஞ்சி கற்றெனவெலாமஞ்சி
மனதினுங் காரமஞ்சி
விதியஞ்சிவினையஞ்சி விகடருறவுக்கஞ்சி
வருகால னுக்குமஞ்சி
வினையென்றபெருவா ரிதிக்கஞ்சிவுனையன்றி
வேறில்லை யென்றுமஞ்சி
ததியென்றுவுந்தனிரு பாதகமலத்தடியில்
தஞ்சமென் றஞ்சிநின்றேன்
தாயாகிதந்தையாய் காக்கின்றயீஸ்வரி
தாரிலினி வேறுமுளதோ
அதிபாலமதியூர் சடாடவிக்கடவுளார்
அங்கத் தமர்ந்ததுணையே

அண்ணமலைக்குரிய விண்ணோர்தமக்கரிய
வுண்ணமுலைக் கௌரியே. 4

மண்ணுமுருகுங்கான விண்ணுமுருகும்பெரிய
மலையுமொரு காலமுருகும்
மாசிலாத்தங்கமுங் காய்ச்சினுலுருகிடும்
மற்றுநவ லோகமுடனே
பொன்னுமுருகும்நீண்ட பாரையுருகும்மற்ற
பொருளும்நீ ராககையும்
பொல்லாதபுலிகரடி சிம்மமும்ராட்சதப்
பேயுமொரு காலிரங்கும்
எண்ணரியஜீவரா சிகளீன்றதாயிநீ
யென்மீ திரங்கவிலையே
யென்னமோவுன்மனமி தின்னவிதமென்றுணர
யின்னமொரு வுதவியுளதோ
அண்ணுமிண்ணும்யெண்ணு மின்னும்சிறுகன்னியென்
றகிலம் புரந்ததாயே
அண்ணமலைக்குரிய விண்ணோர்தமக்கரிய
வுண்ணமுலைக் கௌரியே. 5

பூமிதனிலெண்பத்து நான்குலக்ஷம்ஜீவ
பேதமா மதனில்மிக்கப்
புண்ணியவசத்தின்மா னிடவுருவமெய்துமுன்
பாதம் தொழாதபேர்க்கு
தாமதசயித்தியம் பித்தகுன்மஞ்சூலை
தலைபிடிப் பாண்டுகுஷ்டம்
தந்தநோய்குலையெரிவு மந்தகாசம்பிளவை
தாள்திறக் காதபூட்டு
தேமண்டலக்கிரிமி வெட்டையுங்கிரந்திபடை
திருஷ்டியி லெரிச்சல்வாதம்
தெளியாதஜன்னிக் கழிச்சல்கிராணிச்சீதம்
தீண்டுவிஷ பூச்சனந்தம்
ஆமிந்தநோயெலா முன்னடியர்வமிசத்து
ளணுகாமல் கார்ப்பையன்றோ
அண்ணமலைக்குரிய விண்ணோர்தமக்கரிய
வுண்ணமுலைக் கௌரியே. 6

அந்திமுனிசந்திமுனி அழகுளஜடாமுனி
அடங்காத லாடமுனியும்
அரவமதுகேளாத வூமைமுனிதபமுனி
அருஞ்சுடலை கார்க்குமுனியும்
வந்திகாட்டேரியிரு ளன்குரளியொண்டிமுனி
வாதமிடு வேதமுனியும்
வம்பரிடுமேவலும் பம்புசூனியமுதல்
வழிபடும் பேய்பிசாசும்
தந்த்ரமாமீடுமுறை மாரணம்பேதனம்
தானென்ற பூதகணமும்
தபவிலாக்குட்டியொடு வைப்புக்கருப்பனும்
தனிபால கிரகமெதுவும்
அந்திபகலுன்கோயில் வலமாகவந்திடில்
அலைகடல் கடக்குமன்றே
அண்ணாமலைக்குரிய விண்ணோர்தமக்கரிய
வுண்ணாமுலைக் கெவுரியே. 7

எண்ணரியநூற்பயன் வுளவுமறியேனுனை
யெழுத்தால் துதிக்கவறியேன்
எந்த்ரமறியேன்செய்ய மந்த்ரமறியேன்மற்ற
யேதுமொரு சூதுமறியேன்
பண்ணிசைகள்வழுவாது பாடவறியேன்படும்
பாட்டையுஞ் சொல்லவறியேன்
பக்திவிசுவாசநெறி நிற்கவறியேன்கொடும்
பாவியொரு விரதமறியேன்
கண்ணீர்சொரிந்தழவு மறிகிலேனளவிலாக்
கவலையும் புகலவறியேன்
கற்றுமறியேனொரு சுற்றமறியேன்தமிழ்க்
கவியோது மார்க்கமறியேன்
அன்றுகருவுருகடந் தின்றளவுமென்னுளவு
அன்னைநீ யறியாததோ
அண்ணாமலைக்குரிய விண்ணோர்தமக்கரிய
வுண்ணாமுலைக் கெவுரியே. 8

வஞ்சமோயிதுவென்ன நெஞ்சமோவுன்னுடைய
வளமையிப் படியதாமோ

வாதமோயென்மீது பேதமோயிலையொருவர்
வந்துகோட் சொன்னவிதமோ
கொஞ்சமோயெனையாள பஞ்சமோவுன்செவிக்
கேளாத கொள்கைதானோ
கோபமோமற்றென்ன தாபமோகூறினால்
வாய்முத் துதிர்ந்துவிடுமோ
தஞ்சமென்றஞ்சிவரு மைந்தரைக்காராது
தாயிக் கிசைந்தவிதமோ
தாரெலாம்பெற்றபே ராருளாரினியெனை
தடுத்தாண்டு கொள்ளுமம்மே
அஞ்சலெனுமொழிகாற்றில் பஞ்சிட்டவாறுபோ
லரம்வளர்த் திடுதெய்வம்நீ
அண்ணாமலைக்குரிய விண்ணோர்தமக்கரிய
வுண்ணாமுலைக் கெவுரியே. 9

பொல்லாதமானிடப் பிறவிதந்தென்னையொரு
பூமிக்குள் பாரமாக்கி
பிள்ளைபெண்ஜாதியெனுந் தொல்லைக்குள்நடுவாக்கி
புத்திபலவெண்ணமாக்கி
நில்லாதபொன்பொருளில் நினைவாக்கிநிதியுங்
கொடாமல்நிற் பாக்யனாக்கி
நீந்தவொண்ணாதமிடி மேலாக்கியெண்ணினால்
நிலையிலாக் காயமாக்கி
நல்லாரெனப்பகல் பகட்டுமடவாருக்கு
நாள்போக்கி நாளுக்குநாள்
நமனுக்குஆளாக்க வோயென்னையின்றநீ
நடனங்க ளாட்டுகின்றாய்
அல்லாமலினியிருவர் மடிபிடித்தமராடல்
அழகல்ல வருள்செய்யம்மே
அண்ணாமலைக்குரிய விண்ணோர்தமக்கரிய
வுண்ணாமுலைக் கெவுரியே. 10

---

உ

தெய்வமேதுணை.

# உமையவள் நாமாவளி.

கண்ணர்க்கொருகாற் பின்னவளே
மண்ணுக்கொருகால் முன்னவளே. 1

பச்சைக்கிளியே பைங்கிளியே
உச்சிக்கிளியே வூன்கிளியே. 2

அரவாபரண வுரத்தாளே
கருணைகரியே சிரித்தாளே. 3

வல்லிக்கொடியே வளர்கொடியே
தில்லைக்கொடியே திகழ்கொடியே. 4

உண்ணுமுலையெனு மூர்கொடியே
பண்ணாரயன்றெழு பார்கொடியே. 5

பரமன்குருவைப் பெற்றவளே
அரமதுமுடிவர முத்தவளே. 6

பாரீரேழாய் பூர்த்தவளே
ஆருயிரெவையுங் கார்த்தவளே. 7

அத்திமையேந்துமென் னம்மணியே
புத்தியதீந்தருள் பொன்மணியே. 8

சிவமொடுசேர்ந்த சிரோன்மணியே
தவமதில்தோர்ந்த மனோன்மணியே. 9

முன்னும்பருவ முகக்கொடியே
இன்னும்பருவ யிளங்கொடியே. 10

உ

சிவமயம்.

# திருவண்ணாமலை தீர்த்தக்கும்மி.

இஃது,

சிறுமணவூர்,

## முனிசாமிமுதலியா

ரவர்களால் இயற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1905.

7

உ

கடவுள் துணை.

திருவண்ணாமலை

# தீர்த்தக்கும்மி.

சீர்தருஞானச் செழுஞ்சுடராந்திரு
வண்ணாமலைவல மான்மியம்போல்
தீர்த்தமகிமை வெளியுரைக்கத்திக
ழானைமுகவன் பதந்துணையே. 1

பூசுரராதி மனங்களிக்கும் சிவ
பொன்மலைச்சாரும் புனல்மகிமை
பேசுவறுமுகன் றாள்போற்றி-பெரு
மானிருபாதந் தினந்தொழுவேன். 2

அண்ணாமலைவளர் தீர்த்தமகிமையிங்
காதியோடந்த மெடுத்துரைக்க
வுண்ணாமுலையாமென் றாயாரருள்படி
வும்பருமற்றவ ருந்துணையே. 3

பூலோகவாசைத் துறந்தகுரவனும்
போதமகாரிஷி கௌதமருஞ்
சாலோகவேத மலைகளர்சன்னதி
சார்ந்தான்வேள்வி நடத்தவென்றே. 4

அக்கினிமுட்டியே கௌதமருமங்கே
ஆரணமாரி சொரிகையிலே
தக்கவழகுள வேதியனுந்தணல்
தன்னில்பிறந்தான் விணடியிலே. 5

பிறந்தவேதி யனைப்பார்த்து-ரிஷி
பெம்மானண்ணாமலை யீச்சுரனை
துறந்தஞான விழிநோக்கிதினம்
தோத்திரஞ்செய்யெனத் தொண்டளித்தான். 6

பின்னுந்தருப்பைகள் யேழெடுத்துக்கிள்ளி
போட்டனரக்கினி குண்டமதில்
உன்னிதசெந்திரு போலேழுபெண்க
ளுதித்தாரோம அழல்நிறம்போல். 7

கண்டந்தமாரிஷி யேதுரைப்பாரிந்த
கன்னிகைமார்களைத் தான்பார்த்து
அண்டர்பதிக்கி நடனம்புரிந்திட
ஆக்கிணையீந்தார் மகாரிஷியும். 8

இப்படியாதியில் ஜெனகருக்குவேதன்
செப்பியவாறுபோ லிப்படியோர்
ஒப்புப்புராண முறைப்படிக்கேயின்னம்
ஓதுவேனிங்கனம் கேள்மனமே. 9

இந்திரதீர்த்தம்.

சந்திரன்மேவு முடிக்கடவுள்மலை
சார்ந்தகிழக்கு முகந்தனிலே
இந்திரதீர்த்த மிருக்கும்பெருமையிங்
கேதென்றுரைப்பே னதன்மகிமை. 10

இந்திரனாலே சமைத்ததுவாமிரண்
டேழுலகோரு மதில்தினமும்
வந்தல்லோமூழ்கிப் பவந்துலைத்தாரினி
வாருங்கலியுக மானிடரே. 11

கூடுந்தைப்பூரண பூசத்திலேயதில்
குளித்தொருகைச்சல முண்டவர்க்கு
நீடுமொருகோடி பிரம்மத்தியுங்கூட
நீங்குங்கலியுக மானிடரே. 12

அக்கினிதீர்த்தம்.

மாமறைபோற்று மருணகிரியெனும்
மாமலைதென்கிழக் காமதிலே.
நேமஞ்சேரக்கினி தீர்த்தமுண்டத்திட
னேர்மையென்சொல்லுவேன் மானிடரே. 13

பங்குனிமாதம் பௌர்ணமிகாலத்தில்
பாருளஜீவர்க ளாரெனினும்

அங்கனம்சென்று முழுகின்மகுத்துவம்
ஆரால்விளங்குமோ மானிடரே. 14

மிக்கதவமுனி யெழுவர்கள்பத்தினி
மார்களைக்கண்டொரு நாளையிலே
அக்கினிதேவன் விரும்பவவன்பெண்டீ
ரானசுவாகை தெரிந்தனளாம். 15

தன்னுருமாறியக் கன்னியர்போலவே
தக்கசுகுண வடிவெடுத்து
வன்னிப்புருட னெனுங்கணவன்றனை
வஞ்சியுங்கூடிக் கலந்தனளே. 16

மன்னுயிர்போல வடிவெடுத்துகற்பு
மாற்றியபாவ மதைத்துலைக்க
வன்னிதடாகத்தில் மூழ்குமக்காலையில்
வானவர்நாடு கிடைத்தனவாம். 17

ஏமதீர்த்தம்.

எண்டிசையோரும் வணங்குமண்ணுமலை
தென்றிசைபக்க மொருபுனலாம்
சண்டனூர்தீரமொன் றுண்டதில்மூழ்கிடக்
கண்டபலன்கேளும் மானிடரே. 18

கார்த்திகைதோரும் பதினாராண்டிலும்
காரணமாக முழுகினவர்
சீர்பெருதிரேகமே பொன்னிறமாமென
சித்தர்களின்னமு மூழ்குவரரம். 19

முன்னொருகாலத்தில் பிரமாவினுயுதம்
பட்டுயெமனுடல் குன்றினதால்
யின்னதிமூழ்கியே தீர்த்துக்கொண்டானென்று
ஏழுலகத்தோரும் மூழ்குவராம். 20

நிருதி தீர்த்தம்.

நிருதிமூலை நடுவணையில் நல்ல
நிருதிதீர்த்தமொன் றுண்டதிலே
கருதிமுழிகினோர் கொண்டமகுத்துவம்
கட்டுரையாக விளங்கிடுமே. 21

ஜென்மாந்திரப்பகை தான்விலகுங்கொடும்
சேடனைப்போன்ற விடந்துலையும்
கன்மமெல்லாங்கடல் தான்கடக்கும்பல
காரணம்சொல்லி முடியாது. 22

வருணதீர்த்தம்.

மேலுலகத்தவர் போற்றுமருணையின்
மேற்கெனுந்திக்கில் வளமிகுந்த
பாலவருணனுர் தீர்த்தமுண்டதின்
பான்மையென்சொல்லுவேன் மானிடரே. 23

நல்லமனுநெரி தன்னுடனேயதில்
நாளும்முழுகின பேர்களுக்கு
வல்லகிரகங்க ளொன்பதுமேவருத்
தாதெனவேமறை தாமரையும். 24

இன்னம்நவக்கிரக மொன்பதுவும்-தனக்
கேற்றதுயர மகலவென்று
பன்னிதினந்தினம் மூழ்குதென்றே-பழ
மாமறைசொல்லிடும் மானிடரே. 25

வாய்வுதீர்த்தம்.

அங்கேயடுத்துள வாய்வுதீர்த்தமதி
லன்புடன்மூழ்கிடும் பேர்களுக்கு
சங்கடம்யாவுந் துலைந்துஅளவற்ற
சர்வசவுக்கிய மெய்துவராம். 26

குபேரதீர்த்தம்.

டருதிபரவுமண் ணுமலைவடக்கு
பக்கம்குபேரனுர் தீர்த்தமதில்
கருதிமுழுகிடும் பேரிடம்செந்திரு
கன்னிக்குடியா யிருந்திடுவாள். 27

செல்வச்செருக்கு செழித்திடுமாம்-தினம்
செய்யுந்தொழிலும் பலித்திடுமாம்
வல்லதுணையும் அடுத்திடுமாம்கடை
வானேடுகூட பலித்திடுமாம். 28

அசுவனிதேவர் தீர்த்தம்.

வடகிழக்கென்னுமீ சானியத்திக்கிலே
வளம்பெருமஸ்வனி தீர்த்தமதில்
அடுத்துநித்தமும் மூழிகிடும்பேர்களி
னனந்தமென்சொல்வேன் மானிடரே. 29

நீச்சசாதியோ ராயினுமன்னதி
நித்தமும்சுத்தமாய் மூழ்கிவரில்
யீச்சுரன்றன்கழல் பூணுவதுமன்றி
யின்னகர்மன்னவ னய்பிறப்பான். 30

அகஸ்தியர்தீர்த்தம்.

இகத்தில்தமிழுக் கொருகுருவாம்பதி
னெண்பெயர்தங்கட்கு முன்னவராம்
அகத்தியமாமுனி தீர்த்தமகிமையிங்
கறையக்கேளும் புவியினரே. 31

கன்னியெனும்புரட் டாசிமாதந்தனில்
காலையிலேதினம் வேலையதாய்
நன்னதிசென்று முழுகிலவர்தமிழ்
நாவலராவர்காண் மானிடரே. 32

வசிட்டர் தீர்த்தம்.

சொல்லுங்குபேரனர் தீர்த்தமருகினில்
சூழும்வதிஷ்ட மகாமுனியாம்
வல்லவர்தீர்த்தமொன் றுண்டதினுண்மை
வளப்பமதுகேளும் மானிடரே. 33

கார்த்திருந்தற்பிசி மாதமுழுமையும்
கங்குலும்காலை முழிகிவரின்
சாஸ்திரம்யாவையும் பிட்சைகொடுக்கும்
சமர்த்துபலிக்குமே மானிடரே. 34

பாவமுழுதுங் கடல்கடப்பதன்றி
பாவலர்நாவலர் யாவருக்கும்
காவலனகும்சமர்த்து கிடைக்குமக்
கங்கையின்மான்மியம் போல்மனனே 35

சுப்பிரமணியர் தீர்த்தம்.

செங்கைவடிவேலர் சுப்ரமண்யரருள்
செம்மைப்புனல்சிவ தீர்த்தமதில்

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீமகாவிஷ்ணுபேரில்,

# நட்சத்திரமாலை.

வடக்காண்மைநாடு

## வெங்கடநாராயணஐயங்கார்

அவர்களால் இயற்றப்பட்டது.

இஃது,

சிறுமணவூர்,

## முனிசாமி முதலியா ரவர்களால்

பரிசோதிக்கப்பட்டு,




தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாசஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1904.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:.

## சாற்றுக் கவிகள்.

மாரியதுவே பொழிய வேகநதி யேபெருகி வாழ்வுயர் குளம்பெருகியே
சீரிலகு நஞ்சையிரு போகமுற வேவிளைவு செல்வமிக வுந்தருகுமால்
காரிலகு சோலையினி லேகுயில்க ளும்பசிய காமர்மயி லுஞ்செரியுமால்
ஊரிலுயர் வாகுமறை யோர்மருவு மாண்மறைநன் னுடெனவு மொண்மை
[நகரே.

திருத்துளப மணியொளிசெய் கவுத்துவமு மணிமார்பன் செய்யவாச
மருத்துலவு சேடகிரி மாமாயன் றிருவடிக்கோர் மகிமைசேரும்
அருத்தியொடு திகழ்நட்சத் திரமாலை யணிந்தனனுண் மனானு டென்னும்
உருத்திகழும் பதிமறையோன் வேங்கடநா ராயணனு முறுதியோனே.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:.

ஸ்ரீமகாவிஷ்ணுபேரில்,

# நக்ஷத்திரமாலை.

## காப்பு.

### எண்சீர்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திருமருவிவாழ்கின்ற மணிநகவரையிலே செய்யதாமரையலர்ந்து, திகழுமொருமாணிக்க மலைபோலவேநின்று திரைகொண்டவாரிபுடைசூழ், தரணிமிசையினிதான மெய்யன்பர்பிறவிநோய் சாராதகருணைபுரியும், தற்பராநந்தமய வைகுந்தனுதனிரு சரணமலரணியாகவே, புரிவினொடுகவிமாலை வல்லவரனேகம் புனைந்திருந்ததுமுணர்ந்து, பூவிரவுநாறுமண மேவுமெனயாவரும் புகலுமொழியுறுதிகொண்டு, வரமிலகுசெந்தமிழி னுமொர்மாலையொன்றணிய வந்தெனதுசிந்தைமலரில், மகிழ்வாகநற்கிருபை செய்தருளவேணுநீ வகுளமலரணிமார்பனே. (க)

உன்பரமகல்யாண சாதுக்குணங்கள்சொலி யொருகணப்பொழுதாயினும், உருகிமகிழ்வோமென்று யோசிக்குமளவிலே யுடனேயெழுந்திருந்து, வன்பொறிகளானபல வாசல்வழிவிரைவாக மருவினில்லாமலோடி, வம்புதருநெறியான காரியஞ்செய்கின்ற வஞ்சமனதைத்திருத்தி, என்கைவசம்நீதந்து உனதுதிருநாமங்க ளெப்பொழுதுமறவாமலே, யின்பமிருமன்பினொடு பாடிப்புகழ்ந்திடவு மிடர்வருமைவேர்களைந்து, அம்பொனிதிரவேணு முரகவரைமாயனே யானந்தமானபொருளே, யலையாழிமேல்வந்த திருமாதுவளர்சந்த மணிமேவுமணிமார்பனே. (உ)

நலமானபுத்திபல போதித்தபோதிலிது ஞாயமென்றெண்ணினொடியில், நாயினுக்குண்டான குணமுமில்லாமலே நழுவிவிரைவாகவோடி, உலகமயலானவிருள் பொங்கிவிரிகின்றகட லூடேபுகுந்துதிரியும், உள்ளத்தைநல்வழி திருத்தியுன்திருநாம மோராயிரங்கள்முழுதும், மலியுமாநந்தமய மானவமிர்தம்பரவி வழிபப்புகழ்ந்துபாடி, வாழுந்திரத்தையருள் மாராபிராமனே மணிதங்குமணிமார்பனே, வலியமரமேழுந்துளைத்தரகுவீரனே மருவுகோதண்டபதியே, மருதொடியவந்துதவழ் மணிமேகவண்ணனே மணிநகவரையின்முதலே. (ந)

மத்தகசமுன்சென்ற மரகதசொரூபனே மணிதங்குமணிமார்பனே, மாதவர்கள்முதலான யோகியருமொருநாலு மறைகளுந்தேடியுணரா, மெய்த்தனிச்சுடர்பொங்கி யவியாதுவளர்கின்ற மெய்ஞ்ஞானதீபவொளியை, வீறுதருசெம்பொன்மய மானதொருவண்பரவை மீதினிலெழுந்தடியவர், பத்தியொடுகண்டுதொழ முத்திதரவந்தருள்செய் பரிமளானந்தவமுதை, பணிவரையினதிபதியை யெனதிதயமினிமையொடு பரிவுறனுகர்ந்தஇனிமேல், மொய்த்தெழுமனேகவன முளதுபலகாடுளது மூரண்வரைகள்யெங்குமுளதால், முடிகியதிலேகுஞ்சள் மெனமருவிவாழ்கின்ற மோகவயல்வன்பிணிகளே. (ச)

உலகமதிலேயதிக செல்வத்தையடையினு மொழியாதவருமையுரினும், உல்லாசமங்கையர்கள் சல்லாபமோகவிரு ளூடேபுகுந்துழலினும், சலமேபுரிந்துபிணி யுடலத்தைவளையினுந் தங்கிகள்விரட்டிவரினும், தணல்மண்டியெரிகின்ற விடமீறுதிசையில்வாழ் சற்பங்களெதிர்சீறினும், சிலபேர்கள்நண்பினொடு புகழினும்பலபேர்கள் சீயென்றுதாணிகழினும், திரமாகவுனையன்றி வேறொன்றுகனவிலுஞ் சிந்திப்பதில்லையதனால், ஒளிகொண்டுகேபமென்ற பாவிவருநாளிலே யுனதுதிருநாமங்களை, உள்ளத்திலன்பாய் நினைக்கவந்தருளுவா யுரகவரைசின்றமுகிலே. (ரு)

ஓராயிரங்கிரண ரத்நவொளிதிசைதொறு முதயரவிபோல்விளங்க, ஒருநாகவணையினிற் பாலாழிநடுவிலே யுறயோகநித்திரைசெயும், பேராயிரம்பெறுசரோருகவிலோசனு பிறைதங்குவேணியரனும், பிரமனொடுவானிலுறை யிந்திராதிதேவரும் பிரியமுடனேவளைந்து, நேராயிரங்கியெமை யாளென்றநாளிலே நீவந்துகாத்தருளினாய், நெடிதானமணியுரக வடிவானமலையிலே நீணிலத்தவதரித்தாய், யோராயிலங்குனது பாதமலர்நினையாமல் இடர்வறுமைகொண்டுமெலியும், இதயத்தைநல்வழி திருத்தியருள்புரிகுவா யினிதானபரமகுருவே. (சா)

பொங்குதிரைவீசிவரு கங்கைநதிமுதலான புண்ணியதீர்த்தங்களாலும், புனிதமயமானசில வோமங்கணெய்யவிசு பொழிகின்றவேள்வியாலும், அங்கியிடைநின்றுபொறி யைந்தையுமடக்கிமன மசைவறநிருத்தலாலும், அலையாழிசூழ்கின்ற பூலோகமுழுதும்வல மாகவேவந்ததாலும், இங்கிதமிகுந்தபல தானதருமங்களை யியற்றுகிறதன்மையாலும், இமையவர்களவடிவாக வுடல்மாறுமேயலது யிடர்பிறவிதீர்வதிலையால், பங்கயங்கமழ்கின்றசேஷகிரிமீதில்வாழ் பச்சைமுகிலைப்புகழ்ந்து, பணியுங்களினிதானமுத்தர்வடிவாகனீர் பரமபதவாழ்வுபெறவே. (எ)

திருமங்கைவாழ்கின்ற மார்பமுங்காதிலணி தெய்வபொற்குழையினழகும், திவ்யபரிமளமான மாலையணியொருகோடி செய்யசூரியப்ரகாசம், பெருகிவளரத்னமணி மவுலியுமறையிலணி பீதாம்பரத்தினழகும், பிழையிலாதடியவர்கள் பரமபதவாழ்வினிது பேணியருள்கருணைவிழியும், பரிதிவளைமுதலான பஞ்சாயுதங்களும் பங்கயக்கையிலங்கட், பசியமரகதமேனியெங்குந்துலங்கிடப் பரவையின்பிடாரியென், இருவிழிகுளிர்ந்திதய மானந்தமாகவே யென்றுவந்தருள்புரிவையோ, இமையவர்களறியாத வுரகவரமாயனே யெதிராசர்புகழ்சிங்கமே. (அ)

பங்கயமலர்த்தெரிவை சிங்காரனேயனக பச்சைமாணிக்கமலையே, பஞ்சமாபாதகர்க ளாயினுஞ்சாமதிசை பண்பாகவுனதுநாமம், அங்கவர்கள் நாவில்வரு மாகிலஞ்சேலென்று ஆனந்தவெள்ளமயமாய், அருள்சுரந்தேவிழிகள் பொழியவேயெதிரில்வந் தழகானசேவையருளி, அங்கைமலர்கொண்டவரை யன்போடழைத்தினிய அமுர்தவசனங்கள்கூறி, அணிபரமவீடுதரு முனதருமைதினையளவு மரியாமலேமறந்து, மங்கையர்கள்மோகவலையூடேபுகுந்துபிணி வருமையதனால்மெலிந்து, வாடுமென்சிந்தையுன தடியிணைவழுத்தவருள் மணிநாகவரையின்முகிலே. (கூ)

நிலையிலாவுடலத்தை நிலையென்றுநம்பியே நீடூழிவாழ்கவென்று, நேசமொருமனைவாழ்வை நிசமென்றுவெண்ணியே நீணிலமெலாந்திரிந்து, உலவிலாமிக்கபொருள் தேடிவருமாசையால் உழல்கின்றபவனெஞ்சமே, உரைகள்தடுமாறியுயிர் விடுகின்றநாளிலே யுற்றதமர்துணையாவரோ, கலகமிடு படைவீரர் புடைசூழவினைவோடு காலனெதிராகிவந்து, கதிர்மேவுதிரிசூலம் வளர்பாசமுதலான கைப்படைகள்விடுமுன்னமே, மலிகின்றமலர்வாசமதுவுண்டுகிளைவண்டு மதுராகீதங்கள்பாடும், வளமானவுரகவரை மேனின்றமாதவனை வாழ்த்திடுவைதுணையாகவே. (கo)

பாவையர்கள்விடுமோக சண்டிப்பிசாசினைப் பரிசுத்தமாய்விளங்கும், பாகானபேரறிவு மந்திரத்தாம்பினிற் பலமாகவேபிணித்துத், தாவியோடாதவகை ரோயிறுக்கியொளிர் சாந்தமெய்ஞ்ஞானவனலிற், ருனிட்டெறித்துனது பாதமலர்மறவாத சற்குணமெனக்கருளுவாய், பூவளரும்பஞ்சதருவாழ்கின்றபொன்னுலகற் பொங்குகடலாடைபுடைசூழ், பூமண்டலத்தலைவர் யாவருமவரவர்கள் புந்தியினினைத்தபடியே, ஆவலொடுகண்டுதொழவுரகவரைமேனின்ற அச்சுதானந்தமயமே, அடியவர்கள்மனதிலுறை மெய்ஞ்ஞானதீபமே ஆனந்தசுகுணமுகிலே. (கக)

திரைகொண்டகடலாடை யுலகத்திலேயதிக செல்வத்திலேமகிழ்ந்து, தெரிவையர்களதிமோக வலையினிற்சிக்கியவர் சிரியோனியளரின்மூழ்கி, நரைகொண்டுவுடல்கூனி சிரசுகிடுகிடெனவே நாட்டவொளியதுமயங்கி, நாவுதடுமாறியுயிர் விடுகின்றநாள்வரையும் நாடிமனைவாழ்வின்முயல்வீர், நிரைகொண்டபடைவீரர் புடைசூழவினைவோடு நீவிர்கள்வளைத்திழுத்து, நிட்டூரமானகொடு நரகத்திலேதள்ளும் நேரத்திலென்செய்குவீர், விரைகொண்டசெங்கமல மலர்கின்றசேஷகிரி மேனின்றகரியமுகிலின், மிளிர்கங்கைவழிகின்ற கழலிணையைநாடோறும் விரும்பாததமிழ்வாணரோ. ()

சிந்தையினிலன்பாக நின்னடியர்பாததூள் சிரசிலணியாதபாவி, செயல்தங்குபாகவதர் சேவைகொண்டவர்பாத தீர்த்தமுண்ணாதபாவி, திந்திரணிவளர்மாறன் வந்தருளுமூர்வலஞ் செய்யாதகொடியபாவி, திவ்யப்ரபந்தகாலக்ஷேபமகிமையைச் செவியிலேற்காதபாவி, மைந்தரொடுமனைவாழ்வை யுறுதியென்றெண்ணியே வாஞ்சையதுகொண்டபாவி, வானத்திலிடுமின்னல் போலழியும்முடலினை வலுவென்றுணர்ந்தபாவி, வெந்துயரகற்றியெனை யாண்டருள்வையோநரகில் வீழ்விப்பையோவறிகிலேன், மிளிருமணியுரகவெற் புறைகின்றசோதியே மெய்ஞ்ஞானதீபமயமே. (கங)

மகமேருகிரிபோலு முயர்தேரின்மிசையேறி வடிவாளிமழைசொரிந்து, வலிமேவுபகையாள ருடல்வீழவமர்நூறி மணிவாகையேபுனைந்து, புகழேறுமணிநகை வரையேறிநின்றதொரு புயலைப்புகழ்ந்துபாடிப், பொங்குநிதிமுதலான செல்வஞ்செழித்தெழில் பொருந்தினன்விளங்கியதனால், நகனேருபுயவீர மலிசூரமதரூப ஞாலத்திலிந்திரயோக, நரபாலனேயென்று புல்லரைத்துதிசெய்து நாடோறுமேயிரந்து, துகளானவிருள்மூடு பலகோடிநரகேரு சுசியேயிலாதபுலவீர், சுகஞானவடிவாகு மவனைப்புகழ்ந்துகவி சொல்லுங்களுயர்தீரவே. (கச)

அடல்கொண்டகோபனென் றுமைபெற்றவொருசூர னுரவாரித்தெழு ந்து, அண்டகோளத்தின்மிசை பொங்கியனல்முட்டுற வதட்டிக்கிளம்பியெ திரே, நடைகொண்டசாந்தனை யெடுத்துவிண்வீசியே ஞாயனைப்பற்கள் சிதற, ஞாலத்தின்மேல்விழ வுதைத்தேவிவேகனை நடுக்குறமுடிக்கிவினை விற், கெடிகொண்டுவருகுடங் கவனையிங்கணுகாது கீழுறவொடிக்கியென் றுங், கேதமற்றனதுதிரு நாமத்தையேசொலக் கிருபைபுரியுரகவரைமேல், குடிகொண்டுவாழ்கின்ற மணிமேகவண்ணனே கொற்றமணிமாலையணியுங், கோதண்டமுதலான பஞ்சாயுதங்களுங் கொண்டபகிரண்டமுதலே. (கரு)

முத்தலமிகுத்தெரியு வர்க்கடலெறிதணிய முறட்சிலைவளைத்துமுடுகி, முக்குணமுமுத்தொழிலு முப்பொழுதுமுப்பொருளு முற்சுடருமுத்தலமு மாய், உத்தமறதத்தமுத மொத்தமொழியத்தனிட ரூற்றசமயத்திலருளி, உச்சிதமணித்திரள் குயிற்றியரதத்தினை யுறத்துடனடத்தியரவின், பைத் தலைநடித்திரும றத்தினையொடித்துயர் பருப்பதநிகர்த்தகரியைப், பற்றிய விடக்கரை யருத்திரிமறைத்தமர் படைக்கலமெடுத்தமுகிலே, சத்திமுத லெத்தவரு முத்திபெறநற்றுதிசெய் தத்தையுமைமொய்த்தபொழில்சூழ், சர்ப்பகிரிநிற்கும்வன சத்திருமகட்கினிய தற்பரவிரத்னவொளியே. (கசு)

மானுகமுமொருவ மானுகமீதிறத மதவேழவைம்பகழியை, மதவேழமா றுவரை மணிவேழம்வண்பறவை வளரலகையலகைமுலையை, வானுகவங் கிழும் வடிவாளியேவியணி மருவுநடனம்புரிந்து, மகிழ்வுறவழங்கிவிழ மோதியொருகைமிசை வயங்குகுடையாகநிறுவிக், கானுகணங்குவிய வெ திருதிவகிர்செய்து காதலுடனேயருந்திக், கந்தமலியுங்குமுத முண்டகம் வலம்புரி கருங்கயநிறைந்தகுளமும், தேனுகவன்பொழிலு மணியாய்விள க்குமணி சேஷாசலத்திலுறையுஞ், சீதாபிராமனின் பாதாரவிந்தமலர் சிந் தித்துவாழ்வாமரோ. (கஎ)

இரவிநீமதியுநீ மண்ணுநீவிண்ணுநீ யெரியுநீகாலுநீயே, இன்பநீதுன்ப நீ நஞ்சநீயமுதநீ யிந்திராதிவானவருநீ, சருணைநீவெகுளிநீ வஞ்சநீதஞ்சநீ காமநீஞானநீயே, கமலநீயிமைவநீ நரகநீவீடுநீ கண்ணுநீமனமுநீயே, தரும நீவரமுநீ பாவநீபுண்யநீ சகலகலைவல்லமையுநீ, சத்யநீபலகோடி அண்டபகி ரண்டநீ தானிலாயிடமில்லையால், உரமாகநின்மகிமை யறியவென்றாலுநீ யுள்ளிருந்துணர்வதல்லால், உகநூறுசொல்லினு நானென்பருணர்வரோ வுரகவரைநின்றமுகிலே. (கஅ)

உற்றவுடல்நிலையென்று மக்கள்மனை துணையென்று வோகைவுல்லாச மாகி, ஓசைப்பெருங்கடலி னுசைப்பிசாசுபல வோடிவந்தேயலைக்க, கற்ற திறமெதிர்பேசி நானென்றவாண்மையொடு காசினியெலாந்திரிந்து, சன மானநிதிதேடி வீணிலேகாலங் கழிக்கின்றமூடமனமே, வெற்றிதருபிறை வேணி நற்றெரிவையொருபாகம் வெந்துயர்தவிர்த்தமுதல்வன், வினைதங்கு செங்கமல மலர்கின்றசேஷகிரி மேனின்றகரியமுகிலைக், குற்றமறவேயந்தி காலையினிலாயினுங் குணமாகவேவிரும்பிக், கோதிலாதவநாம மென்றாகி லுஞ்சொலாய் குறைவின்றிவாழ்வுபெறவே. (கக)

உரககிரிமெய்ஞ்ஞான தீபவொளியேசுருதி யுணராதமிக்கபொருளே, ஓகைதருவிசுவாச பாகவதருள்ளம்விட் டொருகணப்பொழுதுமகலாய், பரமகல்யாணகுண சுசீகரவசீகர பயோதரநிகர்த்தவடிவே, பரிமளசரோருகவிலோசனகிருபாநிதி பனுகமிசைநடனமிடுமுன், இருசரணமலரின்மன மனல்மெழுகுபோலுருகி இனிமையொடுபுகழாமலே, இருவுசும்புலவுமினல்நிலைலதுவுடலைநிலை யென்றுபொறிதன்றுமயலால், மருவிமனைவாழ்வென்ற விரிகடலிலேமுழுகி வாடியினைதேடியுழலும், வஞ்சகனையஞ்சலென வந்துநின்றுள்வையோ மறுசனனம்வாராமலே. (௨௰)

கார்கொண்டகடலாடை சூழ்கின்றவுலகிலே கடுவைவிகரானமூடர், கபடத்தையுட்கொண்டு நல்லவர்கள்போலவே கனிவாகவந்தடுப்பார், நேர்கொண்டசகலகலை வல்லவர்கள்போலவே நீதிவசனங்கள்சொல்வார், நேசமொடுநண்பாகி வாழ்கின்றபேர்களை நிமிஷத்திலேபிரிப்பார், பேர்கொண்டநிதிபெருகி வளர்கின்றகுடிகளைப் பேணுமலேகலைத்துப், பேதகம்பலசெய்து கலகத்தைமூட்டியே பின்னப்படுத்திவிடுவார், பார்கொண்டசுமையாகு மங்கவரையணுகாது பரிவாகுமுனதுதொண்டர், பாதமலர்புகழ்கின்றநல்லறிவுதருகுவாய் பணிநாகமேவுமுகிலே. (௨௧)

தொண்டர்கள்மனத்திருளை வேரறுடெரிக்கின்ற சுகஞானதீபவொளியைத், துளபனறுமாலையொடு மணியணியுமார்பனேச் சொர்ணமுடிவர்ணமணிகள், மண்டுகிரணம்பரவு செங்கதிரொனும்படி வயங்கவுமரங்கநகரில், மஞ்சறவமென்றதொரு பஞ்சணையிலேதுயிலும் மரகதநெடுங்கிரியினை, தெண்டிரைமிகுங்கடல் கடைந்தமுதுவண்டருஞ் செழித்துவளர்கின்றவுலகில், தேவர்கள்மகிழ்ந்துண வளித்தணிப்புரிந்தனி செழுங்கமலவண்ணமலரும், கண்டமலருங்கமிழு முரகமணிவரையில்வாழ் கருணையங்கடலையினிதா, கண்டுபணியாதவர்கள் சன்மப்பெருங்கடல் கடந்துகரைகாணூர்களே. (௨௨)

தாரணியில்வாழ்கின்ற மானிடர்கள்யாவருஞ் சந்தோஷமருவினுளும், தன்மையொடுகொண்டாட நற்றமிழெனக்குநீ தந்திருந்ததுமுணர்ந்து, தாரணியுனின்பாத மலர்களைப்புகழாது சகவாசதோஷமதினல், சற்குணமிலாதபல மூடரைப்பாடித் தரித்திரம்விளைந்ததல்லால், எரணியுநன்னிதியம் வந்ததிலையாதலால் இதுபெரியகுற்றமாகும், இதையத்திலெண்ணுமலன்புவைத்தருளியென் யிடர்வருமைதீர்க்கவேண்டும், வாரணியுமுலைதந்து காக்கின்றதாயலால் மைந்தர்பிழையெவர்பொறுப்பார், மணிஞகவரையிலுறை யச்சுதாநந்தனே வனமாலையணிமார்பனே. (௨௩)

மன்றலணிகொன்றைமலர் மானவிசெழுந்திரை வளர்ந்தசடைமேலணிந்து, மங்கையொருபாகத்தில் வைத்தகயிலாசபதி வன்றுயரகற்றவிலையோ, துன்றிமணியொளிர்கின்ற தூணடுவிலேவந்து சுதனைமுன்காக்கவிலையோ, துங்கமதமால்களிரு மூலமெனவோருரை சொலும்பொழுதுவந்ததிலையோ, வென்றிவடிவேலரசர் கூடியசபைக்கணனில் மீதினிலுதித்தவெழில்சேர், மின்னினிடையன்னநடை மாதினுக்கருள்செய்து மெய்த்துயில்வழங்கவிலையோ, என்றன்வறுமைப்பிணி யகற்றிநிதிதருகுவாய் இதுவுனக்கரியதோசொல், இந்திரைமகிழ்ந்துறையு மார்பனேயுரகவரையெழில்மேவுவிமலமுதலே. (௨௪)

சங்கமணிவார்கொண்ட பேரிதுந்துமிமுரசு தவில்பம்பைமேளமுழவம், தானமொடுவலைகொம்பு பிட்டில்தம்பறுவர்ன சாரங்கிசின்னமுதலாய், மங்கலவுலாசமணி நாகசுரம்வீணைசர மண்டலங்கவுரிகாளம், மருவியெழுகின்றபல காதகீதத்தொனிகள் மாதிரமெலாம்விளங்க, நங்கையர்கள் பாதமுறை தவிராதுநடனமிட நருமலர்சொரிந்துபிரமன், நற்றெரிவையொருபாகன் வானவர்தபோதனர்கள் நாடொறும்வணங்குமலையே, கங்கைநதிமுதலான புண்ணியதீர்த்தம்பரவு கமலநிறைகோனேரிசூழ், கந்தமலிபைந்துளவ மாலையணிபார்பனுறை கனமேவுமுரகவரையே. (உரு)

வானகந்தனின்மேவு தாராகணம்பருதி வாழியஞ்சுடராகுமோ, வனமூடுதிரிகின்ற புன்சிறியமிருகங்கள் வாளரிக்கிணையாகுமோ, மானிலமுனைந்தபல கல்லெலாங்கூடியொரு மாணிக்கநிகராகுமோ, வன்பறவையென்றுசொலும் வர்க்கங்களதிவேக வண்கருடநேராகுமோ, தானவர்குலங்களை யறுத்துமணிவாகபுனை சர்ப்பகிரிநின்றமுதல்வன், தாளிணையைமறவாத தொண்டருக்கடியவர்கள் தாசருக்கொப்பாவரோ, கானலர்செழுங்கமல மீதிலுறைவேதனொடு கங்கையணிவேணியனகன், கடமாமுகத்தனயில் வீரனதிதவையோக கானில்வளர்முனிவோர்களே. (உசு)

வெந்திறல்மிகுந்தசின மீறிவருமல்லரை மிதித்தமர்விழைச்சாடியே, வெண்ணியவலம்புரியெடுத்தலையெரிந்துவரும் வேலைநனிவேகவேக, முந்துபகழிக்குல முடிக்கிமருகாந்தரை முருக்கியொருவேனவடிவாய், மொய்த்தலமருப்பினிடை வைத்தபுகழ்பெற்றசெய மூர்த்தியிடமாம், இந்துபுனையுஞ்சடில னும்பிரமனுங்குகனும் யிந்திரனும்விண்ணவர்களும், இன்பமுயரன்பினொடு கந்தமலிபைந்தரு விசைந்தமலர்கொண்டுபணியும், மந்திகனிசிந்தரச முந்திவழியுப்பரவி மஞ்சிதவழ்கின்றபொழிலும், வண்கமலமுங்குவளை யிங்கமழ்தடங்களும் வளைந்தணிகொனுகமலையே. (உஎ)

மருமண்டுமெதுவுண்டு கிளைவண்டுமெகிழ்கொண்டு மதுரராகங்கள்பாட, வர்ணப்பசுஞ்சிறை விரித்துமயிலாடவே வண்குயிலினிசைகூடவே, திமுந்திமந்திகள் வருக்கைப்பழங்கொண்டு செயமத்தளங்கள்போடும், சீதமுகில்தவழ்கின்ற சேடகிரிமீதில்வாழ் சீதரனையாதாமுடன், இருதயந்தனினூரு மறவாதபாகவதர் யிணையடிக்காளானவர், இருசரணமலர்களைச் சிரசிலணிவோர்கள்தான் இந்திரனும்வானவர்களும், பிரமனுங்கயிலாச மலையிலுறை ஈசனும் பேர்பெற்றமுனிவோர்களும், பிரியமொடுகொண்டாட மேலானவுலகிலே பெருமையுறவாழ்வார்களே. (உஅ)

ஸ்ரீநிவாசன் திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

ஸ்ரீமகாவிஷ்ணுபேரில்,

நக்ஷத்திரமாலை,

முற்றிற்று.

உ.

தெய்வமேதுணை.

திருத்தணிகை

செங்கல்வராயசுவாமி

# தோத்திரம்.

மாதப்பதிகம், வாரப்பதிகமும்,

கண்ணிகளும்

அடங்கியிருக்கின்றன.

இஃது,

சிறுமணவூர்,

முனிசாமிமுதலியாரவர்களால்

இயற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1907.



சென்னை சூளை, அங்காளம்மன்கோயில் வீதி,
12. ெந. வீடு சிறுமணவூர்-முனிசாமி முதலியார்.



உ

முருகன்றுணை.



# திருத்தணிகை
# செங்கல்வராயசுவாமி
## தோத்திரம்.

சீர்கொண்ட மணியேறு முடியாறு வதனமுஞ்
    செழித்தபன் னிருவிழிகளுந்
திருநீற்று காப்பும் பளிச்சென்ற திலர்தமுஞ்
    செந்தமிழ் பிறந்தவாயும்
மார்கொண்ட ஜீவமா ணிக்கப் பதக்கமும்
    மலையொத்த புயமிராறும்
மணிமந்த்ர வேலா யுதந்தொட்ட செங்கையும்
    மருவுமலர் மாலையழகும்
ஏர்கொண்ட திருமாது மகளோடு தெய்வானை
    யிருபாற் றுலங்குமழகும்
இணையற்ற தண்டைச் சிலம்பார்ந்த பாதங்க
    ளேழையான் காணவருவாய்
தார்கொண்ட கோதண்ட பாணிக்கு மருகனே
    தரையெலாம் புகழ்தெய்வமே
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
    தணிகையங் கிரிவாசனே.

புத்தியெள் ளளவேனு மில்லா தகந்தையால்
பூர்வீக ஜென்மவினையால்
பூததய வெண்ணுத கன்மனச் சேட்டையால்
பொல்லாத காலதிசையால்
உத்திரவு பெற்றநவ கிரகபே தத்தினு
லுத்தமர்கள் சாபத்தினல்
உன்னடித் தஞ்சமென் றடையாம லுலகெலா
மோடித் திரிந்தபிழையால்
இத்தனைக் கடூரவிர ணங்களுக் காளாக
யென்னபா வஞ்செய்தனே
இனிவேறு துணையாரு மிலைகாரு மென்றெனது
யிதயத்தை பலிகொடுத்தேன்
தத்திமி யெனப்பரத நிர்த்தமிடு மஞ்ஞைமேற்
றரிசனந் தந்தருளுவாய்
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
தணிகையங் கிரிவாசனே. 2

நாசிமேற் றெண்டையில் நாக்கடியி லுந்தியில்
நடைகா லிடத்துடையினில்
நடுமுதுகி னிற்றேளில் நயனமேன் நெற்றியில்
நகைநீர் சுரந்தபுண்ணுய்ப்
பேசவு மிருக்கவும் நடக்கவும் வசப்படா
பிணிகொண்ட பேருமுளரோ
பூதலந் தனிற்கொடிய பாவியா னுனுமுன்
பொன்னடிக் கபயமென்றேன்
மாசிலா நின்கமல வழகையும் புகழையும்
மைந்தனற் சொல்லவசமோ
மாயவன் மருகனே முருகனே ஷண்முகா
மாதவர் தொழுந்தெய்வமே
தேசிக னெனும்பெரிய பேர்பெற்ற கடவுளே
திக்குவே றில்லைகண்டாய்
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
தணிகையங் கிரிவாசனே. 3

அருளில்லை யேதொழுந் தெருளில்லை யேபுல
னகந்தைக ளொடுங்கவிலையே

அடக்கமிலே யேமன மொடுக்கமிலே யேநல்ல
 அறிவென்ப தணுவுமிலேயே
குருவில்லே யேதர்ம குணமில்லே யேவரங்
 கொண்டுகனை யேறவென்றால்
குறைவற்ற செல்வமும் யில்லேயே நானெந்த
 குறிகொண்டு நெறிநிற்பனோ
வெறிகொண்ட பித்தர்போல் நித்தமுன் னேத்தொழும்
 விரகமொன் றேனுமருள்வாய்
வேதனெடு மாதவன் பூதகண நாதர்முதல்
 விண்ணவர் தொழுந்தலேவனே
தருவரச னீன்றபரு வக்குமரி கணவனே
 தண்டா யுதக்கடவுளே
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
 தணிகையங் கிரிவாசனே. 4

பாருக்குள் யானுமோ ருருகொண்டு பூமிக்குள்
 பாரமா யிரவுபகலும்
பஞ்சுக்கு நிகரான பாடுபட் டேனெஞ்சு
 பச்சைபுண் ணாகுதையோ
பேருக்கு மனிதனய்த் தோற்றமே யல்லாது
 பிணியற்ற பாடில்லேயே
பகைவனே யானலு மித்தகைய தருணத்தில்
 பார்க்கவும் மனதுவருமோ
ஊருக்கு ளென்குறைக ளாருக்குச் சொல்லுவே
 னுன்மன மிரங்கவில்லேயோ
ஒருகோடி யல்லவே யெண்ணற்ற கோடிபேர்க்
 குதவிசெய் தக்கடவுள்நீ
தாருக்கு ளுனேயன்றி யினிவேறு தெய்வநிழல்
 தஞ்சமென் னெஞ்சில்நினையேன்
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
 தணிகையங் கிரிவாசனே. 5

மதிகொடு நினேத்தொழு மயக்கத்தை யேகொடு
 மாசற்ற நன்னெறிகொடு
மந்திரங் கொடுநல்ல யெந்திரங் கொடுவுலக
 மாய்கையை விலக்கிக்கொடு

துதிகொடு நின்னடியர் துணைகொடு வூழ்வினைத்
துயரெலாந் தீர்த்துக்கொடு
துறைகொடு பேரின்ப கரைகொடு வடிக்கடித்
தூண்டாத ஞானங்கொடு
நிதிகொடு நிலைகொடு நினைக்கின்ற போதெலாம்
நினதுமலர் காணக்கொடு
நிந்தையு மகந்தையும் லோபமும் மோகமும்
நீக்கிநல் வாக்கைக்கொடு
ததியென்ற கோடான கோடியடி யாரெலாந்
தடுத்தாண்டு கொண்டையன்றோ
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
தணிகையங் கிரிவாசனே. 6

என்றிந்த மேகவிர ணச்சிறையை மீட்டெனது
யிதயத்தை மலரவைப்பாய்
என்றுநின் னடியார்கள் போலநிர்ச் சிந்தையா
யென்னையு மிருக்கவைப்பாய்
நன்றியறி யாக்கொடிய பாவியானாலுமுன்
னுமம் மறந்ததுண்டோ
நாலிரண் டாண்டாக பட்டதுயர் போதுமென்
னுதனே கருணைபுரிவாய்
கன்று னதுத்தாயின் முகநோக்கி யாவெனக்
கத்துமுறை போலநிதமுன்
காலுக்கு அபயமென் றடிமையிர வும்பகற்
கதறுமுறை கேட்கவிலையோ
தன்னிக ரிலாதகெம் பீரனே வீரனே
தனிவே லெடுத்தகரனே
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
தணிகையங் கிரிவாசனே. 7

வாதமெண் பதுசீத ஜன்னிபதின் மூன்றுஜுர
வகையாறு பத்துநாலும்
வட்டகுன் மஞ்சூலை பதினெட்டு குட்டமொடு
வருபித்த மொருநாற்பதும்
மாதராற் றுடர்மேக மிருபத்தி யொன்றுகா
மாலைசோ கைப்பாண்டுடன்

மாசிலா கண்ணேய்கள் தொண்ணூற்றி யாறந்த
மொத்தசேத் துமரோகமுந்
தீதான கிராணிநவ மூலவை சூரிவகை
தீண்டுபல பூச்சிவிடமும்
தினகரன் சுடர்பட்ட பனிபோல நின்னுடைய
திருவருட் கெதிர்நிற்குமோ
தாதா வெனக்குநீ தந்தைநீ தாயுநீ
தமியனென் குலதெய்வநீ
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
தணிகையங் கிரிவாசனே.

8

ஒருதுணைவு மறியாம லலைகின்ற னேயென்ன
வூழென் றெடுத்துரைப்பேன்
உனதுகம லப்பாத மிவ்வாறு துதியென்
றுரைப்பாரு மொருவரில்லையே
பரனுலகு விண்டுலகு பிரம்மனுல கும்மற்ற
பாதலம் பூதலமெலாம்
பக்திசெய் தல்லவோ நினதுதிரு வருளுக்கு
பாத்ரராய்க் கீர்த்திபெற்றார்
சிறுமையே னறிவிலே னொருநெறியு மற்றநான்
சீர்படுவ தெந்தநாளோ
சித்தர்வித் யாதரர் கருடகாந் தருவாதி
சேவிதா சிவதேசிகா
தருணத்தில் வந்துதவி செய்தகுல ரக்ஷகா
தற்போது மெனையாளுவாய்
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
தணிகையங் கிரிவாசனே.

9

குஞ்சரக் கோடனைய குறியிட்ட முலையிலே
கூரிட்ட வேல்விழியிலே
குதலைவாய் மொழியிளஞ் சொல்லிலே பல்லிலே
குலவுகந் தப்பொடியிலே
மஞ்ஞைநிகர் நடையிலே யிடையிலே துடையிலே
மலரிட்ட சிகைமுடியிலே
மணியிலே யணியிலே துணியிலே நடுநெற்றி
மையிட்ட சிறுபொட்டிலே

பஞ்சிளங் காலிலே மேலிலே யிளைஞைப்
பார்த்துவீ சும்வலையிலே
பட்டுகெட் டழியாம னின்னடிய ரடிமையாம்
பக்குவ மெனக்கருளுவாய்
தஞ்சமென் றடைகின்ற தொண்டருக் குடனுதவு
தந்தையே கந்தவேளே
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
தணிகையங் கிரிவாசனே. 10

ஆடித் திரிந்தவென் னிளமையில் வலியவந்
தறிவைத் திருத்தினதுவும்
ஆபத்து காலங்க டோறுமக் கணமோடி
வந்தா தரித்தவிதமும்
பிடித்த சமுசார பேய்கொண்ட போதுபிணி
வருதென்று முன்சொன்னதும்
பொருளற்ற வேழைக்கு யில்லமுஞ் செல்வமும்
போதுமட் டுந்தந்ததும்
வாடியூழ் வினையினெந் தழுமெனைப் பொருவென்று
வந்துவந் துரைசெய்ததும்
வகிலத்தி லிவ்வுதவி யார்புரிவர் நின்கருணை
வாயினாற் சொல்லவசமோ
தேடரிய வென்குலத் தெய்வமே யடியேனை
தற்போ திலுங்கார்த்தருள்
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
தணிகையங் கிரிவாசனே. 11

திருத்தணிகை,
செங்கல்வராயசுவாமிபேரில்
தோத்திரம்,
முற்றிற்று.



உ

சுப்பிரமணியர் துணை.

# தணிகாசலக்கடவுள்பேரில்

# மாதப்பதிகம்.

வெண்பா.

தணிகா சலமேவுந் தற்பரனை வேண்டித்
துணிவா யிருபதிகஞ் சொல்ல—மணிசேர்
பணிதுலங்கு தோளான் பகரானை மாமுகன்ற
ளணியாய் தலைக்கணிகு வாம்.

சித்திரைமாதம்.

அத்திமுகத்தோ னருந்துணைவாவிவ் வகிலமெல்லாஞ்
சுத்தியொருநொடிக் குள்ளேவலஞ்செய்த சூத்திரனே
முத்தமிழ்க்கீர னிடர்தீர்க்கத்தட்சணம் முயன்றதுபோல்
சித்திரைமாதம் வருவாய்தணிகையிற் சேவகனே.

வைகாசிமாதம்.

கையாறநின்கழல் போற்றிசெய்தேனென் கனவிலெல்லாம்
மெய்யாகநீவந்த தன்மையென்றலிந்த மேதினியில்
செய்யாவினையென்ன செய்திருந்தாலுமச் சிற்றமற்று
வையாசிமாதம் வருவாய்தணிகையில் வாழ்பவனே.

ஆனிமாதம்.

மானிலமளந்த மான்மருகாயிந்த மானிலமும்
ஞானியுமுனிவரும் நான்முகனுந்தொழு நாயகனே
தேனில்விழுந்த யீப்போல்திகைத்துனைத் தேடுகின்றேன்
ஆனிமாதத்தில் வருவாய்தணிகையி லாண்டவனே.

ஆடிமாதம்.

ஓடியுலாவும் பருவத்திலேயிந்த வூழ்வினைதா
ஞடித்துடர்ந்து தையோயிதற்கென்ன நானறிவேன்
பாடித்துதிக்கும் பதங்கொடுத்தாயந்தப் பக்குவம்போல்
ஆடிமாதத்தில் வருவாய்தணிகையி லாண்டவனே.

## ஆவணிமாதம்.

சேவலங்கொடியுடை சேவகனே துதி செய்பவர்க்குங்
காவடிக்கொண்டு வருமடியார்க்குங் கருணைவைத்து
மாவினையாவையுந் தீர்க்கவென்றேமலை மேவிநின்றாய்
ஆவணிமாதம் வருவாய்தணிகையி லானந்தனே.

## புரட்டாசிமாதம்.

இருட்டானமேனி யசுரரைச்சாய்த்து யிமையவர்மேல்
அருட்பார்வைநோக்கிய யாண்டவனேயடி யேனைவினை
வெருட்டாமல்கார்க்க வேண்டுகின்றேன்வெற்றி மாமயில்மேல்
புரட்டாசிமாதம் வருவாய்தணிகையிற் புண்ணியனே.

## ஐப்பிசிமாதம்.

கப்பியவூழ்வினைத் தீர்ப்பையென்றேநின் கமலமதில்
ஒப்புவித்தேன்மனத் துள்ளதெல்லாமிரு வுத்தமனே
தப்பிதமெத்தனை செய்திருந்தாலுநின் தஞ்சமென்றேன்
ஐப்பிசிமாதம் வருவாய்தணிகையி லற்புதனே.

## கார்த்திகைமாதம்.

தீர்த்தமனேகங்கள் மூழ்கிவந்தேன்வினை தீர்ந்திலையால்
மூர்த்திகண்மூவர் முதல்வனுக்கேமறை முடிவுரைத்து
கீர்த்திவகித்த சண்முகனேகதி வேறறியேன்
கார்த்திகைமாதம் வருவாய்தணிகையிற் காவலனே.

## மார்கழிமாதம்.

சீர்மலிந்தோங்கு முலகமெல்லாநின் சேவடிக்காய்
கார்மலிந்தோங்கு வண்ணமன்றோயின்பக் கட்டுரையால்
ஏர்மலிந்தோங்கு கவிவாணரன்பர்சொல் லேற்றதுபோல்
மார்கழிமாதம் வருவாய்தணிகையில் மன்னவனே.

## தைமாதம்.

பொய்யானவாழ்க்கையை மெய்யாகநம்பியிப் பூதலத்தில்
மையாடுகண்ணியர் மயலால்மெலிந்து மயங்குகின்றே
னையாவுனையன்றி திக்கறியேன்வினை யார்தவிர்ப்பார்
தைமாதந்தன்னில் வருவாய்தணிகைத் தயாபரனே.

மாசிமாதம்.

பூசித்திறைஞ்சு மடியாரிருதயம் பூரிக்கவன்பு
நேசித்துவந்து வினையுங்கவலையும் நீக்குகின்ற
தேசிகனேதெய்வ நாயகனேயுனைத் தேடுகின்றேன்
மாசிமாதத்தில் வருவாய்தணிகையில் மாமணியே.

பங்குனிமாதம்.

எங்கெங்குமோடியும் வினையகலாமலென் னிருதயத்தை
பங்கிட்டுநின்மலர் பதத்தில்வைத்தேனிது பத்தியமாம்
மங்களவள்ளியுந் தெய்வானையோடு மனமகிழ்ந்து
பங்குனிமாதம் வருவாய்தணிகையிற் பண்ணவனே.

மாதப்பதிகம் முற்றிற்று.

---

# வாரப்பதிகம்.

---

ஆதிவாரம்.

நீதிக்கிசைந்த தெய்வமென்றேயிந்த நீணிலத்தோர்
ஓதித்துதிக்கின்ற வுண்மையினுலெந்த னூழ்வினையைச்
சோதித்துநீக்கிச் சுகத்தைக்கொடுக்கநற் றேகையின்மேல்
ஆதித்தவாரம் வருவாய்தணிகையி லாண்டவனே.

சோமவாரம்.

பொங்குகடல்சூ ழுலகமெல்லாமுன்னைப் போற்றுதலால்
அங்கந்தளர்ந்துமிக மெலிந்துஅடியேனுனக்கு அபயமென் [றேன்
எங்குந்திரிந்து உழலாமலென்முறை யேற்றருளித்
திங்கட்கிழமை வருவாய்தணிகையிற் றேசிகனே.

மங்களவாரம்.

ஒவ்வாதவாசைப் பெருவாரியில்நெஞ்சு வூஞ்சலிட்டால்
எவ்வாறுநல்ல நிலையினிற்பேனென்ன வூழ்வினையோ
இவ்வாறுயென்னை யயலாய்நினைக்கிலிங் காருதுணை
செவ்வாய்க்கிழமை வருவாய்தணிகையிற் சேவகனே.

### புதவாரம்.

இதமாகநெஞ்சுக்கு யெத்தனைச்சொன்னாலு மிவ்வுலகைச்
சதமாகவேநம்பி வாதிக்குதேயிந்த சஞ்சலத்தை
பதமாகநீக்கி நினையேதொழப்பச்சை மாமயில்மேல்
புதவாரந்தன்னில் வருவாய்தணிகையிற் புண்ணியனே.

### குருவாரம்.

ஒருவருந்துணையில்லை யில்லையென்றேயுந்த னுயர்பதத்தை
மருவிப்பிடித்தா மன்றாடுவேன்மன மேனிரங்காய்
அருமாமறைக்கு ஆதியனேயெனை யாதரிக்கக்
குருவாரந்தன்னில் வருவாய்தணிகைக் கொற்றவனே.

### சுக்கிரவாரம்.

கள்ளமனத்தின் கவலையுந்தேகக் கடுவினையும்
எள்ளத்தனையு மில்லாமற்கார்க்க யிதுசமயம்
வள்ளிப்புனத்தில் வெகுவித்தைசெய்த வாலிபன்நீ
வெள்ளிக்கிழமையில் வருவாய்தணிகையில் வேலவனே.

### சனிவாரம்.

அனியாயநவக்கிரகச் சேட்டையினால்நொந் தடுக்குலைந்தேன்
முனியாமலென்முறைக் கேட்டருள்வாய்குரு மூர்த்தியனே
இனியேதெமக்குக் குறையென்னவென்றிரு மாந்திருக்கச்
சனிவாரந்தன்னில் வருவாய்தணிகையிற் சண்முகனே.



பன்னிருமாதமும் வாரங்களேழும் பகலிரவும்
உன்னிருதாட்டொழுங் கடமையுள்ளேனிது வுண்மைகண்டாய்
என்னிருதயத்துக் கவலையும்வேழு மெடுத்தெறிந்து
முன்னின்றுகாக்குங் கடனெந்தகாலமு முன்னதுவே.

### வாரப்பதிகம்

### முற்றிற்று.

---

உ

திருமயிலை

# கபாலீசர்பதிகம்.

கற்பகவல்லியம்மன்

# பஞ்சரத்தினம்.

கபாலீசர்ஐந்தாம்உற்சவக்கீர்த்தனம்

இம்மூன்றும் அடங்கியிருக்கின்றன





இவை-செஞ்சி. ஏகாம்பரமுதலியாரா லியற்றப்பட்டு,

**பூ. சு. குப்புசாமி முதலியாரது**

ஸ்ரீசுந்தரவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னைபுரசை:

1904.

உ

கடவுள்துணை.

# திருமயிலை
# கபாலீசர்பதிகம்.

## வெண்பா.

சந்திரமவுலிச் சடையும் கபாலமணி
சிந்தூரமார்மேனி சிறப்புடையா—யிந்தவுல
கேற்றும்திருமயிலை யீசன்மேல்பாடுதற்கு
போற்றுகபமுகன்றாள் போது.

## பதிகம்.

காயாதமரமுநீ பூவாதகனியுநீ காணாதபொருளும்நீயே, கதியும்நீ விதியும்நீ மதியும்நீபொருளுநீ கண்ணுநீவிண்ணும்நீயே, வோயாமல் யீரேழுவுலகளித்தவனும்நீ உண்மையாய்நின்றபொருள்நீ, வுத்திநீ சத்திநீ நித்தமுன்னடிதொழும் பக்தர்களைகாப்பவனுநீ, மாயாதிமாயம்நீ மறைநான்குமுடிவுநீ மாலயனானவனும்நீ, மறையும்நீ திரையும்நீ யிருளும்நீவெளியும்நீ மான்மழுதரித்தவனும்நீ, காய்பிஞ்சி பூமுதல் வெண்ணரியவினை கணக்காயமைத்தகுருநீ, கருணைமழைபொழிமயிலை நகரிலுரைவோய்வந்து கதியருள்கபாலீசனே. 1

கர்த்தனின்குடையாட கருணைதரும்விழியாட கர்ப்பகவல்லியாட, காதில்குண்டலமாட கையில்மான்மழுவாட கங்கைநின் சடையுமாட, அத்தனைசித்தர்பதி னெண்மர்முனிவர்களாட அருமறைபிரம்மனாட, அருளாடபொருளாட அணிந்தபுலியுடையாட அறுபத்துமூவராட, மூர்த்தியே முப்பத்து முக்கோடி தேவரொடு மூஷிகத் தோனுமாட, முகனாறுமுகனாட நந்திவாகனமாட நாட்டியப்பெண்களாட, கார்த்திட வென்வினையை தீர்த்திடரிஷபமதில் கடகடெனஓடிவருவாய், கருணை மழைபொழிமயிலை நகரிலுரைவோய்வந்து கதியருள்கபாலீசனே. 2

அன்னைதன் குக்கிதனில் ஐரெண்டுதிங்கள்பத் தாண்டுவுலகம் தன்னிலே, யவதரித்தைந்துவயதளவில் விளையாட்டையிதை யனிதமாய் காலமெல்லாம், பின்னதென்றெண்ணாமல் யேங்கிதிகத்தழகில் யியல் புடையமாதர்வதன, யேர்கண்டுயேங்கிமிகு மயக்கொண்டு வாடவும்

யென்னவிதியென்றெண்ணுவேன், அன்னமேயென்றுபாள் யவதியுர வற்றபின் அடிமையார்ஒருவர்பணியை, அகலாமல்செய்யவும் வைத்த தே னய்யனே அடிமைபதையென்னசொல்வேன், கன்னல்மொழி யம் பிகை பெண்கனகவல்லியுமை காதலாய்வேதமறியா, கருணைமழை பொழிமயிலை நகரிலுரைவோய்வந்து கதியருள்கபாலீசனே. 3

நின்கோயில்வாராபாவி நின்னடிதொழாபாவி நிலமையில்லாத பாவி, நீதியரியாபாவி வேதமுணராபாவி நின்னேசமில்லாதபாவி, நா ன்கொடும்பாவி நின்னடியார்களைக்கண்டு நாவிற்புகழாதபாவி, நல்லோ ர்கள்நேசத்தை கொள்ளாதபாவிநான ஞாயமுணராதபாவி, அன்னை தந்தைகளை வணங்காதபாவிநான் அருமையறியாதபாவி, அரும்பாவி பெரும்பாவி யென்போலுமொருபாவி அகிலமதில்யில்லைபாவி, கன பாவியிவனென்று தள்ளிவிடாமலென் கலிதீர்க்கவோடிவருவாய், கரு ணைமழைபொழிமயிலை நகரிலுரைவோய்வந்து கதியருள்கபாலீசனே.

நீர்கொண்டமேகத்தை நிகருனவுன்னருளை நினைவில்மதியாதமூட ன், நெஞ்சினில்வஞ்சமே குடிகொண்டமூடனுன் நிட்டையரியாதமூட ன், சீர்கொண்டு உன்புகழ்பாடவரியாமூடன் சினமிகக்கொண்டமூடன், சித்தின்பமாதர்வலை சிக்கியுன்னடிவிட்டு சிறுமையிலுழன்றமூடன், கா ர்கொண்டுகுத்தியும் கேளாதமூடனுன் தலைவெரிகொண்டமூடன், தரு மநெறிசற்றேனு மில்லாதமூடனுன் தயாளமில்லாதமூடன், கார்கோட ன் மாலையணிமார்பனேயிவ்வேளை கருத்துடன்ஓடிவருவாய், கருணை மழைபொழி மயிலை நகரிலுரைவோய்வந்து கதியருள்கபாலீசனே. 5

ஓயாமல்பொய்சொல்லி வீண்பொருள்பரித்தனே வொருவ ர்பொருள்யிலையென்றனே, உள்ளொன்றுபுரமொன்று பேசியேகெடுத்த னே ஊருடமைக்குலைவைத்தனே, தாயாரைவைந்தனே தன்பிரவை நொந்தனே தபசிகளையேசினேனே, தருவனதகெடுத்தனே யிடுவதை மரித்தனே தான்குலைகளென்செய்தனே, வாய்மதமகொண்டனே வா ணரைபழித்தனே வரும்வழியில்முள்ளிட்டனே, வையகம் மீதினில் அய்யமெனவந்தவரை நொய்யவேயேசினேனே, காயமதுவுள்ளளவும யேழையான்செய்தபிழை கடவுளேபொருத்தாளுவாய், கருணைமழை பொழிமயிலைநகரிலுரைவோய்வந்து கதியருள்கபாலீசனே. 6

புவிமிசையாண்டென்ன பொருள்மிக்கவிருந்தென்ன போதகுரு வாகியென்ன, புகழொணுவித்தைகள் கற்றென்னயானைமுதல் புலிவச்ய மாகியென்ன, தாவியேநதியெலாம் ஸ்தானங்கள்செய்தென்ன ஸ்தள மெலாம் திரிந்துமென்ன, தாயாருடன்பிறவி வுறவினர்கோடிபேர் தந் தையுமிருந்துமென்ன, காவியைதரித்தென்னகூபெயரெடுத்தென்ன கப ட்டினிலலைந்துமென்ன, காலனிடபாசமதை தள்ளப்போகாதென்று காலைவுன்பதம்பிடித்தேன், கவியவொருதந்திரம் யெனக்கருள்யிவ்வே ளைகடவுளை வோடிவருவாய், கருணைமழைபொழிமயிலை நகரிலுரை வோய்வந்து கதியருள்கபாலீசனே. 7

மாதாபிதாக்களெனை யீன்றதற்கழுவனோ மதியிலாதற்கழுவனோ, மாறுமனன்புளன் நிற்குமென்றழுவனோ மறையவன் விதிக்கழுவனோ, சிதத்திலுன்புகழை சத்தெனும் செப்பாத சண்டாளருக்கழுவனோ, சிறுமையிற்கழுவனோ வறுமையிற்கழுவனோ முன்செய்தவினை யென்றுணர்வனோ, உத்தமகுருவடி தன்னையேனோவனோ உலகாசைமூன்றுக்கழுவனோ, வல்லியர்க்கழுவனோ மெல்லியர்க்கழுவனோ வரும்விதிதனைக்கழுவனோ, காதகநமன்வந்து கைபிடித்திழுக்குமுன் கடவுளே வுரைக்கவருவாய், கருணைமழைபொழிமயிலை நகரிலுறைவோய்வந்து கதியருள் கபாலீசனே. 8

என்னதான்சொல்லியும் யேனென்றுகேளாமல் இருப்பதும்மழகாகுமோ, யிந்தவுலகிரேழும் அளித்ததுநீயல்லவோ இன்னமொருதெய்வமுண்டோ, அன்னைநீதந்தைநீ யென்றுதான்உன்னிரு அழகுபொற்பதம் நம்பினேன், ஆகாதபிள்ளையை பெற்றபின் யிவ்வுலகில் அணைக்காததந்தையுண்டோ, உன்னையேகதியென்றுநம்பினன் யிருந்தபின் உனையடுத்துங்கெடுவனோ, ஊமைபோல்நீயிருந்தாலும் யென்னன்னை உனைபார்த்து யேசிடாளோ, கனவிலும்உன புகழை மறவாதயடிமையைகாத்தருள்வதுன்கடமையே, கருணைமழைபொழிமயிலை நகரிலுறைவோய் வந்து கதியருள்கபாலீசனே· 9

பாம்பின்வாய்ச்சிக்கிய தேரைபோல் யிவ்வேளை பதைபதைத்தலைகிறேனே, பாராமல்நீயிருந்தாலிந்தபழிபாவம் பரமனேஉனைவிடாது,நம்பியுன்னடிதொழும் அன்பனைகாவாவிடில் நகைப்பார்கள் தேவரெல்லாம், நாளை இருவரும் மடிபிடித்தெரிவில வந்தால்ஞாயம்யெல்லோரும் சொல்லார்களோ, வம்பாக்கிவிட்டிட நினையாதேவடிமைக்கு வரமது அளிக்கநினைவாய், வஞ்சமதுபஞ்சைமேல் வைக்காமல்யிவ்வேளை வந்தடிமையாக்கிகொள்வாய். கப்பிதம்கண்ணீரும் வெப்புதேயென்னுள்ளம கடவுளேயென்செய்குவேன், கருணைமழைபொழிமயிலைநகரிலுறைவோய்வந்து கதியருள்கபாலீசனே, 10

காயமதுவுள்ளளவும் யேழைக்கோர்விண்ணப்பம்கடவுளேகண்பாருமே, காலனும்தவறுமல் கலியனும்நாடாமல் காதுசினம்வாராமலே, கைகால்கள்வோயாமல் கண்ணிருள்வாருமல் கர்மனினைவுநாடாமலே, காதுகம்நெஞ்சமுள் ளோர்நேசம்கொள்ளாமல் கடனென்றுகேளாமலே, பேய்பூதம்நாடாமல் பிணியனும்சேருமல் பெண்வலையிற்சிக்காமலே, பில்லிசூனியமுதல் அல்லலும்கூடாமல் பேரின்பவழியருளுமே,கைகூப்பி உனபுகழ்பாடும் யேகாம்பரனைகடவுளேயாட்கொள்ளுவாய், கருணைமழைபொழிமயிலை நகரிலுறைவோய்வந்து கதியருள்கபாலீசனே. 11

கபாலீசாபதிகம்

முற்றிற்று.



உ

திருமயிலை.

# கற்பகவல்லியம்மன் பஞ்சரத்தினம்.

வெண்பா.

செந்திருவாழ்மயிலைச் சேவகனார்பாகத்திற்
கந்தமமருங்குழலாள் கற்பகத்தாள் — சிந்தையுறச்
சந்தமுறும்பாடல் சதாநந்தமாயோகத்
தந்திமுகவன்றன் தாள்காப்பு.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அம்பரிபராம்பரி சிதம்பரிதிகம்பரி யகிலாண்டகோடியீன்ற, அன்னைநீயென்னையீன்ற வாயிநீவலவமணி மங்கைமழுபாணிநீயே, உம்பராபரியுநீ யுமையுரியாளுநீ யுதககமுடியுடையவளுநீ, யோங்காரியாங்காரி ஸ்ரீங்காரிரீங்காரி யோதுமூலமந்தக்கரமுநீ, சம்பிரடரிபூரணி காரணி நாரணி சத்தளஸநயனநேத்ரி, சாம்பவிசங்கரி சங்கரனைக்கொன்ற சங்காரியோன்சோதரி, நம்புமடியார்க்கருளை யுதவுமுபகாரிநீ நமனை யுதைசெய்தவளுநீ. நாதாந்தமோனிநீ வேதாந்தவேதிநீ நான்மறைகளோதுபவள்நீ, சிம்பவாகனியுநீ ஜீவகாருணியுநீ சிற்பராபரியும்வானோர், தம்பிரான்குடிவளர பூத்தநாமரையுநீ தற்பராபரியுமண்ணைக் கும்பமுலைபாளுநீ களபகுங்குமவதன கஸ்தூரிருசலாளுநீ, கஞ்சமலர்

ர்கழலினீ சொஞ்சுகாபுரமதிர காளைமீதேறுபவணீ, கும்பமுனியவர்த மக்கருள்செய்தகுமரினீ கோதிலாதுருவமாகிக், கோரமகிடாசூரனைக் கொன்றகோதைநீ கோகிரியிலுறைபவளுநீ, கம்பிதக்கண்ணீரு மாகி துதிசெய்பவர்க் கதிவிரைவில்வந்தருள்செயுங், கயிலைமலை நிகர்மயிலை நகரில்பதியிலுங்கருணை காதல்கற்பகவல்லியே. 1

சங்கரிதிகம்பரி சுதந்தரிதுரந்தரி சந்த்ரசேகரி குமாரி, சலந்திராசம்மரி சகலபுவனுபிரக்ஷகி சாமளாதேவிநீயே, அங்கைமான்மழுபாணி யாயிமகமாயி யன்பர்க்கமுதமானசாயி, யந்தகாரிசமரில் வல்லதிரிபுரதகனி யாலமுண்டவளுமாதி, யங்களணிதிங்களணி யம்மைநீ யயனுதி முதலவர்க்கதிபதியுமாய், யண்டரண்டங்களையு முண்டுரட்சித்திட்டவாயனுக்கருளுகாரி, பங்கயத்தவளுநீபலகோடியுயிர்களைப் பாதுகார்த்திட்டரிக்கும், பார்ப்பதியுருவிலினைய பஞ்சுபோல்பஸ்ப்பித்த பரமாத்மஜெகதீஸ்வரி, தங்குழவிலைசூல சங்குசக்கரகதா யுதவாள்கைகோதண்டி, சத்துநீசித்துநீ சத்துசித்தானந்த சல்லாபமானவுமைநீ, பொங்காபரணிநீ பொல்லாதநீலிநீ போதில்வளர்மாதுநீயே, புலியாதனத்திநீ பொன்போன்றவழகிநீ புவனசக்ரேஸ்வரியுநீ, நங்கைநீநான்முகன் றலையறுத்தவளுநீ நடனசபையாடுபவள்நீ, நரிதனைக்குதிரையாய்செய்தவுபகாரிநீ நான்முகனையீன்றவளுநீ, கங்காளதோளினி சிங்கவுத்தாரினி கதியருளுமௌனநிலைநி, கைலைமலைநிகர்மயிலை நகரில்பயிலுங்கருணை காதல்கற்பகவல்லியே. 2

அந்தரியபிராம வல்லிநியணியணு மலைமாதுவம்பிகையுநி, யகில முதலானநி யனுதிவடிவாளுநி யஞ்சகத்துதித்த, யெந்தரியேகாக்ஷரி யேகாந்தவல்லிநி எமனைவென்ரதிசூரிநி, எச்சமயமும்பணி யெதிராஜ வீரிநி யெண்ணெழுத்தானவளுநி, சுந்தரிசுயம்புநி சூட்சமநிலாட்சிநிசு தரிசனத்தோளுநி, சுத்தசைவத்திலப ரூபிநிசிவபிரான்சோங்கி விழுமதிரூபிநி, சந்த்ரசேகரியுநி யிந்திராதிதேவர் சகலோர்க்கு முதலானவளுநி, சச்சிதானந்தநி பிக்ஷாடனத்தினி சம்ப்ரமஞ்சத்தவளுநி சிந்துரத்திலகிநி சிற்பராபரியுநி ஜீவகாருண்யாளுநி, சிராமசகோதரி மாராமலைமதித் திடுமவர்க்கருளுதாரி, மந்த்ரவாளஸ்திநீ கந்த்ரகாந்தருவர்கை கூப்பிமனமகிழ்பவளுநீ, மாதுநீபாதுகாப் பவளுநீமலைவில்லி மாந்த்ரியமுதலானவளுநி, தந்தரிதயாபரி தகுபஞ்சபாணிநிடமரமழுவாளி சூலி, தந்தைநீதாயுநீ தமரநீகுருதெய்வ மானதண்டைக்கழலினீ, கந்தரிகந்தமலர் குழலினீயழலினீ கனகநூபுரவழகிநி, கைலைமலைநிகர்மயிலை நகரில்பயிலுங்கருணை காதல்கற்பகவல்லியே. 3

காரணிபூரணி வாரணிநாரணிகைலாயசலக்ஷேத்திரி, கனகநவரத்னவர் பரணிகம்பாக்ஷி காமாக்ஷிசங்காதரி, ஏரணிக்குழலி சிங்காதனத்தழகி சாமுண்டியெஞ்ஞான்றுமடியார், யேற்றித்துதிக்குமே காந்த்சித்தாந்திவா னெல்லைமாத்தாண்டிமாரி, கோரநரசிங்கமர்த்தினிசடாக்ஷரிவீர சூரசம்மாரிகௌரி, கோலாலமுண்டகுழ் கன்றனைக்காத்த கோமளவல்லி குண்டலிநி, கூர்திகழுமயில்பாணி வாணியாதாரிமா

கொண்டல் நிகரம்பொன்மேனி, கும்பதனவழகிசங்கரி குஞ்சரத்தாளை கோலமுடனீன்றவல்லி, சீரணியுமிடநீலகண்டியுத்தண்டி சிமாட்டிசிர மாலையணியுஞ், சிதாகாசரூபியேசுசவாரிகாரிசிற்பரபிம்மசிவகாமிவெண் ணீரணியுநதலிவே தாந்தநின்மலரகித நீலிசூலிகபாலி, நிலலோகிநிச ராசமுதற்காதிநீண் சடிலவாலைக்குமாரி, பேரணியுமொரு கோடி நாமி வாமிக்குழகி பெரியநாயகிச்சகஸ்த்திரி, பிரமாண்டியண்டபிண் டங்களை ப்பெற்றுபேர் பெற்றபிஞ்சகிவராகி, கார்பூத்தவண்ணனையபெற்றுபேர் ஞானநிமுதலோர்க்குகதியருளுமூலமாகி, கைலைமலைநிகர்மயிலை நகரில் பயிலுங்கருணை காதல்கற்பகவல்லியே. 4

சலந்திராசூரசம் மாரிகௌமாரி சர்தனிசடாக்ஷரியுதாரி சததளன நயனநேத்திரி, சாதணத்திசண்முகிசாம்பவிபைரவி கலகலெனுநூபுரக்க மலிகஞ்சத்தாளிகனன்மூன்றுகண்ணனிவிண்ணி, கணபணகங்கணிதிங்கள ணிபங்கிநீ கஜமுகனைமீன்றகன்னி, சிலைபுநலவையருவையர கச்செய்த ஸ்ரீராமன் சின்னவயதுளசோதரி, சித்திமாபுத்தியுளசத்தி சிவனற்று மொரு விதகராமுள்சிமாட்டியெவ், வுலகிலுளநலமுடையயரிதயவாசனி யன்பர்மீதிலகலாநேசனி, யுச்சரித்திடுமுண்மை நச்சரவபூணிநீ யுரியில் நவநீதமுண்ட, நலமுடையநங்கைசிங் காரிபங்காரிநீ நன்மைதிகழோங் காரிநீ நந்திவாகனையுநி பந்தனையுவிரடிநி நான்மறைக ளென்றுசொல் லும் நாலுநிபாலுநி நூலுநீமூலம்நீ நற்பரமனுசவளரும், நாதாந்திவே தாந்தி சித்தாந்தியாலவாய் நகரிலுறைநல்லவளுநி, மலமகலவருளுதவு மாதங்கிமதனிமா மலையரையன்மகளுநீயே மதிவதனரூபிமயி லனநடை யிலொயிலிமலர் பணிவுகாம்பரநமுதமே கலைகளகமலக்கண்ண னயனு திமுனிவர்தொழ, கற்பகத்தருவாய்வளர், கைலைமலைநிகர்மயிலை நகரில் பயிலுங்கருணைகாதல்கற்பகவல்லியே.

கற்பகவல்லியம்மன்.

பஞ்சரத்தினம்முற்றிற்று,

---

## கபாலீசர்ஐந்தாம்உற்சவகீர்த்தனம்.

இராகம்-நாதநாமக்கிரியை-பல்லவி.

காணவேவேணும்—ஐந்தாம்உர்சவம்
காணவேவேணும்

அநுபல்லவி.

காணவேணும்நல்ல கருணைபொழிமயிலை
மாநகர்வாழ்கின்ற மகிழ்கபாலீசர்பாதம் (காண)

சரணம்.

மானுமழுவுமாட மலர்சதுர்ப்புஜமாட
மங்கைகற்பகவல்லி நின்றுதாண்டவமாட—கபாலீசராட
திக்குப்பாலகராட தெரிசினைசெய்வோர்கள்
தேடியேகொண்டாட நந்தியுமாட—தவம்புரி
மந்திரமுனிவராட வளரிளம்பிறையாட
சந்திரசேகரருட சதுர்வேதம்தாருட
சுந்திரமூர்த்திபாட சுரிதிவினைகள்பாட
சந்திரமுடையதிவ்விய சாஸ்த்திரமாறுமாட
ஐங்கரருட—யெதிர்நின்று
அருமறைகூற—ரிஷியோர்கள்
அத்தன்கைலங்கிரி கர்த்தவனேயென்று
பத்தியுடன்பணியும் முத்தியளிப்பவரை காண)
பஞ்சாட்சரமுமாட பஞ்சபூதமுமாட
அஞ்சிமுகமுமாட அரையில்கிங்கணியாட
தண்டைபாடகமாட தங்கசிலம்புமாட
சர்ப்பாபரணங்கள் தயங்கிமுன்நின்ருட
அண்டர்களாட—சொலுவினில்
அமரர்கொண்டாட
அரியும்அயனுமாட அண்டர்கள்நின்றகொன்றை
மாலைபுரண்டாட வீரவெண்டயமாட
வீரபத்திரராட சூரபொர்ப்பிரபையாட
சுந்திரமூர்த்தியாட மந்திரமுனிவர்பாட
காளிகளாட—சகலோரும்
கண்டுகொண்டாட—மனமகிழ்
மகரத்தோரணமாட வசந்தபந்தலுமாட
பதரிசந்தரவால் வட்டமசைந்தாட
காவலராட—புஷ்பவிசிரிகள்
பாவலர்போட
வெள்ளைகுடைகளாட வெண்ஜாமரைகள்வீச
விருதுகட்டியங்கூற விஜையசோபனம்பாட
யெங்கும்அருந்தமிழ்க்கு யிரங்கும்சாமிக்கிந்த
இனிதானரிஷபத்தால் யீசனவரும்சேர்வை
காணவேவேணும்—ஐந்தாம்உற்சவம்
காணவேவேணும்

---

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

ஸ்ரீ வைகுண்ட

# ஏகாதசிவிரதக்கும்மி

யென்னும்

## உருக்குமாங்கதமகாராஜன்

சரித்திரக்கும்மி

இஃது

சிறுமணவூர்

## முனிசாமிமுதலியா

ரவர்களால் இயற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

43



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

வைகுண்ட

# ஏகாதசிவிரதக்கும்மி

என்னும்

## உருக்குமாங்கதமகாராஜன்

### சரித்திரக்கும்மி.



பாயிரம்

சீரிற்சிறந்த சிரோன்மணியேபுவி
செல்வமருளும் மனோன்மணியே
பேரிற்சிறந்த விதற்பநகர்மன்னன்
பெட்பையுரைக்கத் துணைவருவாய். (க)

விண்டலப்பூசை மலர்கொடுக்குந்திரு
விதற்பதேசம் புகழ்விளங்க
அண்டர்கள்யார்க்கு முதற்கடவுளாகு
மானைமுகவன் பதந்துணையே. (உ)

தெய்வநிலமை செழித்தோங்குந்திரு
விதற்பதேசப் புகழோங்க
வைகுண்டயேகா தசிவிரதஞ்சொல்ல
வாறுமுகப்பெரு மான்துணையே. (ங)

பூமிப்புகழும் விதற்பநகர்மன்னன்
புண்யவிரத மகிமைசொல்ல
நேமிகருத்தனும் வைகுண்டமேவிய
நெடியமாலின் பதந்துணையே. (ச)

விற்பொரும்சித்திர விழியணங்கே-நல்ல
விதற்பநகர்மன்னன் சேதிசொல்ல
பொற்புவிமேவியே செல்வமருள்திருப்
பொன்மாதுபாதம் பதந்துணையே. (ரு)

கார்திகழ்தர்மக் கொடையுடையாநந்த
கற்பகவள்ளல் கதையுரைக்க
பார்வதியாள்திருச் செங்கமலப்பதம்
பணிந்துநாளும் மிகத்தொழுவாம். (௬)

உம்பர்துதிக்க நிலம்வளர்த்த-ருக்கு
மாங்கதன்றன்கதை யானுரைக்க
அம்புவிபோற்றிய வாலைமனோன்மணி
அம்பிகைஞானப் பதம்போற்றி. (௭)

உத்தமனும்ருக்கு மாங்கதன்றன்கதை
உள்ளபடிக்கும்மி யானுரைக்க
புத்தகமாதாம் கலைவாணியென்னாளும்
புத்தியில்வந்து குடியிருப்பாள். (௮)

புத்தகவாணிக் குடியிருக்க-இந்த
உததமன்றன்கதை யானுரைக்க
மைத்தப்புலவர் திருப்பதங்களெந்தன்
சித்தத்தில்நாளும் படிந்திருக்க. (௯)

பூமியுங்கூடப் புலமைசொல்லும்-புகழ்
பூத்தசெழுமண வைப்பதியாம்
நாமஞ்சிறுமண வூர்முனிசாமி
நவிலுங்கும்மிப் பிழைபொருப்பீர். (௧௦)

## மாதரையழைத்தல்.

கற்பகவல்லிக் கமலவல்லிமலர்
கஞ்சுகவல்லி ரஞ்சிதமே
பொற்கரத்தின்வளை மின்னலிடுஞ்-சிறு
பெண்களொருங்கென வாருங்கடி. (௧௧)

குங்குமவல்லிக் குமுதவல்லி-யடிக்
கோகனமாதுடன் மோகவல்லி
மங்களக்குங்குமக் கொங்கையரே-சிறு
மாதரனைவோரும் வாருங்கடி. (௧௨)

சித்திரரேகைச் சிவரேகை-யடி
செண்பகமேனகை யூர்வசியே

முத்தேபவளமே பூஞ்சரமேயடி
முப்பதுப்பெண்களும் வாங்களடி. (கங)

மாணிக்கமேபெண்ணே ஆணிப்பொன்னேகண்ணே
மல்லிகையேமனே ரஞ்சிதமே
வாணியேநானொரு சேதிசொல்ல-நீங்கள்
வஞ்சியனைவோருங்கும்மியடி. (கச)

கும்மியடிசிறுப் பெண்டுகளா-ஞானக்
கும்மியடிமலர்ச் செண்டுகளா
செம்மையாயேகா தசிவிரதக்கதை
சிரித்துச்சொல்லியே கும்மியடி. (கரு)

நாட்டுச்சிறப்பு.

தேசமருபத்தி நாலிலுமேபுகழ்
பேசியிருக்கும் புலவர்முன்னே
வாசந்திகழும் விதற்பநகர்வளம்
கூசாமற்சொல்லுவேன் கேட்டிடுமே. (கசு)

மேகங்கருத்து முருவலிடும்-குன்று
மேடெங்குஞ்சென்னல் கதிர்நெரிக்கும்
நாடெங்குந்தாவரப் பூச்சொரியுமந்த
நாற்றிசையோடைக் கரைபுரளும். (கஎ)

திங்கள்தவிரா மழைப்பொழியும்-அந்த
தேசத்திலெங்கும் பயிர்க்கொழியும்
கங்கைக்குசாகரம் பின்னிடையும்-சுற்றுக்
கானகமெங்கினுந் தேன்சொரியும். (கஅ)

வாழையுந்தெங்குக் குலைநெரிக்கும்-அதை
வர்ன்னக்கமுகு யிலைமரைக்கும்
வேழங்கள்வந்து தினமுரிக்கு-மெங்கும்.
வித்திடாத்தாவர மேசெழிக்கும், (ககூ)

ஓடைக்கரையில் மலரசையும்-அந்த
ஜாடையில்அன்னம் யிசைபுரியும்
கோடையிலுங்கதிர் தான்குளிரும்-பெருங்
குன்றுபோல்விருட்சம் கதிர்மறையும். (உ0)

எப்போதும்முப்போக மேவிளையும்-அங்கே
இன்னம்பலகனி யூர்நிறையும்
கப்பியசோலையும் வாவிகளுங்-கதி
ரோனைமறைக்க மிகவளரும். (உக)

நித்தமும்சென்னலின் காரருப்பார்-அதை
மொத்தமாய்க்குன்றெனப் போர்நிரைப்பார்
அத்தியைக்கொண்டு கதிருடைப்பா-ரங்கே
ஆழியைப்போலே குழித்தெடுப்பார். (உஉ)

நகரச்சிறப்பு.

சுற்றுக்குடிகளரப்பெருமை-யதை
சொல்லவுமுண்டோ கவித்திறமை
முற்றுந்திரளாஞ் ஜெனவுரிமை-யது
முன்னின்றசெங்கோல் வலுத்திறமை. (உங)

யாத்திரைப்பாதைப் பெருந்தடமும்-அங்கே
யாதுலர்க்கன்னஞ் சொரிமடமும்
நேத்திரங்கொள்ள வடங்கிடுமோ-அதை
தோத்திரஞ்செய்ய முடிந்திடுமோ. (உச)

வீதிக்குவீதி தேவாலயமுஞ்சுர
விஞ்சயர்சூழு மடாலயமும்
ஓதுந்தருமக் கலையிடமும்-பொது
ஒண்டொடிமார்கள் நிலையிடமும. (உரு)

நான்குவருண வகுப்பிடமும்-அந்தப்
பாங்கையுரைக்க யெவர்திடமோ
ஓங்குபுகழர சின்றிறத்தாற்றிரள்
சாங்கோபசாங்க மாகநிறைந்தார். (உசு)

பவளத்தோரண வீதிகளும்-பெண்கள்
பால்வடியும்முகச் சோதிகளும்
தவளவெண்குடை நீதிகளும்-மற்றத்
தாரெங்கும்போற்றும் பிரக்கியாதிகளும். (உஎ)

நற்றவர்சூழும் பெருமைகளும்-அங்கே
நாற்சாதிவர்ன்னப் பொருமைகளும்

கற்றவர்பேசுந் திறமைகளும்-அரக்
காவல்செலுத்தும் வுரிமைகளும். ௨அ

மாடமண்டப சாலைகளும்-சுற்றி
மல்லிகைமுல்லிகைச் சோலைகளும்
தேடரும்பற்பல வாலயமும்-அங்கே
தெய்வப்பூசையாரு வேளைகளும். ௨௯

கற்புடைமங்கையர் தன்செழிப்பும்-விலைக்
கன்னியர்சுந்திரத் தின்கொழிப்பும்
பற்பலமன்னர்கள் வந்தடுக்கும்-தினம்
பகுதிக்கப்பண சத்தங்களும். ௩0

அந்திசந்திக்கடை சந்தைகளும்-வெகு
அடுக்குக்கட்டட விந்தைகளும்
முந்திப்பிந்திஜெனச் சுந்திரமும்-அங்கே
மொய்க்குழலார்விழித் தந்திரமும். ௩௧

வேதமொழுக்க மொருபுறமுங்-கீத
வீணைசுரங்கள் சிலபுறமும்
போதகச்சாலை பலபுறமு-மங்கே
புத்தகமாதுக் களைபறமும். ௩௨

அன்னதானங்கள் பலபுறமும்-ஒளிர்
சொர்ன்னதானங்கள் சிலபுறமும்
கன்னிகாதானம் ஒருபுறமுங்-கலி
யாணத்தின்சந்தடி யெப்புறமும். ௩௩

கரிகள்சாலை யொருபுறமும்-யுத்தப்
பரிகள்சாலை யொருபுறமும்
நெரியாய்சேனைப் பலபுறமும்-அங்கே
நிற்கும்ரதங்கள் மலையெனவும். ௩௪

மாதமும்மாரிப் பொழிமுறையும்-அந்த
மன்னவன்செங்கோல் மனுநெறியும்
ஓதிடசேடனுக் கேதெரியும்-எனக்
கொற்றைநாவாலே யெதுபிரியும். ௩௫

## சரித்திரத்துவக்கம்.

இப்படிநீதித் தவராமல்-குடி
சொற்படிசெங்கோல் கடவாமல்
பற்படிமன்னர் பகுதிகட்டமுழுப்
பாரரசாள்கிற நாளையிலே. ௩௬

ஆறிலொருபங்குத் தான்சேர்த்து-அந்த
ஊர்முற்றும்பிள்ளைகள் போல்காத்து
நூறுபேர்தேவிமார் தன்னுடனே-யந்தப்
பாரெங்குந்தன்னர சாளையிலே. ௩௭

தேவிமார்நூறுபேர் தங்களிலே-தினந்
தெய்வவிசுவாச மங்கையராம்
ஆவிக்கிணையான சந்தியாவளியெனும்
அம்மைவயற்றில் தவப்பலனால். ௩௮

இந்திரனென்ன விழியிலங்க-முழுச்
சந்திரனென்ன முகந்துலங்க
சுந்தரபிம்ப மென்விளங்க-நல்ல
மைந்தனைப்பெற்று மனங்களித்தாள். ௩௯

பிள்ளைபிறந்த தினங்குறிக்க-நகர்
வள்ளலின்பேரை யதுவுரைக்க
கள்ளமில்லாகுண மாதவர்தங்களால்
உள்ளபடிநாமஞ் சூட்டலுற்றார். ௪0

உருக்குமாங்கத மன்னனுக்குச்சுதன்
உதித்தவேளை தனைக்கணித்து
சிரக்குமேதரு மாங்கதனென்றிடச்
சீராய்நாம கரணமிட்டார். ௪௧

பிள்ளைபிறந்த மனத்தெளிவாலவர்
வெள்ளமாய்பொன்னை யள்ளித்தெளித்தார்
எள்ளளவுமனச் சஞ்சலமின்றியே
இருந்துவரசாளும் நாளையிலே. ௪௨

பட்டபஸ்திரீகள் அலங்கரிக்க-மலர்
பற்பலவேணுமென் றேநெரிக்க
வட்டமதாயொரு சோலைவைத்தார்-அந்த
வளப்பமிப்பொழு தாருரைப்பார் ௪௩

மூன்றரைக்காத மொருசவுக்காமதில்
ஜானுக்கொருமரந் தேங்கமுகாம்
வானென்றழைத்ததை யெட்டிப்பிடிக்க
வளர்ந்தப்பெருமரச் சோலைகளாம். ௪௪

மேகங்குனிந்து கனிபரிக்க-அதை
வேகமாயெட்டி யிலையடிக்க
மோகமாகக்குயில் தான்படிக்க-மணம்
மும்மண்டலங்களு மேயடிக்க. ௪௫

கிச்சிலிமிச்சமாய்க் கீழ்பிரள-அதைக்
கிண்டியேவேர்பிலா மேற்றிரள
அச்சமாய்மாங்கனி தேன்துளிக்க-அசைந்
தாடுங்கிளைதோரும் பூச்சிரிக்க. ௪௬

வாழைக்கனிகள் கனிந்துதிர-வதை
வர்ண்னக்கிளிகள் மிதித்தெடுக்க
தூயவிளாங்கனி யேபிரள-வதை
தொத்திப்பறவைக ளேதிரள. ௪௭

கிள்ளைக்கனிகளைத் தின்றிரைக்கு-மது
அள்ளியேதேனைத் தெளித்ததொக்கும்
உள்ளளவுங்கதிர் காந்தியிலாமலே
சில்லென்றிருக்குமச் சோலையிலே. ௪௮

மல்லிகைச்சாலை யொருபுறமுந்-திகழ்
முல்லிகைச்சாலை யொருபுறமும்
துல்லியநந்தியா வட்டையொருபுறம்
மெல்லியர்போலே சிரித்திடுமாம். ௪௯

செண்பகச்சோலை யொருபுறமா-மங்கை
செந்தாழைவாவித் தடப்புறமாம்
பொன்னிரமாமனே ரஞ்சிதமெங்கணும்
புத்தமுதமணம் வீசிடுமாம். ௫௦

மந்தாரைக்கொங்கு ஒருபுறமாந்-திகழ்
செந்தாழைச்சொகு வெகுத்திரமாம்
பிந்தாதமன்மத பாணமொருபுறம்
பின்னலெனவே சொரிந்திடுமாம். ௫௧

கஞ்சமலர்திகழ் வாவியிலே-பின்னும்
வஞ்சிநிகரல்லிப் பூவதிலே
கொஞ்சிக்குலாவிய மன்மதலீலைபோல்
கோர்த்துக்குலாவி மலர்ந்திடுமாம். ௫௨

இன்னம்பலவித நன்மலருமதில்
வன்னம்பலபலவாங்கனியும்
இன்னதுஉண்டில்லை யென்றுசொல்லாமலே
யெப்பொருளுமதிற் கப்பிடுமாம். ௫௩

இப்படிச்சோலை வளம்வகுத்து-அதில்
யெண்ணருங்காவல் தினம்பகுத்து
கைப்பிடிநாயகி நூறுபேர்க்குமதிற்
காலையும்மாலையும்பூப்பரிப்பார். ௫௪

நித்தமிருகால் மலர்பறிப்பாரவர்
நேரமொருவா ரலங்கரிப்பார்
சித்தத்தைப்போலே நடந்துவருகையில்
சேதியைக்கேளாய்வனக்குயிலே. ௫௫

சொல்லருமிக்கத் தவமுடைய ஒரு
வல்லவரான மஹாரிஷியும்
நல்லயிடமெங்கே கிட்டுமெனப்புவி
நாடெங்கும்சுற்றி வருகையிலே. ௫௬

இந்திரனூர்புவித் தன்னிலுமிவ்வித
சுந்தரச்சோலையுண் டோவெனவே
வந்திவர்பார்த்து மனமகிழ்ந்துவிது
வாகுந்தவத்திற் கெனமதித்தார். ௫௭

உன்னிதமாம்பெருஞ் சோலையிலேரிஷி
உள்நுழைந்தேயொரு மூலையிலே
பன்னகசாலையும் உண்டுபண்ணியவர்
பரமசிவன்போற் றவமிருந்தார். ௫௮

இப்படியேரிஷி தானிருக்க-வேந்தன்
சொற்படியேமலர்க் கொய்திருக்க
எப்படிவிந்தை நடக்குதென்றே-சிறு
மைப்படிகண்ணியே கேளுங்கடி. ௫௯

பிரம்மாதிமுப்பத்தி முக்கோடிபேர்களும்
பின்னுமளவுள்ள தேவர்களும்
செம்மையுடனரிப் பூசைசெய்யப்புவி
சென்றுவந்தேமலர்க் கொண்டகல்வார். ௬௦

பூமியில்வந்து மலர்ப்பரிக்கத்தெய்வப்
பூவையர்வந்திந்த சோலைகண்டு
நாமினியெங்கணும் செல்லவேண்டுவதில்லை
நல்லமலர்புண்ணிய சோலையென்று. ௬௧

கண்டமுதலிந்த சோலையிலே-தினங்
கங்குல்விடிந்திடுங் காலத்திலே
அண்டருலகத்து தேவவணிதையர்
ஆனமட்டும்பரித் தேநடப்பார். ௬௨

தேவகன்னிய ரேயருக்கப்-புவி
ராஜன்மனையில் மலர்குறைய
காவலிருப்பவர் தங்களைநித்தமுங்
கடிந்துநூறுபே ரேதுசெய்தார். ௬௩

அளவுமீரிய சோலையிலே-மலர்க்
களவுபோவ தறியாமல்
உளவுங்காணத் தெரியாமல்-அந்த
ஒண்டொடிமார்கள் சினத்தெழுந்து. ௬௪

கணவனுகும் அரசனண்டையிவர்
குணக்குறைச்சலைத் தானுரைத்து
மணப்பயிற்சியை யேன்குறைத்தீரென
மன்றுடிநின்றிடும் வேளையிலே. ௬௫

காவலர்தங்களைத் தானழைத்து-நகர்க்
காவலனுமவர் மேற்சினத்து
பூவிற்களவு படுவதென்ன-இதை
பிடிக்கவும்மால் குறைவதென்ன. ௬௬

சோலைசுற்றிக்காவல் தானிருக்க-நகர்
மேலையுங்காவல் பலவிருக்க
காலையும்மாலை மலர்குறைவதென்ன
கண்டுபிடிக்கா விடில்துணிப்பேன். ௬௭

என்றுவரசனுங் கட்டளைசொல்லிட
நின்றுபராக்கென வேநடந்து
நன்றிதைக்காணலா மென்றுத்துணிவுடன்
நாலெட்டுப்பக்கமுங் காத்திருந்தார். ௬அ

திரும்பிப்பாராமல் காத்திருந்தும்-ஒரு
அரும்புப்போவதறியவில்லை
பெரும்பழியினி வந்ததென்று இவர்
பேசியாலோசனை யேதுசெய்தார். ௬௯

அத்தனைபேரந்த காவலரில்-ஒரு
புத்தியில்லாத மடப்பயலும்
சற்றுமாலோசனை யில்லாமலேயவன
மைத்தவரைக்கிண்டி யேதுரைப்பான். ௭0

தோயுந்தவத்தி லிருப்பவர்கள்-நிலம்
மேயும்ஆடுமாடு போலவல்லோ
காயுங்கனியும் சருகுதின்பாரெனக்
கதையுஞ்சொல்லுவா ரண்ணர்களே. ௭௧

பழமையான மொழிப்படியே-இங்கு
கிழவன்வந்தொரு மூலையிலே
பழமையாகத் தவமியற்று-மந்த
பாவிசெய்வானெனத் தோற்றுதென்றான். ௭௨

சரியேநீசொல்வ துண்மையடா-நாங்கள்
சற்றேமரதியாய் விட்டோமடா
விரைவாய்சென்றுப் பிடியுமடா-கொண்டு
வேந்தன்சபையில் விடுவமடா. ௭௩

பேசியேமூடர் மிகநடந்து-அந்த
போதமகாரிஷி முன்னடுத்து
தேசிகனேயுன்னை வேந்தனழைக்குறார்
தீவிரம்வாருமென் றேயுரைத்தார். ௭௪

கூடியநாள்வெகு காலமதாயிங்குக்
கோரித்தவமு மிருந்துளமே
தேடியெவரு மழைத்ததில்லை யிது
தெய்வச்செயலென் றெழுந்துவந்தார். ௭௫

கூட்டிரிஷியை நடத்திக்கொண்டு-வேந்தன்
குந்தியிருக்கும் சபைவிடுத்து
காட்டின்மறன்போலே காவலர்யாவரும்
கைகட்டிமெய்மரந் தேயிருந்தார். எ௬

போதரிஷியினெதிர்வருத்தை-அந்த
பூலோகமாளும் துரைபார்த்து
மாதவர்க்கேதிங்கு காரணமோவென்று
மன்னன் திடுக்கென் றெழுந்திருந்து. எஎ

என்னால்செய்த தவப்பயனோ-எங்கள்
முன்னோர்பெற்ற வரப்பயனோ
பொன்னின்றிருவடித் தானசைய-என்னை
பொருளாயெண்ணி தயைபுரிந்தீர். எஅ

என்றுவரசன் மிகவணங்கித்தக்க
வாசனமிட்டிவன் கீழிரங்க
குன்றுபோல்நின்றுள காவலருமங்கே
கூக்குரலிட்டடனே துரைப்பார். எ௯

சோலையிலேமலர் போகும்நிமித்தியம்
மேலையிவர்செய்த யோசனைப்போல்
சாலமகாரிஷி மீதுநிலவரம்
சாற்றினார்யாவ ரொருமுகமாய். அ0

துட்டர்கள்சொன்ன மொழிகேட்டு-ராஜன்
கிட்டியிருசெவிதானடைத்து
மட்டிப்பயல்களே சொற்பமலர்குற்றம்
மாரிஷிமீதோ சுமத்துகிறீர். அ௧

காவலர்தாங்களைத் தான்கடிந்து-அந்த
கானமகாரிஷிக் கால்விழுந்து
கேவலமூடர் சிறுபிழையைச்சற்று
கர்த்தாவேநீர்பொருத் தாளுமென்றான். அ௨

மன்னவனேயுந்தன் சோலையிலேமலர்
போகும்நிமித்தியங் காணவென்றால்
இன்னவர்தங்களா லீண்டதல்ல-அதை
யென்னென்றுகேள்சில நாள்துடங்கி. அ௩

மாலுக்குப்பூசை புரியவேண்டி-இங்கு
நாளுக்குநாள் தினங் கங்குலிலே
மேலுலகாந்தெய்வ லோகத்துக்கன்னியர்
மெத்தநாளாய்மலர் பற்றுகிறார். அ௪

கண்டுபிடித்திட வேணுமென்றாலொரு
தொண்டுசொல்வேனது போல்நடந்தால்
விண்டுலகஞ்செல்லும் பூக்களவையிங்கு
கொண்டுநிரித்திடக் கூடுமென்றார். அ௫

உத்தாரம்போலே நடப்போமென-உள்ள
மைத்தோரும்மன்னவ னும்பணிந்து
யெத்தியிருகரங் கூப்பிநிற்கதவப்
போதரிஷியும் புகலுகின்றார். அ௬

தாபரந்தன்னிற் கொடும்பிறப்பாம்-வெகு
சாபத்தால்வந்த மறுபிறப்பாம்
ஈமத்துக்கொம்மட்டிக் காயின்விதைகளை
இந்தவனம்முழு தும்விரைத்து. அ௭

எங்கெங்குங்கொம்மட்டி தான்விதைத்துக்-கொடி
யெந்தச்செடியினு மேதொடுத்தால்
அந்தரக்கன்னியர் தீண்டிடிலங்கனம்
அசுத்தையாகியே நின்றிடுவார். அஅ

நேரினிற்கண்டு பிடித்திடலாம்-அவர்
ஆரெனவிண்டு தெரிந்திடலாம்
ஊரையும்பேரும் மறிந்திடலாமையா
உன்மனச்சஞ்சலம் வென்றிடலாம். அ௯

மன்னனுக்கிவ்வா றுரைத்துவிட்டு - அங்கே
மற்றுமுள்ளோருக் காசீர்வதித்து
பன்னகசாலை தனையடுத்து ரிஷி
பாரதவத்தி லிருந்துகொண்டார். ௯0

மாதவர்சொன்ன மொழிப்படியே-அந்த
காவலர்தங்களுக் கேவலிட்டு
ஆதவன்போலவே மன்னவன்செங்கோல்
அரசுபுரிந்திடும் நாளையிலே. ௯௧

எத்தடத்துமுள்ள கொம்மட்டிக்காய்களை
யெண்ணற்றபேராகச் சேகரித்து
வித்தகமான மலர்ச்சோலையெங்கணும்
விரைத்துநெடுகே பயிர்விளைத்தார். கூஉ

வட்டமதிப்பிறை மீதுகருமாசி
வந்துபடர்ந்துள தன்மையைப்போல்
திட்டமானமலர் மீதினிற்கொம்மட்டி
தீவினைப்போலே படர்ந்திடுமாம். கூஙு

கந்தப்பரிமள சந்தணவிருட்சத்தில்
வந்துவிடநாகம் சேர்வதுபோல்
அந்தமுள்ளமலர்ச் சோலையிற்கொம்மட்டி
ஆக்கினையாலே படர்ந்திடுமாம். கூச

இப்படிகொம்மட்டி பூஞ்சோலையெங்கணும்
யெட்டிப்படர்ந்து துளிர்த்திடுங்கால்
மைப்படிகண்ணியாம் தெய்வப்பெண்கள் - மலர்
வழக்கம்போலே பரிக்கவந்தார். கூரு

நித்தவழக்கம்போல்பரிக்க - அவர்
மெத்தவிருட்டினில் வந்திரங்க
அத்தனைபேரி லொருமாதுதீண்டவே
அசுத்தையாகி நிலைத்துவிட்டாள். கூசா

ஏழுபேர்கன்னியில் மாதொருத்தி - யந்த
பாழுங்கொம்மட்டி மிதித்திடவே
சூழும்ஆறுபேர் தங்களைக்கூவியே
தாழயிருந்தவ ளேதுசொல்வாள். கூஎ

எந்தன்வினைவந்து முன்னிருந்துப்-பாழும்
நிந்தைகொம்மட்டி மிதித்துவிட்டேன்
அந்தரஞ்செல்லவும் சத்தியில்லைநீங்க
ளாருபேர்பூசை நடத்துமென்றாள். கூஅ

அசுத்தையாகி யொருமாது-அங்கே
அசைவில்லாமலே நின்றிருக்கும்
வசத்தைக்கண்டு தவமுனியும்-அந்த
வனத்துக்காவலரையழைத்து. கூசா

இக்ஷணமேசபை தானடுத்து-மன்னன்
யெத்தொழில்செய்யினு மேயழைத்து
தக்ஷணம்நான்வரச் சொன்னதாக-இந்த
தாவிலழைத்து வருவீரென்றார். ௱

போற்றியென்று விடையெடுத்து-நல்ல
காற்றிலும்வேக மாகநடந்து
சாற்றியரசன் றனையழைத்து-அந்த
தக்ஷணஞ்சோலை யடுத்தனரே. ௱க

மன்னனுக்காக மனமிரங்கிமுனி
பன்னகசாலையை விட்டிரங்கி
பொன்னுலகமங்கை நிற்குமதிசயம்
பூபதியேவதோபாருமென்றார். ௱உ

தெய்வமடந்தைதனைப்பார்த்து மன்னன்
ஐயமுடனருகேயடுத்து
கைகளிரண்டையு மேகுவித்துஅவட்
காலில்விழுந்து சரணமென்றான். ௱௩

சரணமென்ற மதிமுகத்தை தெய்வ
சாரணிகண்டு ஆசிர்வதித்து
கருணையுள்ளகுல மன்னவனே யெந்தன்
காலவிதிதனைக் கேளுமென்றாள். ௱௪

விதிமுதலாய்மற்ற தேவருக்கு அவர்
விண்டுவின்பூசை செய்வதற்கு
பிரதிதினமும்மலர் கொய்துசெல்வோம் இதைப்
புண்யவனமென்றே நாங்கள்சொல்வோம். ௱௫

தேவர்முனிவர் இருடியன்றி மற்ற
பூலோகர்கண்ணிற் படமாட்டோம்
பாவியான்செய்த தவக்குறையால் இன்று
பாழுங்கொம்மட்டி மிதித்துவிட்டேன். ௱௬

அந்தரஞ்செல்லவும் ஆகவில்லை யினிப்
பிந்தவும்பூலோக மானதொல்லை
இந்தவசுத்த மதுநீக்கி னன்
யேகவுபகாரஞ் செய்யுமென்றாள். ௱௭

என்னாலேயாகு முபகாரம்-அதை
இன்னதென்றேவருட் செய்திடுங்கால்
தன்னாலேயானல் தடையுமில்லை-தயை
செய்துத்திருவாய் மலருமென்றான். ௱அ

ஆகமம்போற்றும் வைகுண்டயேகாதசி
அற்புதநல்விர தப்பலனை
ஏகமனதுடன் தத்தஞ்செய்தாலின்று
யென்னிடதோஷம் விலகுமென்றான். ௱௯

மாலடிக்கன்புசெய் மாதரசே இந்த
மண்ணிலேகாதசி யின்னதென்று
நாளும்நடத்திலேன் கேட்டுமிலேனையோ
நானென்னசெய்குவேன் பேதையென்றான். ௱க0

நீதிதவ்றாத வள்ளலேநீயந்த
சேதியறியாத துண்மையப்பா
ஓதிடுமுன்தேவி நூறுபேர்தங்களில்
உத்தமிசந்தியா வளிதனக்கு. ௱௧௧

வேணவறுசுவை தான்சமைக்கும்-ஒரு
போனகத்திசம யற்றிரத்தில்
காணும்பெரும்பிழை யாலேகடிந்துக்
கடியசிறையி லடைத்துவைத்தாள். ௱௧௨

அன்றைக்கொருபொழு துண்டியுடனிவள்
அரியசிறையி லிருந்தனளாம்
சென்றுமருதின மும்விடுக்காமலே
சீற்றத்துட நாசியிருந்தாள். ௱௧௩

முந்தநாளோர்பொழு தன்னத்துடனிரு
முப்பதுநாழியுந் தான்கிடக்க
பிந்தநடுநா ளுமிநீரும்வற்றியே
அந்திப்பகலும் விழித்திருந்தாள். ௱௧௪

போனகத்தியை யிரண்டுநாளுஞ்-சிறை
போட்டதைத்தானன்று நாட்டம்வைத்து
ஆனபிழைக்கிரு நாள்சிறைபோதுமெ
ன்றங்கனம்முன்னாட் காலைவிட்டாள். ௱௧௫

மூன்றுநாட்காலை சிறையகற்று-யிவள்
முழுகிக்குளித்து தலைவகிர்ந்து
சாற்றநற்கரி போஜனந்தின்றுதன்
சங்கடமற்றுச் சுகித்திருந்தாள். ககசூ

கேட்டையோமன்னவா சந்தியாவளியென்னும்
கீர்த்திசேர்வுன்னுடை தேவியினால்
வீட்டுவெள்ளாட்டியாம் போனகத்திமுன்னால்
விட்டுக்குறையால் பலித்திடும்நாள். ககஎ

விட்டக்குறையால் பலித்திடும்நாளின்
விபரத்தைக்கேளினி மன்னவனே
தொட்டக்குறையென வுஞ்சொல்லாமவள்
தெய்வமின்னென்றும்புகன்றிடலாம். ககஅ

ஓர்பொழுதுண்டுச் சிறையடைந்தநா
ளோங்குந்தசமிய தாகுமையா
பாரறியப்பகல் யிரவுமுபவாசம்
பட்டநாள்ஏகா தசியாகும். ககசு

அவத்தைகள்நீங்கிப்பின் காலையில்நீராடி
அன்னம்புசித்தநாள் துவாதசியாம்
தவத்தாலிம்மூன்று நாளுங்கிடைத்தது
தாராளும்மன்னவா கேளுமினி. க௨0

அன்னவனைக்கொண் டேகாதசியின்பலன்
மன்னவாநீதத்தஞ் செய்திடிலோ
பொன்னுலகஞ்சென்று நான்பிழைப்பேன்மெத்தப்
புண்ணியமுண்டுனக் கென்றுரைத்தாள். க௨க

தேவகன்னிசொன்ன வாரதுபோல்மன்னன்
ஆவலாகமனை தானடுத்து
பாவையாஞ்சந்தியா வளியாலேயந்த
பாக்கியவதியின்னு ளென்றறிந்து. க௨௨

ஜென்மாந்திரத்தின் றவப்பலன்நேரிட்டுத்
தெரியாமல்செய்த தவப்பலனை
பொன்பதிகன்னிக்கு தத்தமிடச்சொல்லி
பூதலமன்ன னருள்புரிந்தான். க௨௩

வேந்தனுரைத்திட்ட கட்டளைப்போலந்த
மாந்துளிர்மாது வணங்கிவந்து
தாழ்ந்துளள்ளுடன் நீர்கொணர்ந்துபலனை
தாறைவார்த்தாள்தெய்வ மாதினுக்கு. க௨ச

அசுத்தைநீங்கிப் பவந்துலைந்து-அங்கு
அந்தரமார்க்கம தாய்கிளம்ப
விசையாய்நின்றுள தெய்வகன்னியொரு
விருப்பங்கொண்டங்கு யேதுசொல்வாள். ௧௨௫

சாலப்பரவுப காரம்விரும்பிய
சந்திரகுலசத்திய மன்னவனே
மேலுவகோர்செய்யும் இந்தவிரதத்தை
மெல்லியுஞ்சொல்லுமேவன் கேளுமென்றாள். ௧௨௬

பூர்வத்திலேவெகு காலமுந்தி-யந்த
பொன்னுலகிந்திரமா ராஜனுக்கு
தூருவாசமுனி சாபத்தினால்வந்த
தொந்தரைக்கேள் சந்திரபூபதியே. ௧௨௭

தன்விஷயத்திற் குறைநடந்த-அந்த
பொன்னுலகிந்திர னைப்பார்த்து
பொன்மகளுன்பதி விட்டகன்றுயினி
பெரியவள்வாழக் கடவதென்றார். ௧௨௮

பாரமுனியிட்ட சாபத்தினாலந்த
பட்டணமும்மற்ற தேவர்களும்
தாரதம்மியந் தானுமற்று-அவர்
தக்கச்செயலுந்தொழிலுமற்று. ௧௨௯

இந்திரனூர்பதி ஜீவகோடி-பல
அந்திரவாசி பலகோடி
சந்ததமும்வெகு துன்பமுற்று-இவர்
சற்பசயனன் றனைத்தொழுது. ௧௩0

வாரணத்தினிடர் தான்தவிர்த்த-ஹரி
நாரணன் றன்னடிப் பாரணமாய்
ஆரணத்தின்வழி தன்விதியேதேவர்
அனேககாலந் துதிபுரிவார். ௧௩௧

பிரம்மாதிருத்திர தேவர்களு-மங்கு
பின்னுங்கதிர்மதியானவரும்
நிர்ம்மலமாக அணுவுமுணவன்றி
நெரியாயொருங்கே விரதமதாய். ௧௩௨

ஏகாதசியின் பகலிரவுமவர்
யேகாந்தமாகத் தவமிருந்து
வேகமாய்மந்தர மலைகொணர்ந்தேயவர்
வைத்துத்திருப்பாற் கடல்தனிலே. ௧௩௩

அன்றுமுழுதுங் கடல்கடைந்துதேவர்
அடுத்தநாட்காலை துவாதசியில்
நன்றெனஸ்ரீநாதன் தேவியருமப்போ
நாடித்திருவவ தாரஞ்செய்தாள். ௧௩௪

அகிலலோகமாதா பொன்மகளை-யந்த
அண்டகோடிதேவர் சேவைசெய்து
ஜெகமளந்தஸ்ரீமந் நாராயணனுக்குத்
திருமணஞ்செய்து மனமகிழ்ந்தார். ௧௩௫

மங்களமாக மணமுடித்து-அங்கு
மாதவர்யோகி விருதிமுதல்
சங்கையரவே யமுதமுண்டபின்னர்
சுவாமியுரைத்ததைக் கேளுமன்னா. ௧௩௬

இன்றுமுதல்பிரம்ம ருத்திராதியாவரும்
யிந்தயேகாதசி மாவிரதம்
நன்றாய்ஸ்மரித்து வருபவன்றனக்கு
நாலெண்தலைமுறை மோட்சமென்றார். ௧௩௭

நாதனுரைத்திட்ட கட்டளைப்போலிது
நாள்வரைக்கும்தெய்வ லோகமெல்லாம்
பேதமின்றிநடந் தேரும்விரதத்தை
பூமியிலேயுனக் காயுரைப்பேன். ௧௩௮

சந்திரகுலத்துப் புரந்திரனே-செவி
சாற்றுவாய்நீசெய்த புண்ணியத்தால்
அந்தரலோக விரதப்பலனை-யிங்கே
ஆதியோடந்தமுனக்குரைப்பேன். ௧௩௯

திங்களின்தோறும் தசமியின்காலையில்
தீர்த்தமாடித்திருக் காப்பணிந்து
மங்களமாயரித் தியானஞ்செய்து-அன்று
மத்தியானவேளை யொருபொழுதே. ௧௪௦

அன்றொருவேளையே அன்னமெடுத்து
அடுத்தயேகாதசி நாள்முழுதும்
பன்னகசயனன் றன்திருநாமமே
பாராயணஞ்செய்வ தன்றியிலே. ௧௪௧

ஆகாரநித்திரை தானொழித்து அன்
றறுபதுநாழிகை யும்விழித்து
வாகாய்புராண யிதிகாசகேள்வியில்
வணக்கமாக செவிகொடுத்து. ௧௪௨

துர்ச்சனர்மூடர்கள் யீனர்சண்டாளர்கள்
துட்டர்தெரிசனந் தானொழித்து
சர்ச்சனர்கூட்ட நடுவிருந்தன்று
சுவாமிகதையால் விடியவைத்து. கசங

விடிந்தக்காலை துவாதசியாமன்று
அடர்ந்துக்கஞ்ச மலர்க்குளத்தில்
துடர்ந்துகுளித்துத்திருமணிட்டு-நல்ல
துளசிமாலை மலரணிந்து. கசச

அன்னமறுசுவை யால்பழம்பொங்கல்
அரிக்காராதனைத் தான்புரிந்து
நன்னயமான வதிதிசிலருக்கு
நாடிப்பரிமாரி நீபோசிப்பாய். கசரு

இப்படியேகா தசிவிரதந்தன்னை
கைப்பிடிநாயகி நீயுமதாய்
ஒப்பிநடந்திடில் தெய்வலோகத்திலே
உம்பர்க்குமேலாக வாழ்ந்திடுவாய் கசசு

கன்னிகைத்தீட்டை தவிர்த்துதெய்வலோகம்
காட்டியுபகாரம் செய்தவுந்தன்
நன்னயத்தாலே பிரதியுபகாரமாய்
நானுரைத்தேன்நட மன்னவனே. கசஎ

நன்றாய்விரதம் விரித்துரைத்து-அந்த
நங்கையும்மன்னவனைப்புகழ்ந்து
மின்கொடிபோல வாகாயங்கிளம்பியே
மெல்லிதெய்வலோகம் போயடுத்தாள். கசஅ

மங்கையுஞ்சென்று மறைந்தவுடனந்த
மன்னவன்காவ லரையழைத்து
இங்குளகொம்மட்டி யாவையும்வெட்டியே
யிட்சணம்சுத்தப் படுத்துமென்றான். கசகூ

ஆருக்குமிம்மலர் சோலையிலே-ஓர்
அரும்புமருந்திடக்கூடாது
சீர்பெருந்தேவதா ஸ்ரீகளேநித்தமும்
சென்றுபரித்திட வேணுமென்றான். கருய

ஆக்கினையிப்படி சொல்லிவிட்டு-மன்னன்
அரண்மனைக்கு யெழுந்திருந்து
யோக்கியமானத் தபோதனர்வேதியர்
உத்தமமந்திரி தன்னுடனே. கருக

சோலையில்தெய்வப்பெண் வந்ததுவும்-அந்த
வேளையில்மாமுனி சொன்னதுவும்
சாலவணங்கியே நின்றதுவுமதன்
சாதித்துச்சென்றதவப்பலனும். ௧௫௨

முற்றும்விபர முடனுரைக்க-அந்த
உத்தமர்கேட்டு மனமகிழ்ந்து
மெத்தவும்நீ புண்ய சீலனையாவென்றும்
மென்மேலும்ஆசீர் வதித்துரைப்பார். ௧௫௩

தேவதாஸ்திரீயா லுபதேசிக்கப்பெற்ற
தெய்வவிரதத் தவப்பலனை
பாவலராலும் புகழ்தரமோவுந்தன்
பாக்கியமேதெய்வ பாக்கியமையா. ௧௫௪

சாதியிலீனர்சண் டாளரேயாயினுஞ்
சாதித்தோராண்டு நடந்துகொண் ல்
நீதிப்படியிரு பத்தோர்தலைமுறை
நிலையாய்மோட்ச மடைந்திடுவார். ௧௫௫

இப்படிமேலோர் விரித்துரைக்கமன்னன்
பின்புரமேலும் சந்தோடமதாய்
ஒப்பியேவெண்குடை கீழிருக்குங்குடி
யொவ்வொருஜீவ ரனைவரையும். ௧௫௬

வன்னாஸ்ரமந் தவறாமல்-நாலு
வகுப்பாஞ்சாதி யனைவரையும்
என்போல்விரதம் பயிற்றிவைப்பதன்றே
ராஜர்க்குடைமனு நீதியென்றான். ௧௫௭

பின்னுமரசன் கருணைப்பெருங்குணம்
பேதமில்லாவர சின்திறமும்
நன்னயமந்திரி மற்றவருங்கேட்டு
ஞாயமென்றேமனந் தான்மகிழ்ந்தார். ௧௫௮

அங்கனம்மந்திரி யின்முகத்தை-நீதி
யரசன்கருணையுடன்பார்த்து
இங்ஙனம்நம்மக் குடையரசின்பூமி
யாவற்றிலும்பறை சாற்றுமென்றான். ௧௫௯

என்னவென்றுபறை சாற்றுகிறாரங்கே
யீரெட்டிரண்டான சாதிகட்கும்
இன்றுமுதல்பிரதி மாதமேகாதசிக்
கிட்டிடுங்கட்டளைக் கேளுமென்றே. ௧௬௦

அண்ணுக்கபர்கட்டும் பிள்ளைமுதலா
யமங்கலிமங்கிலி கன்னியரும்
பின்னமில்லாமலே பனிரெண்டேகாதசி
பிரித்தவாக்கினைப் போல்நடப்பீர். கசுக

தசமிதோருந் தலைமுழுகி-தச
நாமந்திருமணித்தானணிந்து
விசனமற்று ஒருவேளையுண்டியே
வேண்டியாண்டவனைத்துதித்து. கசுஉ

நடுநாளேகாதசி முற்றிலுமேயுங்கள்
நாவிலுமிநீர் விழுங்காமல்
நெடுமால்நாம மிரவும்பகலிலும்
நிந்தாஸ்துதியாய்த் தவமிருந்து. கசுங

கொல்லுதலற்று கொடுமையற்று-வீண்
கோள்மொழியற்று குணங்களற்று
வல்லமையற்றுநம் வைகுண்டநாதனை
வாஞ்சனையாக மிகத்தொழுது கசுச

உண்டியுமற்று உணவுமற்று- பல
ஊக்கமற்றுபெருந் தூக்கமற்று
எண்டிசையோரும் மிரவும்பகலன்று
யீசனையாசை யுடன்தொழுது. கசுரு

ஆலயஞ்சென்று வலம்புரிந்து-அவ
தாரப்பெருமை பலபுகழ்ந்து
லீலாவினோத மகிமையெல்லாம்-வெகு
மேலாய்பேசியே கண்விழித்து. கசுசா

துவாதசியாகுமன் றுனளின்காலையில்
தீர்த்தங்களிற்சென்று ஸ்நானஞ்செய்து
துவாதசநாமந் திருமணியும்பூண்டு
தூயத்திருத்துழா புவுகமுண்டு. கசுஎ

அதிதியொருவரைத் தானழைத்து-மிக
அன்புடன்போற்றி யுபசரித்து
விதிதவராம லருசுவையோடே
விருந்துப்லகாரந் தானளித்து. கசுஅ

இப்படிமாத மிருமுறையும்-வரும்
ஏகாதசிதோரு மாக்கினைந்போல்
செப்பிடுமென்குடைக் கீழிருக்குங்குடி
ஜீவரனைவோருந் தானிருப்பீர். கசுகூ

என்று மறமிகத் தான்சாற்றி-யங்கு
யெத்தி சயுள்ள வரைத்தேற்றி
அன்றுமுதலிந்த ஏகாதசியைத்தன்
ஆளுகையெல்லாஞ் செலுத்திவந்தான். கஎ0

நாளைக்குஞ்செல்வங் குறையாமல்குடி
யாளுகையொன்றுந் தவறாமல்
வேளுக்கிணையான பிள்ளையுடன்புவி
விண்ணவர்போற்றச் சுகித்திருந்தான். கஎக

கருணைகுணருக்கு மாங்கதன்றன்கதை
கண்டதைவிண்டே னவர்சுதனும்
தருமாங்கதனர் சரித்திரத்தை-யினி
சாற்றுவேன்ரெண்டா முறையொருநூல். கஎஉ

வேண்டியிந்நூலைப் படித்தவருமிந்த
விரதம்போலே நடந்தவரும்
பாண்டவர்போலவை குண்டத்தின்மேவியே
பற்பலகாலுஞ் சுகித்திருப்பார். கஎந

பாடிப்படித்த வரும்வாழ்கப்-பதம்
பன்னிப்பிரித்துரைத் தோர்வாழ்க
தேடியச்சிட்ட சிதம்பரவேளுக்கு
தெய்வசகாய மென்மேலோங்க. கஎச

ருக்குமாங்கதன் சரித்திரக்கும்மி
முற்றுப்பெற்றது.



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

---

ஸ்ரீவேங்கடேசப்பெருமாள் தோத்திரமென்னும்

# திருப்பதி
# எழுமலை வெண்பா.

---

இஃது,

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரால்

இயற்றப்பட்டு,




தமது

சென்னை சூளை

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1908.



ஸ்ரீராமஜெயம்.

## கட்டளைக்கலித்துறை.

சங்குண்டு சக்கரந் தானுண்டு பாதத் தாமரைமுன்
தங்கென்று காட்டுந் தடங்கையுண் டன்புந் தயவுமுண்டு
இங்கென்று மங்கென்று முழலாமல் வேங்கடத்தையன் முன்னே
பங்குண் டெனக்கண்டு பணிவார்க் கெலாமுண்டு பாக்கியமே.

பூவிற் றிருத்துளாய் தீர்த்தமுண் டள்ளிப் புசிப்பதற்கு
நாவிற் றுதிக்க அஷ்டாட் சரமுண்டு நனவெழுந்தால்
சேவிற்க திருமலை மேலே நாராயணன் சேவையுண்டு
கோவிந்த நாமந் துணையுண்டு நெஞ்சேநமக்கே துங்குறைவிலையே.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

அலமேலுமங்காசமேத

ஸ்ரீவெங்கடாசலஸ்வாமிதுணை.

# திருப்பதி

# எழுமலை வெண்பா.

## நேரிசைவெண்பா.

பொருப்பா மனேகமலை பூமியெலாந் தோற்றிடினுந்
திருப்பதியைப் போலாமோ தேடுங்கால்—விருப்பமுடன்
புண்ணியத்தைச் செய்திருந்தாற் போய்மனமே நீதொழுது
பண்ணவினை போக்கிகொளப் பார்.

## நூல்.

பூவிற் பெரியமலை பொன்னுலகோர் தேடுமலை
பாவிற் கிளகிப் பழுக்குமலை—மேவியசீர்
நீதித் தழைக்குமலை நிலவுலக மத்தனைக்கும்
ஆதிமலை யேழு மலையே. 1

திருமா துலாவுமலை தேவர்குழாஞ் சூழுமலை
பெருமான் கிருபைப் பெருக்குமலை—தருமஞ்
செழிக்குமலை யன்பர் செய்தவினை யெல்லா
மொழிக்குமலை யேழு மலையே. 2

சொல்லற் கரியமலை சுரர்முனிவர் தேவர்முதற்
பல்லுயிர்க ளெல்லாம் பணியுமலை—எல்லை
யெங்கும்பிர காசமலை யெல்லாஞ்செய் வானோர்கள்
தங்குமலை யேழு மலையே. 3

பூத்தமலர் வாசம் பொருந்துமலை வானோர்கள்
காத்திருந்து நித்தங் கருதுமலை—கீர்த்தி
பரந்தமலை யன்பர் பழவினையைப் போக்கச்
சிறந்தமலை யேழு மலையே. 4

தொண்ட ரகத்திற் றுளுக்குமலை தூய்மையிலா
வண்டர்க் கிடுக்கண் வளர்க்குமலை—பண்டாம்
யுகந்தோ ரிருந்தமலை யூழ்வினையை மாற்றத்
தருந்தமலை யேழு மலையே. 5

கோகனக மாது குலாவுமலை கோடியிலா
ஆகமங்க ளெல்லா மளக்குமலை—யோக
சித்த ரிருக்குமலை செல்வமலை சித்தஜனை
பெற்றமலை யேழு மலையே. 6

உள்ள வுலகெல்லா மோரடியாக் கண்டமலை
வெள்ளை மனத்தில் விளங்குமலை—கள்ளமிலா
ஞானமலை மோனமலை ஞானத் தபோதனருக்
கானமலை யேழு மலையே. 7

காண்டற் கரியமலை கௌரவராற் காய்ந்த
பாண்டவருக் கெல்லாம் பலித்தமலை—நீண்ட
உலகை யளந்தமலை யூடருவி யெங்கு
மிலகுமலை யேழு மலையே. 8

செல்வ மளிக்குமலை சேணுலகங் காட்டுமலை
நல்லவருக் கெல்லாமே நல்குமலை—பொல்லா
மூர்க்கர் செருக்கை முறிக்குமலை யபயங்
கார்க்குமலை யேழு மலையே. 9

இட்டர்க் கிரங்குமலை யேதேது கேட்டாலுங்
கிட்டே நெருக்குங் கிருபைமலை—துட்டர்
குலத்தைப் பிரிந்தமலை கோவிந்தா வென்பாரைக்
கலந்தமலை யேழு மலையே 10

வாழைக் கமுகு வளர்ந்தமலை ஞானக்
கோழைப் படாமுனிவர் கூடுமலை—ஊழை
யகற்றுமலை யன்ப ரகத்துமலை சர்வ
சுகத்துமலை யேழு மலையே. 11

பூவனங்க ளெங்கும் பூர்க்குமலை பூமலிந்த
காவனங்கள் சுற்றுங் கனிந்தமலை—தாவி
யருவி கலந்தமலை யன்ப ரகத்தறிவி
லிருந்தமலை யேழு மலையே. 12

குன்ற மெடுத்தமலை கோதண்டந் தாங்குமலை
அன்றரக்கர் கூட்ட மழித்தமலை—நின்று
வணங்குவார் தன்குலத்தை வாழ்த்துமலை மேலோர்க்
கிணங்குமலை யேழு மலையே. 13

கஞ்சமலர் வாவிமலை காரிருண்ட சோலைமலை
கொஞ்சுங் கிளிமயிலுங் கூவுமலை—மிஞ்சும்
கீதவொலி நாதங் கேட்குமலை சர்வஜெக
நாதமலை யேழு தலையே. 14

தப்பை முழங்குமலை தாதர்குழாஞ் சூழுமலை
யெப்போதுங் கற்பூர மேந்துமலை—கப்பணங்கள்
சரஞ்சரமாய் வந்து செலுத்துமலை மாந்தர்
நிறைந்தமலை யேழு மலையே. 15

இரும்பென்ன நெஞ்ச மிளகாத வஞ்சகரைக்
கரும்பாய் நசுக்கிக் கசக்குமலை—பெரும்பால்
அன்பரகக் கோயிலைவிட் டகலா மலையார்க்கு
மின்பமலை யேழு மலையே. 16

துளசி மணக்குமலை தூய்மனத்தா ரேறுமலை
களஞ்சியத்தி லேநிதியங் கட்டுமலை—யுளந்தான்
நொந்தார் முகத்தை நோக்குமலை செல்வந்
தந்தமலை யேழு மலையே. 17

கோவிந்தா வென்றபெருங் கோட்டம் ஜொலிக்குமலை
தாவிப் பணிந்தடியார் தங்குமலை—மேவி
என்னேரஞ் சூட மிலகுமலை யேனையோர்க்
கன்னைமலை யேழு மலையே. 18

கோபந் தணிந்து குளிர்ந்தமலை சர்வ
சாபவினை யாவுஞ் சதைக்குமலை—பாப
மெல்லா மகற்றுமலை யெல்லாச் சுகமளிக்க
வல்லமலை யேழு மலையே. 19

குங்குமமுங் களபக் குழம்பும் மிகத்திமிர்ந்த
மங்கையர்கள் வாசம் மணக்குமலை—யெங்கும்
கேசவா மாதவா கோவிந்தா வென்றிறைஞ்சி
பேசுமலை யேழு மலையே. 20

நாற்றிசையி லுள்ளோரும் நாடித் தினந்தொடர்ந்து
போற்றிப் பொருள்பணிதி போடுமலை கீர்த்தி
சிறந்தமலை தொண்டர்களாற் செய்தபிழை யெல்லா
மறந்தமலை யேழு மலையே. 21

எட்டெழுத்தா யஞ்செழுத்தா யிருமூன்று ஆறெழுத்தாய்
துட்டர் வணங்குபல தோற்றமுமாய்—மட்டில்
ஏகப் பொருளா யெழுந்தமலை யட்டாங்க
யோகமலை யேழு மலையே. 22

காலைக் கதிரோனுங் கங்குலிலே சந்திரனும்
வேலைக் குளித்துவலஞ் செய்யுமலை—மேலாம்
உம்பர் முனிவோ ருயர்மா தவத்தரெலாம்
நம்புமலை யேழு மலையே. 23

அன்பர்களை வாவென் றழைக்குமலை யன்புடையா
ரின்புற்ற தெல்லா மீயுமலை—துன்பந்
துடைக்குமலை வானோர் துதிக்குமலை வேதியனைப்
படைக்குமலை யேழு மலையே. 24

நித்த மொருக்கால் நினைப்பார் நினைப்பிலெழும்
சித்தியென்ப தெல்லாஞ் செறிக்குமலை—அத்தி
மூலமென்ற போதே முளைத்தமலை மூர்க்கர்குல
காலமலை யேழு மலையே. 25

கூறுமொழிக் கெல்லாங் கோவிந்தா வென்றிறைஞ்சிப்
பேணாக் குறித்தெவரும் பேசுமலை—சீருடைய
அன்ன முகந்தோனும் ஆடுமயிற் சேவகனும்
மன்னுமலை யேழு மலையே. 26

புவிராஜர் முப்போதும் போற்றுமலை பொய்யறியா
தவராஜ ரெப்போதுந் தங்குமலை—கவிராஜர்
பாடுமலை பாட்டில் பதித்தவர மெல்லாங்
கூடுமலை யேழு மலையே. 27

திக்குவே றில்லையெனத் திருவடியிற் சார்ந்தாரை
யக்கறையாய் வாவென் றழைக்குமலை—மிக்க
கருணை மலிந்தமலை கருதும்போ தேயுதவுந்
தருணமலை யேழு மலையே. 28

ஊழ்வினையோ ராறுலு மோடிப் பணிந்தக்காற்
ரூழ்வெல்லாம் நீக்கித் தணிக்குமலை—வாழ்வென்ற
அகத்துச் சுகபோக மியாவுங் கொடுக்குமதி
மகத்துமலை யேழு மலையே. 29

மாடேறும் பிஞ்ஞகனும் மயிலேறும் பெருமாளும்
ஏடேறும் வாணிக் கினியானும்—வீடேறு
முத்தரொடு சித்தர்களும் மூவிரண்டு லோகமெலாம்
நத்துமலை யேழு மலையே. 30

ஜனகாதி மாமுனிவோர் சேருமலை வானுலகத்
தினமாதி யெல்லா மிருக்குமலை—மனுநீதி
யோங்குமலை யுள்ளன்பா லோங்குமடி யார்குடும்பந்
தாங்குமலை யேழு மலையே. 31

பொன்மகளை மார்பினிடம் பூண்டமலை யன்பர்கடம்
மின்பப் படிக்கெல்லா மீயுமலை—தொன்மறையும்
சொல்லுமலை வேதச் சோதிமலை யாயிரத்தெட்
டெல்லைமலை யேழு மலையே. 32

சீதமலர் நாற்றஞ் செழித்தமலை யன்பருக்குப்
பாதமலர் வீடாய்ப் பலித்தமலை—மாதவர்கள்
சூழ்ந்தமலை மீனினமுஞ் சூரியனுஞ் சந்திரனுந்
தாழ்ந்தமலை யேழு மலையே. 33

பூமகளுஞ் சண்முகத்தைப் பூத்தவளும் வேதனுடை
நாமகளுஞ் சூழ்ந்து நயந்தமலை—தாமமணி
இந்திரனே டட்டத் திசையாரும் வந்துதொழ
முந்துமலை யேழு மலையே. 34

செம்மான் றருமகளைச் சேர்ந்தசிவ சண்முகனுக்
கம்மானாய்த் தோன்றியவா னந்தமலை—பெம்மான்
மோகப் பசுங்கொடிக்கு மூத்தமலை யட்டசுக
போகமலை யேழு மலையே. 35

அஞ்ஞான மாமிருளை யகலத் துரத்திபர
மெஞ்ஞான வீட்டின்ப மீயுமலை—எஞ்ஞான்றும்
பன்னுமடி யார்மிடியைப் பற்றறவே நீக்குபசும்
பொன்னுமலை யேழு மலையே. 36

தொல்லைப் பிறவிதுயர் தூற்றுமலை துரியநிலத்
தெல்லைச் சுகமடியார்க் கீயுமலை—பல்லுயிருங்
கார்க்குமலை பக்திநெறி காப்பார் மனம்போலப்
பேர்க்குமலை யேழு மலையே. 37

ஆறாத புண்புரைக ளாற்றுமருந் தானமலை
தீராத் துயரனைத்துந் தீர்க்குமலை—மாறாத
பொன்னுலக வாழ்விற் பொருத்துமலை பொன்னுலகோர்
பன்னுமலை யேழு மலையே. 38

ஈரமிலா நெஞ்சத்தாற் கிடுக்கண் ணியற்றுமலை
ஓரஞ்சொல் வார்குடும்ப மொழிக்குமலை—ஆரமலர்
சாற்றித் தொழுவார் சஞ்சலங்க ளப்போதே
மாற்றுமலை யேழு மலையே. 39

அறமென்ப தில்லா வழுக்கடைந்த கள்வர்கடம்
முறமெல்லாம் போக்கி யொடுக்குமலை—மறவாமல்
சிந்திப்பார் நோக்கமெலாஞ் சீரோங்கச் செய்யுமதி
விந்தைமலை யேழு மலையே. 40

பார்மீது வாழ்ந்துபிறர் பசியறியார் செல்வாக்கை
நீர்மே லெழுத்ததுபோல் நீற்றுமலை—யார்மீதும்
நீங்காக் கருணைமலை நீடுலக மண்டாண்ட
விந்தைமலை யேழு மலையே. 41

அண்டமெலா முந்தியிலே ஆவென்று காட்டுமலை
பண்டையுக மெத்தனையோ பார்த்தமலை—தொண்டர்
உள்ளமெனுங் கோயிலின்கண் ணோங்குமலை வைகுண்ட
வள்ளல்மலை யேழு மலையே. 42

மெய்த்தவஞ்சேர் ஞானியெலா மேவுமலை மெய்யுடனே
கைத்தவங்க ளில்லாரைக் கடியுமலை—எத்தலமும்
கொண்டாடிப் போற்றுமலை கோவிந்தா வென்றேத்து
மண்டர்மலை யேழு மலையே. 43

ஆதிசிவ னல்வரம்பெற் றகிலம் மிகநெரித்த
காதகரை யெல்லாங் கண்டித்தமலை—சோதனையில்
பத்தருக்கு முன்னிருந்து பாதுகாத் தாண்டபர
முத்திமலை யேழு மலையே. 44

அடியேன் றுயர்படுமோ வாபத்துக் காலமெலாங்
கொடியபிணி நீக்கிக்கொடுத்தமலை—படியிலிப்போ
கொத்தடிமை கொண்டென் குடும்பத்தைக் காக்மனம்
வைத்தமலை யேழு மலையே. 45

வேண்டித் தொழவறியா விளையாட்டுக் காலமெல்லாம்
ஆண்டதுணைத் தாதா வானமலை—தூண்டும்
குருவாகி யென்னறிவிற் குடியாகி நல்லறிவைத்
தருகுமலை யேழு மலையே. 46

மிடிமைத் துலைத்துதிதி மென்மே லளித்தடியார்க்
கடிமைப் புரியவருள் செய்தமலை—கொடிய
ஊழ்வினையால் வந்தபிணி யொட்டுந் துடைத்தென்னை
வாழ்த்துமலை யேழு மலையே. 47

தஞ்சந் தஞ்சமெனத் தாள்பூட்டி வந்தவரை
யஞ்சலஞ்ச லென்று தரிக்குமலை—கொஞ்ச
நேரத்தி லேமனநோய் நீக்கியே காத்தருளும்
பாரமலை யேழு மலையே. 48

அரிவோம் நமோநா ராயண வென்பாருக்
குரியவர மெல்லாங் கொழிக்குமலை—பிரியமுடன்
யென்றுமஷ்ட லட்சுமியு மீஸ்வரியுஞ் சரஸ்வதியும்
நின்றமலை யேழு மலையே. 49

என்ன வுரைப்பதினி யென்னறிவே னுள்ளதெலா
முன்ன லறியா தொன்றுளதோ—பன்னாளும்
காத்ததுபோ லின்னுமெனைக் காத்தருள வென்கனவிற்
பூர்த்தமலை யேழு மலையே. 50

மாசி யிறங்குமலை மழைக்கால்க ளோடுமலை
தேசிகனார் மகிமை தெரியுமலை—வாசமலர்
மணக்குமலை யுண்டிதுகை மலைமலையாய் வந்தாலுங்
கணக்குமலை யேழு மலையே. 51

சொன்னத் துகையிலொரு செம்பு குறைந்தாலுங்
கன்னத்தி லேயடித்து கட்டவைக்கும்—அன்னவரை
திருப்ப நடத்துமலை தஞ்சமென்ற பேர்மேல்
விருப்பமலை யேழு மலையே. 52

கட்டுந் துகையிலொரு காசு குறைந்தாலும்
வட்டியுட னேதிரும்ப வாங்குமலை—எட்டுத்
திசையாரை யெல்லாந் திரளா யழைக்குமதி
வசியமலை யேழு மலையே. 53

பொன்வயிர பூஷணத்தைப் போடுவதாய் மலைக்குவந்த
பின்னல் துகைகொடுத்த பேய்மனதை—முன்னல்
உழைத்தபிணி யெல்லா முண்டாக்கி யட்சணமே
யழைத்தமலை யேழு மலையே. 54

மன்னரொடு மந்திரிமார் மகத்தாதி யானுலுஞ்
சொன்னபடி வாங்குஞ் சூட்சமலை—எந்நேரம்
தங்கங் குவியுமலை தஞ்சமென்றுர் மேலாசை
பொங்குமலை யேழு மலையே. 55

நாமந் துலங்குமலை நாற்றிசையுங் கோவிந்த
நேமம் பெரியோர் நிறைந்தமலை—க்ஷேமம்
ஈயுமலை யடியா ரிடுக்கமெலாந் தீரவருட்
செய்யுமலை யேழு மலையே. 56

சங்கீத மேளஞ் சதாகோட்டஞ் செய்யுமலை
யெங்குங்கோ விந்தமய மெய்துமலை—மங்கையர்கள்
திரளா யுலாவுமலை தெய்வ மகத்துவமே
நிறைந்தமலை யேழு மலையே. 57

வடக்குமலை யென்று வழங்குமலை தென்கீழ்க்
குடதிசையோ ரெல்லாருங் கூடுமலை—யடக்கபதில்
இருந்தாரை யெல்லா மிழுக்குமலை நோய்க்கு
மருந்துமலை யேழு மலையே. 58

நிஜமா யிராப்போலே நெடுங்கதிரைத் தான்மறைத்து
விஜயனுக்கு வெற்றி விளைத்தமலை—புஜபலத்தை
நம்பி யெளியோர்மேல் நாப்புழுக்குந் துட்டருக்கு
வம்புமலை யேழு மலையே. 59

முத்திக்கு வித்தாய் முளைத்தமலை மூவுலகும்
பத்திபுரி வோர்க்குப் பலிக்குமலை—சித்தியெலாம்
மெய்யாய் விளங்குமலை மெய்யறியாப் பொய்யருக்கு
பொய்யுமலை யேழு மலையே. 60

எட்டெழுத்தாய் லோகமெலா மெங்கும் நிறைந்தமலை
துட்டருக்குத் தோற்றாத் தூரமலை—இட்டமுள
அன்ப ருளத்தி லமர்ந்தமலை யன்புடையார்க்
கின்பமலை யேழு மலையே. 61

அவ்வவ் வுலகோ ராசாரம் போல்குறிப்பு
வெவ்வே றுருவாய் விரிந்தமலை—எவ்வுயிரும்
தானாய் விளங்குமலை தாய்க்கும் பெரியதா
யானமலை யேழு மலையே. 62

வேலை வளைந்தமலை விரிகதிரும் சந்திரனைச்
சோலையிலே காட்டுஞ் சொகுசுமலை—ஆலிலைமேல்
சற்றே துயின்றளவில் சர்வவுல கத்தனையும்
பெற்றமலை யேழு மலையே. 63

மீனினங்க ளாமிருபத் தேழும் நவக்கிரகங்
தானுங் குலவித் தழுவுமலை—வானுலகிற்
றேடரிய தேவர்களும் தெய்வசபை மாதர்வினை
யாடுமலை யேழு மலையே. 64

தெய்வ மிருக்குமலை தெய்வீக மோங்குமலை
மெய்தவஞ்சேர் புங்கவர்கண் மேவுமலை—கைதவத்தை
பூண்டார்கள் சூழுமலை பூதலத்தி லேழைகுடி
யாண்டமலை யேழு மலையே. 65

எழுநிலமு மேழு மலையாய் வளர்ந்தமலை
பழுதருபொன் னுடாய்ப் படர்ந்தமலை—தழும்பேற
துதித்தார் மனத்தகத்திற் றோற்றுமலை யான்றோர்
மதித்தமலை யேழு மலையே. 66

வேதக் கொடிமுடியாய் விளங்குமலை வேதத்தின்
பாதமுத லுலகாய்ப் படர்ந்தமலை—சீதமலர்
பூணுமலை யன்பர்கள்செய் பூசைப் பலனளவே
காணுமலை யேழு மலையே. 67

பச்சைமலை பச்சைப் பவளமலை பல்லுலகும்
மொய்ச்சமலை லக்ஷ்மீ மோகமலை—யச்சமெலாம்
தீர்க்குமலை தீவினையைத் தினகரனுர் முன்பனிபோல்
பேர்க்குமலை யேழு மலையே. 68

நீங்கா வுடற்பிணியை நீக்கவழி காணுமல்
வேங்கடவா யுன்னடியை வேண்டினேன்—பாங்குபெற
முற்போ தெனைக்காத்த முறைபோல் மனமிரங்கித்
தற்போதும் நீகருணை தா. 69

நாசியின்மேல் வந்தபிணி நாசப் படுத்தியுனைப்
பேசுமடி யார்புகழைப் பேசவருள்—தேசிகனே
என்போல மானிடர்முன் னேகமன மஞ்சுகிறே
னுன்பாதம் நம்பியு மீதுண்டோ. 70

பண்டிதரார்க் கற்றதெலாம்பார்த்துப்பார்த்தென்பிணியை
கண்டிக்க வாகாமல் கைவிட்டார்—எண்டிசையும்
தாவித் தொழும்பெரிய தாதாவே நீயிரங்கிப்
பாவியெனை யாதரிக்கப் பார். 71

முக்காலு முன்னடியை மெய்யாக நம்பினவ
னெக்கால முமறக்கே னுண்மையிது—தற்காலம்
அஞ்சும் படிக்கென்னை யாட்டுகிற வூழ்வினையைத்
துஞ்சும் படிச்செய் துணை. 72

ஊழ்வினையைத் தாங்காம லுள்ளுருகி நோவதிலும்
பாழ்கிணற்றில் வீழ்ந்தாலும் பண்பென்றே- தாழ்வடைந்த
என்முகத்தைப் பாராம லெங்ஙனமோ நீயிருந்தா
லுன்னைவிடப் பின்னு ருரை. 73

எள்ளுக்கு ளெண்ணெயைப்போ லெங்கும் நிறைந்துளதாய்
தெள்ளுமறை யெல்லாந் திடமுரைக்க—உள்ளமதில்
என்னேர முன்று ளிறைஞ்சுமெனைக் காராட்டாற்
பின்னுரோ தெய்வமினிப் பேசு. 74

காணுமிட மெல்லாமுன் காப்பென்றே பிரகலாதன்
தூணு மிடத்துந் துதிக்குங்கால்—ஆணவஞ்சேர்
இரணியனைத் தீர்த்ததுபோ லென்பிணியை மாற்றிதரத்
தருணமிது தற்காத் தருள். 75

பழையவடி யாரிருந்த பக்திவயி ராக்கியம்போல்
தொழவறியா வேழைமுறை தள்ளாதே—நிழலறியா
புழுப்போல் துடித்துனது பொன்னடிக்குத்தஞ்சமென்றே
னழுக்கறவே செய்வா யருள். 76

உள்ளமுடனேயெனது வூழ்வினையும் நீயறிவாய்
கள்ளனே யானாலுங் கடனுனக்கே—எள்ளளவு
உன்கருணை யென்மே லுதிக்குமே யாமாகில்
பொன்னாகு மென்னுடைய பொந்தி. 77

வயர்நிறைந்தாற் பானை வாய்மூடா னென்றசரீர்
தயவற் றளித்த தழகாமோ—நயமலிந்த
குணமுடையா தொண்டர் குலமுழுதுங் காக்கும்
மனமுடையாய் கேளென் மனு. 78

மனுவென்ப தென்னுடைய மாபிணியைத் தீர்த்துத்
தினமுன் றிருவடியைத்தொழுதேதத—அனவரதம்
புத்தி யெனக்களிப்பாய் புகழ்மலிந்த வேங்கடவா
மற்றதைவேண் டாதென் மதி. 79

அன்ன மளித்தா யகமளித்தா யாடைபணி
பொன்னும் புகழு மிகவளித்தாய்—என்னுடம்பில்
பிணியளித்தால் மற்றதெலாம் பாவிப்பதெங்கே நீ
துணையிருந்து என்னைய் துலை. 80

செல்வ மகளைத் திருமார்பி லேதரித்து
வல்ல புகழ்படைத்த வேங்கடவா—தொல்லையினால்
நொந்துவந்து உன்னடியை நோக்கிச் சரணமென்றால்
எந்தவினை நிற்கும் எதிர். 81

புண்ணும் புரையுடனே பேய்பிடித்த நெஞ்சுக்கு
கண்ணுந் திரையாமா கலியுகத்தி—லென்பிழைப்பு
சொன்னால் நகையாகும் சுவாமிதிரு வேங்கடவா
என்னென் றுரைப்பே னிது. 82

தொண்டை முதுகு துடைநாசி மேல்விரணங்
கொண்டு மெலியுங் குறையெதுவோ—கண்டறிந்து
காத்தருள வேணுமையா கடவுளே வேங்கடவா
யார்க்குரைப்பேன் சொல்வா யறி. 83

அரியுஞ் சிவனு மகிலபுவ னம்படைக்கும்
பெரியவிதி யும்முருகப் பெம்மானும்—பிரிவாகும்
அறுசமய தேவதையு மாயிரத்தெட் டண்டமெலாம்
நிறைந்ததுநீ தானே ஹரி. 84

பொய்வழியாற் சேகரித்த பொருளின்வினி யோகமெலாம்
மெய்வழியிற் சேர்க்காமல் மெய்குலைந்தேன்—உய்யும்வழி
காட்டிக் கொடுப்பதுஉன் கடமைதிரு வேங்கடவா
நாட்டினில் வேறேது நதி. 85

உன்னைப் பணிந்தார்க்கு வூழேது தாழ்வேது
பின்னை கிரகப் பிரட்டேது—பன்னலமும்
கூடுமென்றே கீதையெலாங் கூவுதலால் வேங்கடவா
தேடினே னென்மதியைத் தேற்று. 86

கள்ளக் கலிமதியால் காலமெலாம் நாயடியேன்
உள்ளத்தை யுன்பா லொடுக்காமற்—பள்ளத்தில்
வீழ்ந்தகஜம் போலே விம்முகிறேன் வேங்கடவா
தாழ்வகல நீகருணை தா. 87

ஆசைப் பெருக்கா லறிவுகெட்டு நின்புகழைப்
பேசாத தாலல்லோ பாழானேன்—தேசத்தார்
முன்செல்ல வென்றால் மெலியுதையோ வேங்கடவா
என்செய்வே னென்னோ யெடு. 88

உலகபோ கத்திற் குரித்தான காலமதில்
தலைவிதிதா னிப்படியுந் தானுண்டோ—நிலமனைத்தும்
பாதத்தி னாலளந்த பாரமலை வேங்கடவா
சோதித்து நீதா சுகம். 89

பாழும் பிரமனவன் படித்தபடிப் பென்னவோ
ஊழை யொருக்காலே யூட்டுவனோ—ஆழிதுயில்
கொண்டப்போ தந்திவழி கோகனத்தில் வந்தவனை
தண்டித் தெனைக்காத் தருள். 90

உன்மகிமை கேட்க வுளநடுங்கு தாகையினால்
யின்னுமுனை மறக்க வெண்ணுவனோ—மன்னர்முதல்
அஞ்சிப் பணியுமெந்த னாண்டவனே வேங்கடவா
கொஞ்சங் கருணை கொடு. 91

பூவி லயனைப் பெற்றெடுத்த தாதாநீ
பாவியென் றென்னைப்பா ராட்டாதே—தேவியொடு
சொற்பனத்தில் வந்த சொந்தம்போற் சோதித்து
அற்பவினை தீர்த்தா தரி. 92

என்கொடுமை யத்தனையு மெழுதப் பொழுதுண்டோ
உன்னடிமை யென்றே யுரைப்பதலால்—பின்னொன்றும்
பேசவறி யேனுலகிற் பெரியமலை வேங்கடவா
தாசரைப்போ லென்னையுமே தற்கார். 93

தற்கார்க்க வேணுமென்று தஞ்ச மபயமென்று
முக்கால் வலமாகி முன்னின்றேன்—மிக்காக
என்னபிழை செய்தாலு மெல்லாம் பொறுத்தருளி
ஜென்மவினை தீரவருட் செய். 94

ஆணதிலும் பெண்ணதிலு மடியேனைப் போல்கொடியோர்
காணவரி தென்றேநீ கண்டாலும்—வீணாக
தள்ளாதே யென்னபயந் தங்கமலை வேங்கடவா
கொள்ளாதே யென்மீது கோபம். 95

உந்தனுக்குக் கோப முண்டானா லுன்னெதிரே
வந்து தணிக்கவழி யார்க்காகும்—சந்ததமும்
சேய்பிழைக ளெத்தனைதான் செய்தாலு மீன்றெடுத்த
தாய்பொறுக்க வல்லோ தகும். 96

இத்தனைநாள் நினைக்கவில்லை யென்றெண்ணி யுன்மனதில்
வைத்து வருமம் வளர்த்தாதே—மெத்தவுநான்
நொந்தேன் மெலிந்தே னேக்கிவந்தேன் கோவிந்தா
சந்ததமு முன்றாள் சரண். 97

கோவிந்த நாமம் கோருமடி யாருக்குப்
பாவந் தொலையும் பதங்கிடைக்கும்—ஆவலெலாம்
கைக்கூடும் பிணியகலும் காளையிளந் தேகம்போல்
மெய்க்கூடும் மெய்யா மிது. 98

அலமேலு மங்கைக்கு ஆசைமண வாளா
உலகமிரண் டேழுக்கு மொருதகப்பா—நிலமதனில்
என்குறைக ளெல்லா மிணையடியி லொப்புவித்தேன்
பன்னலமுங் கூடவருட் பண். 99

குற்றங் குறைபலவாக் கோடிபிழை செய்தாலும்
முற்றும் பொறுத்து முகங்கொடுத்து—சற்றேநீ
கருணை பொழிந்தென் கருமப் பிணிநீக்கி
பொருளும் புகழும் பொழி. 100

ஆண்டுக் கொருக்கா லடியேன் திருமலையை
வேண்டித் தொழவரமும் வேண்டுமெனக்—காண்டவனே
செய்தொழிலும் சீவனமும் சீராய் செழித்துதினம்
கைதவமு மோங்கிவரக் கார். 101

துளபமணி மார்பா துவாரகையில் வாழ்முகுந்தா
களபமுலை யலர்மேற் கண்ணாளா—வளமலிந்த
வடக்குமலை கோவிந்தா வடிமைநெடு நாட்பட்ட
யிடுக்கமெடுத் தே யெரி. 102

வாத வலியும் வளர்மெகப் புண்புரையும்
சீத விரணத்தின் சங்கடமும்—ஆதவனை
கண்டபனி போலே கடிகையிலே மாற்றியுந்தன்
தொண்டாந் தொழிலெனக்குத் தா. 103

வைப்பா சூனியமா வல்லதுமுன் னூழ்வினையா
இப்பிறப்பி லேதேனுஞ் செய்தேனு—எப்போதான்
துலையுமிது வேங்கடவா தூராரியக் கூடலையே
யலையுகின்ற வேழைநெஞ்சை யாற்று. 104

பெற்ற அப்பா பெரியப்பா என்விதிக்கு
மற்றூரைப் போயடுத்து மல்லிடுவேன்—கற்றதெல்லாம்
சொல்லி யபயமிட்டுச் சூழ்ந்தேனே யுன்மனது
கல்லா யிருந்தாலுங் கரை. 105

உண்டு உடுத்தி யுலகத்தாற் போற்சுகத்தை
கண்டு களிக்காமற் காலமெலாம்—பண்டைவினை
பட்டுமெலியவா பெற்றெடுத்தாய் வேங்கடவா
கெட்டதெலாம் போதுமினிக் கார். 106

முன்னால் முறைபேசி முகமறைந்த தட்சணமே
பின்னால் கெடுநினைக்கும் பேயர்களை—யுன்னுடைய
சக்கரத்தி னாற்சிதைத்து சத்துருவைப் பாழாக்கி
துக்கமறச் செய்வாய் துணை. 107

வஞ்ச நெஞ்சத் தீயரெலாம் வந்துவந்து என்பிழைப்பை
கொஞ்சமுள வறிந்து கொண்டவுடன்—அஞ்சாமல்
மோசக் கருத்தால் முறைபிறழும் பாவிகளை
நாசப் படுத்தமுயல் நாதா. 108

தேடவைத்தாய் நின்னடியைத் தேடுந் திறமைதந்து
பாடவைத்தா யுள்ளந் தனிற்பதிந்து—ஆடலெலாம்
தீரவைத்தாய் பிணிமுதலாய் தீர்த்து சகலசுகம்
சேரவைத்தா யுன்றன் செயல். 109

ஆத்திரத்தி னாலே யடியே னுரைத்ததெலாம்
தோத்திரமாய்க் கொண்டு துணைபுரிந்து—பாத்திரமாய்
என்பிணியெல் லாங்களைந்து ஏழைகுடி காப்பாற்ற
லுன்கடமை யீதொன்றே யுண்மை. 110

அறிவில்லாச் சேயுரைத்த ஆசைவெண்பா நூற்றிபத்தும்
பொருளல்ல வானாலும் பூண்டருளித்—தெருளுடைய
முத்த ருரைத்தபழ மெய்த்துதிபோ லாதரித்து
பத்தியெனக் குதயம்பண். 111

ஏழுமலை வெண்பா
முற்றுப்பெற்றது.

ஸ்ரீவெங்கடேஸ்வரசாமிபாதமே துணை.



ஸ்ரீ லக்ஷ்மீசமேதனுக்கு நமஸ்காரம்.

கலிவிருத்தம்.

அச்சுதா ஹரிகேசவ மாதவா
பச்சை மின்கொடிப் பார்வதிமுன்னவா
இச்சைமூன்றதி னாற்பிணி கொண்டவென்
லச்சைதீர்த்தருள் லக்ஷ்மீ சமேதனே.

அலமேலுமங்காசமேத
மங்களம்.



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

திருமலை

# தெரிசனப்பத்து.

உன்னருளால் வினைநீங்கப் பெற்றிருந்தும்
ஊழ்வினையால் வழியொன்றுங் காணமற்றுன்
பன்னாளா யனேகதலந் தேடியோடி
பலனொன்றுங் காணமல் பதைத்துநொந்து
என்னாளும் அவுஷதங்கள் தின்றுகெட்ட
என்மனதைத் திரும்பிமலை யேறச்செய்தாய்
பொன்னான கெருடன்மிசை யுந்தன்சேர்வை
பார்த்ததென்ன புண்ணியமோ பவந்தீர்ந்தேனே. 1

உலகமதில் பலநதியுந் தீர்த்தமெல்லாம்
ஓடோடி யுள்ளபிணி தீராதாலே
பலபலவா மெண்ணத்தால் மனதுநொந்து
பத்தியமும் அவுஷதமும் தின்றுகெட்டேன்
நிலையறியா வென்மனதைத் திருப்பித்தந்து
நீயலவோ திருமலைமே லேறச்செய்தாய்
கலகலெனக் கெருடன்மிசை யுந்தன்சேர்வை
கண்டதென்ன புண்ணியமோ கலிதீர்ந்தேனே. 2

ஊழ்வினையோ தற்பிறப்பி லென்செய்தேனோ
உத்தமர்கள் சாபத்தா லுடல்நொந்தேனோ
ஆழ்கடல்சூ ழுலகமெலாம் சுற்றிச்சுற்றி
அங்கத்தின் பிணிதீரா தலைந்துகெட்டேன்
பாழ்மனதை யொருநிலையாய் திருப்பிநீதான்
பாரமலை வந்துதொழப் பண்ணிவைத்தாய்
தாழ்வில்லாக் கெருடன்மிசை யுந்தன்சேர்வை
தந்ததென்ன புண்ணியமோ கதிமீண்டேனே. 3

எட்டுதிசை யெங்கணுமே சுகத்தைவேண்டி
யெத்தனைநாள் திரிந்தாலும் என்னகண்டேன்
முட்டமுட்ட வுடற்பிணிதா னதிகமாகி
முக்காலும் அவுடதமே தின்றுகெட்டேன்

துட்டமன மாமதனைத் திருப்பிநீதான்
திருமலைமேல் வந்துதொழுந் திறமைசெய்தாய்
வட்டமிடுங் கெருடன்மிசை யுந்தன்சேர்வை
வாய்த்ததென்ன புண்ணியமோ வழிபெற்றேனே. 4

ஆராலுந் தீராத பிணியிதென்று
அறியாம லூழ்வினையா லனேகநாளாய்
தேராத பண்டிதரும் தேசாதேசம்
தினந்தோறு மோடோடி திரிந்துக்கெட்டேன்
கூராத வென்மனதைக் குவித்துநீதான்
கோவிந்தா திருமலைமேல் கூட்டிவந்தாய்
சீரான கெருடன்மிசை யுந்தன்சேர்வை
செய்ததென்ன புண்ணியமோ சீர்பெற்றேனே. 5

அங்கமதில் புண்புரைக ளதிகமாகி
யகற்றவழி காணுமலறிவுகெட்டு
சிங்கத்தைக் கண்டகெஜம் போலேநொந்து
சீமையெலா மோடோடி சலித்துவிட்டேன்
புங்கமுறும் வென்மனதைத் திருப்பிநீதான்
பாரமலை வந்துதொழப் பண்ணிவைத்தாய்
தங்கநிர கெருடன்மிசை யுந்தன்சேர்வை
தந்ததென்ன புண்ணியமோ தயைபெற்றேனே. 6

நலிபிடித்த நாள்முதலாய் பட்டபாட்டை
நானுரைக்கப் பொழுதுண்டோ நாட்டின்மீது
புலியெதிர்த்த கன்றதுபோல் பயந்துவாடி
பொன்னான வுடம்பெல்லாம் புண்ணாய்நொந்தேன்
கலிபிடித்த வென்மனதைத் திருப்பிநீதான்
கருணையுடன் திருமலையைக் காணச்செய்தாய்;
வலிமிகுத்த கெருடன்மிசை யுந்தன்சேர்வை
வாய்த்ததென்ன புண்ணியமோ வருள்பெற்றேனே. 7

அறந்தழைக்கு முலகமதி லென்னைப்போலே
ஆகாத பிணியடைந்தோராருங்காணேன்
உறங்குலைந்து வுளங்குலைந்து வுரிசைக்கெட்டு
ஓய்ந்துவிட்ட பம்பரம்போ லொடுங்கிவிட்டேன்

திறந்தெரியா வென்மனதைத் திருப்பிநீதான்
திருமலைமேல் வந்துதொழுந் திறமைசெய்தாய்
பறந்துவருங் கெருடன்மிசை யுந்தன்சேர்வை
பார்த்ததென்ன புண்ணியமோ பசிதீர்ந்தேனே. 8

மாதரென்று தொடர்வினையும் ஊழுங்கூடி
மாகொடிய வினைக்கீடாய் மயங்கிக்கெட்டு
ஆதவனார் முன்கிடந்த மலரைப்போலே
அங்கமெலாம் வதங்கிமிக வயர்ந்துபோனேன்
போதமிலா வென்மனதைத் திருப்பிநீதான்
பொன்மலைமேல் வந்துதொழும் பெருமைசெய்தாய்
சீதமொழி கெருடன்மிசை யுந்தன்சேர்வை
செய்ததென்ன புண்ணியமோ சீர்பெற்றேனே. 9

குவலயத்தி லென்போலே கொடியபாவி
கோடியிலே யொருவரையுங் குறிக்கப்போமோ
திவலையெறி நடுக்கடலில் துரும்பைப்போலே
திசையறிய மாட்டாமல் திகிலடைந்தேன்
சவலமுறு மென்மனதைத் திருப்பிநீதான்
சந்தையுடன் திருமலையைச் சாரச்செய்தாய்
தவளநிற கெருடன்மிசை யுந்தன்சேர்வை
தந்ததென்ன புண்ணியமோ தவம்பெற்றேனே. 10

மைவிழியார் தன்னுடனே வினையுங்கூடி
மயக்கமெனுஞ் சுழற்காற்றில் பஞ்சைப்போல
கைதவங்க ளில்லாமல் பொருளைத்தேடி
கடினபிணிக் காளாகிக் கலங்கிநின்றேன்
உய்யும்வழி யீதென்று திருப்பிநீதான்
வுயர்மலைமேல் வந்துதொழ வுதவிசெய்தாய்
பொய்யறியா கெருடன்மிசை யுந்தன்சேர்வை
பூர்த்ததென்ன புண்ணியமோ பிணிதீர்ந்தேனே. 11

திருமலை தெரிசனப்பத்து
முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# நான்தொழூம்தெய்வம்.



## கலிவிருத்தம்.

வேத னுருரை வேதமுங் கீதையும்
ஆதி சாஸ்திர மாறும் புராணமும்
நீத மான நெரியுரை நூலெலாம்
ஓதிக் கொள்வது யான்தொழூங் தெய்வமே. 1

வியாச ருஞ்சுகர் விஞ்சையர் நாரதர்
கோசி கன்முதற் கொற்றவர் மற்றவர்
பூசை வேள்வி பலதவ மார்க்கமாய்
யாசித்தேற்றுதல் யான்தொழூங் தெய்வமே. 2

மதியு டன்கதிர் மருவு முலகெலாம்
துதிசெய் யன்பர் துகளறுத் தேபர
கதியு மீதெனக் காட்டி யிகசுக
நிதியு மீவது நானதொழூங் தெய்வமே. 3

இன்ப மோங்கி யெழில்பெறுங் காலமும்
துன்ப மெய்தித் துயர்படுங் காலமும்
என்றும் வேங்கட மென்றுரைப் பார்கண்மேல்
அன்பு கொள்வது யான்தொழூங் தெய்வமே. 4

கடலெ னப்பல காளைகள் தன்னுடன்
வடக ரைக்கட லென்னும் நதிக்குளே
யுடல்வ லுத்தகா ளிங்கன்சி ரசின்மேல்
நடனஞ் செய்தது நரன்தொழூங் தெய்வமே. 5

பூசை புட்பம் பெருந்தவ மில்லெனின்
கேசவன்றனை யென்றுளங் கெட்டியாய்
பேசுந் தோறுமதி பேருரைப் பார்கண்மேல்
ஆசை கொள்வது யான்தொழூக் தெய்வமே. 6

விதியு மற்றைய விண்ணவர் போற்றிடுங்
துதியை வேண்டித் துலங்கிய வேங்கடம்
பதியில் நின்றுப் பதந்தரப் பற்பல
நதியு முள்ளது நான்தொழூங் தெய்வமே. 7

ஓடி யோடி யுலகுள மாந்தர்கள்
தேடித் தேடிவந் தேதிரு வேங்கடம்
கூடி நின்றவர் குறைக ளோதியே
நாடிப் போற்றுதல் நான்தொழுந் தெய்வமே. 8

உம்ப ராதிமற் றம்புவியுள்ளபேர்
தெம்பு டன்திரு வேங்கடம் தேடியே
கும்பு கூடிக் குறைகளைந் தெய்திட
நம்பி போற்றுதல் நான்தொழுந் தெய்வமே. 9

இரங்கம் சேது ராமேசுர மெவ்வுளூர்
சிங்க மாப்கடி காசலம் காஞ்சியில்
தங்கி யுந்திரு வேங்கடந் தானென
எங்கு முள்ளது யான்தொழுந் தெய்வமே. 10

வல்ல வாணர்கள் வானவர் தானவர்
சொல்லிப் போற்ற சுருதிகள் வாழ்த்தவும்
தில்லை கோவிந்த ராய்திரு வேங்கட
எல்லை நின்றது யான்தொழுந் தெய்வமே. 11

காதி பெற்றக் கடுந்தவ யோகிகள்
ஆதி யென்று வமர்ந்தருள் வேங்கடம்
மீதில் நின்றுயிம் மேதினி கார்க்குமா
நீதி யுள்ளது நான்தொழுந் தெய்வமே. 12

பற்கு ணன்முதற் பாண்டவர் மீதிலே
துற்கு ணந்தொடுத் தோர்கள் துலைந்திட
விற்கு ணத்தொழில் விஜயனுக் கோதிய
நற்கு ணத்தது நான்தொழுந் தெய்வமே. 13

பூத லம்முதற் பொன்னுல சுந்தமும்
பாத லம்வரை பற்பல லோகமும்
ஆத ரித்தகி லந்தனில் வேங்கட
நாத னானது நான்தொழுந் தெய்வமே. 14

கந்த புட்பக் களபப் பணியுடன்
சந்த தஞ்சர ணங்கதி யென்றுமுன்
வந்து போற்றி வழிபடுந் தொண்டர்மேல்
நிந்தை யற்றது நான்தொழுந் தெய்வமே. 15

மங்களந்திகழ் மங்கையர் கூட்டமும்
எங்கி னும்சுர கீதமும் வேதமும்
அங்க பாகத்தி லேயலர் மேலெனும்
நங்கை யுள்ளது நான்தொழுந் தெய்வமே. 16

நான் தொழுந் தெய்வம்
முற்றுப்பெற்றது.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# மனோதிருப்தி.

வெண்பா.

நாடறிய வேங்கடத்தில் நாரா யணனிருக்க
காடுஞ் செடிதோருங் கால்கடுத்து—ஓடாமல்
போட்டவிட மங்ஙனமே பொருள்தேடு வார்போல
நாட்டமுட னேமனமே நம்பு. 1

நம்பி முயல்வார்க்கு நட்டமில்லை யென்றமொழி
அம்புவியோர் சொல்ல வறிந்திலையா—கம்பமதில்
உண்டென்ற போதே போங்கி யெழுந்தவருட்
கண்டிருந்து மேனோ கலக்கம். 2

பிதுரார்ச் சிதம்போல பிராரத்வ மாமனமே
விதனப் படுவதினுல் விட்டிடுமோ—மெதுவாக
பட்டு துலைத்தக்கால் பழயவடி யார்போல
தொட்டுகொளு மீசன் துணை. 3

இட்டார்க்கு யிட்டபல னென்றபடி யூழ்வினையிற்
பட்டாலு மீசன்மேற் பற்றுடையார்—கெட்டதுண்டோ
நோய்படுவ தெண்ணிமனம் நோகாதே யீன்றெடுத்த
தாய்விடுமோ சேய்முறையைத் தான். 4

நம்ம மனைக்கு நாம்பெரியோ ரானதுபோல்
செம்மையுல கம்படைத்த ஸ்ரீஹரியை—இம்மையெலாம்
முக்காலும் நம்பி மெய்வழியே நிற்பாரை
எக்காலுங் காப்பாரென் றெண். 5

அலமேலுமங்காசமேத ஸ்ரீவெங்கடேஸ்வரஸ்வாமி
கிருபாகடாட்ச தோத்திரம்
முற்றிற்று.

மங்களம்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம.

திருவெவ்வுளூர்

# ஸ்ரீராகவாந்தாதி

## கீர்த்தனமும்.

இஃது.

மதுரவாயல் சேஷாசலநாயுடு புத்திரரும்

திருவெவ்வுளூர் தாலூகா குன்னத்தூர்

மாஜி ஜமீன்தாரருமாயிருந்த

ம. சுப்பராயலு நாயுடெனும்

சுதரிசனதாஸரவர்களால்

இயற்றியவை

பெ. நாதமுனிதாஸரால்

பார்வையிடுவித்து.

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

1903வூ.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# சாற்றுகவிகள்.



திருவருட்பிரகாச வள்ளலாரென்னும் சி. இராமலிங்கசுவாமிகள் சோதரர் புராணிகர். சி. சபாபதிபிள்ளையவர்கள்குமாரர் புராணிகர்

## சி. வடிவேல்பிள்ளையவர்கள் இயற்றியது.

பெரியவரையடுத்து குறுமுனிதவஞ்செய்திடவுமிகப்பிறங்குவேண்டா
மரையிலுறை கலைமகள்வேதனையடையவும் மகிழ்ந்துவழுத்தினுனல்
திரையுலகத்தில வெவ்வுளூர்வீரராகவனைத் தியானஞ்செய்தே
அரியசுதரிசனன் வெண்பாவந்தாதியெனுநூலை யன்பாய்மன்னே.

அஷ்டாவதானம்

## பூவை. கலியாணசுந்தரமுதலியாரவர்க ளியற்றியது.

வெண்பாவந்தாதியொன்று வீரராகவப்பெருமாள்மீது சொற்றான்
கண்பார்த்தகவிஞரெலாங் கொண்டாடிநனிவியந்து களிக்கநாளும்
தண்பாய்ந்தநற்பானலடர் மதுரவாயலினிற் றங்கிமிக்கோர்
நண்பார்ந்தசுதரிசன தாசனெனுநற்பெயர்கொ ணுவலோனே.

சமரசவேதசன்மார்க்க சங்கவித்துவான்களிலொருவராகி

புராணிகர். பொ. சுந்தரம்பிள்ளையவர்கள் குமாரர்

## பொ. பரமசிவம்பிள்ளையவர்களியற்றியது.

மணிகொண்டவயல்சூழுந் திருவெவ்வுளூர்வாழும் வள்ளன்மீது
பணிகொண்டசுதரிசனன் வெண்பாவந்தாதியொன்று பாடினுனல்
திணிகொண்டதமிழுணர்ந்த குறுமுனியுங்கீரனுமே திகைக்கமிக்க
அணிகொண்டகன்னல்கண்டு சருக்கரையினும் ருசிக்கவவனிமீதே.

புராணிகர். சி. வடிவேல்பிள்ளையவர்கள் தமையன் குமாரர்

## சி. இரத்தினசபாபதிபிள்ளை யவர்களியற்றியது.

கடல்சூழ்ந்தபுவிபரவு மெவ்வுளூர்வீரராகவன் கழல்மேல்
அடல்சூழ்ந்தசுதரிசன நற்பெயரோனறைந்திட்டா னவனிமீதே
மடல்சூழ்ந்தமரைமலரில் வாழ்கலையாள்புகழ்ந்துமிக மகிழ்ச்சிகொள்ள
மிடல்சூழ்ந்தசேடனுமே நயந்துநனிவியந்திடவும் விழைவிற்றானே.

செங்கல்பட்டு மஹாவித்துவான் தசாவதானம் பேறை. ஜெகநாதம்
பிள்ளையவர்கள் மாணுக்கரிலொருவராகிய வித்துவான்

## வேலாயுதமுதலியாராலியற்றியது.

வெண்பா.

பார்திகழ்வீ ஈஷாரணியப் பண்ணவன்மே லந்தாதி
யேர்திகழப் பாடி யிசைந்தாட்டான் - கார்திகழு
மெவ்வுளூர் வாழு மெழிலார் சுதரிசனச்
செவ்வியனூர் முற்றுந் தெளிந்து.

இஃது மஃது.

கன்னலாந் தீஞ்சுவையாற் கற்பகமாம் வண்பொருளால்
பன்னுகின்ற பொன்மலையாம் பத்தியினன் - முன்னெவரு
முன்னுதிரு நாயகன்றன் முண்டகத்தாண் மீதுசொலி
மன்னு சுதரிசனன் வாக்கு.

சென்னைநகர் பண்டிதை

## ஸ்ரீமதி. ம. மனேன்மணியம்மாளியற்றியது.

பெருந்தவர்சேர் திருவெவ்வுளூர் வீரராகவரின் பெருமைமுற்றும்
பொருந்திடவேயந்தாதி வெண்பாவினுற்சொற்றுன் புலவர்மெச்ச
விருந்துணங்காமன்றுடவை சூழ்மதுரவாயலினில் விளங்கிநாளும்
அருந்தமிழ்தேர் புலமைசெறியெழிலுறு சுதரிசனனல்லறிஞன்றுனே.

மஹாவித்வான். பென்னலூர். நாராயணசாமிநாயுடு புத்திரராகிய

## பெ. நாதமுனிதாஸரவர்களியற்றியது.

உதவிபுரி மாவெவ்வு ளூரிராக வற்கு
மதரவாய லம்பதியான் மன்னும் - சுதரிசனன்
திண்பாவந் தானகலச் செய்தா னொருநூறு
வெண்பாவந் தாதிபுவி மேல்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம.

திருவெவ்வுளூர்

# ஸ்ரீராகவரந்தாதி.

## நேரிசைவெண்பா.

சீர்தங்கு மெவ்வுணகர்ச் செல்வ விராகவற்கே
யார்வங்கொண் டோர்வெண்பா வந்தாதி யேர்பொங்குந்
தண்பார்ம லோதத் தமிழ்மறைசெய் மாறனின்
கண்பார்த் தருளெனக்கிக் கால்.

## நூல்.

திருவுறையு மார்பா திருவெவ்வு ளூரா
அருமறையுங் காணாத வையா வொருகுறையு
மில்லாய் பொன் வல்லிக் கிறைவா விராகவா
நல்லா யுனக்குவந்த னம். 1

நம்பினே னுன்ற னளினத் திருவடியைத்
தும்பியைக் காத்த துரையேமுன்-தம்பத்திற்
றோன்றநா சிங்கமே தூய்மணியே ராகவனே
யான்றலுள் ளோய்நீ யருள். 2

அருளே தெருளே யடியார் மனத்துட்
பொருளேயி ராகவவென் புந்தி மருளகன்று
ஞானமடைந் துன்னடியை நாடிவதெப் போனதயா
நானறிய வின்றே நவில். 3

நவிலறிய மாமணியே நல்லணியே நாயகமே
தவமணியே தேனே தனியே சுவையமுதே
முக்கனியே சர்க்கரையே மூவா விராகவா
இக்கனைனின் றுமவுண வீ. 4

ஈசா கனகவல்லி யின்னேசா மாவெவ்வுள்
வாசா பவநாசா மாசில்லா தேசாநல்
வாசாசீ ராகவா வந்துன் றிருவருளைத்
தாசானு தாசனுக்குத் தா. 5

தாதாவி தாதாவின் றாதாவி னேதாவைம்
பூதாபூப் பாதாவொண் மோதாவென்-மாதாவாம்
சீதாச மேதாவ தீதா விராகவா
காதா வெனக்கு நலம். 6

நல்லவனே யென்னுயிரே நாதா வெவற்றுனும்
வல்லவனே யன்பரகம் வாழ்பவனே-பல்லுயிர்க்கு
தாயேயென் னப்பனே சற்குருவே ராகவா
நீயேயென் முன்வந்து நில். 7

நில்லாயா வாள நினையாயா ராகவா
கல்லாநின் னெஞ்சங் கரையாதா பொல்லாப்
பிணியால் வருந்துமெனைப் பேணாத தென்னே
மணியே யிதுதருமமா. 8

மாதா கனகவல்லி மன்னு விராகவா
நாதாவோர் விண்ணப்பம் நானசெய்வே-னேதெனின்முன்
தாறனை கைம்மா தவித்தழைக்க வந்தோனுர்
கூறென்னைக் காக்கவார் கோ. 9

கோடிதண்ட னிட்டேனென் கோவே யிராகவா
வோடியுன்னண் டைப்புகுந்தே னுத்தமனே-வாடுமனக்
கஞ்சலஞ் சேலென் றபயகாஞ் சாதித்து
வஞ்சிக்கும் புன்றேயை வாட்டு. 10

வாட்டமுறின் மெய்யன்பர் வாண்முகப் பைங்கூழின்
ஈட்டமருண் மாரிசொரி யோர்முகிலே-வேட்டுசுரர்
மானிடரா ரும்போற்று மாலே யிராகவா
நானிடர்ப டாதருளின் நாள். 11

நாளைபின் னைக்கென்றே நாளைக் கழிக்காதுன்
றாளைத்தந் தென்வினையைத் தாழ்த்தியுட-னாளாமற்
றேனை யிராகவா தேவா வெனதுபெரு
மானேயென் னேடேனே வாது. 12

வாதமது மிக்க வருத்துதென்னி ராகவா
நீதயைசெய் திந்நோயை நிக்கியருள்-சீதமலர்
வாசனும் வாசவனும் வந்திறைஞ்சு முன்னடிக்கே
பூசைசெயு மென்றனையிப் போது. 13

போதெலலா முன்னடியைப் போற்றுவோரி ராகவா
வாதமுத னேய்கட்போய் வாழ்வரென வாதிமறை
யோதுவது பொய்தானே வுண்மையெனி லென்னைச்சூ
ழேதங்க ணையாத தென். 14

என்றனக் குங்கொஞ்ச மீந்தருளி ராகவா
அன்றினிய நாரதன்கோ வம்பரீ-டன்சுகன்பொன்
மின்னுங்தே கன்குமரன் வீடணனம் மாருதியாம்
அன்னவர்க்க ளித்த வது. 15

அதுவோ விதுவோவென் றங்கிங் கலைந்துப்
பரிவா யிராத மனப்பாவிக் கிதுவேதான்
காப்பதென் றன் றூவடையைக் காட்டி யிராகவா
தீர்ப்பாய் குறையித் தினம். 16

தினகரனு மாசந் திரன்மீன் கணமும்
பனகஞ் சுமக்குமாப் பாருந்-தினங்கீழ்மேற்
றானாய் சுழல்வதற்குச் சத்தே திராகவநீ
யானு யதைச்சுழற்று மச்சு. 17

அச்சுதனே கோவிந்தா ஆயர்குலக் கொழுந்தே
இச்சுதனை யாண்டருளி ராகவனே நச்சுதரு
மண்டலிதன மண்டையினில் மண்டிநடங் கொண்டநறுத்
தண்டுளவம் பூண்டவடி தந்து. 18

தந்தையுந் தாயுந் தமர்நண்ப ருங்குருவும்
வந்தநோய் தீர்க்கும் வயித்தியனும்-முந்திநான்
செய்தவினை போக்கியரு டேவு மிராகவா
ஐயா வெனக்குநீ யாம். 19

ஆமோ பராமுக மாற்ற வடியேன்மேன்
மாமேவு மார்பா மனமணித்ய-சாமீ
இராகவா வென் றுரையே யென்னப்பா வாழி
தராகனக வல்லிநா தா. 20

தாமோ தராமுகுந் தாகேச வாவரீ
மாமாது நாதாசீ மாதவா-ராமாவே
வாமனா கூர்மா வராகா விராகவா
சாமி யடியேன் சரண். 21

சரணஞ் சரணமென்னுந் தாசனேன்முன் வந்து
கருணை மிகச்செய்து காருங் கிரண
ரவிகோடி தேசாவோ ராகவா வண்டம்
புவியோடுண் டோனேயிப் போது. 22

போதனரன் வேண்டியெப் போதுந் துதிக்கின்ற
பாதந் தருதி பணிகின்றேன் வேதத்துக்
கெட்டாப் பொருளை யிராகவா துன்மனத்துக்
கொட்டாப் பொருளே யுனை. 23

உன்னைப்போற் றுவிட்டனு மோரா கவனேநீ
என்னைக்காப் பாற்றலுனக் கேகடனே-என்னையெனின்
பெற்றவன்னை தந்தைகடம் பிள்ளைகடூச் செய்தாலும்
பற்றுவிடார் நாணப் படி. 24

படிமேனா யேனையுன் பத்தர்க டம்பொன்
னடிக்கே பணிசெயுமா ளாக்கு கடிக்குந்
துளவமணி தோளா துரைரா கவனே
வளமலியெவ் வுட்கிடந்த வா. 25

வாவாவென் றன்னிடத்து வந்துன் னருடந்து
காவாயன்றேனின் கழற்கடியா ராவா
ரடிமையைப் பணிய வமைப்பா யரவி
னடமிடும்மி ராகவவிங் நாள். 26

நாளெழுமோ துன்மார்க்க னான்செய் வினைநீக்கி
யாள்வதுபொன் னையா வமலனே-நீள்வனத்திற்
றாமான் விழியுற்ற தாயார் கனகவல்லிக்
கோமானே ராகவா கூறு 27

கூறாத பேர்க்குக் கொடுவினைசேர் புத்திபதம்
மாறாது சேராது வாராது-நேராது
சாகாமுன் னஞ்சென்று சந்நிதிமுன் னின்று
ராகவா ராகவா வென்று. 28

என்றுமுனை நம்பினே னெந்தாய் விளவுதிர்த்துக்
கன்றைக்கொன் றோய்ரா கவனேசீர்-துன்றும
பிரகாசத்-தாயென்னைப் பேணு விடிலோ
பரிகாசஞ் செய்யுமிப் பார். 29

பாரோர் புகழ்ந்து பரவுந் திருவெவ்வு
ளூரா யிராகவா வொப்பாவா ராரோவிங்
குன்றனக் கையா வொருமுதலே மாவொளியே
என்றனக்கி ரங்காத தென். 30

என்னையே கண்பாரு மெவ்வுயிர்க ளுக்குந்தா
னன்னையே யம்பனே யாருயிரே-உன்னையே
நம்பினே னம்பினே னாயகமே ராகவா
வெம்பினே னேயான் மிக. 31

மிகநாறும் பங்கயத்தின் மேலவன்வா னோர்கள்
சுகநார தாதிதிருத் தொண்டர் புகழுங்கோ
மானேதே னேமா வரதா விராகவா
நானுனக்கா ளாவதெஞ் ஞான்று. 32

ஞாயிறு திங்க ளனலங்கள் சென்னிபா
காயங்கா யம்முகிலே காலபூமி-தோயம்
மனமனையாள் பொன்னடியார் மைந்தர்க ளுனுள்
கனராக வானவுக்குக் காண். 33

காணுமவுன்றன் கமலத் திருவடியை
வீணுக்கா லங்கழித்து விட்டேனே-சேணுடர்
போற்றுஞ்சி ரெவ்வுட் புரிரா கவமணியே
தோற்றஞ்செய் யென்கட் டுணைக்கு. 34

துணைவாநீ யென்றன் றுரையே யரவ
வணையா யிராகவா வையா குணத்தீப்
பகைவ ரெதிர்காலும் பண்ணோய்சூழ் காலும்
மிகைநமனே ருங்காலு மே. 35

மேலான தேவெவன் மேதினிவா னெங்குமே
நாலான வேத நவில்வதெவன்-மூலா
வெனவிளித்த வாப்பனமுன் னேகினனி யாவ
னுணையன்றி ராகவா வோது. 36

ஓதவரி தானவா வோராக வாவெனக்கு
மாதமொரு நாட்குகுவில் மாதேவ காதங்
குளித்துனது பொற்றிக் கோயில் வலம்வந்தோர்க்
களித்தபல னெல்லா மளி. 37

அளித்தே னெனையுன் னடிமை புரிய
களித்தே யுனதுளங் கைக்கொள்-ளிளித்தே
பதிமூன் றெரித்தோன் யாவுஞ் சுகுண
நிதியே யிராகவா நீ. 38

நீராய் வளியாய் நெருப்பம் பரங்களாய்
பாராய்பார் வானிற் பலபொருளாய்-நேராகத்
தானே வியாபகித் தாலுனையி ராகவா
நாடுனவனங் காணபே னவில். 39

நவமா வலர்கொண்டுன் னல்லடியைப் போற்று
தவமான பாவியேற் கையா வுவமான
மொன்றுமில்லா சீர்புரு டோத்தமவி ராகவா
வின்றிரங்கித் தண்ணருளை யீ. 40

ஈயார்க டம்மாட்டு மீவோர்க டம்மாட்டும்
நீயார்ந் திருப்பதினு ளின்மாட்டு-மோயா
திருகுணமு முண்டோ விராகவா வுண்டே
லொருநற் குணமே யுதவு. 41

உதவியற்ற வென்னை பொருளிரா கவனே
யிதயமலர்ந் தாட்கொணடே யின்று-சிதயச்செ
யாமயங்க ளைத்தீர்த்துன் னன்பர் குழாஞ்சேர்த்து
நேமியிற்சன் மித்திறத்த னீக்கு. 42

நீக்கமற் றெங்கும் நிறைந்தோ யிராகவநின்
னோர்கு சிறிதென்மே னோக்கியே-வாக்குமென்
னெஞ்சு முடலும் நினைப்புகழச் சிந்திக்கத்
தஞ்சமெனத் தாழச்செய் தான். 43

தானேதா னான தனிமணியே தங்கமே
வானேவா னோர்பணிய வாழ்முதலே-கோனேயுன்
றஞ்சங்கஞ் சங்தான் றயாபரா ராகவா
வஞ்சேலஞ் சேலெனவந் தாள். 44

ஆளாகி னேனுன் னடியார் பொன்னடிக்கின்
னாளா கிலும்நீ நயங்கொண்டு-கேளாய்முன்
னாவினங்க ளைக்குமுலரா லாதரித்த ராகவா
பாவனஞ்செய் தென்னைக்கைப் பற்று. 45

பற்றற்று நின்ற பழம் பொருளே ராகவா
முற்றுமுனை நம்புமென்மேன் முன்னத்து-சற்றுங்
கருணை புரியாது காலங் கழித்தாலித்
தருணத்தா ராதரிப்பார் சாற்று. 46

சாற்றவென் னாற்றரமோ தானுன் பெரும்புகழை
போற்றவென் னாற்றரமோ பூவெங்குந் தோற்றினையால்
உன்னவோ ராகவா வோட்டமுள தென்னெஞ்ச
மென்னநான் செய்வே னினி. 47

இனிப்பிற்கு மேலா மினிப்பே மிகுந்த
வனப்பிற்கு மேலாம் வனப்பே-நினைப்பதற்
கெட்டா விராகவா யான்செய் வினைகளெனைக்
கிட்டாமற் சேருனடிக் கீழ். 48

கீழுலகில் வைத்தாலுங் கேடற்ற மேலுலக
மேழிற்கு மேலா யிலங்கிடத்தில்-வாழவெனை
வைத்தாலும் ராகவா வந்துநீ யங்கங்கென்
சித்தத் திருகுடியாய்ச் சேர்ந்து. 49

சேணிற் பழுத்தொழுகும் தேன்றருவே வீசுமொளி
மாணிக்க மேமா மரகதமே-மாணுடைய
வீரராக வாகாக்க வேண்டுமெனக் கார்வருவார்
பேரரவி னீகிடந்தாற் பேசு. 50

பேசற் கரிதான பேரா ரிராகவன்று
ணீசற்றும் நீங்காதே நெஞ்சமே கூசுங்
கயத்தையளித் தோனங் கருமுகிற்போல் வண்ணன்
பயத்தைத்தீர்த் தாளுவான் பார். 51

பாரின் பெருவாழ்வும் பைந்தருக்க ளாதியவை
சேரிந் திரனுலகின் செவ்வாழ்வுந் தேரி
லனித்தியமாம் நெஞ்சே யரிரா கவன்றன்
றனித்தபத னித்தியமாஞ் சார். 52

சாரமற்ற துட்டர்க டங்கூட்டஞ் சேரலு
மீரமற்ற தேவரை யேற்றலும் நாரகமே
சற்றும் பயனேதென் சாமியாம் ராகவனைப்
பத்தரைச்சேர்ந் தேத்தற் பயன். 53

பயனேயுற் றேமில்லை பாரிலுடற் றேன்றி
யயனேமர்க் காளானே மையோ-தயவைக்
கனிந்துளம் செய்திங் கனிரா கவனை
யினியா கிலுமகமே யேத்து. 54

ஏத்துவாய் நெஞ்சமே யெம்பெருமான் ராகவனைக்
கூற்றுவ னுன்னைக் கொடுபோமுன் காற்றுள்ளப்
போதல்லோ நெற்பதரைப் போக்கிக்கொள் வாருலகோ
ராதலினுற் கால மறிந்து. 55

அறிமனமே யுன்னைச்சூ ழஞ்ஞானம் நீக்கிச்
சிறிதுங் களங்கமிலாச் செவ்வி யுறமவனைச்
சத்தியனைச் சத்துச்சித் தானந் தனோமது
நித்தியனை ராகவனை நீ. 56

நீல வடிவை நிராமயத்தைக் கோலமொடு
மாலை யிராகவ மாமணியைச் சாலவு
மலலும் பகலு மறுபது நாழிகையும்
நில்லென் னகமே நினைத்து. 57

நினைத்துப்பார் மண்பெண்பொன் னேர்த சடல
மனைத்துமே மித்தையதனுல் மனத்தோழா
வேதுமிச் சிக்கா திருக்கிற் பதமீவான்
ஆதிரா கவன்கருணை யப்பு. 58

அபாயமில் லாம லகமோ ருய்யற்
குபாயங் கேளொன் றுண்டு ரைப்பேன் கபாலிதொழு
மம்மா னிராகவன்ற னங்கழலைச் சிந்தித்தே
சும்மா விருந்தாற் சுகம். 59

சுகந்தருஞ் செல்வமீயுந் தூய்மையுறு விக்கு
மகந்தீர்க்கும் வானருளு மாவிக்-ககமே
வருந்துயரை நீக்கும் வலங்கொடுக்கு மற்றுந்
தரும்ரா கவநாமந் தான். 60

தான தருமஞ் சதமகமு மற்றுநன்
கானவினை கட்செயலி லாம்பயன்கண்-மானுமோ
வோர்க்கா விராகவ னொண்மணடியை யர்ச்சனைசெய்
தோர்பெரும்பே றுக்ககமே யோது. 61

ஓதக்கே ணெஞ்சே யுறும்பாவம் போக்குவது
மாதரவாப் புண்ணிய மாக்குவதும்-வேத
முடியினின் ருடுவது மூலரா கவன்ற
னடியன்றி வேறே தறை. 62

அறைவோரி ராகவா னூர்புகழை நெஞ்சே
மறையோரா யிற்சுரரா வார்க-ளிறைவரோ
சக்கர வர்த்திகளாய்ச் சார்குவர்மற் றோருறுவர்
மிக்கதனந் தானியமு மே. 63

மேலாமி ராகவன் மெல்லடியை நெஞ்சேயோர்
காலா கிலுமே கருதுவோர் தாலத்திற்
செய்பாவ மத்தனையுந் தேய்ந்துகொடு நோயுமற்
றுய்வார்தீர்க் காயுளை யுற்று. 64

உற்ற துரைப்பே னுறுதியாய் நம்பகமே
வெற்றி யிராகவனா மின்கோயிற் சுற்றி
வலம்வந்து மாவிளக்கு வைத்தேத்து வோர்க்குப்
பலமா மகம்பதிற்றுப் பத்து. 65

பத்தர் பரவும் பதிரா கவமணியி
னுத்தமமா நாமரச முண்ணலே பித்தகமே
நீத்துவே றிச்சித்த னேராமாப் பானீக்கி
மூத்திர முண்ணன் முதல். 66

முதல்வ னிராகவனு மோத முளரிப்
பதங்க டொழுமடியார் பக்கன்-முதமுற்றுச்
சாருத நெஞ்சே சலதாரை நீர்கீர
வாரிசேர்வ தொத்து வரும். 67

வரநதி யாதி வளநதிக ளூறு
தரமாடல் ராகவன் றன்னல்-லிருதாப
நாசனி தீர்த்தத்தி னன்னெஞ்சே யோர்தரம்
நேசத்தோ டாடுதற்கு நேர். 68

நேராமோ நெஞ்சமே நீத்தோர்வாழ் மாணைம்மி
சாரணிய மன்ன வரணியங்கள்-சீரார்
குருபூமி பானு குலரா கவன்வா
ழொருவீட்சா ரண்யத்திற் கோது. 69

ஓதிய வெல்லா முணர்ந்தென் னகமோகம்
மாதிராக வன்ற னடியை-யெப்போது நீ
நாடியிரு காமத்தை நண்ணாதே நண்ணிலுனைத்
தேடிவருங் கீழ்மைதருந் தீங்கு. 70

தீங்கனி மூன்றுநிகர் திவ்யவி ராகவன்
பாங்குதரு நாமரச பானஞ்செய் ஓங்கி
அளந்திரவி நாளெம தாயுள் கரைக்காமுன்
குளிர்மனனே மிக்ககளி கொண்டு. 71

கொண்டல் மணிவண்ணன் கோதண்டன் ராகவன்றன்
புண்டரீ கப்பூவார் பொன்னடிக்குத் தொண்டு
செயநினைத்தா லேமனமே தீவினைபோஞ் செய்தால்
பயனுரைத்தற் கொண்ணுமோ பார். 72

பார்முதலண் டங்கட் படைத்தளித் துப்போக்கும்
சீர்மை யிராகவர்க்கு நேர்தலெது நாமனமே
கொஞ்சம் விளையாட்டாங் குழந்தைகளைப் பார்த்தறிநீ
சஞ்சலமற் றோர்தஞ் சடங்கு. 73

சடக்கூட்டின் மேவுமனத் தந்தையே கேணீ
படங்கட் பொலிகின்ற பாம்பி-னிடந்துயிலும்
யோகனிராகவனு றொன்புகழை நல்லிசைசேர்த்
தோகையொடு சங்கீத மோது. 74

ஓதமிசை யாலி லுறங்குமென் னம்மானை
வேதமி சைப்பொருளாய் விறமா-சோதியைமாம்
மாகுலங்க டைர வரிரா கவனைமனக்
கோகிலமே யிங்குவரக் கூவு. 75

கூவிளமுஞ் சந்தனமுங் குங்குமமுஞ் சண்பகமார்
காவளஞ்சே ரெவ்வுட் கடவுள-மாவிளங்கும்
மார்ப னிராகவனு மாமுகிலை யுண்மயிலே
சீர்பெறநீ கண்டுநடஞ் செய். 76

செய்யத் தகாத செயலெல்லாஞ் செய்திந்த
வையத் திரங்கு மடநெஞ்சே-உய்யவெனில்
ஏற்றரனும் பங்கயனு மேற்று மிராகவனைப்
போற்றினற் பாவமெலாம் போம். 77

போமோ வினைகள் புருடோத் தமனருஞ்
சாமியிராகவன் பொற்றாட்களா-மாமலரை
யெக்காலு நெஞ்சே யிதயகம லாசனத்தில்
வைக்காத லோபிகட மக்கு. 78

தமக்குரிய தந்தைகுரு தாயார் பிதுர்க்கள்
சுமக்கு மனைபாட்டி சுற்றங் குமரரொடு
மன்னோரை நெஞ்சே யளிப்பானி ராகவன்
றன்னடியைப் போற்றுவோர் தம். 79

தம்பி பிராட்டியொடு தண்டகவ னஞ்சென்றங்
கம்பையடைத்தசுர ராவிகடன் னம்புக்கீந்
தின்பஞ் சுரர்க்ககமே யீந்த விராகவனந்
துன்பம் விடுப்பான் துதி. 80

துதிரா கவனையெனிற் றாங்குகிறாய் நெஞ்சே
சதவிகரங் காணிற சடிதி-மதக்காம
முற்றணைய சீசீநீ யோடுகிறா யொப்பாமோ
சிற்றின்பம் பேரின்பத் துக்கு. 81

பேரின்பந் தந்துநமைப் பேணுமி ராகவற்கெந்
நேரந்தா னற்பணஞ்செய் நெஞ்சமே யாரின்பந்
தந்தாலுந் துன்பங்க டந்தாலும் நின்னுடலை
நிந்தைகளைச் சொன்னாலும் நீ. 82

நீலமுகில் வண்ணத்தா னெஞ்சே யிராகவன்றன்
சோலமலர்ப் பாதங் குடியிருக்க ஞாலத்
திணங்கி மனவீட்டை யீவோரை யாள்வான்
குணமார்மேல் வீட்டைக் கொடுத்து. 83

கொடியிடைக் கௌதமிக் குத்தரும சேனற்கு
மடியிடனெஞ் சேதந் தருளுநங் கடிமலரா
ரம்பாத ராகவனை யண்டும்பேர்க் கேமோக்கம்
நம்பாத பேர்க்கே நரகு. 84

நரசென்மத் துக்கனறி ஞானமுள தாமற்
றொருஜென்மத் துக்ககமே ஓஓ வருசென்மம்
ஏதோ வறியோ மிராகவனைக் கண்டேயிப்
போதே துதிக்கப் புகு. 85

புகுந்தார் சரணம் புவியாண்டார் புக்கா
தகந்தா னடைந்தோ ரழிந்தார் சகந்தனினல்
லின்பந் தருந்திரு வெவ்வுளி ராகவனை
யன்புடைய நெஞ்சே யறி. 86

அறிவரிடஞ் சேர்ந்தா லவித்தைக் கதவந்
திறந்தகமே மெஞ்ஞான தீபஞ் சிறந்தொளிர
வேற்றி நுதலடுக்கோ யிற்கணுறும் ராகவனைத்
தோற்றஞ்செய் விப்பார் துணி. 87

துணைபுரியு நெஞ்சே சொலக்கேண் மலர்ப்பஞ்
சணையா திகளின்றே ஆஆ மணியார்
பணவா ளரவின்மேற் பள்ளிகொள லென்றே
குணவாளன் ராகவனென் கோ. 88

கோவிசையன் றேர்ப்பாகன் கோவிந்தன் கோபாலன்
ஆவிசைப்புல் லாங்குழலா லாதரித்தோன்-மாவிசைய
கோடிவிமா னத்திலுறுங் கோமா னிராகவனை
நாடிமன மேதுதியிந் நாள். 89

நாளுங்கோ ளுங்நமக்கு நற்பலனே யீயாது
நீளுமுழ ளேயகளேன் நீங்காது-கேளகமே
சீருடைய ராகவன்றன் செங்கமலத் தாள்களுக்குப்
பேரடிமை யாம்பட்ட பின். 90

பின்னையுமென் னன்னையுமாம் பேரார் கனகவல்லி
மன்ன னிராகவன்பொன் மாணடியைத்-துன்னித்
தினமுந் துதிப்போரெத் தீவினைசெய் தாலு
மனற்படும் பஞ்செனவே யாம். 91

ஆமை யுருவா யமிர்தங் கடைந்தகாண்
மாமுது கிற்றாங்கு மால்வரையும்-ஓமனமே
கன்மழைக்காய்த் தூக்குங் கனமலையுஞ் செங்கல்லோ
தன்ம னிராகவற்குத் தான். 92

தானவனும் மாவலிபாற் றாழ்மையொடு மூவடிமண்
டானமென வாங்கித் தரைமுழுதும்-வானுலகுந்
தாவி யளந்துகொண்ட சாமி யிராகவனைச்
சேவித்தா லாநெஞ்சே சீர். 93

சீரார் கனகவல்லிச் சீமா னிராகவன்
பாரானே யென்னைநயன் பாரமுலை சேரானே
அக்கா வகத்தோழி யந்தோ மருந்திட்டாள்
சக்காளத் திக்கொடியா டான். 94

தானவரை மோதுந் தடம்புயவி ராகவனை
நானினைந்து மோதமுறும் நாளெதுவோ மானே
மனக்குறத்தி கேளென் மலர்க்கரத்தைப் பார்த்தே
யெனக்குரைத்தி நற்குறியை யிங்கு. 95

இங்கென் கருத்தறிந் தெவ்வுளி ராகவனுக்
கங்குரைப்பா ராரடிநீ யல்லாது-பங்கயக்கண்
மாதேயுட் பாங்கி மறுவசன மோதாதிப்
போதேயோ டோடிப் புகல். 96

புகலவரி தான புருடோத்தமற் கென்
சகலபா ஷேஞ்சொல் சகியே யகன்றால்
நயமோதி ராகவனை நாயகனை யென்றன்
வயப்படநீ யிங்கழைத்து வா. 97

வாடீ மனத்தோழி வல்லபனி ராகவனைக்
கோடிதெண்ட னிட்டெனக்காக் கூப்பிடுவாய்-போடீபோ
வென்றகற்றி னாலுயிரந் தேதுளவத் தாரேனு
மின்றெனக்கு நீகொடுவந் தீ. 98

ஈரநீர சக்கண்ண னெட்டெழுத்த னெம்பெருமான்
வீரராக வன்றனை மெல்லியே நாம்-நேரிற்போய்
கண்டு பணிவோங் கருத்திதங்கப் பாடுவோம்
வண்டுளவின் றார்கொள்வோம் வா. 99

வாராய் மனமே வரத னிராகவனார்
பேரா யிரங்களைப் பேசுவர்க்குச் சீராக
தீரும் பிறப்பிறப்பு தேசுதீர்க் காயுளுண்டாஞ்
சேருங்குடியாய்த் திரு. 100

ஸ்ரீ ராகவரந்தாதி முற்றிற்று.





ஸ்ரீ விஜயராகவன் துணை வுண்டாகவும்.

## திருவெவ்வுளூர் வீரராகவனைத் துதிக்கும்

## கண்ணிகள்.

இராகம்-புன்னாகவராளி-அடதாளம்.

1. சீர்பெருகுங்கார்சொரியுந் திருவெவ்வுளூரில்மேவும் ராக்வா வீரராகவா
நார்பெருகுங்கடைக்கண்ணை நாட்டுமையாயென்றன்மிசை ராகவா வீர
2. பண்ணவர்விண்ணவர் துதி பண்ணவருமெவ்வுளூரில் ராகவா வீரராகவா
மண்ணவரிடர்கள்தீர வந்துவீற்றிருக்குந்துரையே ராகவா வீரராகவா
3. அன்னையேஎன்னப்பனே என்னையனையென்சுவாமியேஒ ராகவா வீர
உன்னையன்றியென்னைக்காக்க வுத்தமனாரிவ்வுலகில் ராகவா வீரராகவா
4. கண்ணனேமணிவண்ணனே காயாம்பூமேனியனே ராகவா வீரராகவா
மண்ணினில்பிறப்பிறப்பை மாளாதேனெனக்குவைத்தாய் ராகவா வீர
5. இப்பாரிலுமப்பாரிலு மொப்பாரேயுன்றனக்கு ராகவா வீரராகவா
அப்பர்வுன்னடிமையே னவஸ்த்தைதீரவருவாய் ராகவா வீரராகவா
6. வேதங்கள்காணாதவுன்றன் மெல்லடிகளைப்போற்றினேன் ராகவா வீர
வாதமுதனோய்களென்னை வருந்திடாமலென்னைக்காரும் ராகவா வீர

7. வாதபித்தஸ்லேஷ்மங்களால் வாய்ந்துவரும்நோய்களெல்லாம் ராகவா வீர
காததூரம்போகாதோவுன் கடைக்கண்சற்றென்மேல்வைத்தால்ராகவா வீர
8. சாதுக்களைக்கூடியுன்னை சந்ததம்நான்பஜிக்காமல் ராகவா வீரராகவா
நீதியற்றமூடர்நேசம் நீங்காமலேநின்றெனையோ ராகவா வீரராகவா
9. மாதர்கள்தங்காதலினால் மதிமயங்கினேனென்னக்கு ராகவா வீரராகவா
போதமுந்தந்துன்கமலப் பாதமுந்தந்தருளையா ராகவா வீரராகவா
10. கொன்றேனனந்தமுயிர் தின்றேனவ்வூன்களெல்லாம் ராகவா வீரராகவா
இன்றேயப்பாவந்தீர்த்து நன்றேயெனக்கருளும் ராகவா வீரராகவா
11. அந்தோ யான்செய்தபாவம் அளவிறந்ததானாலும் ராகவா வீரராகவா
எந்தாயேமன்னித்தெனை யிட்டேறக்கண்பாரும் ராகவா வீரராகவா
12. கருணாநாதனென்றேயுன்னை கருதியேநம்பினேனையா ராகவா வீரராகவா
திரணமேனுங்கிருபைநீர் செய்யாதிருக்கலாமோ ராகவா வீரராகவா
13. காலனையனரிடத்தில் காட்டிக்கொடுக்காதேயென்னை ராகவா வீரராகவா
நாலாம்பதமெனக்கு நல்கிரக்ஷியுமையா ராகவா வீரராகவா
14. ஆசையாம்பிசாசுகள்வந் தாட்டுதென்னைஎன்னசெய்வேன் ராகவா வீர
ஈசனேயுனையன்றியோட்ட பூசாலிவேறாரேசொல்வாய் ராகவா வீரராகவா
15. நீதனேஒநித்யனேநான் நின்சரண்புகுந்தேனையா ராகவா வீரராகவா
பாதுகாரர்மேலினினம் சோதனைசெய்கிறாயென்னை ராகவா வீரராகவா
16. தினகரனென்னாயுள்நாளை தினப்படியாலளக்கிறானே ராகவா வீரராக
தனுகரவாமுன்னமென்னை சடுதியில்வந்தாளுமையா ராகவா வீரராகவா
17. தஞ்சம்தஞ்சமென்றவென்முன் தசரதசுகுமாரதீர ராகவா வீரராகவா
அஞ்சேலஞ்சேலென்றுவந்து ஆதரிக்கலாகாதோதான் ராகவா வீரராகவா
18. தீனரக்ஷகனென்றுநீரோர் திக்கநாமங்கொண்டிருக்க ராகவா வீரராகவா
ஈனனேனைக்காராதென்னே யீதுனக்குநியாயமோதான் ராகவாவீரராகவா
19. பதிதர்தீவினைபோக்கத்தானே பரியத்துளபத்தாரணிந்தாய் ராகவா வீர
கதியென்றுன்னைநம்பினேனென்னைக் காருலமாதுளபந்தந்து ராகவா வீர
20. அன்பராம்பயிர்விளைக்க ஆகம்நீலமேகமானீர் ராகவா வீர
என்பேரிலுன்கருணைமாரி யேன்சொரியலாகாதையா ராகவா வீர
21. தாசரதியேயுன் கமலத்தாள்கள்றெண்டும் ஆஞ்சநேயர் ராகவா வீர
மாசிரக்கரங்கள்தாங்க மாதவனென்செய்தாரோ ராகவா வீர
22. வாரும்வாருமென்னருகில் வாரும்ஓதயாரசமே ராகவா வீர
சீருஞ்செல்வமுமிவ்வுலகில் தாரும்பதமேஅவ்வுலகில் ராகவா வீர
23. மங்களஞ்சுபமங்களஞ் ஜெயமங்களமங்களமுனக்கு ராகவா வீர
திங்கண்முகத்தோயுனக்கு திவ்யமங்களம்மங்களம் ராகவா வீர
24. [illegible]பனஞ்சோபனம்சுப சோபனமெந்நாளுமுனக்கு ராகவா வீர
நியமமெஜயஞ்ஜெயமுனக்கருள் ஸ்ரீசுதரிசனதாசனேற்கு ராகவா வீர

**கண்ணிகள்-முற்றிற்று.**



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பஞ்சாட்சரப்பதிகம்.

# நடராஜப்பத்து.

# சங்கப்புலவர்கண்டசுத்தி

இம்மூன்றும் அடங்கியிருக்கின்றன.

---

இஃது,

சிறுமணவூர்,

## முனிசாமிமுதலியார்

அவர்களால்

இயற்றப்பட்டு,




தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1908.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



சிதம்பரம் நடராஜர்

# பஞ்சாட்சரப்பதிகம்.



வசிபசிவசங்கரா வசியகெங்காதரா வசியகைலாசவாசா வசியபணியணியுரக வசியமான்மழுகரா வசியசிவகாமிநேசா, வசியதிரிநேத்திராவசிய புவனேஸ்வரா வசியஓம்நடனபாதா- வசியகரியுரியழக வசியபுவி யிடையழக வசியசிர மாலையழகா, வசியமதிமுடியழக வசியபசுபதியழக வசியவென் மனதில்வாசா- வசியமுன்னூலழகவசிய வெண்ணீறழகவசியமறைபரவுமழகா, வசியவென்றுனையனுதினம் போற்று மடியார்க்கு அருள்மடைதிறந்ததில்லை- அதிபதிஜெனகாதி துதிபதி சிவகாமி அன்பிலுளை நடனபதியே. க

சிவயநமவென்று தினமூழ்கியுருவேற்று வோர்செய்தொழிலெலாம் வசியமாம் - ஜெகவசியமாம்சகல முகவசியமாம்செய்ய சித்துகளெலாம்வசியமாம், வயனமசியென்றுவுரு வேற்றுவார்

சத்ராதிவானுட விட்டபந்தாம்- அடங்காதபூதபேதம் பசாசிவை யெலாம் வளர்குலாலன்திகிரியாம், யனமசிவ வயனமசிசிவயனம மசிவயன எல்லாமுன்னடலமன்றோ-யிவ்வுலக பொருளுதவிஅவ் வுலகமருளுதவி யியவிருதெய்வமுளதோ, அவுணுதிபுவனுதி சௌ ணுதிமூர்த்தர்க்கு அருள்மடைதிறந்ததில்லை - அதிபதிஜெனகாதி துதிபதிசிவகாமி அன்பிலுரை நடனபதியே. ௨

புல்லாய்ப் பிறந்தாலு மிருகாதி ஜெனனங்கள்பசியாரிமகிழு மன்றோ- பூண்டாய்ப்பிறந்தாலும் புலத்தியர்கள்கொண்டுசிலபிணி தீர்த்து புகழ்வரன்றோ, கல்லாய்ப்பிறந்தாலும் வல்லவர்கள் மிதி கொண்டு காட்சிக்குருத்து மன்றோ- கழுதையுருவந்தாலும்ஆவெ ணக்கத்தினல் கைகண்டசகுணமென்பார், எல்லாமிலாமலே இப் பிறவிதந்தென்னையேங்கவிட்டகலகின்றாய்-எத்தனையன்னையினெத் தனை தந்தையினெத்தனைபிறவிவருமோ, அல்லலெனுமாசறுத்தா ட்கொளுந்தெய்வமே அப்பனே தில்லைநகர்வாழ் - அதிபதிஜென காதி துதிபதிசிவகாமி அன்பிலுரை நடனபதியே. ௩

கல்லாதமூடரைக்கயவரைக் காமுகரைகல்நெஞ்ச வஞ்சரிவ ரை-சற்றுமறிவில்லாத மோழைபைக் கோழையைக்கார்க்க வை த்துண்டபேரை, பொல்லாதமூர்க்கரை மிருகங்கள்போன்றவரை பொய்க்கு அஞ்சாதபேரை- பூமிபிற்பிறருக்கு யிடுக்கமுயல்வோ ர்களைப் பிணமொத்தபேரைபலரை, நல்லாரெனக்கவிகள்சொல்லி யலையாமல் நாளுளாவதென்று சிவமே- நானன்றி நீயேதுநீயன்றி நானேது நானுபுரைத்ததேது, அல்லிலும் பகலிலும் நீயிலாதசை வேது அருள்மடைதிறந்ததில்லைக்-கதிபதிஜெனகாதி துதிபதிசிவ காமி அன்பிலுரை நடனபதியே. ௪

ஜெகமெட்டுதிசைகளுங்கிரிகள் பலதெய்வமும் செம்பொன் மணிமாடைமேடை-சேயன்னை தந்தையும்நானென்ற ஆணவஞ் செல்வமும் வல்லசித்தும், முகடேறுமெமனுக்கு முன்வந்துவுத வுமோ முத்திக்குவித்துமுளதோ - மூவாசைவிட்டுகனி சருகாதி தின்றாலும் முன்செய்தவினை யகலுமோ, யிசநீகாணுதுயிருளேது வெளியேது நினைவேது கனவுமேது அகவுறவு பற்றற்று துறவுறவு முற்றற்ற ஆரியர்கள் பரவுதில்லை, அதிபதிஜெனகாதி துதிபதிசிவ காமி அன்பிலுரை நடனபதியே

திருச்சிற்றம்பலம்.

---



உ

கடவுள் துணை.

# நடராஜப்பத்து.

மண்ணாகிபூதமொடுவிண்ணாகிஅண்டம்நீமறைநான்கினடிமுடியும்நீ மதியுநீ ரவியும்நீபுனலும்நீ அனலும்நீ மண்டலமிரண்டேழும்நீ, பெண்ணும்நீ ஆணும்நீ பல்லுயிர்க்குயிரும்நீ பிரிவும்நீஒருவநீயே பேதாதிபேதம்நீ பாதாதிகேசம்நீபெற்றதாய்தந்தைநீயே பொன்னும்நீ பொருளும்நீ யிருளும்நீ ஒளியும்நீ போதிக்கவந்தகுருநீ புகழொணாகிரகங்க ளொன்பதும்நீ யிந்தபுவனங்கள் பெற்றவனும்நீ, எண்ணரிய ஜீவகோடிகளீன்றவப்பனே என்குறைகளார்க்குரைப்பேன், ஈசனே சிவகாமிநேசனே யெனையீன்றதில்லைவாழ் நடராஜனே. க

மானாட மழுவாட மதியாட புனலாட மங்கைசிவகாமியாட, மாலாடநூலாட மறையாடதிரையாட மறைதந்தபிரம்மனாடகோனாட வானுலகு கூட்டமெல்லாமாட குஞ்சரமுகத்தனாட, குண்டலமிரண்டாட தண்டைபுலியுடையாட குழந்தைமுருகேசனாட ஞானசம்பந்தரொடு யிந்திரர்பதினெட்டுமுனி யஷ்டபாலகருமாட, நரைதும்பை யறுகாடநந்திவாகனமாட நாட்டியப்பெண்களாட, வினையோட வுனைபாட யெனைநாடியிதுவேளை விருதோடு ஆடிவருவாய், ஈசனே சிவகாமிநேசனே யெனையீன்ற தில்லைவாழ் நடராஜனே. உ

கடலென்றபுவிமீதில் அலையென்றவுருகொண்டு கனவென்றவாழ்வைநம்பி, காற்றென்றமூவாசை மாறுதச்சுழலிலே கட்டுண்டு நித்தநித்தம், உடலென்றகும்பிக்கு உணவென்றயிரைதேடி ஓயாமலிரவுபகலும் உண்டுண்டுறங்குவதை கண்டதேயல்லாதுஒரு பயனடைந்திலேனை, தடமென்றமிடிகரையில் பந்தபாசங்களெனும் தாபரப்பின்னலிட்டு, தாயென்றுசேயென்று நீயென்று நானென்று தமியேனையிவ்வண்ணமாய், இடையென்றுகடைநின்றுயேனென்று கேளாதிருப்பதுன்னழகாகுமோ ஈசனேசிவகாமிநேசனே யெனையீன்ற தில்லைவாழ்நடராஜனே. ங

பம்புசூனியமல்ல வைப்பல்லமாரணந் தம்பனம்வசியமல்ல, பாதாளவஞ்சனம் பரகாயபிரவேசமதுவல்ல ஜாலமல்ல, அம்புகுண்டுகள் விலகமொழியு மந்திரமல்ல ஆகாயகுளிகையல்ல, அன்போடுசெய்கின்ற வாதமோடிகளல்ல அரியமோகனமுமல்ல, கும்

பமுனி மச்சமுனி சட்டமுனிபிர்ம்மரிஷி கொங்கணர் புலிப்பாணியும், கோரக்கர்வள்ளுவர்போசமுனி யிவரெலாங்கூறிடும் வயித்தியமல்ல, எம்மனதுன் னடிவிட்டு நீங்காதநிலை நிற்கவே துளவுபுகலவருவாய், ஈசனே சிவகாமிநேசனே யெனையீன்ற தில்லைவாழ் நடராஜனே. ௪

நொந்துவந்தேனென்று ஆயிரஞ்சொல்லியும் செவியென்ன மந்தமுண்டோ நட்பநெறியறியாத பிள்ளையை பெற்றபின் நோக்காததந்தையுண்டோ, சந்ததமுந் தஞ்சமென்றடிமையப் பிடித்தபின் தளராதநெஞ்சமுண்டோ தந்திமுகனறுமுகன் இருபிள்ளையில்லையோ தந்தைநீ மலடுதானோ, விந்தையுஞ்சாலமும் உன்னிடமிருக்குதே வினையொன்று மறிகிலேனே- வேதமும் சாஸ்திரமும் உன்னையே புகழுதே வேடிக்கையிதுவல்லவோ, யிந்தவுலகீரேழு மேனளித்தாய்சொல்லு மினியுன்னைவிடுவதில்லை, ஈசனே சிவகாமிநேசனே யெனையீன்ற தில்லைவாழ் நடராஜனே. ௫

வழிகண்டு வுன்னடியைத் துதியாதபோதிலும் வாஞ்சையில்லாதபோதும் வாலாயமாய்க்கோயில் சுற்றாதபோதிலும்வஞ்சமே செய்தபோதும், மொழியெசனை மொகனையில்லாமலே பாடினும் மூர்க்கனேன்முகடாகிலும் மோசமேசெய்யினும் தேசமேகவரினும் முழுகாமியேயாகிலும், பழியெனக்கல்லவே தாய்தந்தைக்கல்லவோ பார்த்தவர்கள் சொல்வார்களோ பாரறிய மனைவிக்கிபாதியுடலீந்தநீ பாலனைக்கார்க்கொணுதோ, எழில்பெரிய அண்டங்களடுக்காயமைத்தநீ யென்குறைகள் தீர்த்தல்பெரிதோ, ஈசனே சிவகாமிநேசனே யெனையீன்ற தில்லைவாழ் நடராஜனே. ௬

அன்னை தந்தைகளென்னை ஈன்றதற்கழுவனோ அறிவிலாதற்கழுவனோ-அல்லாமல் நான்முகன் தன்னையேனோவனோ ஆசைமூன்றுக்கழுவனோ, முன்பிறப்பென்னவினை செய்தனென்றழுவனோ மூடவறிவுக்கழுவனோ-முன்னிலென் வினைவந்து மூளுமென்றழுவனோ முத்திவருமென் றுணர்வனோ, தன்னைநொந்தழுவனோ வுன்னைநொந்தழுவனோ தரித்திரதிசைக் கழுவனோ- இன்னமென்னப் பிறவிவருமோ வென்றழுவனோ யெல்லாமுரைக்கவருவாய், ஈசனே சிவகாமிநேசனே யெனையீன்ற தில்லைவாழ் நடராஜனே. ௭

காயாமுன்மரமீது பூபிஞ்சறுத்தனோ கன்னியர்கள் பழிகொண்டனோ கடனென்று பொருள்பறித்தே வயறெறித்தனோ கிளைவழியில் முள்ளிட்டனோ, தாயாருடன்பிறவிக்கென்ன வினைசெய்தனோ தந்தபொருளிலையென்றனோ- தானென்றுகெர்வித்து கொலைகளவுசெய்தனோ தபசிகளையேசினேனோ, வாயாரப்பொய்சொல்லி வீண்பொருள்பறித்தனோ- வாணரைப்பழித்திட்டேனோ வட

வுபோலேபிறரைச் சேர்க்கடித்தனேவந்தபின் பென்செய்தனே, யீயாதலோபியென்றே பெயரெடுத்தனே யெல்லாம்பொருத்தா ளுவாய் ஈசனே சிவகாமிநேசனே யெனையீன்ற தில்லைவாழ் நடரா ஜனே. அ

தாயாரிருந்தென்ன தந்தையுமிருந்தென்ன தன்பிறவியுறவு கோடி-தனமலைகுவித்தென்ன கனபெயரெடுத்தென்ன தாரணியை யாண்டுமென்ன, சேயர்களிருந்தென்ன குருவாய் திரிந்தென்ன சிஷர்களிருந்துமென்ன சித்துபலகற்றென்ன நித்தமும் விரதங் கள்செய்தென்ன நதிகளெலாம், ஓயாதுமூழ்கினும் என்னபலன் எமனோலையொன்றைக் கண்டுத்தடுக்க உதவுமோ யிதுவெலாம் சந் தை உறவென்றுதான் உன்னிருபதம்பிடித்தேன், யார்மீது உன் மனமிருந்தாலுடன் கடைக்கண்பார்வை யதுபோதுமே ஈசனே சிவகாமிநேசனே யெனையீன்ற தில்லைவாழ் நடராஜனே. கூ

இன்னமுஞ்சொல்லவோ உன்மனங்கல்லோ இரும்போ பெ ரும்பாரையோ- இருசெவியு மந்தமோகேளாது அந்தமோ இது வுனக்சழகுதானே, யென்னன்னை மோகமே யிதுவென்ன சாப மோ யிதுவுமதுன்செய்கைதானே-யிருபிள்ளை தாபமோயார்மீது கோபமோ ஆனாலும்நான்விடுவனோ, உன்னைவிட் டெங்குசென்று லும்விழ லாவனுன் உனையடுத்துங்கெடுவனோ- ஓகோவிதுன்குற்ற மெனக்குற்றமொன்றுமிலை யுற்றுபார்பெற்றவையா-என்குற்றமா யினும் உன்குற்றமாயினுமினியருளளிக் கினைவாய் ஈசனே சிவகா மிநேசனே யெனையீன்ற தில்லைவாழ் நடராஜனே. கo

சனிராகுகேதுபுதன் சுக்கிரன்செவ்வாய்க்குருச் சந்திரன் சூரியனிவரை-சற்றெனக்குள்ளாக்கி ராசிபனிரெண்டையுஞ் சம மாய்கிறுத்தியுடனே, பனியொத்த நட்சத்திரங்க ளிருபத்தேழும் பக்குவப்படுத்திபின்னால்-பகர்கின்ற கரணங்கள்பதினொன்றையும் வெட்டி பலரையும்அதட்டி யென்முன், கனிபோலவே பேசிகெடு கினைகினைக்கின்ற கசடர்களையும் கசக்கி கர்த்தனின்தொண்டராம் தொண்டர்க்குத் தொண்டரின் தொண்டர்கள் தொழும்பனைக்கி, இனியவளமருவுசிறுமணவை முனிசாமி யெனைபாள்வதினியுன் கடன்காண் ஈசனே சிவகாமிநேசனே யெனையீன்ற தில்லைவாழ் நடராஜனே.

திருச்சிற்றம்பலம்.

---



உ

கடவுள் துணை.

# கண்டசுத்தி.

---

## விருத்தம்.

பணந்தேடியாரிருந்தா ருலகமீதில்
பாவிதிரியோதிரனும் பாட்டனாரும்
குணமான துரோணரவர் கருணன்பூரி
சூரியதோர்தேசத்தரசன் சகுனிசல்லி
பிணமானாரர்ச்சுனன்கை யம்பினாலே
பெண்டிரும்பணங்காசும் பிறகேபோச்சா
மணமானவாழ்வுபொரு ளாடுமாடும்
மாய்கையடாமாய்கையடா மதித்துப்பாரே.

ஆலித்தெழுந்து அபிராமன்மீது அனங்கனுற்றாள்
பாலிக்கும்போது யென்செய்குவாள் பஞ்சபாணனம்பு
தாலிக்குமேபழுந் தட்டிற்குந் தொண்ணூத்தாரடி தழும்புபட
கூலிக்குமேவெட்டும் பெருமானிரவிகுலோத்துங்கனே.

கரக்கண்டத்தொனிக் கஞ்சியமான் கருங்கங்குலிலே
திரண்டவெள்ளத்தின் பிணமீதுசென்றனள் சேர்ந்தவளை
அரண்டஇன்பங்கொண்டு மீளக்கருபற்றி அங்கொருசால்
குறண்டகண்ணத்தி லுதைத்தனள்கானங் குலோத்துங்கனே.

கடிமலர்ப்பந்துகொண்டு கணவனுங்கடியக்காய்ந்து
இடியெனச்சோர்ந்துவீழ்ந்தா ளனமுலைக் கொடியனல்லாள்
முடியதுமுடவன்கையால் முன்பதாய்ச் சுத்திக்கொண்டு
அடிபடக்கண்டதெல்லா மம்பலத்ததிசயந்தான்.

வாரிடைபிடிங்கிழுட்டி வளரிளங்கொங்கைநல்லாள்
நீர்விழிகண்கள்சோர நேரிழையெரித்துச்சென்றும்
மார்சிகைதன்னைப்பற்றி மற்றவனடியும்பட்டு
ஆர்பறத்தழுவிக்கொண்ட தம்பலத்ததிசயந்தான்.

கம்பத்தூணாட்டி கனகவிளக்கெரிய
செம்பொ னமளியின்மேல் சேராமல்—செம்புருள

புல்லூறல்மாறி புகைச்சல் புகைந்தனவே
கல்லுருள முத்துருளக் கண்டு.

சொன்னசொற்கேளாவேந்தன் துடியிடைமடவாள்கையால்
மன்னவன்கழுத்தருக்க மனமதுதுணிந்துவிட்டான்
தென்னிலவேலனுரே திருத்தணிமலையில்வாழும்
அண்ணலும்நீரும்வந்து யென் அரசனையெழுப்பிட்டீரே.

ஜாதிமார்க்கந்தவிர்ந்து கூஷணகவுனின்ற தாழ்வினை தனக்க ழுவனே தடம்பெரிய மைந்தனைத் தனியவைத்தே வேந்தன்தலை கொய்ததற்கழுவனே, ஆதிநாள் தாலிதந் தாரியன்றனைக்கொன்ற அரசனுக்கே யழுவனே, அக்கானகம் புகுந்து மருமன்னர் ஊர் வேசி யானதற்கே யழுவனே, வேதநூல் முறையிலாமைந்தனைத் தழுவியே வெந்தணலுக்கேயழுவனே, வெள்ளம்பிறந்துமே தள்ளாடி இடையரிடம் விட்டதற்கே யழுவனே, நீதியா யுலகத்தை ஒருகுடைவிலாள்கின்ற நீதிமகாராஜபோஜனே, இப்பனிண்ண மாய்விர்க்கவந்த விலமோர்தனக்கழுவனே.

அன்றுதா னன்னையுந் தந்தையுங் கூடியே அனுபவிப்பதுஞ் சஞ்சலம்- அங்கொருஜலத்துளி தரிப்பதுஞ்சஞ்சலஞ் தரித்துப் பின் ஆளானதுஞ் சஞ்சலம் பெண்ணையும் மண்ணையும் விரும்பு வதும் சஞ்சலம் பெண்டிலா திருப்பதுஞ்சஞ்சலம் பெற்றபிள்ளையில் லாதிருப்பதுஞ் சஞ்சலம், பெற்றபின்புஞ் சஞ்சலம், எண்ணிய திரவியந்தேடியுஞ் சஞ்சலம் தேடாதிருப்பதுஞ் சஞ்சலம் என்று தான் சஞ்சலம் ஒழிந்துபான் உன்திருவடிக்காளாவனே விண்ண வர் தொழுங்கருணை வள்ளிதெய்வானையுடன் வாழு மயிலேறியே வரவேண்டு மெர்தனருகே.

தெலுங்கருழிசென்று தமிழ்பாடினல் மாகுஅரவம்தெலியதோ ய்பிச்சிவாடா என்பராம், நீவுசெப்பேதி கிந்தலோருள்வேசிறிப்பி னட்டுன்னதிசெப்பஒத்தோஎன்பராம், அலங்கொடுதுலுக்கர்தாம் அரவி அர்ச்சானே துமாரிபாஞ்சோ தென்பராம், துலங்கு கன் னடர்கள்தாம் குங்குமத்தோதுமது தெளிதல்லவோ ஒந்து கா சாருகொட்டா சுனனிவோ ஒகென்பராம், நிலையானபுவியாளும் இங்கிலீஷ்காரரும் டமிள் னோ கோ வென்பராம், இவரெலாம் மித்தமிழ்க்குரிய ராவரோ சொல்லுமென் அற்புதநடராஜனே.

திருச்சிற்றம்பலம்.

---

உ

ஸ்ரீராமஜெயம்.

# இராஜகோபாலமாலை

இஃது,

சிறுமணவூர்,

முனிசாமிமுதலியாரவர்களது,




சென்னை நகர,

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1904.

சோபகிருதுளு தைமீ

ஸ்ரீராமஜெயம்.

# இராஜகோபாலமாலை.

## காப்பு.

பொன்மணிமருவிபாயும் புவியுளோரெவருமேத்து
நன்மைசேர்தேவாயோங்கு ராஜகோபாலன்மீது
மன் னுபாமாலையோத மழவிடைப்பெம்மான்றந்த
கன்னமாமதத்துநாதன் கழலிணைப்பணிகுவாமால்.

## நூல்.

தண்டமாமலரின்தேனை தனித்தனிவனத்தில்வாழும்
வண்டதையறியுமல்லால் மண்டூகமறிந்திடாது
கண்டதுகடந்துபோகுங் கசடர்க்குநல்லார்பொல்லார்
இரண்டதுதெரியாதையா இராஜகோபாலமாலே. (க)

பூத்திடுமலரின்வாசம் புனல்வண்டேயறியுமல்லால்
எத்ததோர்கசடன்வண்டே பிதுமணமறிந்திடாதே
தோத்திரமறியுமல்லால் துர்க்குணம்படைத்தோர்செய்கை
நாய்த்தலையீயோடொக்கு மிராஜகோபாலமாலே. (உ)

பேய்க்கொமட்டிக்காய்க்குப் பேணியைங்காயமிட்டே
ஆக்கினாலுங்கசக்கு மதுருசிகுணமுண்டாமோ
போக்குநீக்கறியாமாந்தர் புல்லருக்கறிவுசொன்னால்
நாய்க்குணம்போகாதையா ராஜகோபாலமாலே. (ங)

மூப்பாலுநாகந்தன்னை முலையமுதூட்டிநன்றாய்
ஒப்புடன்வளர்த்திட்டாலு மோங்கியவிஷம்போகாதே
அற்புதந்தன்னைநல்லோ ரன்புவைத்தாலுமாந்தர்
நற்பதந்தெரியாதையா ராஜகோபாலமாலே. (ச)

வல்லசெந்தேனினோடே வாகுடன்வேப்பஞ்சாற்றை
அல்லதுகலந்திட்டாலு மதனதுகசப்பறாது
புல்லறிவாளர்க்கின்பப் புத்தியைப்போதித்தாலு
நல்லவராகாரையா ராஜகோபாலமாலே. (ரு)

கடலதினளவுநீளங் காணவேயளவுகண்டு
அளவுடன் துகைசொன்னாலு மணிவரைநிரைகண்டாலு
மடபதிதனக்குவாய்த்த மங்கையர்மன்தில்வஞ்ச
நடவடியறியொண்ணாதே ராஜகோபாலமாலே. (௬)

அம்புபோல்நீண்டலாலு மரவத்தைநம்பினாலும்
கொம்பினாற்குலையதாக்குங் குஞ்சரந்தனைவென்றாலும்
வம்புசேர்மொழியாளந்த மாதர்தன்சொல்லைத்தானே
நம்பினல்மோசமையா ராஜகோபாலமாலே. (௭)

கூட்டினாற்குறைந்துபோகுங் குறைந்ததுநிறைந்துபோகும்
ஆட்டுடைவிதியின்கூற்றை அறிந்திடாதிருக்குமாந்தர்
தாட்டிகம்பேச்சேயல்லால் தங்களைப்பழிப்பதெல்லாம்
ராட்டினச்சுற்றேயொக்கும் ராஜகோபாலமாலே. (௮)

கயந்தனிற்றுள்ளுமீன்கள் கரைதனில்வீழ்ந்தாற்காயும்
உயர்ந்ததோர்மீன்களோக முலுத்தர்கள்தம்மோடொக்கும்
பயந்ததோர்காரியங்கள் பார்க்கும்போதறிந்துசொல்வார்
நயந்துபின்னேறவேண்டும் ராஜகோபாலமாலே. (௯)

எருக்கலர்கொழுத்துமீறி யேகமாய்ப்பூத்திட்டாலு
மருக்கொழுந்ததற்குண்டான வாசமுங்குணமுமுண்டோ
பிரத்திபர்க்குதவிசெய்யிற் பேசுமற்கீர்த்தியாகும்
நரர்க்கினியறிவுவேண்டும் ராஜகோபாலமாலே. (௰)

இன்பமில்லாதபேர்க ளிடத்துசஞ்சாரமாகிற்
றென்முகங்குணமாமாந்தர் திருமுகங்கண்டாற்போதும்
அன்புடனறிவில்லாத வரிவையரமுதிட்டாலும்
நம்பவுமாகாதையா ராஜகோபாலமாலே. (௰௧)

மேட்டினில்விரைத்தசெந்நெல் விளைந்ததுகதிருவாங்கிச்
சூட்டின்மேற்போரேறாது துற்சனர்சேதியெல்லாம்
வீட்டிமையில்லாச்சும்மா வெறும்புலுக்காகுஞ்சேற்றில்
நாட்டியகம்பமாகும் ராஜகோபாலமாலே. (௰௨)

தண்டனையில்லாவேலை சிறுமாந்தர்வாட்டைதானுங்
கொண்டவர்க்கடங்காப்பெண்டீர் கூர்மையில்லாதபிள்ளை
வண்டர்கவிணக்மெல்லாம் வாறுணையில்லாசேர்க்கும்
நண்டதுவளாந்தூரமி ராஜகோபாலமாலே. (௰௩)

மட்டியாயிருந்தானந்த வருத்தமில்லாரைவைத்துத்
தட்டியுந்தட்டிச்சொல்லாத் தானதுமுழுதும்போச்சுக்
கெட்டிசாற்புத்தியில்லாக் கிரியைதான்கட்டுஞ்சிந்தில்
வட்டியும்போலேசேரும் ராஜகோபாலமாலே. (௰௪)

பட்டதுகிழிந்ததானற் பாணருக்காகும்வேந்தர்
கெட்டவர்மெலிந்தாராகிற் கீர்த்தியுப்புகழும்போமோ
தட்டதுபட்டுக்குப்பை தரணியிற்புதைத்திட்டாலும்
ரெட்டனவொளிபோகாது ராஜகோபாலமாலே. (௰௫)

உணவர்கள்சென்மங்கொண்டே உறத்துடன்பருத்துமீறில்
மணமெனத்தெருவினின்று பேசலாஞ்சூத்தவீரன்
குணமெனக்களரிக்கேற்ற கூத்தாடிச்சிலம்பமெல்லாம்
ரணகளந்தனக்கேறாதே ராஜகோபாலமாலே. (௰௬)

வேதமில்லாதபார்ப்பான் வித்தையில்லாதபிள்ளை
சாதமில்லாதபூசை தந்தியில்லாதவீணை
நீதமில்லாதவூரு நேரிமையில்லாதவீடு
நாதமில்லாதசங்கென்றி ராஜகோபாலமாலே. (௰௭)

கூடியும்படையில்லாத கொடும்பகைமுடியும்போது
தேடியுஞ்சமரிலாண்மை செய்தவனொருவனுக்கு
கோடியிற்கோடிமீன்கள் குதித்துவிண்ணுதித்திட்டாலு
நாடியமதிக்கொப்பாமோ ராஜகோபாலமாலே. (௰௮)

நீடியவிதியில்லாமல் நிறைந்துயிர்போகும்போதே
ஆடியவாவிதூங்கயன் விதிக்கஞ்சிபோக
ஓடிப்போய்பிணம்போல்மாண்டா லுயிரதுபோகும்போது
நாடியவிதிவிடாதே ராஜகோபாலமாலே. (௰௯)

மேகத்தாற்சிந்தைநொந்து மெய்சலித்திருந்தாலென்ன
மோகத்தின்படியல்லாம லொன்றும்வேறாகாதையா
வாகத்தின்படிதானந்த வாயுலட்சணமேசெய்யில்
நாகத்தின்கூறுங்கண்டீர் ராஜகோபாலமாலே. (௨௰)

முன்னொருவேடன்றானும் முடுகவேவேங்கைக்கஞ்சி
உன்னியேமரத்திலேற வுறுதியாய்க்குரங்குக்காக்கத்
தின்னவேகுரங்கையெய்தூந் தீவினைக்கொப்பாய்ச்செய்த
நன்மையேபாவங்கண்டீர் ராஜகோபாலமாலே. (௨௧)

கற்புள்ளமாதர்க்கன்பு கணவனேயழகுமிக்க
விற்பனம்வினையமின்னுள் வேசியர்க்கழகுமஞ்சள்
அற்பருக்கழகுபொய்தா னரசர்க்குக்கேள்விநீதி
னற்புவிக்கழகுமாரி ராஜகோபாலமாலே. (௨௨)

தின்மையேபுரிந்தவீரன் திருதராட்சதன்குமாரன்
பொன்மயன்சிறந்தசெங்கோல் புகழ்ந்துநீபொய்யேபேசி
தன்மமேஜெயமென்றெண்ணித் தரணியிற்றவமேசெய்தால்
நன்மைக்கோரழிவுமில்லை ராஜகோபாலமாலே. (௨௩)

ஆட்டுக்குளழகுபந்த மரிவையர்க்கழகுகொங்கை
வீட்டுக்குளழகுதீபம் வீரத்துக்கழகுயானை
பாட்டுக்குளழகுசந்தம் பட்சிகட்கழகுகிள்ளை
நாட்டுக்குளழகுமாரி ராஜகோபாலமாலே. (௨௪)

உற்பனமாகநல்ல உத்தமர்மொழியுங்கல்வி
அற்பருக்குறைசெய்தாலு மவரவர்குணமேகாட்டும்
வெற்புளநிலத்திற்சம்பா விரைதனைதெளித்திட்டாலும்
நற்பயிர்விளைவாகாதே ராஜகோபாலமாலே. (௨௫)

சமையமாயிருக்குப்பாரி சாந்தமாயுடலுமொன்ருய்
கமையுடனிருக்கும்போது கணவனுக்குயிர்கண்ணுகும்
நிமைவிழிசிமிட்டுமுன்னே நிறைந்துயிர்போகும்போது
எமனுடன்வாதுசெய்வோம் ராஜகோபாலமாலே. (௨௬)

பொக்கிஷப்பொருள்பதார்த்தம் பொற்பணியானசொர்னங்
கக்கிஷமீயார்கையில் கனக்கவேயிருந்தாலென்ன
மிக்கவுநிலத்தேன்சிந்தி வித்துடனரகில்விழ்ந்தால்
நக்கவோயெடுக்கவோதான் ராஜகோபாலமாலே. (௨௭)

தானெனநின்ருன்புத்தன் சமணர்கள்மதத்தைத்தானே
மரன்புலிதரித்தோன்மைந்தன் வான்கழுவேற்றிவிட்டான்
வானமும்புவியைத்தாங்க வல்லமையிருந்தாலுந்தா
ஞனெனுமாண்மையாமோ ராஜகோபாலமாலே. (௨௮)

ஆச்சுதேபொருள்நமக்கு வாமெனத்தேடிவைத்தால்
தேச்சுதுவிடுநாள்வந்தால் சிந்திடாக்காப்பதுண்டோ
நீச்செழுங்கடலுக்குள்ளே நிலமைதாளிலங்கையென்ற
ராக்ஷதன்வாழ்வுமெங்கே ராஜகோபாலமாலே. (௨௯)

பொக்கிஷம்பொருளுந்தேடி புதைத்துப்பின்றுனுண்ணுமல்
எக்கியவுடல்களோடே யிறந்துண்ணுமாந்தர்வாழ்க்கை
திக்கெங்கும்மாரிபெய்து தெருவெல்லாம்பெருகியோட
நக்கியகுக்கலொக்கும் ராஜகோபாலமாலே. (௯௰)

வாயதுமட்டுமிஞ்சி வாகுடன்பெரியோர்தம்மை
நேயமாயிகழ்ச்சிபேச நெறியுடனறிவுமில்லை
காய்கிழவெயிலைப்பார்த்துக் காரியேதுப்பிக்கொள்ள
நாயதுகுலத்தோடொக்கும் ராஜகோபாலமாலே. (௯க)

துர்க்குணம்படைத்தவீரர் துரைத்தனம்செய்தாலென்ன
தெற்கிசையழித்திட்டாலுஞ் செவிடனுக்காகாச்சங்கு
மிக்கவேயறிவுநீதம் விசாரணையில்லாக்கேள்வி
நற்கணைவிசையோடொக்கும் ராஜகோபாலமாலே. (௯உ)

வாயினில்வந்தசொல்லை மதலைச்சொல்லாமென்றெண்ணி
மாயவன்பேரைக்கொண்டு மனதினில்தியங்கவேண்டாந்
தாயிலாப்பிள்ளைதன்னை தடவியேதான்வளர்த்தால்
நாயகிநாதன்கேட்பான் ராஜகோபாலமாலே. (௯௩)

குருவையுமிகழ்ந்தசீஷன் கொம்பனையழித்தமாது
பரியதோர்பெண்களெல்லாம் பட்சமாயிருக்கும்போது
கிரியதோராஜரெல்லாங் கேள்வியில்லாதவேந்தர்
நரிதுரைத்தனத்தோடொக்கும் ராஜகோபாலமாலே. (௯ச)

கற்றவர்தங்கள்முன்னே கல்வியில்லாதமூடர்
எத்தனைபடித்திட்டாலு மெதிர்த்துரைமொழியமாட்டார
சத்தமிட்டதட்டகின்று தாய்ப்புலிமுன்னேகாலில்
ரத்தினஞ்செழிக்குமோதான் ராஜகோபாலமாலே. (௯௫)

மேருவைச்சார்ந்தகாகம் விரைந்துபொன்னிறமாய்க்காணுஞ்
சார்தனிலிருந்தபேர்க்கு தாழ்வுவோர்நாளுமில்லை
பார்தனில்மலர்கள்சூட்ட பரிவுடன்கிழித்தவாழை
நார்தனைத்தள்ளப்போமோ ராஜகோபாலமாலே. (௯சா)

இடந்தனிலிருந்தபேர்க்கு மிடுக்கமேசெய்துவந்தால்
அடந்தனிலிடுக்கஞ்செய்தா லதுபழிவீண்போகாது
துடந்துபின்வருமென்றெண்ணி தூக்கியோடினவர்தாலும்
நடந்தகாலிரடுமையா ராஜகோபாலமாலே. (௯எ)

இன்மைக்குவாழ்வுந்தாழ்வு மிருக்குமென்றெண்ணவேண்டும்
கன்மிக்குப்புண்ணியஞ்சேர் கலந்துதானிருக்குமென்றேன்
தின்மைக்குச்சேவித்தமேளந் திரும்பியும்வாசல்வந்து
நன்மைக்குஞ்சேவிக்குமையா ராஜகோபாலமாலே. (௩அ)

ஆக்ஷியாய்கற்றகல்வி யானதோர்சபையில்வந்து
கோக்ஷியாய்ப்பேசவேண்டாங் கோழிக்குக்கட்டுங்கெச்சை
காக்ஷியாய்க்கருடன்காலில் கட்டியகெச்சைதானும்
ராச்சியமெல்லாங்காண்பார் ராஜகோபாலமாலே. (௩௯)

பூணுமோபணிகள்தோண பொற்குடமொருபால்கட்டி
வேணதோரகிலம்விட்டு வெளியினில்வந்தமாதர்
சாணியுங்கூடயொக்கும் சவாதினுத்திரிவோன்பின்னு
நாணந்தான் அவர்கட்கேது ராஜகோபாலமாலே. (௪௰)

காரிருகுழைகள்கோதி கயல்விழிமருட்டிக்கொஞ்சி
வீரியம்மிகவும்பேசி யேசவும்கணவன்றன்னை
தீருமைபாகச்செய்யான் தினந்தினம்பூசைசெய்யும்
நாரியற்கேதுபத்தம் ராஜகோபாலமாலே. (௪௧)

புலனொடுநூல்களாய்ந்து புகலுவார்புல்லோராய்ந்து
பிலனொடுவிருந்தமூடர் பேசினாலாவதென்ன
நிலமதுசித்திரங்கள் நிலைபெறவெழுதிவைத்தால்
நலமுடனறியுமோசொல் ராஜகோபாலமாலே. (௪௨)

தம்பியேயென்பாள்பின்னும் தலைமயிர்தனைவிரித்து
வெம்புவாள்விழுவாள்மிஞ்சி விதவிதஞ்செய்வாள்கோபி
வம்புகள்செய்வாள்நல்ல மன்னனென்றுறுதிச்சொல்வாள்
நம்புவார்க்கேதுசுத்தம் ராஜகோபாலமாலே. (௪௩)

மயம்பெறபணிகள்பூண்டால் மாமுகத்தழகேயாகும்
செயம்பணிக்கேதுமுண்டோ சித்திரம்சுவரில்வைத்து
தயவுடன்பார்த்தபேர்க்கு தானதுதுலக்கமல்லால்
நயமதுதெரியுமோசொல் ராஜகோபாலமாலே. (௪௪)

சொல்லினுக்கடங்காமாதர் துலக்குவார்குணத்தினாலே
அல்லதுமில்லாமாதர் அவர்நிலையுலகில்போமோ
பல்லதுகாட்டினாலும் பகைத்துச்சந்திரனைப்பார்க்கும்
நல்லதுமறியுமோசொல் ராஜகோபாலமாலே. (௪௫)

அச்சுதன்முடியின்மீதி லானபூமாலையாகத்
தச்சதோர்நாருக்கொப்பாய் தமிழையாணுரைத்தசொல்லே
கொச்சமேசொல்லவேண்டாங் கூறியபுலவோர்பார்த்து
ரக்ஷகனருளவேண்டும் ராஜகோபாலமாலே. (சுசு)

## வாழி.

ஞாலமெண்டிசையுமேத்து ராஜகோபலன்மீது
பாலனியான்புரிவாய்ச்சொன்ன பண்புறுமாலேதன்னே
சீலமாய்வாசித்தோருஞ் செவியுறக்கேட்டபேருங்
காலமுள்ளளவுநீடிக் களிப்புடன்வாழ்வர்தானே.

ராஜகோபாலமாலே நாற்பதும்வாழியென்று
ஓசையாய்படித்தபேரும் உகந்துபார்த்தெழுதுவோரும்
நேசமாய்கேட்டபேரும் நிச்சயமிவர்கட்கெல்லாம்
வாசவன்பதவிபெற்று வாழ்வுடனிருப்பர்தானே.

இராஜகோபாலமாலே
முற்றுப்பெற்றது.



உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

# திருப்போரூர் மாலை.

கி. சிங்காரவேலுமுதலியாரால்
இயற்றப்பட்டு,
அச்சிட்டிருந்த பிரதிக்கிணங்க,

சிறுமணவூர்,

முனிசாமி முதலியாரவர்களால்
பரிசோதிக்கப்பட்டு,




தமது
சென்னை சூளை,
சிவகாமிவிலாசஅச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1904.

இதன் விலை அணு 1.

# விளம்பரம்.



கனவான்களே! சென்னை சூளை, சட்டண்ண நாய்க்கன் வீதி, 12-வது நெம்பர் வீட்டில் ஸ்தாபித்திருக்கும் சிறுமணவூர்-முனிசாமி முதலியார் அவர்களது சிவகாமி விலாச அச்சுக்கூடத்தில் ஸ்தாபித்திருக்கும் வி. பி. கம்பெனியில் தமிழ், தெலுங்கு, கிரந்தம், துலுக்கு முதலிய புஸ்தகதினுசுகளும், ஸ்மார்த்தவைணவர்களுக்கு வேண்டும் புஸ்தகங்களும், பால்யர்களுக்கு வேண்டும் காலேஜி புஸ்தகங்களும், உத்தியோகஸ்தர்களுக்கு வேண்டும் ஆக்டுபுஸ்தகங்களும், இசுலாமானவர்களுக்கு வேண்டும் தமிழ்யெழுத்தில் துலுக்குபுஸ்தகங்களும், காவலர், பாவலர், நாவலர் யாவருக்கும் வேண்டும் இலக்கணம், இலக்கியம், புராணம், கதை, அம்மானை, நாடகம், விலாசம், கீர்த்தனை, அந்தாதி, கலம்பகம், கோவை, தூது, வெண்பா, சதகம்,-கும்மியென்னும் அனேகதினுசுகளும், அத்வைதசாஸ்திரங்களும், ஆறுமுகநாவலர், புஷ்பரதச்செட்டியார், சை-இரத்தினசெட்டியார் முதலியவர்களுடைய அச்சுக்கூடங்களிற் பதிப்பித்த உயர்ந்த புஸ்தகதினுசுகளும், வியாதிகள் சொஸ்தப்படும்படி தக்க அவிழ்தங்களும், அவரவர் பேர்களுக்குத்தக்கதாய் ரொம்பவும் அழகான வேலைகள்செய்த ரப்பர்சீல்களும், ஜெர்மன்சில்வரால் செய்த நகைதினுசுகளும், சாமான்தினுசுகளும், நல்ல வாசனைபொருந்தியதாயும், நாள்படவிருந்தால் கெடாமலிருக்கும்படியாயுமுள்ள அத்தர்தினுசுகளும், பூசுபில்லைகளும், வாசனைவத்திகள்முதலிய இன்னும் அனேகவிதசாமான்களும்தயாராயிருப்பதால் வேணடியவர்கள் அடியிற்கண்ட எனது மேல் விலாசத்திற்கு எழுதினால் உடனே வி. பி. தபாலில் அனுப்பப்படும். என்னுடைய கேட்லாக்கு வேண்டுபவர்கள் அரையணா ஸ்டாம்பு அனுப்பிவித்தால் அனுப்பப்படும்.

ஒவ்வொருவரும் எங்களுக்கு விஷயந்தெரியும்படி தெளிவாய் ஒவ்வொருமுறையிலும் தங்கள் பெயர், ஊர், இருப்பிடம், போஸ்டாபீசு, தாலூக்கா, ஜில்லா முதலியவைகளோடே விலாசத்தைக் கட்டாயம் எழுதவேண்டும்.

இப்படிக்கு,

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்,

நெ. 12. சட்டண்ண நாய்க்கன் தெருவு,

சூளை போஸ்டாபீசு மதராஸ்.

உ

சிவமயம்.

வெற்றிவேலுற்றதுணை.

# திருப்போரூர்மாலை.

## நேரிசை வெண்பா.

### காப்பு.

### குணாலய விநாயகர்.

சீரார் திருப்போரூர்ச் செவ்வேளைப் போற்றிநெஞ்சே
காராரு மாகுலத்தின் கட்டறவே— ஏரார்
குணாலயமாங் குஞ்சரத்தின் கோகநகத் தாளைக்
குணாலயத்தே நித்தங் குறி.

### வேம்படி விநாயகர்.

சித்திதரும் போரூரன் சீரருளா லாகுலமென்
சித்தமதை விட்டகலத் தீருமே— நித்தநித்தம்
வேம்பி னடிமுளைத்த வேழத்தை யன்பெனுமோர்
தாம்பிற் பிணிக்கவே தான்.

### பிரசந்ந விநாயகர்.

சிந்தைதனிற் போரூரன் சீரடியைச் சிந்தித்துப்
பந்தமல மாகுலமும் பட்டொழிய—வந்து
வரமருளு நெஞ்சேயவ் வானவர்க்கு மெட்டாப்
பிரசந்ந குஞ்சரத்தைப் பேண்.

### தலம்.

சீரார் பரங்குன்று சீரலைவா யேரகமொண்
பேராவி னன்குடியே பேசரிய—காராரும்
குன்றுதோ றாடல் குளிர்சோலை மாமலையென்
றென்றும் போரூரற் கிடம்.

## நூல்.

மாமணி யிமைக்கு மகுடங்க ளாறுடையான்
தாமமணி மார்பன்ற யாசலதி—வாம
முருகன் போரூரின் முருகனெனச் சொல்லக்
கருகியசில் லாகுலங்கள் காண். (க)

பாகார் கவியாற் பழவடிய ரீராறு
வாகாவென வுரைத்தும் வாழ்த்தியும்வை—போகருகா
என்றுரைத்தார் போரூரா வென்றுரைத்தே னாகுலங்கள்
இன்றொழித்தே னேசிலயா னிங்கு. (உ)

தித்திக்குந் தேனே சிவானந்தத் தெள்ளமுதே
முத்திதரும் போரூர் முருகோனே—பத்தியிலாப்
பொல்லா வினையேனைப் போராடு மாகுலங்கள்
எல்லா மொழிந்தே னிலை. (ஙூ)

கன்னி யிருவோர் கனக வரைக்குயந்தோய்
பன்னிருதோட் போரூரன் பாதமலர்—சென்னி
அணிந்தே னடியனைவிட் டாகுலங்கள் சில்ல
பணிந்துவிடை கொண்டனவே பாய்ந்து. (ச)

என்ன தவப்பேறோ வேழை மடநெஞ்சே
மன்னுதிருப் போரூரன் வந்துநனி—இன்னேதான்
அஞ்சலஞ்ச லென்றுசில வாகுலத்தைப் போக்கினான்
தஞ்சமெமக் கவனே தான். (ரு)

பிள்ளைமதிச் செஞ்சடையோன் பெற்றவானைக் கிளைய
பிள்ளைதனைப் போரூரிற் பேணினால்—உள்ளத்தில்
கொண்டசில வாகுலங்கள் கூறுகதிர் முன்னிருள்போல்
விண்டிடுமே கண்டிடுவாய் வீடு. (சா)

பந்தத்தாலாகுலங்கள் பற்றச் சிலவற்றைக்
குந்தத்தினால் விலக்கிக் கொய்தபொருள்—எந்தம்
கருத்துக் கிசைந்தபொருள் காமரு போரூரில்
பொருத்து மயிலேறும் பொருள். (எ)

அறிவா லறியுமெங்க ளாறுமுகன் போரூர்
செறிவாருந் தொண்டருடன் சேரின்—நெறிவழுவி
எங்குந் திரிந்துழலா தேழைமட நெஞ்சமே
மங்கிடுஞ்சில் லாகுலங்கண் மாய்ந்து. (அ)

வேலை யெழுந்தமரர் வேவச்செயும் விடத்தைச்
சீலமுடனுண்ட சிவபெருமான்—பாலமதில்
வந்ததிருப் போரூர் வயினடையினா குலங்கள்
நைந்துசில போமே நலிந்து. (கூ)

உள்ளங் கரைந்துருகி யொண்கணினீர் சிந்தாத
கள்ளனென்பாற் போரூர்வாழ் காங்கேய—மெள்ளவந்து
செய்தவினைக் கீடாகச் செய்யு முலகர்முனம்
கொய்தனைசில் லாகுலமென் கூறு. (க0)

முடித்தல் போலாகுலங்கண் முற்றுமற வின்று
மடித்திலையே போரூரில் வாழ்வோய்—இடித்தகுரல்
வெள்ளைத் தனிவேழ வேந்தன்முதல் விண்ணோர்கள்
உள்ளக் கருத்தை யுவந்து. (கக)

முகம்பாரா யேனுமென்னை மொய்த்ததவச் செல்வர்க்
சகம்பூரித் தாரருள் செயையா-சகமீது
தென்போரி வேலா சிலவாகுலங் கடமை
இன்போடு நீக்குவா யின்று. (கஉ)

தக்க மருந்தாந் தரணியிற்சில் லாகுலங்கள்
சிக்க வொழித்தருளுஞ் சீர்மருந்தாம்-பக்குவமாய்
உன்னு மருந்தா முயர்ந்த தவமருந்தாம்
மன்னுதிருப் போரூர் மருந்து. (கங)

இன்று சிலவொழித்தா னேய்ந்தபே ராகுலங்கள்
நின்று புலம்பாதே நெஞ்சமே-என்றுமிக
வேட்கு மடியவர்க்கு வீறுசிவ ஞானநிலை
கூட்டுவான் போரூர்க் குகன். (கச)

என்பணியினாற் குறைக ளென்னவோ யானறியேன்
உன்பணியாற் சில்லாகுல மொழித்தே-என்பணியும்
ஐந்தான னத்தா னருளியசீர்ப் போரூர்வாழ்
கந்தா வெனையுகந்து கா. (கரு)

எண்ணமெலாம் பாலிக்கு மெண்ணில் புகழ்ப்போரூர்
வண்ண முருகேசன் மன்னருளால்-திண்ணநெஞ்சே
சில்லா குலத்தைச் சிதைத்தொழித்தா னன்னவன்பால்
நில்லாமற் போதலென்னே நீ. (கசா)

பண்டை வினையாற் பரந்துவரு மாகுலத்தைக்
கண்டுடனி லேசங் கழித்திட்டான்-கெண்டை
வயலுலவு போரூரில் வாழ்முருகற் போற்ற
முயலும்வகை யென்னெஞ்சே முன். (கஎ)

செந்தேனே போரூர்ச் செழும்பாகே யாகுலங்கள்
நொந்தோட வோர்சிறிது நோக்கினுய்-வந்துனது
பாதம் பணிகில்லேன் பாழ்நரகில் வீழ்வேன்கொல்
நாதவென்னை யாட்கொள்ளாய் நன்கு. (கஅ)

எப்படிநீ செய்தாலு மேழைநா னென்செய்வேன்
ஒப்பரிய வாகுலஞ்சில் லோட்டினையால்-அப்படியே
பூரணனே யெங்கள் புகிததிருப் போரூர்வாழ்
காரணனேநீ மகிழ்ந்து கா. (ககூ)

கன்றால் விளவெறிந்த கண்ணன் மருகோனை
நன்றே விளைப்போரூர் நங்கோனை-இன்றுநெஞ்சே
உய்யு நெறிகாட்டி யுற்றசிலவாகுலங்கள்
நையும்வகை கண்டானை நாடு. (உ௦)

என்னகுறை செய்தாலு மேழைமுகம் பார்த்திரங்கி
மன்னுமருட் போரூர்வாழ் மன்னவா-உன்னைவிட
வேறுதுணை காண்கிலேன் வேரோடு மாகுலங்கள்
நீறுபடப் போக்கிலையே நொந்து. (உக)

மாடநிறை போரூர் வடிவேலா வாகுலங்கள்
ஓடும்படிக்கிறையே யோட்டினுய்-வாடும்
தனையனைக் கண்டன்னை யவள் சாருதல் போலையா
எனையினியே காப்பா யிசைந்து. (உஉ)

குருமணியே யெங்கள் குலமணியே வானோர்
திருமணியே யன்பர்கடந் தேவே-கருமம்
செயுமா குலத்திற் சிலவொழித்தாய் போரூர்
வயின்மேவு மாமணியே வந்து. (உங)

சிந்தைநின்பா னேர்ந்துவரு சில்லா குலந்தனையும்
முந்தை வினையு முடித்திட்டான்-எந்தைபொலந்
தோரோடு வீதித் திருப்போரூர் நாதனவன்
சீரோதி நீமகிழ்ந்து சேர். (உச)

ஒழியாத வாகுலங்க ளோடச் சிலவே
பழியாம லென்னைமிகப் பார்த்தந்-கழியாத
முத்திதரும் போரூர் முருகனவ னக்கரத்தைப்
பத்தியுட னெஞ்சே பகர். (உரு)

ஆறுமுக முடையா னாறிரண்டு தோளுடையான்
தேறு பதமுடையான் தேசுடையான்-வீறும்
அயிலுடையா னங்கைசில வாகுலத்தை நீக்க
மயிலுடையான் போரூர்வாழ் மன். (உசு)

செய்யுந் தொழிற்கேற்கச் சில்லாகுலமகல
உய்யுங் குறிகாட்டி யோட்டினாய்-வெய்யவினை
உய்வித்தா லுய்வேனா னுத்தமனே போரூரா
செய்யவினை யொன்றுமிலேன் செப்பு. (உஎ)

ஆரணங்கள் போற்று மணிமகுட மாறுடைய
பூரணனே போரூர்ப் புநிதனே-காரணனாய்
முன்னிட்டு நின்றாய் முடிந்தசில வாகுலங்கள்
பின்னிட்டா லாமோநீ பேசு. (உஅ)

அஞ்ஞானத் தால்விளைசில் லாகுலங்கள் போகவருள்
மெய்ஞ்ஞானச் சோதி விளக்கிடுவாய்-சுஞ்ஞான
சம்பந்தனாய் வந்த சண்முகா போரூரில்
சம்பந்த முற்றவர்க்குத் தான். (உகூ)

போக வகைதெரியாப் புன்மைசில் லாகுலங்கள்
ஏகவகை புரிந்தா னெமபெருமான்-சாக
வருத்தானே நெஞ்சே வளப்போரி யான்காற்
றிருத்தா மரையதனிற் சேர். (௩0)

வெய்யசில வாகுலங்கள் வீந்தகல விக்கணத்தில்
செய்யவரு டந்தநங்க டேசிகனே-வையம்
துதிபரவும் போரூர்வாழ் சுந்தரனே யென்றன்
மதிபரவ நெஞ்சுவந்தான் வந்து. (௩க)

என்னையு மோர்பொருளா வின்னருள் செய்வானைக்கி
முன்னைச் சில்லாகுலத்தை மோதினாய்-கன்னிவள்ளி
தோடமுவும போரூரிற மாயநின்னையே யேத்தும்
நாடமுவு மாறருளாய் நன்கு. (௩உ)

சோதிதரு வெண்ணீறு சூழ்ந்தசில வாகுலத்தை
மோதி நசித்த முதுநீறு-ஓதின்
கலையளிக்கு நீறுசிவகாட்சிதரு நீறு
நிலையளிக்கும் போரூர னீறு. (௩௩)

அற்றதுகா ணெஞ்சமே யாகுலங்க ளின்றுசில
மற்றவையு மாயாது மன்னுமோ-உற்றுமிகச்
செந்தேன் பொழில்புடைசூழ் தென்போரி வேலவனூர்
வந்தார் நம்பாலிங்கு வாய்ந்து. (௩௪)

நீடு புலன்கூடி நின்றசில வாகுலங்கள்
ஓடும்வகை நெஞ்சேநிற் கோதுவேன்—நாடுதியேல்
காழிப் பெருமான் கனகவெயிற் போரூர்வாழ்
கோழிக் கொடியோனைக் கூறு. (௩௫)

செய்தொண்டுக் கேற்கச் சிலவா குலமொழித்தான்
மெய்கண்டு நெஞ்சேநீ மேவுவாய்—செய்ய
மறைபுகழும் போரூரன் மாப்பொதி யிலான்றேன்
குறைகளைந்த தேவன் குரு. (௩௬)

பொருந்து தலைச் சங்கப் புலவர் கலங்கிப்
பொருந்தியவர் நின்று புகல—அருந்தமிழை
ஆய்ந்தபோ ரூரன்சில் லாகுலத்தை நீத்தெமக்கு
வாய்ந்தவரு டந்தானே வந்து. (௩௭)

முன்னைவினைக் கீடாய் முளைத்தசில வாகுலத்தின்
உன்னை யொழிவித்த வுத்தமனை—மன்னும்
துரியங் கடந்துநின்ற சுந்தரனைப் போரிப்
பிரியனையே நெஞ்சேநீ பேசு. (௩௮)

தேவர் பதியளித்தென் சில்லாகுலம் போக்கி
மூவர் மனங்குளிர முன்னின்று—பாவியாம்
சூரனரிதோள் முகரைச் சூறைகொள்ளும் போரியில்வாழ்
வீரனுயர் ஞானவடி வேல். (௩௯)

அன்னை யெனக்குரிய வானதந்தை சற்குருநீ
உன்னைத் துணையென் றெயுட்கொண்டேன்—உன்னைவிடேன்
வாவென் றழைத்தருளி வந்தசில்லாகுலத்தைப்
பேர்க்கென் றருளுதியிப் போது. (௪0)

பூசுரர்கள் போற்றுமூர் புல்லியன்றில் லாகுலங்கள்
நாசப் படுத்துமூர் நாதனூர்—பேசினல்
முத்திதரும் போரூர் முருகனூ ரெம்மனோர்
சத்திய மாய்ச் செல்லுமூர் தான். (௪௧)

மண்ணைப் பிசைந்துண்டோன் மாமருகன் றன்னடியார்
கண்ணைப் பிசைந்திருக்கக் காணனே—நண்ணுநெஞ்சே
ஆதரிப்பான் போரூர னுதலர்திற் சில்லொழித்திப்
போதளிப்பான் பாதாம் புயம். (௪௨)

கண்ணி னொளியே கரும்பின் சுவைரசமே
பண்ணின் மொழியுமையாள் பாலனே—விண்ணதனில்
கற்பகமே போரூர்வாழ் கந்தா வொழிந்தனவே
அற்பச்சில் லாகுலங்க ளற்று. (௪௩)

அடியா ரடிசி லமலனுகந் துண்டான்
தொடியா ரடியுண்டான் றென்மால்-அடியோரால்
இட்டமுட னீயு மிடியுண்டாய் போரூரா
துட்டன்சில் லாகுலத்தைச் சூல். (௪௪)

கூடிக் குலாவிக் குடிகொண்ட வாகுலங்கள்
வாடிச் சிலவொழிய வாய்ப்புற்றேன்-தேடிவந்து
போர்நாடிச் சூர்களைந்தான் போரூர னெந்தையருட்
சீர்நாடி நெஞ்சமே சேர். (௪௫)

சீலத் தவமுடையோர் தேசிகனைப் போரியில்வாழ்
மூலப் பழம்பொருளை முன்னோனைக்-கோலமொடு
என்றும் பணிந்தே னிருகரமுங் கூப்பினின்றேன்
குன்றினசில் லாகுலமிங் கு. (௪௬)

அருமுருகா வென்றே ரரிவை யழைக்கப்
பெருமையொடு வந்தருளும் பெம்மான்-மருமலர்த்தாள்
சூடினு நெஞ்சமே சூழ்ந்தசில வாகுலங்கள்
ஓடினவே யென்னகுறை யோது. (௪௭)

மாலோன் மருகனே மன்றுடி மைந்தனே
மேலாய தேவர்க்கு மேலோனே-கோலமுள்ள
புள்ளி மயி லேறிவந்தென் புன்மைசில் லாகுலங்கள்
தள்ளியருள் செய்தானே தான். (௪௮)

வேலா திருப்போரூர் வேந்தே மிளிர்தண்டைக்
காலா வெளியேனைக் காத்திடுவாய்-மேலாம்
வழுத்தேறு தேனே மனத்தா குலத்தில்
ஒழித்தா ளிலேச முவந்து. (சகூ)

கந்தா திருப்போரூர்க் காங்கேயா வேழைக்கு
வந்தா குலமணுவே மாற்றினய்-செந்தேன்
நறைகமழ்வெட் சித்தோளா நாதா வடியேன்
குறையொழித்தா ளெங்கள் குகா. (ரு௦)

வேலையிலே வேலைவிட்ட வேலநின்று ளைத்துதிக்க
வேலையிலே வேலையதா மேவினேன்-வாலையருள்
தேனே திருப்போரூர்த் தெள்ளமுதே யாகுலங்கள்
ஏனே யிருக்கு மினி. (ருக)

அன்பர்க் கிரங்குமயி லாகுலத்தைப் போக்குமயில்
இன்பமருள் போரூ ரிருக்குமயில்-வன்பன்
பிறப்பை யொழிக்குமயில் பேணுவோர் தங்கண்
மறப்பை யொழிக்கு மயில். (ருஉ)

விதிக்கு விதிக்குமொரு வேலை யளித்துப்
பதிக்கும் பொருளைப் பகர்ந்து-கதிக்கும
திருப்போரூர் வாழ்வோய் செறியா குலத்தின்
இருப்பை யொழிப்பா யினி. (ருங)

வந்தபல வாகுலத்தை மாற்றி அடியார்கள்
சிந்தைதனி லிருந்த செவ்வேலன்-அந்திப்
பிறைமுடித்த வண்ணலருள் பெம்மான் கமல
நறைகமழ்போ ரூரைநெஞ்சே நாடு. (ருச)

கரணங்கண் மூன்றும் கலங்காம லென்றும்
சரணங்க ளென்முடிக்குச் சாத்திக்-கருணை
பொழிபுகிலே போரூரா போதா குலத்தை
ஒழிய வருள்வா யுவந்து. (ருரு)

ஓலமிட்டு நால்வேத மோதியுண ராதகறை
நீலமிட்ட கண்ட நிமலனருள்-பாலன்
திருப்போரூர் வாழ்முருகன் சேரா குலத்தை
இரித்தருள்வா னெஞ்சு ளிசைந்து. (ருசா)

உன்றந்தைக் காறுதலை யொண்டமையற் காறுதலை
நின்றனக்கு மாறுதலை நேர்ந்தனவே-நன்றடியார்க்
காறுதலம் போரியனே யாகுலத்தைப் போக்கியெனக்
காறுதலை செய்வா யமர்ந்து. (ருஎ)

மாணிக்கக் குன்றே மரகதமே வான்புயலே
பேணிக் கருணைபொழி பெம்மானே-ஆணிப்பொன்
சூழ்மதிற்போ ரூர்வாழுஞ் சுந்தரனே யாகுலங்கள்
போழ்வித் திடுவாயிப் போது. (ருஅ)

பெரியவனும் யாவர்க்கும் பேதையோர் தங்கட்
கரியவனு மெம்மனோர்க் கண்ணல்-பிரியனும்
ஆசில்லா தானுகு மாகுலங்கள் போக்குவனும்
தேசுடைய போரூரிற் றே. (ருகூ)

வல்லைநிகர் கொங்கைக்கும் வாணகைச்செவ் வாய்தனக்கும்
மெல்லியர்கண் வேற்கு மெலியாமல்-நல்ல
வனஞ்சூழும் போரியனை மன்னுவையே னெஞ்சே
தினமாகுல மொழியுந் தேய்ந்து. (கூ0)

வல்ல கவிப்புலவீர் வாழ்நாளை வாளாநீர்
புல்லர் தமைப்புகழ்ந்து போக்காமே-ஒல்லைப்
புகழுவீ ரெங்கோனைப் போரூரில் வந்து
மகிழுவீ ராகுலம்போ மாய்ந்து. (கூக)

அன்னநடைச் சின்னவிடை யாரணங்கே யென்றென்று
கன்னியர் களைப்புகழுங் காமுகர்காள்-நன்னயமாய்
ஓதுவீர் போரியில்வா ழுத்தமனைக் கொண்டாடிக்
காதுவீ ராகுலத்தைக் கண்டு. (கூஉ)

கூன விளம்பிறைபோற் கோணுடலம் வாராமுன்
பானல்விழி யார்மயலைப் பற்றறுத்தே-ஏனல்
வளர்போரூர் வள்ளலையே வாழ்த்தா குலங்கள்
தளர்ந்துபோ நெஞ்சே தணந்து. (கூ௩)

அன்பா வுலகின்பத் தாழ்ந்துழல்வீர் கேண்மின்கள்
துன்பா குலங்க டொலையுமே-மின்பாயும்
காரூருஞ் சோலை கதுவுங் கவின்கொடிருப்
போரூரை யேத்துமின்கள் போந்து. (கூச)

உற்றுரே சறறேயா னேதுவதைக் கேண்மின்கள்
பற்று குலங்களெலாம் பாறுமே-அற்றுராய்ப்
பத்தரெலாம் போற்றிப் பணிபோரூர் நாயகனைச்
சித்தமதில் வைப்பீர் தெளிந்து. (சுரு)

ஏங்காதி நெஞ்சமே யெங்குகனு றக்கரத்தை
ஓங்காரத் தோடினிதா வோதுதியேல்-தீங்காக
நாடா குலங்களெலா நாசமுறு நற்போரூர்
நாடா னருளா னலிந்து. (சுசு)

தாதுமலர்ச் சோலையில்வாழ் தத்தைபோற் பாரீரிப்
போது திருப் போரூர்வாழ் புண்ணியன்சீர்-மாது தரு
பாலன் றிருப்பேர் பகருவீ ராகுலங்கள்
சால வகலுமே தான். (சுஎ)

கொங்கைக் குடந்தாங்கு கொம்பனையார் பங்குறைவோன்
செங்கைநெடு வேல்கொண்ட சீமான்றுள்-பொங்கமொடு
செல்வாயே போரூரைச் சேர்வாயே யாகுலத்தை
வெல்வாயே யின்று விரைந்து. (சுஅ)

சூராமா கொய்தவயில் குன்றந் தொளைத்தவயில்
ஆரா குலத்தை யறுத்தவயில்-சீரார்செஞ்
சோதி தழைத்தவயில் தோமறுசீர் போரூர்வாழ்
ஆதி முருகன்கை யயில். (சுகூ)

பேசிடுவா யாறெழுத்தைப் பீடுறநன் னீறெடுத்துப்
பூசிடுவா யாகுலங்கள் போயகலும்-மாசில்
மருப்பொழில்சூழ் போரூரில் வாழ்முருகன் றண்டைத்
திருப்பாத நெஞ்சமே சேர்ந்து. (எ0)

ஆறு முகத்தானை யயிலேந்து கையானைப்
பேறுதரும் போரூர்ப் பிரபலனைத்-தேறும்
உளங்குடிகொள் வானை யுனதா குலமாம்
களங்கமறப் பானைக் கருது. (எக)

அஞ்சனஞ்சேர் கண்மடவா ராசைவலை யிற்சிக்கி
அஞ்சுநெஞ்சே யாகுலங்க ளாரழலில்-பஞ்செனவே
போயிடுமே போரூர்ப் புனிதன் றனக்கடிமை
ஆயிடுவா யின்றே யறி. (எஉ)

கடவுட் பிடிமானுங் கானக் குறமானும்
தடவரைசேர் தோடமுவுந் தாதா-மடங்கள்
செறிபோரூர் வாழுமெங்கள் சேயா குலத்தை
எறிவாயு னன்பற் கிசைந்து. (எங)

கட்டழகு வாய்ந்ததங்கக் கட்டியே காதலினுல்
சிட்டர்தொழும் போரூரிற் செட்டியே-சட்டியிலே
கொக்கவித்த வேதியர்கள் கோமானே யாகுலங்கள்
ஒக்க வொழிப்பா யுவந்து. (எச)

வாவியிடை மாதுமையாள் வந்தணுகி யன்பாக
ஒவிலமு தளிக்க வுண்டுமா-தேவனைமுன்
சுட்டறிவித் திட்டபிரான் றூயதிருப் போரூரன்
சுட்டிடுவா னுகுலத்தைச் சூழ்ந்து. (எரு)

வெற்றி தரித்தகொடி விண்ணோர் துதித்தகொடி
முற்றுமென் னுகுலத்தை மோதுகொடி-சொற்றவர்க்குச்
சாவருடந்தகொடி தண்பொழில்சூழ் போரூரன்
கோலம்வளர் கோழிக் கொடி. (எசு)

சிங்காசத் தீர்போரூரன் சேவடியைக் கைதொழுவார்
மங்காமற் மோனமுமாங் கோதில் நற்செங்கோல்
அவனி புரந்திடுவா ராகுலத்தி னுன்னுந்
தவகிலையிற் சேரா ரவர். (எஎ)

ஆசைபுரிந் தண்ட ரனுதினமும் விண்ணிழிந்து
பூசைபுரிந் தேத்துதிருப் போரூரில்-வாசனே
என்றனுயிர்க் குயிரே யீசனே யாகுலங்கள்
துன்றென்வினை யாவுந் துடை. (எஅ)

அருணகிரி நக்கீர ரந்தமிழின் பாவால்
இருணையமெய் யன்போ டேத்தக்-கருணை
சுரந்ததிருப் போரூரன் சூழா குலங்கள்
கரந்திடுமா றெய்வனயில் காண். (எகூ)

மின்னை நிகர்வாழ்வை விரும்பியதனு னெஞ்சே
என்னபல னுகுலமே யெய்தினுய்-அன்னைதனை
அன்னுன் திருப்போரூ ரண்ணல்கழற் சேவடியை
நின்னு குலம்போ நினை. (அ0)

மாண்டுபிறக் குங்கொடிய வாகுலத்தை மாற்றியே
வேண்டும்வரம் பாலிப்பான் மேதகுசீர்-பாண்டவர்தம்
தூதுவனார் நன்மருகன் றன்னைநெஞ்சே தொல்போரூர்
மாதுமையாள் சேயை யெழுத்து. (அக)

சீரார்மணிமகுடத் தேவசே னாபதியைக்
காராரென் னாகுலத்தைக் காய்வானை-ஏராரும்
சந்தடறைப் போரூர்ச் சரவணனைச் சங்கரிதன்
மைந்தனையே வாழ்த்துமென் வாய். (அஉ)

பச்சைமலை யுச்சிதனிற் பானுவெழுந் தாற்போல
இச்சைமயின் மீதி லேறியே-நிச்சயமாய்
ஆளுந் திருப்போரு ரண்ணலருளானெஞ்சே
மாளுமே யாகுலங்கண் மாய்ந்து. (அங)

தன்பெருமை தானறியாத் தற்பரனும் போரியில்வாழ்
இன்பவெள்ளத் தேனு மிறையவனும்-நன்னெஞ்சே
வாக்குமனாதீதனும் வாழ்த்துவையே லாகுலங்கள்
நீக்குவனு மென்று நினை. (அச)

நின்னை நினைந்து நினைந்துருகக் கற்கிலேன்
பின்னை விளைவதனைப் பேணுகிலேன்-இன்னினியே
பேரருளோய் போரூரா பேதையேனாகுலங்கள்
தீரவருளுவையோ தேர்ந்து. (அரு)

சூனரிமுகனுந் துட்டர்தமை யெல்லாமுன்
வீரமொடு போரூரன் வென்றிலனேல்-தீரமொடு
வாழ்வாரோ வாகுலம்போய் வானாட்டு தேவரெலாம்
தாழ்வா ரவரடியிற் றாழ்ந்து. (அசு)

என்னா லுனக்கோர் பயனில்லை யெம்பெருமான்
உன்னாற் பயனெனக்கே யுண்டுகண்டாய்-பொன்போல்
சிறக்குந் திருப்போரூர்ச் சேயா குலங்கள்
இறக்கவகை கண்டாயே யின்று. (அஎ)

வந்த வழியே மயர்ந்தா குலமோடி
இங்கொடியே போமி னியம்பினேன்-சந்ததமும்
வானோர்புகழும் வளமைதிகழ் போரூரன்
தானேவந் தென்னு ளமர்ந்தான். (அஅ)

கண்ணருவி பாயக் கரங்கள் சிரங்குவியப்
பண்ணயந்த பாவாற் பழிச்சுதியேல்-உண்ணயந்து
சாத்திடுவா னாகுலத்தைத் தாய்போனெஞ் சேநமக்கு
வாய்த்ததிருப் போரூர் வரன். (௮௯)

நீதிநெறிப் போரூர் நிமலனருண் ஞான
பூதிதனை நெற்றியிலே பூசுவிரேல்-தீதறுசீர்த்
தொண்டரா யாகுலமபோஞ் சுத்தசுக வீடதனில்
அண்டராய் வாழ்ந்திருக்க லாம். (௯0)

பாடுவையே னெஞ்சமே பாழ்மலமு மாகுலமும்
சாடுவையே போரூரைச் சார்ந்தினருள்-கூடுவையே
காட்சி பெருவாய் கறையில்பே ரின்பவீ
டாட்சி பெறுவா யறி. (௯௧)

கோலக் குருவடிவங் கொண்டருளி யென்முன்னே
சாலக் கருணைபொழி சண்முகா-நீலநிறத்
தோகைமயில் வேலா சூழா குலம்போக்க
வாகைதிருப் போரூரா வா. (௯௨)

முடியாகு மன்[illegible]ர் முடிக்கெனது நெஞ்சில்
குடியாகு மோனமுமாங் கோதில்[illegible]டியார்க்குப்
போக்குமே யாகுலங்கள் பொற்புறுபே ரின்பமுறத்
தாக்குமே போரூரன் றருள். (௯௩)

நாடுமடி யார்கடமை நண்ணியபே ராகுலங்கள்
வீடுபெற வீட்டளிக்கும் வித்தகனைப்-பீடுபெறு
பாதாம் புயனைப் பகருந் திருப்போரூர்
நாதாந் தனைமனமே நாடு. (௯௪)

வேத முடிவில் விளங்குஞ் செழுங்கமல
பாததிருப் போரூரிற் பண்ணவனே-போதமுறு
புண்ணியர்க டேவே புகுமா குலம்போக்கி
மண்ணிலெனை யாள்வாய் மகிழ்ந்து. (௯௫)

ஆவலறு முத்தருளத் தார்ந்ததிருப் போரூரன்
கேவலத்தி லெம்மைக் கிடத்துவனோ-காவலரும்
ஆங்கார மாதிகளா னாகியபே ராகுலங்கள்
போங்கால மெய்தினவிப் போது. (௯௬)

அந்தா மரையனஞ்சூழ்ந் தார்போரியானையன்பர்
சிந்தா குலந்தீர்க்குஞ் சீமானை-பொங்குகொடும்
பாவியெனைக் கூடியின்பம் பாலிக்க வேவேண்டிக்
கூவியழைப் பேன் குறித்து. (கூஎ)

எத்திசையும் பத்திசெயு மின்பப் பெருமானே
சித்திதரும போரூரிற் சின்மயனே-சித்தமதில்
பூரிக்கு மாகுலத்தைப் போக்கியெனைப் பேரின்ப
வாரிக்குள் வைப்பாய் மகிழ்ந்து. (கூஅ)

நாகா பரணன்சேய் நாகரிகப் போரியனைப்
போகாத வாகுலங்கள் போயகலச்-சாகா
இளமைநிறை செல்வ மெலாம்பெற்று நாளும்
வளமையொடு வாழ வழுத்து. (கூகூ)

சென்மப் பிணியதனற் சேர்ந்தபே ராகுலமும்
கன்மப் பிணியுங் கழன்றனவே-நின்மலன்சேர்
தென்போரி வேலன் திருவருளா லிங்கினி
நன்முத்தி வாய்க்கு நமக்கு. (க00)

காலை துயிலெழுந்து காசறுநீ ராடிச்சொ[ன்]
மாலை து[ணை]த்தாண் மலர்சாத்தி-ஆலயத்தைச்
சுற்றிவலம் வந்தக்காற் றொல்லா குலந்தொலைந்து
பெற்றிருக்க லாமேலாம் பேறு. (க0க)

வாழிமயில் கோழிக் கொடிவாழி வாழியயில்
வாழி கருணை வழியடியார்-வாழிபுவி
வாழிதிருப் போரூர் வரதன்சை வாகமங்கள்
வாழிமறை வாழி மலிந்து. (க0உ)

வேலுமயிலுந்துணை.

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

கம்பரருளிச்செய்த

# சரஸ்வதியந்தாதி.

குமரகுருசுவாமிகள் அருளிச்செய்த

## சரஸ்வதிபதிகம்.




இஃது,

சிறுமணவூர்,

முனிசாமிமுதலியாரவர்களது,

சென்னை சூளை,

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1904.

# விளம்பரம்.

கனவான்களே! சென்னை சூளை, சட்டண்ண நாய்க்கன் வீதி, 12-வது நெம்பர் வீட்டில் ஸ்தாபித்திருக்கும் சிறுமணவூர்-முனிசாமி முதலியார் அவர்களது சிவகாமி விலாச அச்சுக்கூடத்தில் ஸ்தாபித்திருக்கும் வி. பி. கம்பெனியில் தமிழ், தெலுங்கு, கிரந்தம் துலுக்கு முதலிய புஸ்தகதினுசுகளும், ஸ்மார்த்தவைணவர்களுக்கு வேண்டும் புஸ்தகங்களும், பால்யர்களுக்கு வேண்டும் காலேஜி புஸ்தகங்களும், உத்தியோகஸ்தர்களுக்கு வேண்டும் ஆக்டுபுஸ்தகங்களும், இசுலாமான்வர்களுக்கு வேண்டும் தமிழ் யெழுத்தில் துலுக்குபுஸ்தகங்களும், காவலர், பாவலர், நாவலர் யாவருக்கும் வேண்டும் இலக்கணம், இலக்கியம், புராணம், கதை, அம்மானை, நாடகம், விலாசம், கீர்த்தனை, அந்தாதி, கலம்பகம், கோவை, தூது, வெண்பா, சதகம், கும்மியென்னும் அனேகதினுசுகளும், அத்வைதசாஸ்திரங்களும், ஆறுமுகநாவலர், புஷ்பரதச் செட்டியார், சை-இரத்தினசெட்டியார் முதலியவர்களுடைய அச்சுக்கூடங்களிற் பதிப்பித்த உயர்ந்த புஸ்தகதினுசுகளும், வியாதிகள் சொஸ்தப்படும்படி தக்க அவிழ்தங்களும், அவரவர் பேர்களுக்குத்தக்கதாய் ரொம்பவும் அழகான வேலைகள்செய்த ரப்பர்சில்களும், ஜெர்மன்சில்வரால் செய்த நகைதினுசுகளும், சாமான்தினுசுகளும், நல்ல வாசனைபொருந்தியதாயும், நாள்படவிருந்தால் கெடாமலிருக்கும்படியாயுமுள்ள அத்தர்தினுசுகளும், பூசுபில்லைகளும், வாசனைவத்திகள்முதலிய இன்னும் அனேகவிதசாமான்களும்தயாராயிருப்பதால் வேணடியவர்கள் அடியிற்கண்ட எனது மேல் விலாசத்திற்கு எழுதினால் உடனே வி. பி. தபாலில் அனுப்பப்படும். என்னுடைய கேட்லாக்கு வேண்டுபவர்கள் அரையணா ஸ்டாம்பு அனுப்பிவித்தால் அனுப்பப்படும்.

ஒவ்வொருவரும் எங்களுக்கு விஷயந்தெரியும்படி தெளிவாய் ஒவ்வொருமுறையிலுந் தங்கள் பெயர், ஊர், இருப்பிடம், போஸ்டாபீசு, தாலூக்கா, ஜில்லா முதலியவைகளோடே விலாசத்தைக் கட்டாயம் எழுதவேண்டும்.

இப்படிக்கு,

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்,

கெ. 12. சட்டண்ண நாய்க்கன் தெருவு,

சூளை போஸ்டாபீசு மதராஸ்.

உ

கணபதி துணை.

# சரஸ்வதியந்தாதி.

## காப்பு.

### வெண்பா.

ஆயகலைக ளறுபத்து நான்கினையு
மேய வுணர்விக்கு மென்னம்மை—தூய
உருப்பளிங்கு போல்வாளென் னுள்ளத்தி னுள்ளே
இருப்பளிங்கு வாரா திடர்.

படிக நிறமும் பவளச்செவ் வாயுங்
கடிகமழ்பூந் தாமரைபோற் கையுந்—துடியிடையும்
அல்லும் பகலு மனவரத முந்துதித்தாற்
கல்லுஞ்சொல் லாதோ கவி.

### கட்டளைக்கலித்துறை.

சீர்தந்தவெள்ளிதழ்ப் பூங்கமலாசனத் தேவிசெஞ்சொற்
றூர்தந்தவென்மனத் தாமரையாட்டி சரோருகமேற்
பார்தந்தநாத ளிசைதந்தவாரணப் பங்கயத்தாள்
வார்தந்தசோதியம் போருகத்தாளை வணங்குதுமே. (க)

வணங்குஞ்சிலைநுத லுங்கழைத்தோளும் வனமுலைமேற்
சுணங்கும்புதிய நிலவெழுமேனியுந் தோட்டுடனே
பிணங்குங்கருந்தடங் கண்களுநோக்கிப் பிரமனன்பா
லுணங்குந்திருமுன்றி லாய்மறைநான்கு முரைப்பவளே. (உ)

உரைப்பாருரைக்குங் கலைகளெல்லாமெண்ணி லுன்னையன்றித்
தரைப்பாலொருவர் தரவலரோதண் டரளமுலை
வரைப்பாலமுதுதந் திங்கெனைவாழ்வித்த மாமயிலே
விரைப்பாசடைமலர் வெண்டாமரைப்பதி மெல்லியலே. (ங)

இயலானதுகொண்டு நின்றிருநாமங்க ளேத்துதற்கு
முயலாமையாற்றடு மாறுகின்றேனிந்த மூவுலகுஞ்
செயலாலமைத்த கலைமகளேநின் றிருவருளுக்
கயலாவிடாம லடியேனையுமுவந் தாண்டருளே. (ச)

அருக்கோதயத்தினுஞ் சந்திரோதயமொத் தழகெறிக்குந்
திருக்கோலநாயகி செந்தமிழ்ப்பாவை திசைமுகத்தா
விருக்கோதுநாதனுந் தானுமெப்போது மினிதிருக்கு
மருக்கோலநாண்மல ராளென்னையாளு மடமயிலே. (௫)

மயிலேமடப்பிடி யேகொடியேயிள மான்பிணையே
குயிலேபசுங்கிளி யேயன்னமேமனக் கூரிருட்கோர்
வெயிலேநிலவெழு மேனிமின்னேயினி வேறுதவம்
பயிலேன்மகிழ்ந்து பணிவேனுனதுபொற் பாதங்களே. (௬)

பாதாம்புயத்திற் பணிவார்தமக்குப் பலகலையும்
வேதாந்தமுத்தியுந் தந்தருள்பாரதி வெள்ளிதழ்ப்பூஞ்
சிதாம்புயத்தி லிருப்பாளிருப்பவென் சிந்தையுள்ளே
யேதாம்புவியிற் பெறலரிதாவ தெனக்கினியே. (௭)

இனிதானுணர்வ தெண்ணெண்கலையாளை யிலகுதொண்டைக்
கனிநாணுஞ்செவ்விதழ் வெண்ணிறத்தாளைக் கமலவயன்
றனிநாயகியை யகிலாண்டமும்பெற்ற தாயைமணப்
பனிநாண்மலருறை பூவையையாரணப் பாவையையே. (௮)

பாவுந்தொடையும் பதங்களுஞ்சீரும் பலவிதமா
மேவுங்கலைகள் விதிப்பாளிடம்விதி யின்முதிய
நாவும்பகர்ந்ததொல் வேதங்கணான்கு மறுங்கமலப்
பூவுந்திருப்பதம் பூவாலணிபவர் புந்தியுமே. (௯)

புந்தியிற்கூரிரு ணீக்கும்புதிய மதியமென்கோ
வந்தியிற்றோன்றிய தீபமென்கோநல் லருமறையோர்
சந்தியிற்றோன்றுந் தபனனென்கோமணித் தாமமென்கோ
வுந்தியிற்றோன்றும் பிரான்புயந்தோயு மொருத்தியையே. (௧௰)

ஒருத்தியையொன்று மிலாவென்மனத்தி லுவந்துதன்னை
யிருத்தியைவெண்கம லத்திருப்பாளையெண் ணெண்கலைதோய்
கருத்தியையைம்புல னுங்கலங்காமற் கருத்தையெல்லாந்
திருத்தியையான்மற வேன்றிசைநான்முகன் றேவியையே. (௧௧)

தேவருந்தெய்வப் பெருமானுநான்மறை செப்புகின்ற
மூவருந்தானவ ராகியுள்ளோரு முனிவரரும்
யாவருமேனைய வெல்லாவுயிரு மிதழ்வெளுத்த
பூவருமாதி னருள்கொண்டுஞானம் புரிகின்றதே. (௧௨)

புரிகின்றசிந்தையி னூடேபுகுந்து புகுந்திருளை
யரிகின்றதாய்கின்ற வெல்லாவறிவி னரும்பொருளைத்
தெரிகின்றவின்பங் கனிந்தூறிநெஞ்சந் தெளிந்துமுற்ற
விரிகின்றதெண்ணெண் கலைமாறுணர்த்திய வேதமுமே. (௧௩)

வேதமும்வேதத்தி னந்தமுமந்தத்தின் மெய்ப்பொருளாம்
பேதமும்பேதத்தின் மார்க்கமுமார்க்கப் பிணக்கறுக்கும்
போதமும்போத வுருவாகியெங்கும் பொதிந்தவிந்து
நாதமுநாதவண் டார்க்கும்வெண்டாமரை நாயகியே. (கச)

நாயகமான மலரகமாவது ஞானவின்பச்
சேயகமான மலரகமாவதுந் தீவினையா
லேயகமாறி விடுமெகமாவது மெவ்வுயிர்க்குந்
தாயகமாவதுந் தாதார்சுவேத சரோருகமே. (கரு)

சரோருகமேதிருக் கோயிலுங்கைகளுந் தாளிணையு
முரோருகமுந்திரு வல்குலுநாபியு மோங்கிருள்போற்
சிரோருகஞ்சூழ்ந்த வதனமுநாட்டமுஞ் சேயிதழு
மொரோருகமீரா மாத்திரையான வுமைமகட்கே. (கசு)

கருந்தாமரைமலர் கட்டாமரைமலர் காமருதா
ளருந்தாமரைமலர் செந்தாமரைமல ராலயமாந்
தருந்தாமரைவலர் வெண்டாமரைமலர் தாவிலெழிற்
பெருந்தாமரை மணக் குங்கலைக்கூட்டப் பிணைதனக்கே. (கஎ)

தனக்கேதுணிபொரு ளென்னுந்தொல்வேதஞ் சதுர்முகத்தோ
னெனக்கேசமைந்த வபிடேகமென்னு மிமையவர்தா
மனக்கேதமாற்று மருந்தென்பரூடு மலரொன்பன்யான்
கனக்கேசபந்திக் கலைமங்கைபாத கமலங்களே. (கஅ)

கமலந்தனிலிருப் பாள்விருப்போடங் கரங்குவித்துக்
கமலங்கடவுளர் போற்றுமென்பூவை கண்ணிற்கருணைக்
கமலந்தனைக்கொண்டு கண்டொருகாற்றங் கருத்துள்வைப்பார்
கமலங்கழிக்குங் கலைமங்கையாரணி காரணியே. (ககூ)

காரணன்பாகமுஞ் சென்னியுஞ்சேர்தரு கன்னியரு
நாரணனாக மகலாத்திருவுமோர் நான்மருப்பு
வாரணன்றேவியு மற்றுள்ளதெய்வ மடந்தையரும்
ஆரணப்பாவை பணித்தகுற்றேவ லடியவரே. (உ0)

அடிவேதநாறுஞ் சிறப்பார்ந்தவேத மனைத்தினுக்கு
முடிவேதவள முளரிமின்னேமுடி யாவிரத்தின
வடிவேமகிழ்ந்து பணிவார்தமது மயலிரவின்
விடிவேயறிந்தென்னை யாள்வார்தலந்தனில் வேறிலையே. (உக)

வேறிலையென்று னடியாரிற்கூடி விளங்குநின்பேர்
கூறிலையானுங் குறித்துநின்றேனம் புலக்குறும்பர்
மாறிலகள்வர் மயக்காமனின்மலர்த் தாணெறியிற்
சேறிலையீந்தருள் வெண்டாமரைமலர்ச் சேயிழையே. (உஉ)

சேதிக்கலாந்தர்க்க மார்க்கங்களெவ்வெவர் சிந்தனையுஞ்
சோதிக்கலாமுறப் போதிக்கலாஞ்சொன்ன தேதுணிந்து
சாதிக்கலாமிகப் பேதிக்கலாமுத்தி தானெய்தலா
மாதிக்கலாமயில் வல்லிபொற்றூளை யடைந்தவரே. (உ௩)

அடையாளநாண்மல ரங்கையிலேடு மணிவடமு
முடையாளை நுண்ணிடை யொன்றுமிலாளை யுபநிடதப்
படையாளையெவ்வுயிரும் படைப்பாளைப் பதுமாறுந்
தொடையாளையல்லது மற்றினியானாத் தொழுவதுவே. (உ௪)

தொழுவார்வலம்வரு வார்துதிப்பார்தந் தொழின்மறந்து
விழுவாரருமறை மெய்தெரிவாரின்ப மெய்புளகித்
தழுவாரினுங்கண்ணி னீர்மல்குவாரென்க ணுவதென்னை
வழுவாதசெஞ்சொற் கலைமங்கைபாலன்பு வைத்தவரே. (உ௫)

வைக்கும்பொருளுமில் வாழ்க்கைப்பொருளுமற் றெப்பொருளும்
பொய்க்கும்பொருளன்றி நீடும்பொருளல்ல பூதலத்தின்
மெய்க்கும்பொருளு மழியாப்பொருளும் விழுப்பொருளு
முய்க்கும்பொருளுங் கலைமானுணர்த்து முணாப்பொருளே. (உ௬)

பொருளாலிரண்டும் பெறலாகுமென்ற பொருள்பொருளோ
மருளாதசொற்கலை வான்பொருளோபொருள் வந்துவந்தித்
தருளாய்விளங்கு மவர்க்கொளியாயறி யாதவருக்
கிருளாய்விளங்கு நலங்கிளர்மேனி யிலங்கிழையே. (உ௭)

இலங்குந்திருமுக மெய்யிற்புளக மெழுங்கண்கணீர்
மலங்கும்பழுதற்ற வாக்கும்வலிக்கு மனமிகவே
துலங்குமுறுவல் செயக்களிகூருஞ் சுழல்புனல்போற்
கலங்கும்பொழுது தெளியுஞ்சொன்மானைக் கருதினர்க்கே. (உ௮)

கரியாரளகமுங் கண்ணுங்கதிர்முலைக் கண்ணுஞ்செய்ய
சரியார்கரமும் பதமுமிதழுந் தவளநறும்
புரியார்ந்ததாமரை யுந்திருமேனியும் பூண்பனவும்
பிரியாதென்னெஞ்சினு நாவினுநிற்கும் பெருந்திருவே. (உ௯)

பெருந்திருவுஞ்சய மங்கையுமாகியென் பேதைநெஞ்சி
லிருந்தருளுஞ்செஞ்சொல் வஞ்சியைப்போற்றிலெல் லாவுயிர்க்கும்
பொருந்தியஞானந் தருமின்பவேதப் பொருளுந்தருந்
திருந்தியசெல்வந் தருமழியாப்பெருஞ் சீர்தருமே. (௩௰)

சரஸ்வதியந்தாதி முற்றிற்று.



உ

கணபதி துணை.



# சரஸ்வதி பதிகம்.

வெண்டாமரைக்கன்றி நின்பாதந்தாங்கவென் வெள்ளையுள்ளத்
தண்டாமரைக்குத்த காதுகொல்லோசக மேழுமளித்
துண்டானுறங்க வொழித்தான்பித்தாகவுண் டாகும்வண்ணங்
கண்டால்சுவைகொள் கரும்பேசகல கலாவல்லியே. (௧)

நாடும்பொருட்சுவை சொற்சுவைதோய்தர நாற்கவியும்
பாடும்படிக்குப் பணித்தருள்வாய்பங்க யாசனத்திற்
கூடும்பசும்பொற் கொடியேகனதனக் குன்றுமைம்பாற்
காடுஞ்சுமக்குங் கரும்பேசகல கலாவல்லியே. (௨)

அளிக்குஞ்செழுந்தமிழ் தெள்ளமுதார்ந்துன் னருட்கடலிற்
குளிக்கும்படிக்கன்று கூடுங்கொலோவுளங் கொண்டுதெள்ளித்
தெளிக்கும்பனுவற் புலவோர்கவிமழை சிந்தக்கண்டு
களிக்குங்கலாப மயிலேசகல கலாவல்லியே. (௩)

தூக்கும்பனுவற் றுறைதோய்ந்தகல்வியுஞ் சொற்சுவைதோய்
வாக்கும்பெருகப் பணித்தருள்வாய்வட நூற்கடலுந்
தேக்குஞ்செழுந்தமிழ்ச் செல்வமுந்தொண்டர்செந் நாவினின்று
காக்குங்கருணைக் கடலேசகல கலாவல்லியே. (௪

பஞ்சப்புதந்தரு செய்யபொற்பாதபங் கேருகமென்
னெஞ்சத்தடத்தல ராததென்னேனெடுந் தாட்கமலத்
தஞ்சத்துவச முயர்த்தோன்செந்நாவு மகமும்வெள்ளைக்
கஞ்சத்தவிசொத் திருந்தாய்சகல கலாவல்லியே. (ரு)

பண்ணும்பரதமுங் கல்வியுந்தீஞ்சொற் பனுவலும்யா
னெண்ணும்பொழுதெளி தெய்தநல்காயெழு தாமறையும்
விண்ணும்புவியும் புனலுங்கனலும்வெங் காலுமன்பர்
கண்ணுங்கருத்து நிறைந்தாய்சகல கலாவல்லியே. (சு)

பாட்டும்பொருளும பொருளாற்பொருந்தும் பயலுமென்பாற்
கூட்டும்படிநின் கடைக்கணல்காயருள் கொண்டுதொண்டர்
தீட்டுங்கலைத்தமிழ்த் தீம்பாலமுதந் தெளிக்கும்வண்ணங்
காட்டும்வெள்ளோதிமப் பேடேசகல கலாவல்லியே. (எ)

சொல்விற்பனமு மவதானமுங்கல்வி சொல்லவல்ல
நல்வித்தையுந்தந் தடிமைகொள்வாய்நளி னாசனஞ்சேர்
செல்விக்கரிதென் றொருகாலமுஞ்சிதை யாமனல்குங்
கல்விப்பெருஞ்செல்வப் பேறேசகல கலாவல்லியே. (அ)

சொற்கும்பொருட்கு முயிராய்மெய்ஞ்ஞானத்தின் றோற்றமென்ன
நிற்கின்றநின்னை நினைப்பவரியார்நிலந் தோய்புழைக்கை
நற்குஞ்சரத்திற் பிடியோடரசன்ன நாணநடை
கற்கும்பதாம்புயத் தாளேசகல கலாவல்லியே. (கூ)

மண்கொண்டவிண்குடைக் கீழாகமேற்பட்ட மன்னருமென்
பண்கண்டளவிற் பணியச்செய்வாய்படைப் போன்முதலாய்
விண்கண்டதெய்வம்பல் கோடியுண்டேனும் விளம்பிலுன்போற்
கண்கண்டதெய்வ முளதோசகல கலாவல்லியே. (கO)

சரஸ்வதிபதிகம் முற்றிற்று.



உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# சிவஸ்தலமாலை.

கண்டிப்பாக்கம்
சுப்பராயமுதலியாரவர்கள் குமாரர்
**சண்முகமுதலியாரவர்களால்**
இயற்றப்பட்டது.

இஃது,
சிறுமணவூர்,
**முனிசாமி முதலியா ரவர்களால்**
பரிசோதிக்கப்பட்டு,




தமது
சென்னை சூளை,
சிவகாமிவிலாசஅச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1904.
இதன் விலை அணா 1.

# விளம்பரம்.



கனவான்களே! சென்னை சூளை, சட்டண்ண நாய்க்கன் வீதி, 12-வது நெம்பர் வீட்டில் ஸ்தாபித்திருக்கும் சிறுமணவூர்-முனிசாமி முதலியார் அவர்களது சிவகாமி விலாச அச்சுக்கூடத்தில் ஸ்தாபித்திருக்கும் வி. பி. கம்பெனியில் தமிழ், தெலுங்கு, கிரந்தம் துலுக்கு முதலிய புஸ்தகதினுசுகளும், ஸ்மார்த்தவைணவர்களுக்கு வேண்டும் புஸ்தகங்களும், பால்யர்களுக்கு வேண்டும் காலேஜி புஸ்தகங்களும், உத்தியோகஸ்தர்களுக்கு வேண்டும் ஆக்டுபுஸ்தகங்களும், இசுலாமானவர்களுக்கு வேண்டும் தமிழ்யெழுத்தில் துலுக்குபுஸ்தகங்களும், காவலர், பாவலர், நாவலர் யாவருக்கும் வேண்டும் இலக்கணம், இலக்கியம், புராணம், கதை, அம்மானை, நாடகம், விலாசம், கீர்த்தனை, அந்தாதி, கலம்பகம், கோவை, தூது, வெண்பா, சதகம், கும்மியென்னும் அநேகதினுசுகளும், அத்வைதசாஸ்திரங்களும், ஆறுமுகநாவலர், புஷ்பரதச்செட்டியார், சை-இரத்தினசெட்டியார் முதலியவர்களுடைய அச்சுக்கூடங்களிற் பதிப்பித்த உயர்ந்த புஸ்தகதினுசுகளும், வியாதிகள் சொஸ்தப்படும்படி தக்க அவிழ்தங்களும், அவரவர் பேர்களுக்குத்தக்கதாய் ரொம்பவும் அழகான வேலைகள்செய்த ரப்பர்சீல்களும், ஜெர்மன்சில்வரால் செய்த நகைதினுசுகளும், சாமான்தினுசுகளும், நல்ல வாசனைபொருந்தியதாயும், நாள்படவிருந்தால் கெடாமலிருக்கும்படியாயுமுள்ள அத்தர்தினுசுகளும், பூசுபில்லைகளும், வாசனைவத்திகள்முதலிய இன்னும் அநேகவிதசாமான்களும்தயாராயிருப்பதால் வேணடியவர்கள் அடியிற்கண்ட எனது மேல்விலாசத்திற்கு எழுதினால் உடனே வி. பி. தபாலில் அனுப்பப்படும். என்னுடைய கேட்லாக்கு வேண்டுபவர்கள் அரையணா ஸ்டாம்பு அனுப்பிவித்தால் அனுப்பப்படும்.

ஒவ்வொருவரும் எங்களுக்கு விஷயந்தெரியும்படி தெளிவாய் ஒவ்வொருமுறையிலுந் தங்கள் பெயர், ஊர், இருப்பிடம், போஸ்டாபீசு, தாலூக்கா, ஜில்லா முதலியவைகளோடே விலாசத்தைக் கட்டாயம் எழுதவேண்டும்.

இப்படிக்கி,

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்,

நெ. 12. சட்டண்ண நாய்க்கன் தெருவு,

சூளை போஸ்டாபீசு மதராஸ்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஸ்தலமாலை.

### விநாயகர் துதி.

எம்பிரான்முக்கணுடையீசனுறையும்பதிமேல்
பைம்பொருள்சேர்பாமாலைபாடவே-யும்பர்தினம்
போற்றுக்கரிமுகத்துப்புண்ணியனே நாயேனைத்
தேற்றுந்திருவருணீசெய்.

### இதுவுமது.

அத்தன்கயிலைமலை ஆதித்திருப்பதிமேற்
பத்தியுடன்பாமாலைபாடவே-நித்தமுமேல்
வானவருமாலயனும்வந்துகரங்கூப்புமெழில்
ஆனைமுகத்தோனேயருள்.

### நால்வர் துதி.

தேவாரமுஞ்சீர்த்திருவாசகமுஞ்சொல்
பாவாணாபொற்றாள்பணிந்துநீ-நாவாரத்
தோத்திரஞ்செய்தால்மனமேதொல்வினையெலாமகன்று
வீற்றிருப்பாய்வீட்டில்விரைந்து.

## நூல்.

## சோழவளநாட்டில் வடகரையிலுள்ள சிவஸ்தலங்கள்.

### சிதம்பரம்.

சபாநாயகர் - சிவகாமியம்மை.

சித்தங்களிக்கச்சிவகாமிகாணமன்றுள்
நித்தநடனஞ்செய்யுநின்மலா-பத்தர்
புலிநாகம்போற்றும்புனிதனேகொன்றை
மலிவேணியனேயாள்வந்து. (க)

## திருவேட்களம்.

பாசுபதஈசுரர் - நல்லநாயகியம்மை.

வாசமிகுவேட்களம்வாழ்மாதேவாபாசுபத
ஈசநல்லநாயகிதோயெம்மானே-பாசவினை
யண்டாதுநாயேற்கருள்புரிந்துநின்னடிக்குத்
தொண்டாக்குநாளெந்நாள்சொல். (௨)

## திருநெல்வாயில் எ-து சிவபுரி.

உச்சிநாதஈசுரர் - கனகாம்பிகையம்மை.

உச்சிநாதீசாவுயர்கனகவம்பிகைப்பெண்
மெச்சுஞ்சிவபுரிவாழ்வித்தகா-நச்சியிளங்
காமத்தில்வீழாமற்கண்பார்த்தெனைப்புரிந்து
நேமத்திருக்கநினை. (௩)

## திருப்பெருமணம் எ-து ஆச்சாபுரம்.

சிவலோகதியாகேசர் - நங்கையுமையம்மை.

திங்கட்சடையாய்சிவலோகதியாகேசா
நங்கையுமைபம்மையார்நாயகா-துங்கப்
பெருமணத்தில்வாழும்பிரானேயெளியேன்
கருவூர்ப்புகாதினிநீகா. (௪)

## திருக்கோலக்கா.

சப்தபுரிஈசுவரர் - ஓசைகொடுத்தஅம்மை.

ஓசைகொடுத்தஅம்மையுண்மகிழுஞ்சத்தபுரி
ஈசதிருக்கோலக்க வெந்தையே-ஆசையெனும்
பாசத்தழுந்தாதுன் பாதாரவிந்தத்தை
நேசித்திருக்கவருணீ. (௫)

## திருச்சீர்காழி எ-து பிரமபுரி.

பிரமாபுரிஈசுரர் - திருநிலைநாயகியம்மை.

பிரம்புரத்தெம்பெருமானேகாழிப்
பரமாவென்றேத்திப்பணிந்து-வரமீயத்
தேடிநீரொஞ்சேதிருநிலைநாயகியென்
ரேடிப்பணிவாயுவந்து. (௬)

## திருக்குருகாவூர்.

திருமேனிவெள்ளடை - காவியங்கண்ணியம்மை.

காவியங்கண்ணிகணவாகுருகாவூர்
மேவுந்திருமேனிவெள்ளடையாய்-மாவிடைமேல்
வந்தென்மலமகற்றிமாறுதுன்சேவடியைச்
சிந்தைசெயநீயருளிச்செய். (௭)

## திருமுல்லைவாயில் எ-து தென்திருமுல்லைவாயில்.

முல்லைவனநாதர் - கோதையம்மை.

நாதாதென்முல்லையுறைநாயகாகோதையம்மை
நீதாவிடையேறுநின்மலா-மாதா
கருக்குழியில்வீழாதுன்கஞ்சமலர்த்தாட்கீ
ழிருக்கவெனையாளினி. (அ)

## திருக்கலிக்காமூர் எ-து அன்னப்பன்பேட்டை.

சுந்தரேசர் - அழகுவனமுலையம்மை.

அன்னப்பன்பேட்டையலர்சுந்தரேசாநின்
பொன்னடியைநாடோறும்பூசிக்கத்-துன்னும்
அழகுவனமுலையெம்மன்னையொடுநீங்கா
மழவிடைமேலேறியருள்வந்து. (கூ)

## திருச்சாய்க்காடு எ-து சாயாவனம்.

சாயாவனஈசுரர் - குயிலினும்நன்மொழியம்மை.

சாயாவனத்தீசாசங்கராஎவ்வுயிர்க்குந்
தாயாகிநின்றதயாளுவே-நேயக்
குயிலினும்நன்மொழியாள்கூறுடையாயென்றன்
மயலைத்துடைத்தாள்நீவந்து. (ய)

## திருக்காட்டுப்பள்ளி.

ஆரணியசுந்தரர் - அகிலாண்டநாயகி.

ஆரணியசுந்தரனையன்பாரகிலாண்ட
பூரணியோர்பாகங்கொள்புண்ணியனைத்-தாரணியுங்
கொன்றைகமழும்புயனைக்கோனைக்காட்டுப்பள்ளி
நின்றவனைநெஞ்சேநினை. (யக)

## திருக்கடைமுடி எ-து கீழூர்.

கடைமுடிஈசுரர் - அபிராமியம்மை.

கடைமுடியீசாகடவுளேகீழூ
ருடையாய்நல்லன்பர்க்குரியாய்-விடையேறி
வந்தேயபிராமிமாதுடனேநின்சேவை
தந்தேயாட்கொள்வாய்தடுத்து. (யஉ.)

## திருப்புள்ளிருக்கும்வேளூர்.

வைத்தியநாதஈசுரர் - தையல்நாயகியம்மை.

புள்ளிருக்கும்வேளூர்ப்பொருந்தும்வயித்தீசாவென்
னுள்ளிருக்கும்பாசமெலாமோட்டியே-தெள்ளிருக்கும்
ஞானமதியூட்டுதையல்நாயகியோர்பாகமொடு
மோனநெறிகாட்டாய்முயன்று. (யங)

## திருநின்றியூர்.

மாலட்சுமிஈசுரர் - உலகநாயகியம்மை.

சாலத்திருவடியர் தங்குமெழில்நின்றியூர்
மாலட்சுமீசாமகாதேவா-சூலத்தாய்
தாயுலகியார் தம்மோடுவந்தருள்செய்
வாயுலகவாஞ்சைமறாத்து. (௰௪)

## திருப்புன்கூர்.

சிவலோகஈசுரர் - சொக்கநாயகியம்மை.

திருப்புன்கூர்வாழுஞ்சிவலோகஈசா
கருப்புன்மைவாராமற்காக்க-விருப்பமுடன்
வந்தருள்வாய்நின்பாகம்வாழ்சொக்கநாயகியோ
டந்தமுதலில்லாயமர்ந்து. (௰௫)

## திருநீடூர்.

அருட்சோமநாதஈசுரர் - வேயுறுதோளியம்மை.

வேயுறுதோளிமகிழ்வித்தகாநீடூரா
பாய்விடைமேல்மேவும்பரமனே-தூய
அருட்சோமநாதீசா அப்பனேயுய்யும்
பொருட்டுநீவந்தளிப்பாய்போந்து. (௰௬)

## திரு அன்னியூர்.

ஆப்தசகாஈசுரர் - பெரியநாயகியம்மை.

சோதியே தூண்டாச்சுடரேசீர் அன்னியூர்
ஆதியேயாப்தசகாயப்பரனே-காதலாய்
வாழ்பெரியநாயகிபால்மன்னுமணியேயருள்செய்
ஊழ்வலியைநீக்கியுவந்து. (௰௭)

## திருக்கோறுக்கை.

வீரட்டஈசுரர் - ஞானம்பிகையம்மை.

வானுடர்சூழ்கொறுக்கைவாழும்வீரட்டஈசா
ஞானம்பிகையுமையாள்நாயகா-தேனருந்
பொற்றாளைநேசித்துப்பூசிக்காயேனை
மற்றுண்டருள்வாய்மகிழ்ந்து. (௰௮)

## திருக்குரக்குக்கா.

கொந்தளஈசுரர் - கொந்தளநாயகியம்மை.

கொந்தளநாயகியார்கோனேகுரக்குக்காக்
கொந்தளஈசாகுருபரா-சந்ததமு
நின்பாததாமரையைநெஞ்சாரத்தோத்திரித்தாற்
புன்பாவநாடாதுபோம். (௰௯)

## திருவாழ்கோளிபுத்தூர்.

மாணிக்கவண்ணஈசுரர் - வண்டார்பூங்குழலம்மை.

வாழ்கொளிபுத்தூரில்மாணிக்கவண்ணனே
தாழ்விலாநின்பதத்தைச்சார்ந்துய்ய-வூழ்வினையைப்
போக்கிவண்டார்பூங்குழலாள்பூவையொடுவந்தெயமை
யாக்கியடிமையருள். (உ0)

## திருஓமாம்புலியூர்.

துயரந்தீர்த்தஈசுரர் - பூங்கொடியாம்பிகையம்மை.

பூங்கொடியாம்பிகைப்பொற்பூவையோடெந்நாளும்
நீங்காதோமாம்புலியூர்நின்றவா-தாங்காச்
சுமையொழிந்துநிற்கத்துயரந்தீர்த்தீசா
யெமையாள்வதென்றோவியம்பு. (உக)

## திருக்கடம்பூர் எ-து மேலைக்கம்பூர்.

அமிர்தகடநாயகஈசுரர் - சோதிமின்னும்பாளம்மை.

நாதாவமிர்தகடநாயகாமுக்கணுடை
நீதாகடம்பூர்வாழ்நின்மலா-மாதாவென்
சோதிமின்னும்பாளோடென்தொல்வினையெலாமகல
ஆதியேவந்திங்கருள். (உஉ)

## திருப்பந்தணநல்லூர்.

பசுபதிஈசுரர் - காம்பன்னதோளியம்மை.

பந்தணநல்லூர்ப்பசுபதியீசாவென்
சிந்தைகுடிகொண்டருளுந்தேசிகா-சந்ததமுங்
கண்காணவேண்டினேன்காம்பன்னதோளியெனும்
பெண்பாகாயானுய்யப்பேசு. (உங)

## திருக்கஞ்சனூர்.

அக்கினிஈசுரர் - கற்பகநாயகியம்மை.

கற்பகநாயகியாள்கட்டழகாகஞ்சனூர்ச்
சிற்பராதற்பராதேசிகா-விற்பனர்பாற்
புக்கநின்சீரடியைப்போற்றினேன்முக்கணுடை
அக்கினியீசாஅருள். (உச)

## திருப்பனந்தாள்.

சடையப்பஈசுரர் - பெரியநாயகியம்மை.

வையம்புகழ்பனந்தாள்வாழ்சடையப்பேசாவென்
னையனேமெய்யனேயாரமுதே-வெய்ய
பிறவிநோய்நீக்கப்பெரியநாயகிக்கோ
ரிறைவனேவந்தாளினி. (உரு)

### திருச்சேய்ஞலூர்.

கிரீசுரர் - ஜெகதேவியம்பாளம்மை.

ஜெகதேவியம்பாள்சேர்தேவாகிரீச
மகதேவாசேய்ஞலூர்வள்ளால்-சகமீது
வந்தற்பவாழ்வால்மயங்காதுநின்னடியைச்
சிந்திக்கநீயருளிச்செய். (உசு)

### திருக்கோட்டையூர்.

கோடீசுரர் - பந்தாடும்நாயகியம்மை.

பந்தாடும்நாயகியாள்பங்கனேகொட்டையூ
ரெந்தாய்கோடீசயிறைவனே-வந்தேயிப்
போதாவதுன்றனிருபூங்கமலத்தாளின்கீழ்
நாதாவிருக்கவில். (உஎ)

### திருவைகாவூர் எ-து வில்வவனம்.

வில்வவனஈசுரர் - பூவைவல்லியம்மை.

வில்வவனத்தீசாவிமலனேபூவைவல்லி
மெல்லியொடுவைகாவூர்மேவுவோய்-தொல்வினையை
நீக்கிநின்பாதமலர்நேசிக்கவெந்நாளு
மாக்கியடிமையருள். (உஅ)

### திருவையாறு

செம்பொற்சோதிஈசுரர் - அறம்வளர்த்தநாயகியம்மை.

அறம்வளர்த்தநாயகியார்க்கன்பனேயையாற்
றிறைவாசெம்பொற்சோதியெந்தாய்-மறவாதுன்
பாதத்தைநம்பிப்பணிந்தேனையானந்த
போதத்திருத்தாய்புரந்து. (உகூ)

### திருநெய்த்தானம்

நெய்யாடியப்பஈசுரர் - வாலாம்பிகையம்மை.

நெய்யாடியப்பேசாநேயவாலாம்பிகைசேர்
ஐயாநெய்த்தானத்தமர்வோனே-மையார்
விழிமாதர்வேட்கையினிவேண்டாதுன்பாத
மொழியாதுபோற்றவுரை. (௩0)

### திருமழபாடி.

வச்சிரதம்பேசுரர் - அழகாம்பிகையம்மை.

வச்சிரதம்பேசாமகேசவழகாம்பிகையார்
மெச்சுமழபாடியுறைவித்தகா-நச்சிவினம்
வையமூவாசையினல்வாடாதுநாயேனை
ஐயனேநின்னடிக்கேடாள். (௩க)

## திருக்கானூர்.

செம்மேனியப்பஈசுரர் - சிவலோகநாயகியம்மை.

செம்மேனியப்பாசிவலோகநாயகியென்
னம்மைபாகம்பிரியாவண்ணலே-யெம்மைநின்சீர்ப்
பொற்றாட்குத்தொண்டுபுரியவருள்கானூர்
வற்றாவருட்கடலேவந்து. (கூ௨)

## திருமாலயன் துறை.

சத்தியவாக்கீசுரர் - சவுந்தரியம்பாளம்மை.

சத்தியவாக்கீசசவுந்தரியம்பாளென்னு
முத்தமிதன்பாகத்துறைவோனே-நித்தந்
திருமாலயன்துறைவாழ்தேசிகாநாயே
னுருவாகும்வண்ணநீயோது. (கூகூ)

## திருப்பாற்றுறை.

திருமூலநாதஈசுரர் - மோகாம்பிகையம்மை.

திருப்பாற்றுறைவாழ்திருமூலநாதா
விருப்பாமோகாம்பாள்சேர்மெய்யா-விருப்பாமென்
னுள்ளத்தழுக்ககற்றியோங்கும்பேரானந்த
வெள்ளத்திலாடவிரும்பு. (கூச)

## திருவானைக்கா என்கிற சம்புகேசுரம்.

சம்புகேசுரர் - அகிலாண்டஈஸ்வரியம்மை.

திருவானைக்காவுறையுந்தேவசம்புகேசா
அருவாயுருவாயமர்ந்தாய்-ஒருவா
அழகியகிலாண்டவல்லியம்மைமணாளா
கழல்பெறுவதெந்நாள்கழறு. (கூரு)

## திருவாசி.

நீலகண்டஈசுரர் - விசாலாட்சியம்மை.

நீலகண்டவீசாநிமலவிசாலாட்சிமகிழ்
கோலதிருவாசியில்வாழ்கோமானே-ஞாலமிசை
வந்தப்பவாழ்வான்மயங்குவேற்கந்திநிறத்
தெந்தையேகண்பாரினி. (கூசு)

---

## சோழவளநாட்டில் தென்கரையிலுள்ள சிவஸ்தலங்கள்.

## திருமுற்கீச்சுரம் என்கிற உறையூர்.

பஞ்சவர்ணஈசுரர் - காந்திமதியம்மை.

பஞ்சவர்ணஈசாபரமனேகாந்திமதி
வஞ்சிபாகம்பிரியாமாமணியே-தஞ்சமென்றுன்
பொற்றாள்பணிந்துபுகழ்ந்தேனுறையூர்வாழ்
கத்தாவடியேனைக்கா. (கூஎ)

## திருச்சிராப்பள்ளி.

தாயுமானஈசுரர் - மட்டுவார்குழலியம்மை.

தாயுமானேசாசதானந்தனேகரத்திற்
பாயுமானேந்தும்பரமனே-நீயுமெம
தன்னைமட்டுவார்குழலியம்மையோடுள்ளமகிழ்ந்
தென்னைநீவந்தாளினி. (௩அ)

## திருவாலம்பொழில்.

ஆத்மநாதஈசுரர் - ஞானம்பிகையம்மை.

ஆலம்பொழில்வாழும்ஆத்மநாதீசாவீண்
காலங்கழிக்காக்கருதவுனைக்-கோலவிடை
யேறிஞானம்பிகையோடென்கண்களித்துய்யு
மாறிங்கருள்வாயமர்ந்து. (௩௯)

## திருவேதிகுடியில்.

வேதபுரிஈசுரர் - மங்கையர்க்கரசியம்மை.

வேதபுரியீசாவிமலனேவேதிகுடி
நீதமங்கையர்க்கரசிநேயனே-சீதமதி
சூடுஞ்சடையோனே தூயோனேயென்நாளும்
பாடுவேனின்னைப்பணிந்து. (சம)

## திருநல்லூர்.

பெரியாண்டஈசுரர் - திரிபுரசுந்தரியம்மை.

பெரியாண்டஈசாதிரிபுரைபிராட்டிக்
குரியானேநல்லூருகந்தோய்-பிரியாதுன்
னன்பரொடுசேரவருட்கண்பார்நாயேனை
வன்பவநோய்சேராவகை. (சக)

## திருஆவூர் எ-து பசுபதீச்சரம்.

பசுபதிஈசுரர் - மங்களநாயகியம்மை.

மங்களநாயகிப்பேர்மாதுடனேஆவூரில்
தங்கும்பசுபதியேதந்தையே-அங்கமிக
வாடித்தளராமுன்மாறாதுன்சேவடியை
நாடித்தொழுங்கருணைநல்கு. (சஉ)

## திருப்பட்டீச்சரம்.

பட்டீசுரர் - பால்வளைநாயகியம்மை.

பால்வளைநாயகியார்பங்காபட்டீசாநின்
கால்பணிந்துநாயேன்கதிபெறவே-வேல்விழியார்
மையல்கொண்டிவ்வையகத்தில்வாடியலையாதென்
னையனேமுன்வந்தருள். (சந)

## திருநாகீச்சரம்.

சண்பகாரண்யஈசுரர் - குன்றமுலைநாயகியம்மை.

குன்றமுலைநாயகிதன்கோனேநாகீச்சரத்தில்
நின்றசண்பகாரண்யநின்மலா-என்று
சிரமேற்கரங்கூப்பிச்சிந்தித்தால்நெஞ்சே
வரமேயளிக்குநீவா. (சச)

## திருவாவடுதுறை.

மாசிலாமணித்தியாகர் - ஒப்பிலாமுலையம்மை.

திருவாவடுதுறைவாழ்தேசிகாநாயே
னுருவாகும்வண்ணநீயோதி-மருவார்
குழலொப்பிலாமுலையாள்கூடவேவந்துன்
கழல்தந்தேயாளக்கடன். (சரு)

## திருக்குற்றாலம்.

வேதீசுரர் - முகிழாம்பிகையம்மை.

குற்றாலமார்ந்தகுருபராவேதீசா
நித்தாமுகிழாம்பாநேயனே-அத்தாவுன்
பத்தரைபோல்நாயேன்பணிபுரிந்துநின்னடியை
நத்தியிருப்பதெந்தநாள். (சசு)

## திருவழுந்தூர்.

வேதபுரிஈசுரர் - சவுந்தராம்பிகையம்மை.

வேதபுரியீசாவிமலாதிருவழுந்தூர்
நீதசச்சிதாநந்தநின்மலா-மாது
சவுந்தரவம்பிகையார்தம்மோடுநாயேன்
பவந்தீரவந்துகண்பார். (சஎ)

## திருத்தலைச்சேங்காடு.

செங்குருநாதஈசுரர் - சௌந்தரியம்மை.

திருத்தலைச்செங்காட்டிலுறைசெங்குருநாதீச
வொருத்தனேநாயேனிங்குய்யப்-பருத்தவிடை
மீதுசவுந்தரியாம்மெல்லியொடுவந்தேயெப்
போதுமெனதுள்ளம்பொருந்து. (சஅ)

## திருக்கடவூர்.

அமிர்தகடஈசுரர் - அபிராமியம்மை.

அப்பாகடவூரமிர்தகடஈசாநின்
ஒப்பிலாப்பாதம்பெற்றுய்யவே-யெப்போது
வந்தருள்வாய்நின்பாகமாதாபிராமியொடு
பந்தமறவேதான்பரிந்து. (சகூ)

## திருஅம்பர்மாகாளம்.

காளகண்டஈசுரர் - பக்ஷநாயகியம்மை.

காளகண்டஈசாகடவுளேஅம்பர்மா
காளத்தமர்ந்தாய்கடையேனே-ஆளவெண்ணித்
தாய்பட்சநாயகியாள்தன்னேடுவந்தருள்செய்
வாய்பட்சநாயேன்மேல்வைத்து. (ருய)

## திருமீயச்சூரிளங்கோயில்.

சகலபுவனேசுரர் - சவுந்தரநாயகியம்மை.

சகலபுவனேசாசவுந்தரியென்னம்மை
யகலாதுபாகத்தமர்ந்தோய் புகலுமீ
யச்சூரிளங்கோயிளத்தாநின்பொற்றுளை
யிச்சிக்கவந்தாளினி. (ருக)

## திருவன்னியூர்.

அக்கினிஈசுரர் - பார்வதியம்மை.

அக்கினியீசாவமலனேவன்னியூர்
முக்கணுபார்வதியார்மோகனே-மைக்காவிக்
கணணியர்க்காளாகாதுன்கஞ்சமலர்த்தாளின்கீழ்
நண்ணும்படிக்காள்நயந்து! (ருஉ)

## திருச்செங்காட்டங்குடி எ-து கணபதீச்சரம்.

கணபதிஈசுரர் - திருக்குழன்மாதம்மை.

ஊனெடுத்தஇந்நாளுணரா துன்பொற்றுளை
மாநிலப்பொய்வாழ்வால்மயங்கினேன்- தானமிகு
செங்காடுறையுந்திருக்குழன்மாதுபங்கா
மங்காவரதாமகிழ்ந்து (ருங)

## திருச்சாத்தமங்கை.

மாகதிஈசுரர் - தயிலாம்பிகையம்மை.

மாகதியீசாமகேசனேசாத்தமங்கைத்
தானமுறையுஞ்சதாசிவா-ஞானமதி
தந்துநாயேன்முன்தயிலாம்பிகையோடு
வந்தேயருள்வாய்வரம். (ருச)

## திருவாரூர்.

வன்மீகத்தியாகேசர் - அல்லியங்கோதையம்மை.

வந்தமரர்போற்றிசெயும்வன்மீகத்தியாகேசா
சந்ததமும்ஆரூர்வாழ்தற்பரா-பந்தமற
அன்னையல்லியங்கோதையம்மையொடுநீங்காதுன்
பொன்னடியைதந்தருள்செய்போந்து. (ருரு)

### திருத்தலையாலங்காடு.

ஆடவல்லாஈசுரர் - திருமடந்தையம்மை.

ஆடவல்லாஈசாமமலா திருமடந்தை
யோடுதலையாலங்காடுற்றவா-தேடரிய
வேதப்பொருளேவிளங்கவடியேனும்
பாதப்புணைதாபரிந்து. (ருசு)

### திருச்சேறை.

சன்னிதியப்பாஈசுரர் - ஞானவல்லியம்மை.

சன்னிதியப்பேசாசதானந்தாஞானவல்லி
கன்னியொடுசேறையில்வாழ்கத்தனே-நின்னிருதாள்
ஆசையொடுநேசித்தகங்களித்துநாயடியேன்
பூசைபுரிவேனுபுகழ்ந்து. (ருஎ)

### திருப்பூவனூர்.

புட்பவனாஈசுரர் - கற்பகவல்லியம்மை.

கற்பகவல்லிகணவனேபூவனூர்
சிற்பரனேபுட்பவனத்தெய்வமே-சொற்பனத்தும்
வேண்டேன்மூவாசைவித்தகாநின்னடிக்கே
யாண்டேயடியேற்கருள். (ருஅ)

### திருப்பாதாளீச்சரம்.

சற்பபுராஈசுரர் - அமிர்தநாயகியம்மை.

சிற்பரனுய்வந்துதிருப்பாதாளீச்சரம்வாழ்
சற்பபுரயீசாசதானந்தா-உற்பவநோய்
நண்ணுதுபெண்ணமிர்தநாயகியாரோடுவந்தென்
அண்ணுயெனையாண்டருள். (ருகூ)

### திருக்கோட்டூர்.

கொழுந்தீசுரர் - மதுரவசனியம்மை.

மின்னுஞ்சடாமகுடவித்தகாகோட்டூரில்
மன்னுங்கொழுந்தீசாமாதேவா-துன்னுலக
மாதாவிமலைமதுரவசனியொடு
நாதாநீவந்தாள்நயந்து. (சூ0)

### திருப்பேரெயில்.

ஜெகதீசுரர் - பெண்ணமிர்தநாயகியம்மை.

பெண்ணமிர்தவல்லியொடும்பேரெயிலிலேயமர்ந்து
நண்ணுஞ்ஜெகதீசநாதனே-விண்ணுமண்ணுங்
காத்தளிக்குமுக்கட்கடவுளேநின்னடியைத்
தோத்திரிக்கவந்தாள்துணை. (சூக)

### திருக்காருயல்.

கண்ணுயிரநாதாஈசுரர் - கைலாசநாயகியம்மை.

கண்ணுயிரநாதாகைலாசநாயகியாம்
பெண்ணுரிடம்பிரியாப்பெம்மானே-யெண்ணுதுன்
பொன்னடியைவீண்காலம்போக்கினேன்காருயல்
முன்னவவென்செய்வேன்முயன்று. (சுஉ)

### திருவலிவலம்.

மனத்துணைநாதாஈசுரர் - வாளையங்கண்ணியம்மை.

மனத்துணைநாதீசாவலிவலம்வாழ்தேவே
அனைத்துயிருங்காத்தளிக்குமப்பா-நினைத்துன்னை
வந்தித்திந்நாயேனும்வாளையங்கண்ணிபதஞ்
சிந்தித்திருக்கவருள்செய். (சுங)

### திருக்குண்டையூர்.

கோளியப்பாஈசுரர் - வண்டமர்பூங்குழலம்மை.

குண்டையூருற்றமர்ந்தகோளிலியெம்பெருமான்
வண்டமர்பூங்குழல்சேர்வானவனே-பண்டைவினை
போக்குவான்கண்பார்புரந்தரற்குவன்பழியை
நீக்கியமாதேவனேநீ. (சுச)

---

## பாண்டிநாட்டிலுள்ள சிவஸ்தலங்கள்.

### திருஆலவாய் எ-து மதுரை.

சொக்கநாதாஈசுரர் - மீனாட்சியம்மை.

ஆதாரமில்லார்க்கருள்புரியுஞ்சொக்கலிங்க
நாதாமீனுக்ஷியார்நாயகா-மாதா
வயிற்றிற்புகாதவகையருளிப்பாசக்
கயிற்றிற்படாதவண்ணங்கா. (சுரு)

### திருஆப்பனூர்.

ஆப்பனூரப்பாஈசுரர் - அம்பிகையம்மை.

அம்பிகையம்மைக்கதிபனே ஆப்பனூர்
எம்பிரானேமுக்கணெந்தையே-நம்பிநின்றாள்
போற்றிப்பணிந்தேன்புராந்தகாமூவாசை
மாற்றியளிப்பாய்வரம். (சுசு)

### இராமீச்சரம்.

இராமலிங்கஈசுரர் - பர்வதவர்த்தனியம்மை.

மாதவனுமுன்னாள்வணங்கிக்கரங்கூப்பும்
நீதவிராமலிங்கநின்மலா-மாதா
மலைவளர்காதலிசேர்வாமபாகத்தாய்
நிலைபெறவென்னெஞ்சிலுறைநீ. (சுஎ)

## திருஆடானை.

ஆதிரத்னஈசுரர் - அம்பாயிரவல்லியம்மை.

ஆதிரத்னஈசா அம்பாயிரவல்லி
மாதுடனுடானையில்வாழ்மாதேவா-நீதியுட
னிந்நாள்வரையுன்னிருதாளேயல்லாது
மன்னுவேறேதாதென்வாய். (சுஅ)

## திருப்பூவணம்.

பூவணநாதஈசுரர் - மின்னும்பிகையம்மை.

பூவணநாதீசாபுராந்தகாபூவணம்வாழ்
தேவனேநின்பாதஞ்சேவிக்க-மாவிடைமேல்
மின்னும்பிகையம்மைமெல்லியொடுவந்தேயிங்
கென்னாளளிப்பதெனே. (சுகூ)

## திருநெல்வேலி.

வேணுவனஈசுரர் - காந்திமதியம்மை.

வேணுவனத்தீசாவிமலாநெல்வேலியில்வாழ்
தாணுவேமுக்கட்டயாளுவே-வாணுதலாள்
காந்திமதியம்மையுடன்கண்குளிரவந்துவர
மீந்தருள்வதென்றோவியம்பு. (எ0)

---

# சேரநாட்டிலுள்ள சிவஸ்தலம்.

## திருவஞ்சைக்களம்.

அஞ்சைக்களத்தீசுரர் - உமையம்மை.

அஞ்சைக்களத்திலுறைஅஞ்சைக்களத்தீசா
வஞ்சியுமையம்மையொடுவாழ்வோனே-கஞ்சமலர்ப்
பாதமபெற்றுய்யும்படிக்கருள்வதெக்காலம்
போதங்கூரன்பர்பாற்புகுகு. (எக)

---

# கொங்குநாட்டிலுள்ள சிவஸ்தலங்கள்.

## திருநணா எ-து பவானி.

சங்கமுகநாதஈசுரர் - வேதமங்கையம்மை.

சங்கமுகநாதாசதானந்தனேவேத
மங்கையம்மையார்க்குமணாளனே-கங்கைதங்குஞ்
செஞ்சடையாயென்றும்திருநணாவில்வாழும்
பிஞ்ஞகனைநெஞ்சேநீபேண். (எஉ)

### திருச்செங்குன்றூர்.

அர்த்தநாதஈசுரர் - அர்த்தநாதஈஸ்வரியம்மை.

அர்த்தநாதீசாவமலனேசெங்குன்றூர்க்
கர்த்தனேயிந்தக்கடையேனை-வர்த்திக்க
யெண்ணிநின்னன்பருடனெந்நாளுமாறுது
நண்ணவொருசூழ்ச்சிநவில். (எங)

### திருப்பாண்டிக்கொடுமுடி.

கொடுமுடிநாதஈசுரர் - பன்மொழியம்மை.

கொடுமுடிநாதீசாகுருபராபாண்டிக்
கொடுமுடியில்நின்றவெங்கோனே-கடுகவிடை
யேறியேபண்மொழியளென்தாயோடேயுய்யு
மாறிங்கருள்வாயமர்ந்து. (எச)

### திருக்கருவூர்.

பசுபதிஈசுரர் - கிருபாநாயகியம்மை.

ஈசாபசுபதியேயெங்கள்க்ருபாநாயகியார்
நேசாகருவூர்வாழ்நின்மலா-பேசாத
மோனநிலைதந்துன்முழுமலர்த்தாட்கன்புபுரி
ஞானநிலையைநவில். (எரு)

---

## நடுநாட்டிலுள்ள சிவஸ்தலங்கள்.

### திருஎருக்கத்தம்புலியூர் எ-து நாகேந்திரபட்டணம்.

நீலகண்டஈசுரர் - நீலமலர்க்கண்ணியம்மை.

நீலமலர்க்கண்ணியுமைநேயாநாகேந்த்ரபுரி
நீலகண்டஈசநிமலனே-ஆலமுண்ட
கண்டத்தாயிந்தக்கடையேனைநின்பாதத்
தொண்டுபுரியென்றுநீசொல். (எசு)

### திருமுதுகுன்றம்.

பழமலைநாதஈசுரர் - பெரியநாயகியம்மை.

எங்கும்பழமலைநாதீசாவென்றேபுகழத்
தங்கும்முதுகிரியிற்றற்பரா-மங்கையுமை
யார்பெரியநாயகியெம்மன்னையொடுங்கும்பிட்டுன்
சீர்பாதங்காணவருள்செய். (எஎ)

### திருநெல்வெண்ணெய்.

வெண்ணெயப்பஈசுரர் - நீலமலர்க்கண்ணியம்மை.

விலக்கருநெல்வெண்ணெயில்வாழ்வெண்ணெயப்பாநீல
மலர்க்கண்ணியம்மைமணாளா-கலக்கஞ்செய்
வஞ்சியர்க்காளாகிமயங்கித்திரிவேனை
அஞ்சலெனவந்துதடுத்தாள். (எஅ)

### திருமுண்டீச்சுரம்.

முண்டீசுரர் - கானார்குழலியம்மை.

கானார்குழலிகணவனேமுண்டீசா
ஞானாகராஎமையாள்நாதனே-வானாதி
பூதலமெலாம்புகழும்பூந்திருமுண்டீச்சரத்தாய்
காதலுடன்வந்தேனைக்கா. (எகூ)

### திருஅண்ணாமலை.

அருணாசலஈசுரர் - உண்ணாமுலையம்மை.

அண்ணாமலையாயயன்மாலறிவரியோய்
உண்ணாமுலைபாகவுத்தமா-மண்ணாதி
யாசையற்றுநின்பதத்தையர்ச்சிக்கவென்னுளத்தில்
வாசமுற்றுநிற்பாய்மகிழ்ந்து. (அய)

---

## தொண்டைநாட்டிலுள்ள சிவஸ்தலங்கள்.

### திருக்கச்சியேகம்பம்.

ஏகாம்பரநாதஈசுரர் - காமாக்ஷியம்மை.

கச்சிவாழ் ஏகம்பா கண்ணுதலேகாமாக்ஷி
யிச்சையுடனர்ச்சித்தஈசனே-மச்சவிழி
மாதரால்வாடிமயங்காதுநாயேற்குன்
சீதமலர்த்தாளருளிச்செய். (அக)

### திருவோத்தூர்.

வேதநாதஈசுரர் - இளமுலையம்மை.

வேதநாதீசாவிமலா திருவோத்தூர்
நீத இளமுலையாள்நேயாநின்-பாதமலால்
நாடேனினியொன்றைநாதனேமேலான
வீடேயருள்வாய்வியந்து. (அஉ)

### திருமாற்பேறு.

மால்வணங்கீசுரர் - கருணைநாயகியம்மை.

மால்வணங்குமீசாமகாதேவாமேலாமுன்
கால்பணிந்தேன்சென்னிமிசைக்கைகூப்பிச்-சேல்விழியென்
தாய்கருணைநாயகியாள்தன்னோடுவந்தருள்செய்
வாயென்றேயென்னைமகிழ்ந்து. (அங)

### திருவூரல் எ-து தக்கோலம்.

உமாபதிஈசுரர் - உமையம்பாளம்மை.

சீரோங்குந்தக்கோலத்தீசாஉமாபதியே
பாரோங்கவீடளிக்கும்பண்ணவா-ஏரோங்க
வாழுமையம்பாளென்னும்மாதுடனேமேலான
வாழ்வளிப்பதெந்நாளோவாய்ந்து (அச)

## திருஆலங்காடு.

அமிர்தத்தாண்டவஈசுரர் - வண்டார்குழலியம்மை.

ஞாலமூவாசைதனைநாடியேமேலான
சீலநெறியெண்ணித்தெளியேனை—ஆலங்காட்
டீசாவண்டார்குழலியென றும்பிரியாத
நேசாவருளநினை. (அரு)

## திருப்பாசூர்.

பாசூர்நாதஈசுரர் - பசுபதிநாயகியம்மை.

பாசூர்நாதீசாபரமனேமுக்கணுடை
ஈசுரனேயன்பர்க்கெளியோனே-பாசமுடன்
தாயார்பசுபதியார்தம்மோடுனையென்றும்
ஓயாதுகாண்பேனுவந்து. (அசு)

## திருவெண்பாக்கம் எ-து திருவிளம்பூர்.

வென்பாக்கீசுரர் - கனிவாய்மொழியம்மை.

விதிமாலமரர்தொழும்வித்தகவெண்பாக்கப்
பதியாய்கனிமொழியாள்பங்கா-மதியிலகு
செஞ்சடையாயிங்குச்சிறியேனைவாவெனநீ
அஞ்சலென்பதெந்நாளமர்ந்து. (அஎ)

## திருக்காளத்தி.

காளத்திநாதஈசுரர் - ஞானப்பூங்கோதையம்மை.

ஞானப்பூங்கோதையொடுநண்ணுங்காளத்தீசா
மோனப்பொருளேமுதல்வனே-வானத்தோர்
வந்துபணியுங்குருவேவாழ்த்தவரந்தருவாய்
சந்ததமுநின்பதத்தைச்சார்ந்து. (அஅ)

## திருஒற்றியூர்.

மாணிக்கத்தியாகர் - வடிவுடையம்மை.

ஒற்றியூரிசாவுமையாள்வடிவுடையாள்
நித்தமகிழுந்தியாகாநின்மலா-சித்தம்வைத்தென்
மீதிரங்கியெந்நாள்விழைந்துவைப்பாய்மேலாமுன்
சீதமலர்த்தாளென்சிரம். (அகூ)

## திருவலிதாயம் எ-து பாடி.

வலிதாயநாதஈசுரர் - தாயம்மை.

நாடியேமாதரையிஞ்ஞாலத்திலேபொருளைத்
தேடிநீநெஞ்சேதியங்காதே - பாடியுறை
நாதாவலிதாயநாயகாதாயம்மை
நீதாவென்றேத்திநினை. (கூ0)

## திருவடமுல்லைவாயல்.

பாசுபதஈசுரர் - கொடியிடையம்மை.

பாசுபதாமுக்கட்பரமாகொடியிடையாள்
நேசனேமுல்லைவாழ்நின்மலனே-தேசிகனாய்
வந்துநால்வர்க்களித்தவண்மைபோல்நாயேன்றன்
பந்தநோய்வீழ்த்திடக்கண்பார். (சுக)

## திருவேற்காடு.

வேற்காட்டீசுரர் - வேற்கண்ணியம்மை.

மறைமுனிக்குமுன்னாள்மணக்கோலந்தந்த
இறைவாவேற்காட்டீசாஎந்தாய்-குறைவில்லா
மால்காட்டிவேற்கண்ணிவாமபாகத்தோடுன்
கால்காட்டிநாயேனைக்கா. (சுஉ)

## திருமயிலாப்பூர்.

கபாலீசுரர் - கற்பகவல்லியம்மை.

எங்கும்நிறைந்தருளும்ஈசாதிருமயிலை
தங்குங்கபாலீசதற்பரா-மங்கையுமை
கற்பகவல்லிக்குவந்தகட்டழகாநாயேற்குச்
சிற்பரஞானங்கருணைசெய். (சுங)

## திருவான்மியூர்.

மருந்தீசர் - சொக்கநாயகியம்மை.

மிக்கதவத்தோர்புகழும்வித்தகனேவான்மியூர்
தக்கமருந்தீசதயாநிதியே-இக்குமொழி
மாதுசொக்கநாயகிதன்வாமபாகத்தோனே
தீதகற்றிவந்தஞ்சல்செய். (சுச)

## திருக்கச்சூராலக்கோயில்.

விருந்திட்டஈசுரர் - அஞ்சனாட்சிகன்னியுமையார்.

நஞ்சமுதாக்கொண்டகச்சூர்நாதனேகன்னியுமை
அஞ்சனாட்சிக்கிறைவாவண்ணலே-தஞ்சமென்றுன்
பாதாரவிந்தத்தைப்பற்றினேன்கண்பார்ப்பாய்
மாதாவயிற்றடையாமல். (சுரு)

## திருஇடைச்சுரம்.

இடைச்சுரநாதஈசுரர் - இமயமடக்கொடியம்மை.

இடைச்சுரநாதீசா இறைவா இமய
மடக்கொடியாளோடென்முன்வந்து-திடப்படவே
முத்திதருமெய்ஞ்ஞானமோனநிலையருள்வாய்
பத்திநெறியைப்பணித்து. (சுசா)

## திருக்கழுக்குன்றம்.

வேதகிரீசுரர் - பெண்ணினல்லாளம்மை.

ஆதியந்தமில்லாவகண்டமேவேதகிரி
நீதனேபெண்ணினல்லாள்நேயனே-போதன்மால்
தேடியினங்காணாதேசிகனேவையகத்தில்
வாடினேன்வாவென்பாய்வந்து. (கூஎ)

## திருஅச்சிறுபாக்கம்.

ஆட்சீசுரர் - சுந்தரமின்னம்மை.

எச்சமயத்தோரும்இறைஞ்சிக்கரங்கூப்பும்
அச்சிறுபாக்கத்துறையும்ஆட்சீசா-இச்சைமிகும்
சுந்தரமின்னம்மையொடுதோன்றியழியாப்பதவி
தந்துய்யவந்தருள்நீசார்ந்து. (கூஅ)

---

# நடுநாட்டிலுள்ள சிவஸ்தலங்கள்.

## திருப்பருப்பதம்.

பருப்பதஈசுரர் - பருப்பதமங்கையம்மை.

பருப்பதமங்கையுமைபங்காபருப்பதத்தில்
பருப்பதஈசாபரமனே-விருப்பமுடன்
வந்தடுத்தாணடுன்மலர்ப்பாதமேயெனது
சிந்தைதனில்நிலைக்கச்செய். (கூகூ)

## கயிலைமலை.

பரமசிவம் - பார்வதி.

உலகமெலாம்போற்றும்உயர்கயிலையென்னுந்
தலமீதுறைசற்குருவே-மலைமகளோ
டெந்நாளும்வந்தருளுமெந்தாய்நின்பாதமெயக்
கெந்நாள்கிடைக்குமினி. (ரு)

## வாழி.

தண்ணார்கயிலைமலைத்தற்பரனும்வாழியுமை
பெண்ணாளும்வாழிமிகப்பேர்கொண்ட-விண்ணோர்கள்
நந்தீசர்வாழிமுக்கணாதனுறையுமபதிகள்
சந்ததமும்வாழிசகத்து. (ருக)

சிவஸ்தலமாலை முற்றிற்று.

உ

கணபதி துணை.

# தணிகை தயாநிதிமாலை.

நீரணிமலர்கொண்டருச்சனைபுரியே னின்றிருத்தாள்பணிந்தறியேன்
சீரணிதமிழாலேத்தவுமறியேன் றீவினைதொலைத்தருள்புரியாய்
பூரணியுலககாரணியிமையப் பொருப்பிறையளித்தமுக்கண்ணி
யாரணிவிமலையருள்செருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௧)

நீதியுமறியேனெறிகளுமறியே னின்றிருப்புகழனுதினமு
மோதியுமறியேனாயினும்வரங்க ளுகந்தெனக்கருள்புரிந்திடுவாய்
சாதியுங்குரவும்வேங்கைகுங்குமமுஞ் சந்தனங்களுமணங்குலவு
[illegible]ாதியேம்பரமனருடிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௨)

எண்ணிலேனுனதுசடக்கரமதனை யிருந்தவநோன்புநல்விரதம்
பண்ணிலேன்றுதிகள்படித்திலேனதிக பாவியேன்றனக்கருளுவையோ
விண்ணில்வானவர்தஞ்சிறைதனைத்தவிர்த்து வேண்டியவரங்களையளித்த
வண்ணலேதணிகைப்பதிதனிலுறையு மாறுமாமுகதயாநிதியே. (௩)

முன்செய்தீவினையோபின்செய்தீவினையோ மூண்டதுநல்குரவதனுக்
கென்செய்கேனடியேன்றுயர்களைந்துயர்வீ டெனக்கருள்செய்யுநாளுளதோ
மின்செய்நூலிடையாள்வேடர்தஞ்சிறுமி விரும்பிவாழ்தினைப்புனமதனி
லன்புசேர்கணியாய்நின்றிடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௪)

காதரமனைத்துந்தொலைந்துனதடியைக் காட்டியுன்னடியரிற்கூட்டிச்
சீதரன்பிரமனறியொணாவீட்டிற் சேர்த்தியாட்கொள்ளுநாளுளதோ
பூதரமனையசிங்கமாசூரன் பொருகரிமுகனசுரேச
னாதரமனைத்துந்தொலைத்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௫)

மேருவைச்சேருங்காகம்பொன்னிறமாய் விளங்கல்போலுன்னடிக்கமலச்
சாருவைச்சேருமெனையுநின்னடியார் தம்மொடுங்கூட்டியாண்டருள்வாய்
தாருவைச்சேரும்வல்லிபோலிருவர் தனம்படவிளங்குதிண்புயனே
யாருவப்புடன்வானோர்பணிதணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬)

சிவனடியவருக்கிடர்புரிந்தாலுந் தீவினைபலபுரிந்தாலும்
பவநெறிக்குரியபாவமேசெயினும் பஞ்சபாதகங்கள்செய்தாலுந்
தவநிலைகுலையத்தாழ்வுசெய்தாலுஞ் சமித்தெனைப்புரந்தளித்திடுவா
யவனவளதுவாயமர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (எ)

சிறப்பொடுபூசை புரிகிலேனெனினுஞ் சினகரம்வலம்புரியாமன்
மறப்பொடுநிலத்திற்றுட்டரோடிணங்கி வாய்மையைப்புகல்கிலேனெனினும்
பிறப்புடனிறப்பாங்கடலழுந்தாமற் பிரசமாமலர்ப்பதந்தருவா
யறப்பணிபுரிவோர்க்கருடிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அ)

பஞ்சபாதகமேபுரிகினுமுன்னைப் பவந்தொறுந்தீமைசெய்திடினுந்
தஞ்சநீயெனவந்தடைந்திடுங்கொடியேன் றன்பிழைபொறுத்துநல்வரங்கள்
விஞ்சவேயருளியெனைப்புரந்திடிலுன் மேற்பிழைசொல்பவருளரோ
அஞ்சவாகனனுக்கருடிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கூ)

மழையிலாப்பயிர்போல்வாடினேன்கருணை மழைபொழிந்தியான்முனம்புரியும்
பிழையெலாம்பொறுத்துப்பெருவரமளித்துப் பேயனேன்காணவந்தருள்வாய்
தழையெலாங்கீழாய்விண்ணில்வேரோட்டுஞ் சலதிமாமரந்தனைப்பிளந்த
வழகனேதணிகைமலையில்வீற்றிருக்கு மாறுமாமுகதயாநிதியே. (க

மந்தரமனையபாவமேசெயினும் வல்வினைபலபுரிந்திடினும்
பங்கனைப்பிறப்பிலழுந்திவைமன [illegible] து பங்கயப்பாதநான் மறவேன
சுந்தரமுகுந்தன்மருகனேயடியர் துயரெலாந்தவிர்த்தசற்குருவே
யந்தரத்தவர்நின்றருச்சனைபுரியு மாறுமாமுகதயாநிதியே. (கக)

துக்கசாகரத்திலழுந்தியென்னாளுந் தொலைவிலாக்கவலைநோயடைந்து
மிக்கபேரறிவுகுலைந்துநான்புவியில் வீணிலேதிரிவதுமழகோ
தக்கவாழ்வருளியுலகெலாமதிக்குந் தனியரசெனக்கருள்புரிவாய்
அக்குமாலையனீன்றருடிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கஉ)

இந்திரன்பதமுமிமையவர்பதமு மெண்டிசைக்காவலர்பதமுஞ்
சந்திரன்பதமுஞ்சூரியன்பதமுஞ் சக்கரமாயவன்பதமுங்
கந்தமாமலரோன்பதவியுமுனது கடைக்கணுதவியபதமே
யந்தவாறெனக்குமருடிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கங)

வேண்டியவரங்கள்பற்பலவுதவி வேண்டியசெல்வமுமளித்துச்
சேண்டருமுனதுபாதபங்கயத்திற் செலுத்திடுபத்தியுமருளாய்
தூண்டருசெம்பொற்புயங்கள்பன்னிரண்டுந் துதிப்பவர்பகையறுப்பவனே
யாண்டலைக்கொடியைப்பிடித்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கச)

பெரியவர்தமக்குப்பிழைபுரிந்தேனோ பிறர்மனைதனைவிழைந்தேனோ
குருமொழியிகழ்ந்துபழித்துரைத்தேனோ கொடியமாமிடியினான்மெலிவேன்
றிருவருள்புரிந்துதீவினையகற்றிச் செல்வமுங்கல்வியுந்தருவாய்
அரியயன்பணியுமொருதிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கரு)

மட்டிலாப்பாவந்தனைப்புரிந்தாலு மலரடிக்கன்பிலாதுழலுந்
துட்டரோடுறவுசெய்திருந்தாலுந் தூயநின்சந்நிதியடுத்தால்
விட்டிடாதின்னுமிருக்குமோவிதனை விரித்துநீயெனக்குரைத்திடுவாய்
அட்டமாசித்தியருள்செருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கசு)

வாசவன்மலரோன்வேண்டுநல்வரமும் வாழ்வுநீதந்தனைமுன்ன
நீசனேன்வேண்டும்வரமுதவாம னிற்பதுநீதியோவுரையாய்
பேசியேகலியில்வரந்தருந்தெய்வம் பிறரிலையெனவுனையடுத்தேன்
ஆசறுமுனிவர்தவஞ்செயுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கஎ)

வெந்தநீரணியும்வேதியர்மறையுள் விதித்திடும்விதிவழிநடப்ப
தெந்தநாளுனதுதிருவடிக்கன்பா யிருப்பதுமெந்தநாளுரையாய்
இந்துசேகரனுக்கோமெனும்பொருளை யிருஞ்செவியிடைப்புகல்குரவா
வந்தமாதியுநீங்கிடுந்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கஅ)

மனந்தனிலுனதுதிருவுருநினைக்க வாயினாலுன்புகழ்வழுத்தக்
கனந்தருதலையாலுன்கழலிறைஞ்சக் கசடனேற்கென்றருள்புரிவாய்
தனந்தருமளகைக்கதிபதிதோழன் றந்தருண்மயூரவாகனனே
யனந்தனும்பணியுமொருதிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (ககூ)

பாயுமாமதஞ்சேர்மதகரிபோலப் பற்பலதீங்குசெய்திடினு
நீயுமோரறிவாமங்குசமதனா னிறுத்தியாட்கொள்ளுநாளுளதோ
தாயுமாயுயிர்க்குத்தந்தையாயுலகந் தனைப்புரந்தருள்குருபரனே
யாயுமாமறைகடேடருந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (உ௦)

காலமேயெழுந்துன்றிருவடிநினைந்து கரமலர்பறித்துநின்பூசை
சாலவேபுரியாதுழலுநாயடியேன் றனக்கருள்புரிவதென்றுரையாய்
நீலமாமயின்மேலேறியோர்நொடியி னிலவுலகெலாம்வலம்வருவாய்
ஆலமாமிடற்றோனருள்செருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (உக)

மாயிரும்புவியின்மனிதராய்ப்பிறந்து வண்டரைமதனெனப்புகழ்ந்து
போயிரந்துண்ணும்புலவர்நின்கமலப் பொன்னடிகாண்பதற்கெளிதோ
தாயிரங்காதபிள்ளைபோலடியேன் றவிப்பதுநீதியோவுரையாய்
ஆயிரங்கதிரோன்பணிதிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (உ

சாத்திரமறிந்துன்றிருவடிக்கமலந் தன்னையுமருச்சனைபுரியேன்
பாத்திரமறிந்துபிச்சையிட்டறியேன் பாவியேனுய்யுநாளுளதோ
காத்திரம்படைத்தசிங்கமாசூரன் கவிழ்ந்திடவயில்விடுத்தவனே
யாத்திரண்மேய்த்தோன்மருகனேதணிகை யாறுமாமுகதயாநிதியே. (௨௩)

காகமுநரியுந்தமதெனுமுடலைக் காதலித்துலகெலாமலைந்து
சோகமுந்துயரும்படைத்தநாயடியேன் றுயர்கெடவருளுநாளுளதோ
மாகமுஞ்சுரரும்வாழ்ந்திடச்சூரன் மடிந்திடவேலெறிந்தவனே
யாகமம்புகலுமுயர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௨௪)

நிலையிலாப்பொன்னுநிலையிலாமண்ணு நிலையிலாப்பெண்ணையுநினைந்து
கலையிலாவுணர்வோடெங்கணுமயங்குங் கசடனேனுய்யுநாளுளதோ
தலையிலாக்கவந்தமெண்ணிலநடிப்பத் தகுவர்தஞ்சென்னியைத்தடிந்தோய்
அலையுலாஞ்சுனைசேர்தணிகைமால்வரைவா ழாறுமாமுகதயாநிதியே. (௨௫)

திக்குவேறிலையுன்றிருவடியல்லாற் றீயனேன்குறையெலாம்புகன்று
மிக்கபேருளைப்புரிந்திடாதிருந்தான் மெய்யருள்பொய்யெனப்படுமோ
விக்கணந்தனிலேவேண்டியவரங்க ளீந்துநல்வாழ்வுதந்தருள்வா
யக்கமீராறுபடைத்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௨௬)

உனதுமாமலையைத்தினம்வலம்புரிந்து முபாசனைசெய்திரந்திடினு
மெனதுதீவினையைத்தடிந்தருள்புரியா திருப்பதுமுனக்கழகியதோ
சனகனேமுதலாமுனிவருங்கமலத் தவிசினோனுதிவிண்ணவரு
மனகனேயெனவாழ்த்தெடுத்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௨௭)

பழியிலாவுடலும்பயமிலாமனமும் பாதகத்துடன்படாச்செயலும்
கழிவிலாவயதுங்குறைவிலாத்தனமுங் கடும்பகைதானிலாவரசு
மொழிவிலாவறமுமிழிவிலாக்கதியு முனதடிநம்பினேற்கருள்வா
யழிவிலாப்பதவியருள்செருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௨௮)

படைக்கலஞ்சுமந்துபகைவரைத்தடிந்து பாரெலாமொருதனியாண்டு
மடைக்கலஞ்சுமந்தமகளிரைப்புணர்ந்து மைந்தரும்வாழ்வுமேசிறந்து
கொடைக்கலமிலாதுகொடுத்திடுநிதியுங் குலவுமுன்கருணையென்றறிந்துன்
அடைக்கலம்புகுந்தேனருள்புரிதணிகை யாறுமாமுகதயாநிதியே (௨௯)

காலையிலெழுந்துமஞ்சனமாடிக் கால்களால்வலஞ்செயவுச்சி
வேலையில்டியார்பசிகெடச்சமைத்து விருந்துசெய்வித்திடவந்தி
மாலையிற்றூபதீபமுமேற்றி மகிழ்ந்திடும்பேறெனக்குதவா
யாலயங்கழனிசூழ்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௦)

குங்குமம்புனுகுசந்தனமகரு குற்குலுகற்புரமருவேர்
பைங்கருங்குவளைதண்புனல்கொடுநின் பதம்மலரருச்சனைபுரியும்
புங்கவரடிக்குற்றேவல்செய்தொழுகும் புண்ணியமெனக்குவந்துறுமோ
வங்குசபாசன்றம்பியாந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௧)

நீதியோவுனக்குநான்வெகுநாளாய் நின்றிருச்சந்நிதியடுத்தேன்
சேதியாவையுமேசெப்பினுங்கேளாச் செவிடர்போலிருப்பதிங்கழகோ
வோதுவாயொருசொலுண்டிலையென்ன வுனக்குநானடிமையுமலவோ
வாதியேநடுவேயந்தமேதணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௨)

கார்த்திகைவிரதந்தனை மறந்தேனே கந்தசஷ்டியிற்பிழைத்தேனே
தோத்திரஞ்செய்யுந்தொழின்மறந்தேனே துணையடிக்கன்பொழிந்தேனே
பாத்திரங்கொண்டுபலிக்குழலாமற் பாவியேன்றுயர்களைந்திடுவா
யாத்தர்கடுணையாய்வளர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௩)

கொடியவருறவேகொண்டிருந்தேனே கொடுவழக்கிடைதவறினனே
குடிமனையவள்கற்பினையழித்தேனே குற்றங்கள்பலபுரிந்தேனே
மிடியுறுதமியேன்றுயரெலாந்தவிர்த்து வேண்டியசெல்வநீயருள்வா
யடியவர்துணையாய்வருந்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௪)

செங்கதிருலவுமுலகெலாமுலவித் திரிந்தொருசாண்வயிற்றினுக்குக்
கங்குலும்பகலுமிரையினைத்தேடுங் கயவனேனுய்யுநாளுளதோ
சங்கரன்மகனேசதுமுகன்குருவே தயித்தியர்தங்குலப்பகையே
யைங்கரன்றுணையேயுயர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௫)

நாரியர்க்கிரங்கிமதனநூல்படித்து நயம்பெறுசன்னைகள்பேசிப்
போரியல்கலவிக்கொருபெரும்புலியாம் புல்லியனுய்யுநாளுளதோ
நீரியல்கமலமலரினேன்சிரத்தி னீண்டவங்குவியினுற்புடைத்தா
யாருயிர்க்குயிராய்வளர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௬)

குமரனுய்விருத்தக்கிழவனுயுடலங் கூனுநரைதிரைகொண்டு
தமரெலாமிகழவுயிரகல்பொழுதுஞ் சரவணபவவெனுருடலங்
கமரிலேயுகும்பாலெனப்படுமவர்க்கோர் கதியுமேயிலையெனப்படுமா
லமரெலாங்கடந்ததணிகைமால்வரைவா ழாறுமாமுகதயாநிதியே. (௩௭)

கருவியோர்முப்பத்தாறினுலியங்குங் காயமோடிருநிலஞ்சுவர்க்க
மருவியேதிரிந்துபிறந்திறந்துழலு மடையனேனுய்யுநாளுளதோ
குருவியோட்டியவேட்டுவக்குலமகளிர் குலவியசாரலிற்செந்தே
னருவிபாய்ந்திழிபுந்தணிகைமால்வரைவா ழாறுமாமுகதயாநிதியே. (௩௮)

மாவிருந்தினர்தம்பசிகெடவுதவும் வண்மைதந்துடல்விடும்பொழுது
பூவிருந்தவனுமாயனுங்காணுப் பொன்னடிநீழறந்தருள்வாய்
கோவினம்பயில்செந்தூர்பரங்குன்று குன்றுதோர்ருடல்சோலைமலை
யாவினன்குடியேரகம்பயிறணிகை யாறுமாமுகதயாநிதியே. (ருகூ)

செறுவியாயகந்தைபலபுரிந்திடினுங் கெண்டைவாள்விழியினர்கலவி
யுறுவியாதியினுலுனைமறந்திடினு முறுபிழைபொருத்தருள்புரிவாய்
மறுவிலாக்கற்பின்வள்ளிதெய்வானை மணந்திடுமெணிவரைமார்பா
வறிவினோறிவாயொளிர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (சo)

தேனிலங்கியசொன்மாதரார்வயிற்றிற் றிங்களீரைந்துமுட்டங்கி
நானிலந்தனிலேயினிப்பிறவாம ஞயினேற்கருள்புரிந்திடுவா
யூனிலங்கியவானவர்களுமறியா யோகியர்மனத்திலேவிளங்கு
மானிலைந்தாடுமரனருடணிகை யாறுமாமுகதயாநிதியே. (சக)

மன்னவன்மகனையடுத்திடிற்பெரிய வாழ்வினையடுத்தபோதளிப்பான்
பின்னலஞ்சடையுன்பிதாவினையடுத்தாற் பெரிதுநாட்செல்லுமென்றறிந்தே
யுன்னைவந்தடுத்தேனுதலாற்செல்வ முரைத்திடுமுன்னெனக்களிப்பா
யன்னமென்னடையார்பயில்செருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (சஉ)

பகலினுமிரவுமுண்டுடுத்துறங்கும் பயனலாதொருபயனறியேன்
புகலரும்பரமாநந்தவாரிதியிற் புகுவதெக்காலமோவுரையா
யிகலுமுப்புரங்கடழலெழச்சிரித்த விறையவனுதல்விழிபிறந்தோ
யகிலடுந்தூபமுகினிகர்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (சந)

குருபரனெனும்பேருனக்கலாதெவர்க்குக் கூறுநான்மறைகளாதலினுற்
றிருவடிநிழலிலெனைவிடாதிருத்தத் திருவருள்புரிகுவதரிதோ
பொருகரிவதனனுெடுகிரவுஞ்சம் பொடிபடவயிலெறிந்தவனே
யருவுடனுருவாயொளிர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (சச)

நித்திரைதனிலுங்குத்திரம்புரியு நினைவுளேனுன்றிருவடியைப்
பத்திரம்புனல்கொண்டருச்சனைபுரிந்து பரகதியடையுநாளுளதோ
சித்திரக்கலாபமயின்மிசையேறிச் செகமெலாநொடிவலம்புரிவோ
யத்திரவிழியார்நடஞ்செயுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (சரு)

கணுமுதிர்கருப்பஞ்சிலையினைவளைக்கும் காமனைவென்றமாதவர்க
ணணுகிருசரணபங்கயமலரி னறவினைப்பருகுநாளுளதோ
வெணுமொருநொடியின்மேருவையணுவா யியற்றுவையிதற்குமாறுக
வணுவையோமேருவாக்கிடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (சகூ)

மனுநீதியைம்பொறியுன்வழிக்கொடுநடந்து மருவுமைம்புலனுகர்ந்திடினுங்
கனவொடுபேய்த்தேரெனப்படுமுலகைக் கண்டுமெய்பெனமயங்குறினு
மெனுநீதியென் றுனையேநினைத்தனுதினமு மேத்திடுஞ்செல்வமேயருள்வாய்
அனுநீதியேயுயிர்க்குத்துணையதாந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (சஎ)

வையமுற்றினும்போய்க்கங்கையேமுதலா மாநதிபலபடிந்திடினுந்
துய்யநற்றலங்கடொறுமினிதடைந்து துணைக்கையாற்றொழுதுவாழ்த்திடினுஞ்
செய்யநின்றணிகைக்கிரியினையணையார் சிவகதியடைகுவதரிதே
யையமிட்டுணுமாதவருளத்திருக்கு மாறுமாமுகதயாநிதியே. (சஅ)

முந்தைநல்வினையால்வந்துமானிடராய் முனுநிலந்தனிலவதரித்தும்
வந்தனைபுரியாதுண்டுடுத்துழலு மக்களில்வானரப்பிறப்பே
நிந்தனையறியாநற்பிறப்பாகு நீதியொன்றறிகிலாமையினு
லந்தணர்மகஞ்செய்தணிகைமால்வரைவா ழாறுமாமுகதயாநிதியே. (சகூ)

வேரலிற்பிறந்தசெந்தழலந்த வேரலைமுருக்கிடுஞ்செயல்போற்
பேருடற்பிறந்தகாமமிவ்வுடலைப் பிணிபடமுருக்குதென்செய்வேன்
சாரலிற்குறவர்கிழங்ககழ்குழியிற் றாளமோடணிகொள்வச்சிரமு
மாரவேரிரைக்குமருவிதாழ்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (ருo)

பிறந்திறந்துழலும்பெருவியாதியையும் பெரும்பசிநோய்சுடத்தளர்ந்து
நிறங்குலைந்தொருவர்பின்றிரிந்துழலு நிரப்பெனுங்குறுவியாதியையுந்
திறந்தருள்கடைக்கட்பார்வையாமருந்தாற் றீர்த்தருள்புரியுநாளுளதோ
வறம்பொருளின்பம்வீடருள்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (ருக)

திரைகடலுடுத்தநிலத்திடையழியாச் செல்வமுங்கல்வியுமறிவு
மிரப்பவர்க்கிலையென் றுரைத்திடாதுதவு மீகையுமெனக்கருள்புரிவாய்
புரக்குமைந்தருமாநிதிமணிகவர்ந்து புலவருக்கிடுக்கணேபுரிந்த
வரக்கரையழித்தசெருத்தணிமலைவா ழாறுமாமுகதயாநிதியே. (ருஉ)

பனித்துடல்வெதும்பும்படிதவம்புரிந்து பாரெலாம்வலம்புரிந்துழல்வோர்
தனித்திருந்தனதுதிருவடிநினைந்து சரவணபவவெனவுரையார்
கனிப்பழமிருப்பவிடுத்தருகிருந்த காயினைப்பறித்தருந்துவரே
யனித்தமுங்கடந்துநித்தமாந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (ருங)

விடுத்திடற்கரியபஞ்சபாதகமே விளைத்திடுமெனக்குமெய்வரங்கள்
கொடுத்திடிலுனையார்தடுப்பவர்புரளுங் குரைகடறன்னையார்தடுப்பார்
முடுக்கருட்டவஞ்செய்யோகியர்தமக்கு முசுக்கலையேவல்செய்தொழுகு
மடுக்கலிற்சிறந்ததிருத்தணிமலைவா ழாறுமாமுகதயாநிதியே. (ருச)

குவிகரங்கொடுநின்றனைவலம்வரவுங் குரைகழன்மனநினைந்திடவுங்
கவியறிந்துன்சீர்பாடவுமெனக்குக் கருணைநீபுரியுநாளுளதோ
புவியிலந்தணர்களனைவரும்சாரற் புறத்திலேயணைந்தனுதினமு
மவிசொரிந்தியாகம்விளைத்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௫௫)

நச்சுமாமரமேயாயினுமொருவர் நானிலந்தன்னிலேவிளைந்து
வச்சமாமரமேயாயிடிற்றண்ணீர் வார்த்திடாதுலர்த்திடுமெவர்யார்
துச்சமாமாயைவினையுடலடுத்தாய் சுத்தவீடருள்புரிந்திடுவா
யச்சனோடனையாய்த்துணைசெயுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௫௬)

விலங்கலைக்கடலைவெய்யசூருரத்தை விழுங்கிடவெறிந்திடுமயிலால்
கலங்கலைப்புரியுமாணவமாயை கன்மமூன்றையுமழித்திடுவா
யுலங்கலைத்தகர்க்கும்பன்னிருபுயத்தி னும்பர்நாடிறைதருங்கழுநீ
ரலங்கலைப்புனையுமொருதிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௫௭)

முகத்திருவிழியுமூக்கிடையிருத்தி மூடிவாய்மூச்சையுட்செறித்துப்
பகைத்தவைம்பொறியுமடக்கிநெஞ்சிடையுன் பதமலரிருத்துநாளுளதோ
சகத்திருள்கடியுமுதையமால்வரைபோற் றணிகைமால்வரைமிசையடிய
ரகத்திருள்கடியுஞானசூரியனா மாறுமாமுகதயாநிதியே. (௫௮)

நாண்டுறந்தெழில்சேர்நாரியர்கலவி நறவினையநுதினநுகர்ந்து
மாண்டிறந்துலகிலினிப்பிறந்திடினு மலரடிக்கன்பெனக்கருள்வாய்
கோண்டருமுலகநிலைகுலைந்தழிந்து குரைகடன்மேருவுமழியு
மாண்டுகம்பலவுமழிவிலாத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௫௯)

வெங்கொலைகளவுகாமமோடரும்பொய் விளங்கறிவகற்றுகள்ளருந்த
லிங்கொருதினமுமொழிந்திடாக்கொடியே னிடர்க்கடலேறுநாளுளதோ
பைங்கருங்குவளையநுதினமூன்று பாகசாதனன்சுனையலரு
மங்கதிசயஞ்சேரண்ணலந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௰)

வெஞ்சிறைப்பிறவிவேதனையொழித்த மெய்த்தவர்சேருநின்பதத்தென்
னெஞ்சிறைக்குடியாய்நின்றிடும்படிக்கு நீடருள்புரியுநாளுளதோ
மஞ்சிறையளித்தமகடனக்கிறையாய் வானுலகெலாம்வலம்வருவா
யஞ்சிறைக்கோழிக்கொடியனேதணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௧)

செம்புயம்பனிரெண்டிருபதமாறு திருமுகமயிலயில்சேவல்
பைம்புயற்கூந்தல்வள்ளிதெய்வானை பாகமுங்காணுநாளுளதோ
கம்புயர்பருதிகரங்கொளுமுராரி கவின்பெறுமார்பினிற்பிரியா
வம்புயமலராண்மருகனேதணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௨)

பிழைத்தவைபொறுத்தல்பெரியவர்கடனும் பேயனேன்பிழையெலாம்பொறுத்
தழைத்தருள்புரிந்துன்றாமரைமலர்த்தா டலைமிசையிருத்துநாளுளதோ [து
கழைத்தலைவளியினசைந்திடல்வரைதான் கையெடுத்தன்பரைக்கடுகி
யழைத்தருள்புரிவதெனப்படுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௩)

எவ்வுலகமுமாண்டிறந்திடாச்சூர னிருந்திடுமயேந்திரபுரியாந்
தெவ்வுலகத்தையழித்தநின்கருணைச் செழுங்கடைப்பார்வைதந்தருள்வா
யிவ்வுலகத்தோர்பணிந்தெழுந்தேத்து மிதுவலாலிந்திரனுறையு
மவ்வுலகத்தோர்தொழவளர்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௪)

பரிகரியிரதம்பதாதிகள்சூழப் பகைவரைத்தடிந்துசெங்கோல்கொண்
டொருகுடைநிழலிலுலகெலாம்புரக்க வுனதருட்பார்வைதந்தருள்வாய்
பொருகரிமுகனுக்கிளையவனாகிப் பொன்னுலகினைப்புரந்தளித்தோ
யரிகரிமுனிவர்க்கேவல்செய்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௫)

மாதிரைகடல்சூழ்மண்ணகவரைப்பின் வாய்மையைத்துறந்துசாண்வயிற்றின்
றீதிரைக்குரியபொய்ம்மையேபேசித் திரியுமென்பவமொழிந்திடுமோ
மீதிரைத்தெழுந்துவருநிசாசரரை வென்றமரர்பதியளித்தோ
யாதிக்கிறைவனருள்செருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௬)

கருக்குழிபடிந்துபிறந்திடுதுயருங் கண்கள்பஞ்சடைந்துவாய்குழறி
நெருக்கியகபத்தாலிறந்திடுதுயரு நீசனேனொழியுநாளுளதோ
தருக்களிலுதிரும்பொன்மலர்க்குலித் தமனியமலையெனக்கருதி
யருக்கனுமதியும்வலம்வருந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௭)

தீர்ப்பதற்கரியவுடலபிமானந் தீர்ந்தருந்தவம்புரிந்தவரும்
பார்ப்பதற்கரியபங்கயமலர்த்தாள் பாவியேற்குண்டுகொல்கதிரோன்
றேர்ப்பரித்திரளைவெங்கைமீதகவும் செம்முகமந்திவானீட்டி
யார்ப்பரித்தடித்துநடத்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௮)

வெம்பியாய்வயிற்றிலையிருதிங்கண் மேவியிப்புவிதனிலுதித்து
நம்பியாயிழையார்கலவியிற்றிளைக்கு நாயினேற்கருளிபமுகத்தோன்
றம்பியாயடுத்தநீயிருத்தலினாற் றரணியோர்பிறவியங்கடலுக்
கம்பியாயடுத்துவளர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௯)

வாளிகல்புரியும்வடுவகிர்நெடுங்கண் மங்கையர்போகமேநுகர்ந்து
நாளிகந்தொருவிநரகிடைவிழாம னாயினேன்றனக்கருள்புரிவாய்
கூளிகடுரக்குந்தானவக்குழுவிற் குஞ்சரக்குழுவிரிந்தோட
வாளிகடுரக்குஞ்சாரலந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௭0)

மெய்க்கினியனவேசெய்துநல்விரதம் விடுத்துழல்மடமையேன்வீட்டிற்
புக்கினிதிருக்குமடியவர்கமலப் பொன்னடிகருதுநாளுளதோ
கொக்கெனத்தினமுங்கொலைகுறித்தொழுகுங் கொடியதானவர்களைத்துணிக்க
வக்கினிகரத்திலுதித்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (எக)

கருடனைநினைக்கத்தொலைந்திடுவிடம்போற் கானகத்தினைப்புனக்குறத்தி
திருடனென்றனைச்செப்புவோர்பிறவித் தீவிடமக்கணத்தறுமே
யொருகணப்பொழுதின்மதுரையர்பெருமா னுடலுறுவெப்பெலாமகற்றி
யருகரைக்கழுவிமேலேற்றிடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (எஉ)

கொங்கையங்குவடுங்கருவிழிக்கடலுங் கூந்தலங்காடுஞ்சென்றுலவி
மங்கையரல்குற்பணிவிடந்தீண்டி மயங்குமென்னுயிர்தனைப்புரப்பாய்
சங்கையொன்றில்லாப்பிரணவப்பொருளைத் தமிழ்வரைகுறுமுனிவரனுக்
கங்கையினெல்லியெனப்புகறணிகை யாறுமாமுகதயாநிதியே. (எங)

வானகம்புரக்கும்வாழ்வையும்விரும்பேன் மண்ணகவாழ்வையும்விழையேன்
கானகக்குறவர்போற்றுநின்பாத கமலமேகருதுவன்றமியேன்
போனகம்பதிலுலகமுமாக்கும் பூவைவண்ணன்றிருமருகா
வானகந்துடியோடார்த்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (எச)

கொவ்வையங்கனிவாய்மகளிரையணைத்துக் கொம்மைவெம்முலைத்தடத்தழுந்தி
நவ்வியம்பகமாங்கூற்றினுக்கிரையாய் நானழிந்தொழிகுவதழகோ
செவ்வியமறையோர்சோலைகடோறுந் தீயினுகுதிமகம்புரியு
மவ்வியகவியநுகர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (எரு)

கூம்பலங்கரமுங்குழைந்திடுமனமுங் கொண்டனுதினம்வலம்புரிவோர்
தாம்பலன்பெறும்பேறரியயன்றனக்குஞ் சாற்றரிதெனமறையுரைக்கும்
பாம்பலங்காரப்பரனெனமுத்தம் பற்பலசொரிந்துவானோங்கு
மாம்பலஞ்சாரல்வளர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (எசா)

விடங்கலந்திடுதீம்பாலெனவுயிரை விரவுமாணவத்தினைப்போக்கி
நடங்கலந்திடுமுன்சீறடிக்கமல நன்மருந்தளித்தெனைப்புரப்பாய்
மடங்கலுங்கரியுமுழுவையுந்தவஞ்செய் மாதவர்தமக்குவானரங்க
ளடங்கலும்பணிசெய்தகமகிழ்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (எஎ)

விடைமிசைவருநின்றந்தைதன்செவியில் விளம்பியபிரணவப்பொருளைக்
கடையனேன்செவியிற்புகன்றுநின்கமலக் கழற்றுணைநீழலென்றருள்வாய்
தடையறுகதிர்த்தேர்ச்சாரதிபரியைத் தாக்குமுட்கோல்படவேய்த்தே
னடைகிழிந்துகுதேனருவிதாழ்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (எஅ)

வல்லகாத்திரஞ்சேர்மதகரியெனவே மறைநெறிகடந்துதீவினையாற்
பல்லகாத்திரமாய்ப்பிறந்திறந்துழலும் பாவியேனுய்யுநாளுளதோ
நல்லகாத்திரியாவிந்திரன்றொட்ட நறுஞ்சுனைநீலமேவுதலா
லல்லகாத்திரியாம்பெயர்பெறுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (எகூ)

நந்தினைப்பதுமநிதியினைப்பழித்த நறுங்களமுகத்தியர்கலவித்
தந்தினைப்படித்துவிடரொடேந்திரியுந் தமியனேனுய்யுநாளுளதோ
சந்தினையகிலைவேங்கைகுங்குமத்தைத் தடிந்தெரிகொளுவிவேட்டுவர்க
ளந்தினைவிதைக்குஞ்சாரலந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அ0)

மாடகத்திவவியாழ்முனியுரைப்ப வள்ளிமால்வரைப்புறத்தடைந்து
காடகக்குறமான்றனைப்புணர்வேடக் கனவிலுநனவிலுமறவே
னேடகக்கழுநீரென்றுமூன்றலர வெனக்கிலையெனத்தலையிறங்கி
யாடகக்கிரிநாணுறுந்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அக)

சமயமூவிரண்டிற்சார்ந்தவர்புகலுஞ் சமுசயப்பொருளெலாநினைந்து
கமையறுபிறப்பிலழிந்திடாதுனது கழலிணைகருதுநாளுளதோ
விமையவர்வேடர்க்கமுதமீந்திருவி னிரும்பிழிகவர்ந்தெதிர்விருந்தா
யமைவுறவிசும்பின்வளர்ந்தெழுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அஉ)

பொருந்திடுகற்பின்மனைவியும்பொருளும் புதல்வருமிம்மையிலளித்துத்
திருந்துமொண்கதியையம்மையினளிக்குந் திறத்தினைக்கண்டுனையடுத்தேன்
வருந்துறுபிறப்பிலழுத்துமாணவமா மலிபெரும்பகைதடிந்தோங்கு
மருந்தவர்க்கரணமாயமர்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அங)

கூனையுந்தெரியாக்குருட்டையும்பணிவோர் கொடியவெப்பிறப்பையுநீக்கி
வானையுஞ்சிந்தாமணியையும்வேண்டும் வரத்தையுந்தருதல்கண்டடுத்தேன்
றேனையுமறையோர்க்கரசரீந்திடுபொற் றிரளுறுதானநீர்தனையும்
யானைமும்மதநீர்கொண்டிழிதணிகை யாறுமாமுகதயாநிதியே. (அச)

முன்னையெத்தவத்தோவந்துமானிடத்தின் முழுதுடறன்னையானெடுத்தும்
பின்னருற்றிடுதற்கரியவிப்பொழுதே பெருந்தவம்புரிந்துனைநினையேன்
றென்னிசைக்களிவண்டினங்கள்பற்பலவாந் தேனடைமொய்ப்பவாதுலர்சே
ரன்னசத்திரங்கணிகர்த்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அரு)

விரிந்திடும்பிறவிக்கடலகத்தழுந்தி வினையெனுந்திரைகளாலலைந்து
திரிந்திடுகாமச்சுறவினாலயருந் தீயனேன்றுயர்களைந்திடுவாய்
வருந்திடும்பகையைமாய்க்குமன்னவர்போல் வனசரர்விதைத்தசெந்தினையை
யரிந்திடக்கணிகளலர்ந்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அசு)

தத்தலைக்கடலின்வேறுவேருகுஞ் சமுசயச்சமயநூல்பலவுஞ்
சத்தலைவிடுத்துன்கழறலைச்சூட்டிக் கசிதலையடையுநாளுளதோ
முத்தலையேகபாதருத்திரன்போன் முத்தலைபொன்மைவெண்ணிறமா
யத்தலைமுதலொன்ருயெழுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அஎ)

வரம்பெறுமகவான்முதலியோரொருபால் வணங்கமாமுனிவரரொருபால்
சிரம்பெறுகரங்கள் கூப்புநின்னவையிற் சிறியனும்வாவருள்புரிவாய்
மரம்பயில்சாரல்வளர்க்கழைவெடித்த மணிகள்வாசவனெதிராடு
மரம்பையர்முலைமேற்றெறித்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அஅ)

சுந்தரந்தனக்கோநினதுதோள்வலிக்கோ சொற்கலைவல்லபந்தனக்கோ
சந்ததமெனதாருயிரெனுமடந்தை சாமிநின்கலவியேவிழைந்தாண்
மந்தரமிமையங்கயிலைநீள்கந்த மாதனங்கண்டழுக்கறுப்ப
வந்தாங்கமதாயிருந்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அகூ)

குறித்தொருகவிநீபாடெனப்பாடாக் கொள்கைநக்கீரனைவேண்டி
மறித்தொருகவிக்காயிரந்தநின்றனையான் வலுவினிற்பாடவுமிரங்காய்
கறிக்கொடிமிளகைத்தின்றிலமந்தி கலங்கிடக்கடுவன்மாங்கனியை
யறுத்துவந்தளிக்கமகிழ்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கூ0)

நெல்விளைந்திடுதண்பணைதொறுமறுப்பு நென்முதனடவுமானுப்போற்
புல்லியம்புயனுற்பிறப்புடனிறப்புப் பொருந்துதீவினைதுலைத்திடுவாய்
எல்லியும்பகலுங்கழையுதிர்முத்த மிளநிலாக்கதிர்பரப்புதலா
லல்லியுங்குவலையொடுமலர்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கூக)

வேனில்வேளெனவும்விசையனேயெனவும் வீமனேயெனவுமீகில்லாப்
பாதலந்தெரியாச்சிதடரைப்புகழும் பாவலர்பவப்பிணியறுமோ
தேனிருல்வருடைபாய்தரக்கிழிந்து செங்கழுநீர்ச்சுனைநிரப்பி
யானைவீழ்குழியுநிரப்புறுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கூஉ)

காரிருட்குழலார்கண்வலைதுடக்குஞ் சசடனேன்சிற்றறிவொழித்துன்
பேருட்பார்வைக்கடலகத்தழுத்திப் பிரிவிலாவாழ்வெனக்களிப்பாய்
கூரிருள்படைத்தகிரவுஞ்சகிரியுட் குறுமுனிகுறுகல்போன்முனிவ
ராரிருட்குகையுட்புகுந்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கூங)

கரவினிலருநூல்கற்பவருறவைக் கடிந்துமெய்த்தொண்டர்பான்மிகுமா
தரவினைமருவியுடலபிமானந் தனையொழிந்திடுநெறியருள்வா
யிரவினிற்காடிகுரும்பிதேர்ந்தளையை யிடத்தலுமுற்கைபோலெரியு
மரவின்மாமணிகண்டஞ்சிடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கூச)

வாரியங்கடல்சூழ்மலர்தலையுலகில் வயிறுசாண்வளர்த்திடும்பொருட்டுப்
பாரியென்றீயாதவரையான்புகழாப் பணிவிடையெனக்கருள்புரிவாய்
வீரியம்பெறுவெம்புலியினோடிரலை வேழமோடரிபகையொருவி
யாரியம்புகல்வோர்க்கேவல்செய்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௯௫)

மலையெனவளருமாணவமலத்தை வளம்பெறுநின்னருட்பார்வை
யிலைமலிவேலாலெறிந்ததைப்போக்கி யெனதுயிர்தனைப்புரந்தளிப்பாய்
கொலையரிமுழக்குங்குஞ்சரமுழக்குங் குலவுமந்தணர்மறைமுழக்கு
மலைகடன்முழக்கினெதிரெழுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௯௬)

கமலவேதனைமுன்கற்சிறைப்படுத்துங் காங்கெயனுமுனைவணங்கா
முமலவேதனையுமொருசிறைப்படுத்தி முண்டகப்பதமெனக்களிப்பாய்
விமலவேதியர்செய்வேள்வியாகுதியில் வீசுநெற்பொரியெனச்சார
லமலவேய்முத்தஞ்சொரிதிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௯௭)

சந்திரன்கறைபோலிந்திரன்விழிபோற் சந்தனமரத்துறுமகிபோன்
மந்திரம்பயிலுமுனதுசன்னிதியில் வருங்கொடியேனையும்புரப்பா
யிந்திரநீலமருவலாற்கருமையேந்தலாற்செவியடுத்திடலா
லந்தில்தெய்வானைவிழிநிகர்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௯௮)

பிணியினுலழலாலலகையால்விலங்காற் பில்லிசூனியத்தினுற்பித்தால்
பணியினுனீராற்கள்ளரான்மருவும் பருவரலகற்றியாண்டருள்வாய்
கணியினுலாரம்புடைபரந்தெழலாற் காம்பினுல்வம்பினுற்காந்த
ளணியினுற்குறமான்முலைநிகர்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௯௯)

வள்ளியுந்தெய்வயானையுமிருபான் மருவிடச்செங்கைவேலேந்தி
துள்ளியமயின்மீதேறிநீயடியேன் றுணைவிழிகாணவந்தருள்வாய்
வெள்ளியங்கிரிபோனாரதன்றினமும் வீணையின்கானமாமமுத
மள்ளியஞ்செவியினிறைத்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௧௦௦)

தணிகை தயாநிதிமாலை-முற்றிற்று.



பண்ணார்தணிகைவரைப்பாலன்றயாநிதிச்சீ
ரெண்ணாருமாலையிசைத்திட்டான்-றண்ணாருங்
காசினியெலாம்புகழுங்கந்தப்பனென்றுரைக்குந்
தேசிகனுநூறுகவிதேர்ந்து.



உ

கடவுள் துணை.

# தணிகை தயாநிதிமாலை.

## தி. கந்தப்பதேசிகர்

திருவாய்மலர்ந்தருளியது.




இஃது

சிறுமணவூர்,

முனிசாமிமுதலியாரவர்களால்

தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாசஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1904.

உ

கணபதிதுணை.

பெரியசண்முகஜாவளி என்னும்

சிவசுப்பிரமணியர்

# பஜனை கீர்த்தனை.

இஃது,

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரால்

இயற்றப்பட்டு,




தமது

சென்னை சூளை

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

பஞ்சக்கரனே பண்ணவனே
அஞ்சக்கரமருள் விண்ணவனே. ௭

செல்வசிகாமணி கணபதியே
எல்லவருந்தொழு துணைநிதியே. ௮

முத்திக்கொருதனி முதல்வோனே
சத்திச்சிவமது புதல்வோனே. ௯

எண்ணுவசுரரை தீர்த்தவனே
கண்ணுயிரவனே காத்தவனே. அ

கெஜமுகசுந்தர திண்ணியனே
நிஜவொளிதந்தருள் புண்ணியனே. ௯

வல்லபைதன்னொடு வாழீசா
பல்வினைதீர்த்தருள் பவநாசா. ௧௦

---

## கீர்த்தனை.

இ-ம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

சந்த்ரஜடாதரனருள் சுதலம்போ
தரஹோம்ஹரஹர மகதேவா

அநுபல்லவி.

இந்த்ராதிசுரர் சேவிதநாயக
இகபரசாஸ்வித விக்னவிநாயக(சந்த்ர)

சரணங்கள்.

பர்வதமன்னவன் புத்ரிசுதாகர
பத்தர்கள்ரக்ஷவி னோதமனோகர
சர்வஜெகத்கா ரணப்பிரணுவாகர
சச்சிதானந்தமெய்ஞ் ஞானவசீகர(சந்த்ர)

சாமரகர்ன்னவி ளம்பிதரூத்ரா
சாஸ்த்ரவேதாகம பண்டிதபாத்ரா
சோமபிரபாகர சுகுணதிரிநேத்ரா
சுக்லாம்பரதர சதுர்புஜபாத்ரா(சந்த்ர)

செழுமணவைமுனி சாமிதாசவினுத
ஜெகத்காரணஜீவ ரக்ஷகபுனித
தொழுமறைமேல்நின் ருடிடும்பதித
துணைசெயவருணையில் தோற்றியசகித(சந்த்ர)



## சுப்பிரமணியர் நாமாவளி.

மயில்மிசைநடமிடு முருகேசா
அயில்வேலேந்திய ஜெகதீசா. ௧

முதுமறைகனிதரு கிழவோனே
சதுர்மறையுந்துதி பழவோனே. ௨

தெய்வக்குறமகள் தேடிடுமோகா
ஐராவதன்மக ளணைந்திடுந்தேகா. ௩

வானவர்கோனே வாவாவா
மோனபிரபாகர மகதேவா. ௪

உந்தியில்பூர்த்தோ னொருகுருவே
சந்திரசேகரன் தருமருவே. ௫

பன்னிருபுயனே பழயவனே
என்னுயிர் துணைவா யிறையவனே. ௬

மஞ்ஞையிலழகா மகதேவா
அஞ்சலென்றழைப்பே னருகேவா. ௭

வாவாவா வள்ளிமணாளா
தேவர்கள்தேவா தேவசகாயா. ௮

கருணைமழைபொழி வல்லவனே
அருணையில்வாழுமென் னல்லவனே. ௯

உண்ணாமுலையமு துண்டவனே
பண்ணார்மறைமுடி விண்டவனே. ௧௦



## அருணாசல யீஸ்வரர் நாமாவளி.

முத்தித்தலமருணாஜலமே
மூவர்களுமருணாஜலமே
சத்திச்சிவமருணாஜலமே
சதுர்மறையுமருணாஜலமே. ௧

வேதனுமாலும் தேடியதே
விண்ணவர்கூட்டம் நீடியதே
ஆதவனம்புலி கூடியதே
அண்டசராசரம் ஓடியதே. ௨

அண்ணாமலையென நீடியதே
அருமறைமேல்நின் றாடியதே
உண்ணாமுலையுமை கூடியதே
உம்பர்கள்நித்தம் பாடியதே. ௩

திரிபுரமெரியெழசிரித்ததுவே
திசைமுகனொருதலை பரித்ததுவே
கரியவன்புவிபட மிரித்ததுவே
கங்கைநிலாவை முடித்ததுவே. ௪

இக்குவேடன்னைக் காய்ந்ததுவே
எழுலகந்தரை பாய்ந்ததுவே

சக்கரமாலுக் கீய்ந்ததுவே
சகலஜீவனுட் டோய்ந்ததுவே. ௫

வல்லாளன்றனை காத்ததுவே
வந்துமதலையாய் பூர்ந்ததுவே
எல்லாவுயிரும் சேர்த்ததுவே
இம்மைமருமையும் நீத்ததுவே. ௬

கையினில்மான்மழு வெடுத்ததுவே
கரியுரிதோலை யுடுத்ததுவே
மெய்யினில்நீரை யடுத்ததுவே
மெய்யடியார்குறை தடுத்ததுவே. ௭

அம்பலவாட்டில் களித்ததுவே
அரக்கனுக்கொருகா லொளித்ததுவே
வம்பர்க்கென்றும் சுளித்ததுவே
வழிபடுவோர்க்கரு களித்ததுவே. ௮

பாம்பும்புலியை மதித்ததுவே
பாரதியின்னம் துதித்ததுவே
சாம்பவியோடு கதித்ததுவே
சர்வசமயமும் அழித்ததுவே. ௯

பிறவிபெரும்பிணி தீர்ப்பதுவே
பிறவார்தம்மொடு சேர்ப்பதுவே
அருவிபோல்வந்து கார்ப்பதுவே
ஆணவமாய்கை தூர்ப்பதுவே. ௧௦

---

(இ-ம்-அபுரூபகம்-ஏகதாளம.)

பல்லவி.

சிவகீர்த்தனமே ஆனந்தம்-துதி
செய்யாதார்க்கேபவபந்தம்

தவநிஷ்களகா ருண்யபடாரம்
தத்தரிகிடஜெக நடனாதாரம் (சிவ)

அதலதலாதல அண்டகடாகம்
அபனமராதியர் வணங்கும்ப்ரதாபம் (சிவ)

வானவரோதிய மோனவதீபம்
ஞானப்ரகாசம் நயந்தொளிர்தீபம் (சிவ)

முனிசாமியின்மன முகந்தப்ரகாசம்
முத்திகொடுக்கு முரையருள்நேசம் (சிவ)



## உமையவள் நாமாவளி.

கண்ணற்கொருகாற் பின்னவளே
மண்ணுக்கொருகால் முன்னவளே. க

பச்சைக்கிளியே பைங்கிளியே
உச்சிக்கிளியே ஹுன்கிளியே. உ

அரவாபரண வுரத்தாளே
கருணகரியே சிரித்தாளே. ந

வல்லிக்கொடியே வளர்கொடியே
தில்லைக்கொடியே திகழ்கொடியே. ச

உண்ணுமுலையெனு மூர்கொடியே
பண்ணாரயன்றெழு பார்கொடியே. ரு

பரமன்குருவைப் பெற்றவளே
அரமதுமுடிவர முத்தவளே. சு

பாரேரேழாய் பூர்த்தவளே
ஆருயிரெவையுங் கார்த்தவளே. எ

அத்தியையேந்துமென் னம்மணியே
புத்தியதீந்தருள் பொன்மணியே. அ

சிவமொடுசேர்ந்த சிரோன்மணியே
தவமதில்தேர்ந்த மனேன்மணியே. கூ

முன்னும்பருவ முகக்கொடியே
இன்னும்பருவ யிளங்கொடியே. க0



## ஸ்ரீ மகாவிஷ்ணு துதி.

(இராகம்-தன்யாசி, தாளம்-ஆதி.)

பல்லவி.

கண்ணனுக்கிருக்கும் கருணைபோல்மற்ற
கலியுக தெய்வங்களுக் கேது.

சரணங்கள்.

மண்ணையும்விண்ணையும் உண்டவன் உமிழ்ந்தவன்
மண்டலமிரண்டேழும் அளந்தவன் வளர்ந்தவன்
எண்ணருமுலகமும் புகுந்தவன் பகுந்தவன்
எண்பத்துநான்குலட்ச பேதமும் நிரைக்தவன் (கண்)

வேதமும்சாஸ்த்ரமும் விரித்தவன் பிரித்தவன்
வேண்டிடும்பேர்க்கருள் சுரந்தவன் சிறந்தவன்
ஆதியுமந்தமாய் நிரைந்தவன் பரந்தவன்
அகிலசராசரம் அளித்தவன் களித்தவன் (கண்)

திருமகள்மார்பினில் தரித்தவன் சிரித்தவன்
தீனதயாபர ஞானவன் வானவன்
சிறுமணவூர்தமிழ்ப் பூண்டவன் ஆண்டவன்
ஜெனன மரணப்பிணி தீர்ப்பவன் காப்பவன் (கண்)

(நூதன தில்லானா வர்னமெட்டு.)

ஸ்ரீதரனை மாதவனை சித்தஜனைபெற்றவனை
வேதமுடிவானவனை வேண்டித்தொழுவாய்மனமே.

பொன்மகளின்நாயகனை பூசுரர்கள்தாயகனை
தன்னிகரிலாதவனை தாவித்தொழுவாய்மனமே.

இந்நிலமளந்தவனே யெண்டிசைவளர்ந்தவனே
பொன்னிலத்துநாயகனே போற்றித்தொழுவாய்மனமே.

ஆழிசங்கெடுத்தவனே ஆழியில்படுத்தவனே
ஊழிபலதடுத்தவனே ஓதித்தொழுவாய்மனமே.

அரனயனுனவனே ஆதிநாராயணனே
பரமபதநாயகனே பக்திபுரிவாய்மனமே.

தொண்டன்முனிசாமிவினே துயரறுத்தபண்டிதனே
மண்டலமெலாம்நிரைந்த மாதவனே துதிமனமே.



## கிராமதேவி துதி.

(இராகம்-கமாஸ், தாளம்-ஆதி.)

பல்லவி.

ஆரூரமர் கருணாகரியே - உன
தடைக்கலம்புகுமடி யார்க்கருள் புரியே (ஆ)

சரணங்கள்.

நீரணிசடைமுடி கடவுளின்மனைவி
நெடியவுலகளந் தோனிளந்துணைவி
பாரிரண்டேழும் பணிந்திடும்விமலி
பக்த்திபுரியுமடி யார்க்கருள்கவுரி (ஆ)

கொஞ்சமுனதுகடைக் கண்ணருள்பார்ப்பாய்
கொடியவினையகற்றி மனத்துயர் தீர்ப்பாய்
அஞ்சலென்பார்பிழை ஆயிரம்பொறுப்பாய்
அரனுடநடமிடு வுமையெனைக்காப்பாய் (ஆ)

நித்தமுனதுபுகழ் நினைத்துக்கொண்டாடும்
நெறிமறவேன்முனி சாமியென்பேரும்
சித்தங்களித்துகிருபை செயவருள்பாரும்
திருமருவியசெழு மணவையில்வாழும் (ஆ)



# சிவசுப்பிரமணியர் கீர்த்தனை.

இங்கிலீஷ் நோட்.

வரந்தருள்வாய் முருகேசா
மதிமிக குறமான் பிராணேசா
வரநிதியே-சுரர்பதியே
வானவர்-தானவ-ரானவை-போகநீ (வரந்தந்)

இந்திரன் மகள்மன மகிழ்சீலா
இமையாதியர்தொழு மறைமூலா
இறையவனே-பரைசுதனே
இணையடி-தொழுநெறி-சிறியவ-னருள்வழி (வரந்தந்)

நற்கீரன் றமிழ் பூண்டோனே
நான் மறையின்முடி விண்டோனே
நளினவடி-வேல்கரனே
நானடி-யேனுனை-யேமர-வேன்கதி (வரந்தந்)

அம்பிகைசுந்தரி யருள்பாலா
அமரர்தன் பதிமகள் மணவாளா
ஆரணனே-வுயர்காரணனே
அடிமிசை-முடிபட-தொழுமெனை-வழிபட (வரந்தந்)

செழுமணவைப்பதி முனிசாமி
செந்தமிழ்க்கருள்சண் முகசாமி
தவனேமி-யிப்புவிகாமி
தனில்மன-மிளகா-தினியுனை-விலகா (வரந்தந்)

(இராகம்-தர்பார், தாளம்-ரூபகம்.)

பல்லவி.

தெய்வம் நீயே—என்பங்கு
தெய்வம் நீயே.

அநுபல்லவி.

செய்வகை யொன்றறி யாச்சிறி யேன்தொழும். (தெய்)

சரணங்கள்.

திக்கற்ற பாவியென் மீதிலேன் வன்மமா
தேடத்தேட வொளித் திட்டாலும் போகுமா
பக்குவ மில்லையென் றாலும்நீ சும்மா
பாராத தாறு முகத்தழ காகுமா. (தெய்)

சற்றும் உனை நினை யாச்சிறு போதிலே
சாதிக்கச் சொன்னவர் யாரந்த நாளிலே
முற்று முன்னுமம் முறைசெய் யிந்நாளிலே
மோசம் செய்யாதே தொழுதே னுன் காலிலே. (தெய்)

மாதவத் தோர்துதி மாலைகள் பூண்டவா
மைந்தன் முனிசாமி சொற்பிழை யாண்டவா
சோதிப்ப துன்னழக கல்லவே ஆண்டவா
சொர்ன்ன நிறமயி லேறிய தாண்டவா. (தெய்)



(இராகம்-பரசு-தாளம்-ஏகம்)

பல்லவி.

வேலாயுதமூர்த்தியே எந்தனையாள
சூதேன்வெகுநேர்த்தியே.

சரணங்கள்.

காலாகாலனை சிஷ்ப கோலமெடுக்கச்செய்து
மேலாமறைரகஸ்ய மூலமுரைத்தவடி (வே)

கோனேகுற்றமகன்றத் தேனேயுனையடுத்தும்
நானேன்படுவேன் துயர் ஞானப்பிரகாசக்கதிர் (வே)

சூராதி சூரர்குலம் நீறுய்ப்படதெரித்த
வீராஉந்தனையன்றி ஓராதரவுமில்லை (வே)

கோடாகோடியாய்வெகு கோடீசரணமென்று
வாடிவருந்துமென்மேல் மோடிசெய்யத்தகுமோ (வே)

கனியேகனிந்தரசப் பாகேதிருத்தணிகை
மணியேதனியேன்முனி சாமிக்கினியார்துணை (வே)

வாதேன்னடா மன்மதா
என்றமர்னமெட்டு.

(இராகம்-கமாஸ், தாளம்-ஆதி.)

பல்லவி.

வாதேதையா முத்தையா-எளியன்மீது
வாதேதையா முத்தையா.

அநுபல்லவி.

நீதியோ உனக்கிது நினதடிமையின் மீது. (வாதே)

சரணங்கள்.

அரவா பரணர்க்கு அருமறை யோதிய
திருமுக மதைதினம் தேடிவருந்தும்வேளையில் (வா)

வையகம் புகழ்த்திருத் தணிகையம் பதிவளர்
ஐயனே உனதடிக் கபயமபய மென்றால் (வா)

பிறவித் துயர்முதலாய்ப் பேர்த்தரு ளளித்திடும்
சரஹண பவாவுன்னைச் சரணஞ்சரண மென்றால் (வா)

பனிமலர் சூழ்சிறு மணவூர் முனிசாமி
தனியே னடிமையிது தருணந்தருண மென்றால் (வா)



ஓரடிதருவு இராகம்- தோடி.

பல்லவி.

முருகா ஆண்டருளரிமருகா. (முரு)

அநுபல்லவி.

முழுதுந்தொழு தேனேஉனை
மோசஞ்செய் யாதேயெனை. (முரு)

சரணங்கள்.

கெஞ்சிகெஞ்சிநிதம் வருந்துகின்றேனே உன்
கீர்த்திக் கிரங்கக் கூடாதா
கிள்ளைமொழியிரு வஞ்சியர் மோகமோ
காதினி லொன்றுங் கேளாதா
அஞ்சியுனையடுத் தேனே பெருந்துணை
யார்சொல்லுவாய் குரு நாதா
கொஞ்சமென் றென்னைநீ தள்ளாதே பிரக்யாதா
கோலாகல மயில்மேல்வரு நாலாம்பதவிப்பாதா. (முரு)

வானோரிடுமுறை கேட்டுவசுரரை
வாட்டியவரிடர் தீர்த்தாய் - சில
தானவர்தஞ்சமென் றூலுமுடனே
தடுத்தரு கணைத்துக் காத்தாய்
மோனசுகம்பெரு ஞானியனேகரை
முத்தியகத்தினிற் சேர்த்தாய்
நானும்அவரோ டொருவனன் றுயிலையா
நாளும்அடியார் முன்வரவேலும் மயிலுமிலையா. (முரு)

வேண்டிவேண்டி நிதம் இடுமுறை யாவத்தும்
விழலுக்கிறைத்த தாக்காதே
ஆண்டவனேயுனை யன்றிதிக் கரியேன்
அயலென்றெனை நீக்காதே
பாண்டியனுக்குன் தந்தையிழைத்திட்ட
பண்டைகுணத்தைப் போக்காதே
தூண்டத்தூண்ட சுடர்குன்றுமோ சொல்லையா
துலையாவினையைக் களையச்சிலவே லிலையாமலையா. (முரு)

கருணைப்பிரவாகக் கடலென்றுனை யிந்த
கலியுகமே சொல்லுதையா
தருணசஞ்சீவினி யென்றறிந் தன்றேயுன்
தாள்பிடித்தேன் முருகையா
சிறுமணலூர் முனிசாமியுன் தொண்டெனச்
சொல்லும் சொல்லிலென்ன பொய்யா
சிறுபிழையெத்தனைச் செய்தாலும் தாய்நீயே
சிறியேனீயேன்பிரளத் தெரியேன் துரையேபிரியேன். (முரு)



போம்போம் இதுவுங்கனவா
என்றவர்னமெட்டு.

ஓரே ஒருச் சொல் மனமே-யான்
உரைத்திடக் கேளதின்குணமே
சரேலெனப்பதறி சஞ்சலமதை வையாதே
சண்முகனடிதொழுதால்-சாயுச்யப்பதம் பொய்யாதே. ()

காலா காலர்க்குக் குமரன்-உலகளந்த
மாலா மவர்க்கு மருகன்
நாலாகலையுணர்ந்த மேலோர்துதிக்குந்துரை
வேலாயுதனென்றொரு - நாளாகிலுமுரைசெய் (ஒரே)

சத்திசிவத்தின் புத்திரன்-தனைப்பணிந்த
சர்வ உயிர்க்கு மித்திரன்
சித்தாதிசித்தர்பல பக்தர்புகழ்த்தணிகை
நித்தன்திருவருளைப் பெற்றாலுடனேமுத்தி (ஒரே)



(இராகம்-தர்பார், தாளம்-ரூபகம்.)

பல்லவி.

ஆடுதுபார் சேவற்கொடி-
ஆடுதுபார்.

சரணங்கள்.

நீடும் பிரமனைக் குட்டிச் சிறையிட்டு
நீலகண் டர்க்குப தேச முரைத்திட்ட
நீதா-நீதா-நீதா-நீதா-நீதா-நீதா-வென்று. (ஆடுது)

விண்ணு மண்ணுமிடர் பண்ணு மசுரர்கள்
வேரைக் களைந்திட்ட கூர்வேல் சரந்தொட்ட
வீரா-வீரா-வீரா-வீரா-வீரா-வீரா-வென்று. (ஆடுது)

தெய்வக் குறமின் திகைக்கப் புனத்தினில்
தேடரிய மர மாகி நடித்திட்ட
தேவா-தேவா-தேவா-தேவா-தேவா-தேவா-வென்று (ஆடுது)

கும்ப முனிக்கருள் கூர்ந்தே தமிழ்ச்சொல்லி
கூறுநக் கீரன்மேல் சேரக் களித்திட்ட
குருவே-குருவே-குருவே-குருவே-குருவே-குருவே-வென்று()

அப்படி யேவடி யேன்முனி சாமிசொல்
ஆசைத் தமிழின்மேல் நேசம்வைத் தாலுமென்
ஐயா-ஐயா-ஐயா-ஐயா-ஐயா-ஐயா-வென்று. (ஆடுதுபார்)



(சற்றே விலகியிரும் பிள்ளாய் என்றமெட்டு.)

பல்லவி.

சற்றே தயவு - செய்யொணுதா
சாமியே தென் மீது வாதா

அநுபல்லவி.

மற்றொரு தெய்வத்தை மனதி லெண்ணுமலே
முற்று முன்றாளின் முறையிடும் வேளையில் (சற்)

சரணங்கள்.

நீதி யென்ப தில்லையா
நின்னையடுத்த பிறகுந் தொல்லையா
ஆதிமூர்த்தியின்குருவே-ஆறுமுகமிலகுந்துரையே (சற்)

காமதகனன் புத்திரா—முனி
சாமியின் தமிழ் மித்திரா
தாமதமேன் தொண்டன்மீது-தாகபோக சோகந்தீர (சற்)



அங்கேவரக்கூடாதையா
என்ற வர்னமெட்டு.
(இராகம்-கமாசு, தாளம்-ஏகம்.)

பல்லவி.

என்கவலை தீர்த்தருள்வாய் - சாமிநீ
என்கவலை தீர்த்தருள்வாய்.

அநுபல்லவி.

பன்னுமறை துதிக்கும் பழநிமா மலைவேலா. (என்)

சரணங்கள்

பாரில்யா ரறிவார்கள் பாவியான் படுந்துயர்
யார்க்குரைப் பேன்சொல் அரிமரு கனேசாமி (என்)

ஜெனித்தநாள் முதலாயோர் சீரறி யேன்சாமி
இனிதுய ரருப்பாய் இதுதரு ணம்சாமி (என்)

சிறுமண வூர்வாழும் சிறுவன்யான் முனிசாமி
பெருமைபெற் றிடவருள் அறுமுக னேசாமி. (என்)

(இங்கிலீஷ்நோட் நாமாவளி வர்னமெட்டு.)

பல்லவி.

செய்யொணாதா கிருபை செய்யொணாதா.

அநுபல்லவி.

வையகம் புகழ்த்தணிகை வாழும்நாதா. (செ)

சரணங்கள்.

மாதர்மய லால்மெலிந்து மானங் குலைந்தேன்
மக்கள்சுற்ற மென்றுநம்பி ஞானங் கலைந்தேன்
வேதமறை போற்றுமுந்தன் பாதம் மறந்தேன்-என்னை
விட்டுவிட்டால் கெட்டுவிட்டேனென்ன தெரிந்தேன் (செ)

முத்தமிழ்ப் புலவர்தொழும் ஞான மூர்த்தி-சுத்த
மூடனென்ன ணறிவே னுந்தன் கீர்த்தி
எத்தனையோ தொண்டர்குறை தீர்த்து கார்த்தீர்-இந்த
ஏழைமுகம் பார்ப்பதல்லோ மனப் பூர்த்தி (செ)

வேறுதுணை யாருமில்லைக் காரு முருகா-துயர்
விட்டுவிட்டுச் சொன்னேன்முகம் பாரு முருகா
பாரமலை மேவுந்திரு மாலின் மருகா-உன்னை
பாடுமுனி சாமித்துயர் தீரும் முருகா. (செ)

(துக்கடா-தாளம்-ஆதி.)

பல்லவி.

கண்டால் போதாதா
தணிகேசன் முருகேசன்-பதம். (கண்)

சரணங்கள்.

அண்டர்தொழு தேற்றும் பதம்
அருமறைகள் சாற்றும் பதம்
தொண்டர்தினம் போற்றும் பதம்
துய்யன்-ஐயன்-மெய்யன்-பதம். (கண்)

உலகவலஞ் செய்த பதம்
உம்பர்துயர் கொய்த பதம்
கலகநிலை யற்ற பதம்
கமலன்-விமலன்-நிமலன்-பதம். (கண்)

கும்பமுனி மகிழும் பதம்
குறக்குமரித் தழுவும் பதம்
நம்புமெனைக் காத்த பதம்
நாதன்-வேதன்-போதன்-பதம். (கண்)

சரஹணையில் வளர்ந்த பதம்
சண்முகமென் றெழுந்த பதம்
திறமையரு ளருண்மை பதம்
தீரன்-வீரன்-சூரன்-பதம். (கண்)

சித்ரமயி லூர்ந்த பதம்
சிவன்கரத்தி லழகு பதம்
முத்திநெறிக் குரிய பதம்
மூலன்-சீலன்-வேலன்-பதம். (கண்)



இன்னமுமோடிசெய்தால் என்னமாய்நான்சகிப்பேன்
என்ற வர்னமெட்டு.

பல்லவி.

அப்பாநீ மோடி செய்தால்
எப்படிநான் சகிப்பேன்

அநுபல்லவி.

இப்படியோர் போற்றும்போரூர். (அப்பா)

சரணங்கள்.

வையமிசையான் படுந்துயர்க்கென்
செய்குவேன் சாமி - நானென்ன
செய்குவேன் சாமி - யாரைநான்
நொய்குவேன் சாமி. (அப்பா)

எத்தனைத்தான் முறையிடுவேன்
வெற்றிசேர் வேலா - அப்பனே
வெற்றிசேர் வேலா - ஐயனே
சத்தியின் பாலா. (அப்பா)

பனிமலர்சூழ் சிறுமணவூர்
முனிசாமிப் போற்றும் - அப்பனே
முனிசாமிப் போற்றும் - ஐயனே
இனிதுணை சாற்றும். (அப்பா)



(இ-ம்-மோகனகல்யாணி-தாளம் சாபு.)

பல்லவி.

என்னிடர் தீர்த்தருளையா—ஐயா
இன்னமெனக்கார்துணை யீராறுகையா (எ)

சரணங்கள்.

அன்னைவள்ளிதெய்வ யானை சமேதா
அசட்டையேனடிமைமேல் அறுமுகநாதா (எ)

பிழைபொருத்தாளயென்னை பெற்றநீதானே
பின்னையார்க் கென்குறை புகலுவேன்யானே (எ)

கஷ்டம்தவிர்த்தென்மேல் கடைக்கண்பாரையா-உன்
காலுக்கடிமையென்று கழருதல் பொய்யா (எ)

கல்லோஉன் மனமின்னம் கரையாததேனோ உன்
கபடத் தொழிலுக் கெதிர் காளையான் றனோ (எ)

தொல்லையுரைத்து உன்னை தொழுமுனிசாமி
துயரருப்பாய்தணிகை துரைமுத்து சாமி. (எ)



(தயசுடாராதா தயாநிதிகாதா என்ற வர்ணமெட்டு.)

நெஞ்ச மிரங்காதா பஞ்சைமீது வாதா
தஞ்சம்சிவ போதா தணிகைவாழ் நாதா-வேதா (நெ)

தில்லை நாதன் மைந்தா - எல்லை போற்றுங் கந்தா
அல்லல்தீர வந்தாள் அபயம்நீயே தந்தா-ளெந்தாய் (நெ)

கோடி புண்ணியமுண்டு தேடிவந்தேன் கண்டு
வாடிடாமல்கொண்டு வாழ்த்துவாய் நீ-பண்டு-விண்டு (நெ)

தனிமுனிசாமி - பணிகுருசாமி
துணிசிவசாமி துணைவேறு-காமி-நேமி. (நெ)



(இராகம்-தன்னியாசி-தாளம்-சாபு.)

பல்லவி.

மருந்து கண்டு கொண்டேன் - நானொரு
மருந்து கண்டு கொண்டேன். (மரு)

அநுபல்லவி.

வருந்த முதலில் வருத்தந் தோற்றும்
பொருந்திப் பின்னால் பெருமை காட்டும் (மரு)

சரணங்கள்.

நல்லெண்ணைச்சேர்க்க நலஞ்செய் மருந்து
நாட்டுபச்சிலையால் கூட்டு மருந்து
வில்லணி வேடர் விளைத்த மருந்து
வீரமே முழுதும் வாய்ந்த மருந்து. (மரு)

கடுகினம் பட்டாலும் கண்டிக்கும் மருந்து
கருவுத் தொழிலையுந் துண்டிக்கும் மருந்து
நடுநிலை யாம்ருசி நல்ல மருந்து
நஞ்சை யருந்தினேன் கொஞ்சு மருந்து. (மரு)

பண்டித ருள்ளே பழுத்த மருந்து
பட்டத்துக் கேற்க செழிக்கு மருந்து
எண்டிசையும் சுற்ற யேற்ற மருந்து
எல்லோருஞ்செய்யத் துணியு மருந்து. (மரு)

பாரமலை யெங்கும் படர்ந்த மருந்து
பாட்டி னிசைபோல் துடர்ந்த மருந்து
ஏரகத் தோர்கள் இழைக்கு மருந்து
ஊல்லாத் தொழிலுக்கும் உழைக்கு மருந்து. (மரு)

உருகுமினங் கண்டு உருகு மருந்து
உண்ணஉண்ண வுடல் பொன்னு மருந்து
பருகின பேர்கள் பகரா மருந்து
பார்த்த வனைக்கூடக் கார்த்த மருந்து. (மரு)

வாத பேதங்களை வாட்டு மருந்து
வாதி மகிழ்ந்த விநோத மருந்து
சேதப்படாதென்றும் சீரோர் மருந்து
சிறுமணவூர் முனி சாமிசொல் மருந்து (மரு)



(இராகம்-காம்போதி-அடதாளம்-சாபு.)

கிடைத்தேறும் வழியைநீ பாரு - கதிர்
வடிவேல் துணையென்று கூறு
நடைபிணமே உந்தன் சீரு - நாளை
கடைவழிக்குதவுமோ பாரு. (கடை)

பெண்டுபிள்ளைகள் கூட வருமா - நாளை
பிணமானவுனை யெட்டித் தொடுமோ
தொண்டர்க் கருணைபட்டால் கெடுமோ - உடல்
துலைத்தா லிதுவேஜென்மம் வருமா. (கடை)

இகபோக சுகமெல்லாங் கேடு - நெஞ்சே
யென்றைக்கும் நமனார்கை யேடு
அகத்தைக்கொண் டழியாதே கூடு - வீணாய்
அழியாமுன் முருகனைப் பாடு. (கடை)

கல்லாயிரும்பா உன் தேகம் - நாசிக்
காற்றுப்போனால் பிண மாகும்
நல்லோர் பசியறிந்துத் தீரும் - நாளை
நடக்கும் வழிக்குத்துணை யாகும். (கடை)

அடியாரைச் சிரி ்வையாதே - சாபம்
அளித்திட்டா லணுவும் பொய்யாதே
படிமீதிலரஞ் செய்யிப் போதே - பின்னால்
பாவியென்றிட நடக் காதே. (கடை)

ஜெகமெட்டு திசையுமுன் கீர்த்தி - நெடுகச்
சென்றாலு மதிலென்ன சீர்த்தி
அகம்புற மென்றென்ற பூர்த்தி - நீயே
ஆனலல்லவோ நர மூர்த்தி. (கடை)

தனதான்ய வாழ்வினால் யாரும் - உன்னை
தாழ்வது மேலுப சாரம்
மனமாறப்பிற ரொரு போதும் - உன்னை
மதிப்பாரோ அனுபோகம் பாரும். (கடை)

உலகெல்லா முனக்கஞ்சி ஞலும் - எமன்
ஒலைக்கி நீயஞ்ச வேணும்
தலமீது தணிகையில் வாழும் - உயர்
தெய்வக் கிருபையல்லோ வேணும். (கடை)

சீமைமுழுது மதி காரம் - நீயே
செய்தாலு மதிலென்ன சாரம்
காமதகனன் மக ஞகும் - தணிகை
கடவுள் கிருபையல்லோ வேணும் (கடை)

நாடைபிரேமாலேனிஜாடா நாடேதேலிசேனு போபோபோரா
என்ற வர்னமெட்டு.

## ஜாவளி.

என்மேற்கருணை இல்லாஜாடை
ஏனோதிருவருள் புரிபுரிசாமி

உன்னைகுறவர்தன் மருகனென்றேனே
உன்றமயனைப்பெரும் வயறனென்றேனே (எ)

அன்னையேக்கொடியவள் நீலியென்றேனே
அப்பனைப்பாண்டியன் அடிமையென்றேனே (எ)



(இராகம்-கல்யாணி, ஏகதாளம்.)

பல்லவி.

ஆநந்த நடன மாடினார்
தணிகேசன் பொன்மயில்மிசை. (ஆனந்)

சரணங்கள்.

பந்திபந்தியாய் தேவர் பரிந்துமத்தளங்கொட்ட
அந்தரகணங்கள் இசை அறிந்துகைத்தாளந்தட்ட
இந்திரன் திடுக்கிட்டு ஏன்-ஏன்-ஏன்-யென
சந்திரசேகரர் சரீ-சரீ-சரீ-யென. (ஆ)

பயந்துபயந்துசுரர் பதுங்கிசங்கீதம்பாட
பங்கயநான்முகன் மங்களசுரம்போட
நயந்துகணேசன்கூட நான்-நான்-நான்-யென
உயர்ந்தமுனிவர்சித்தர் ஓம்-ஓம்-ஓம்-யென. (ஆ)

சதங்கைக்கிண்கிணிகாலில் ஜல-ஜல-ஜலவென
சரிந்தமுப்புரிநூலும் திலர்தம்பளபளென்ன
மிதமிகுகுண்டலங்கள் மின்-மின்-மின்-என
மேலுடையாடையொளி பொன்-பொன்-பொன்னென. (ஆ)

இசைதமிழால்முனி சாமிநின்றேத்திட
இமையவருமலர் அரும்புகள்தூற்றிட
புஜபலதேவர்கள் பிரபு-பிரபு-பிரபுவென
பொன்மகள்கணவனும் சபாஷ்-சபாஷ்-சபாஷ்-என. (ஆ)



சடாரியே சரணம் பவஹர குடாரியே சரணம்

என்ற வர்ணமெட்டு.

பல்லவி.

சடாக்ஷரத்தின்பதியே—யெள்ளளவு
கடாக்ஷமருள்நிதியே

சரணங்கள்.

படாமல் பிறர்துணை
தொடாமல் பாழில்மனம்
கெடாமல் உன்னடியை
விடாமல் பிடித்தேனே. (சடா)

கெட்டாலும் ஊழ்வினையால்
பட்டாலும் மனஞ்சோர்ந்து
விட்டாலும் மேலும்மேலும்
எட்டாமல் இருப்பேனே. (சடா)

எல்லாமறையு முனை
யல்லால் வேறில்லையென
பல்லாயிர முறைக்கச்
சொல்லா திருப்பேனோநான். (சடா)

வாட்டாமல் நரைக்கொண்
டாடாமல் பிறதெய்வம்
நாடாமல் உன்னைவிட்டு
ஓடாமல் அருள்செய்வாய். (சடா)

பூமியதனில் முனி
சாமிக்கணு கிருபை
நேமீப் பரமன்குரு
சாமீயிது தருணம். (சடா)

(இராகம்-பரசு, ஏகதாளம்.)

பல்லவி.

வேலாயுதமூர்த்தியே—எத்தனையாளா
ரூதேன்வெகுநேர்த்தியே

சரணங்கள்.

காலாகாலனைசிஷ்ய கோலமெடுக்கச்செய்து
மேலாமறைரகஸ்ய மூலமுரைத்தவடி. (வே)

கோனேகுற்றமகன்றத் தேனேயுனையடுத்தும்
நானேன்படுவேன்துயர் ஞானப்பிரகாசக்கதிர். (வே)

சூராதிசூரர்குலம் நீறாய்ப்படதெரித்த
வீரா உந்தனையன்றி ஓராதரவுமில்லை. (வே)

கோடாகோடியாய்வெகு கோடீசரணமென்று
வாடிவருந்துமென்மேல் மோடிசெய்யத்தகுமோ. (வே)

கனியேகனிந்தரசப் பாகேதிருத்தணிகை
முனியேதனியேன்முனி சாமிக்கினியார் துணை. (வே)



(இராகம்-சங்கராபரணம்-அடதாளம்.)

பல்லவி.

சொல்லச் சொல்லவுமர்மமா-யிதென்ன
சூதோ உனக்குதர்ம்மமா.

அநுபல்லவி.

பல்லாயிரம்பேரை காத்தநின் கீர்த்திக்கி
பழிசேருவதல்லால் அழியாதே அபகீர்த்தி (சொ)

சரணங்கள்.

பகைவராலுமென்ன பத்தெட்டுவிசைவுந்தால்
பட்சம்பாராட்டாமல் கட்சிகட்டுவாருண்டா
இகத்திலப்படியென்மே லேதேனுங்குறையுண்டா
எண்ணிப்பார்த்தருள்செய்தால் புண்ணியமுண்டையா ()

நிலத்திலென்னைப்போல்வினை செய்தோர்களிருந்தாலும்
நெஞ்சுப்புண்ணாய்நொந்து கெஞ்சார்களொருபோதும்
குலத்தில்மானிடரூபம் கொடுத்தென்னபிரதானம்
குறைதீர்த்தருள்வதன்றோ தெய்வத்தின்உபகாரம் (சொ)

அமரர்சிறையைமாற்றி அவரவர்பதியேற்றி
ஐராவதத்தன்பெண்ணை கொண்டாயதுவேசாட்சி
சமயதேவரிலார்தான் பெற்றார்கள் இக்கீர்த்தி
சுவாமியென்பதுனக்கே தகுமையாகுருமூர்த்தி (சொ)

இன்னமெத்தனைவிதம் யான் சொல்லிவருந்துவேன்
ஏழைமேலடஞ் செய்தால் யாரிடம் பொருந்துவேன்
துன்பமகற்றியருள் துரையேதணிகைவாசா
ஆதிமுனிசாமிவேறே கதிகாணேன்மஹாராஜா (சொ)

உ

தெய்வமேதுணை.

# உடன்கட்டையேறிய

# உத்தமிச்சிந்து.

இஃது,

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரால்

இயற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது,

1908.

24



உ

கடவுள் துணை.

உடன்கட்டையேறிய

# உத்தமிச்சிந்து.

---

விருத்தம்.

சீராறு மிவ்வுலகின் நூல்களெல்லாம்
சிறந்தவரே தெரிந்தவரே செய்கையோரே
பேராறும் பெரியவரே புகழ்பெற்றோரே
பெண்டுபிள்ளை யுள்ளவரே பணத்தினோரே
காராறுங் குணத்தோரே கதித்தபேரே
கற்றவரே மற்றவரே சுற்றத்தோரே
தாருறுங் கலியுகத்தி லெட்டாச்சேதி
தாட்டுதற்கு செவிகொஞ்சங் காட்டுவீரே.

இ-ம்-நாதநாமக்கிரியை-தாளம்-ஆதி.

பல்லவி.

விந்தையைப் பாரீர் உடன்கட்டையேறின
விபரத்தைக் கேளீர்

அநுபல்லவி.

சந்திரமதியென்றும் இந்திரன்பதியென்றும்
அந்திரனிதியென்றும் எந்தயுகத்தில்கண்டோம் (விந்)

சரணங்கள்.

ஆதியுதித்தனக றறியோமறிந்திட்டாலும்
அப்புறம்சிப்பாயென் றெப்பத்தெரிந்திட்டாலும்
ஜாதியறிந்தபேர்கள் சகலிருந்திட்டாலும்
சதிகாரனன்முகன் விதிபோட்டிருந்தாலும்

சங்கதிகேளீர்—உடன்கட்டையேறின
மங்கையைப் பாரீர்

கலியுகமதிலிந்த காட்சிகண்டதேயில்லை
கதைகள்புராணங்கள் கேட்டிருப்போர்தொல்லை
வலிமைக்கணவனேடு வழிபட்டமாதில்லை
வஞ்சியிவளுக்கோ பிறவியினிமேலில்லை (விந்)

சிப்பாயனுவல்நீதி செய்துவருகுங்காலே
சிறப்புமிவருடைய பொருப்புமறிந்தகாலே
யொப்பிநாய்க்கனென்று ஓயரக்கொடுத்தார்வேலே
வோகோயிதென்னவென்றுபார்த்தானொருவன்மேலே

பர்ம்மாவிற்சென்று வெற்றிபெற்றுவந்த
மர்மமுந்தெரிந்து

அவுல்தாரென்கிறடேட்டி அன்பாய்க்கர்னல்காட்டி
அப்பாலஜிட்டனென்று செப்புந்தொழிலேநீட்டி
பவருமதற்குத்தக்கப் படியும்சம்பளங்கூட்டி
பார்த்துவருகுங்காலே கார்த்திருந்தான்தோஷி

கொண்டையன்தன்னுடன் கூடயிருந்தஆளே
குடிக்குசகுனிசொந்த கொல்லேப்பல்லியைப்போலே
அண்டைக்கொடுத்தவேலே அவர்க்குவராதாலே
ஆத்திரம்பொருக்காத க்ஷாத்திரவெறுப்பாலே

கர்னலேக்கண்டு—சுபேதார்சாயபு
அண்டையிற்சென்று

கொண்டையனிடமென்ன குணத்தைக்கண்டீரையா
குடிப்பதுடனேபங்கி யடிப்பதென்னபொய்யா
விண்டதுபழுதோ விசாரித்துபாருமையா
வீணும்மாலேயே ஆணவமிகக்கொண்டான்

யென்றுசொன்னனும்—கர்னலிடந்தனியாய்
நின்றுசொன்னனும்

யென்னிடமச்சானும் யிருக்கிறன்அவுல்தாராய்
இந்தஅஜிட்டின்வேலே கொடுக்கத்தடையேன்கூறுய்
பின்னும்வெகுநாளாய் பார்க்கிறன்சார்வேசாய்
பரபரென்றிவனுக்கு உயர்த்திவிட்டீர்வீணுய்

அனியாயந்தானே—உமக்குவீண்பேர்வந்தால்
அவமானந்தானே

யென்றிந்தசாயபு நின்றுமடக்கிச்சொல்ல
யெல்லாம்விசாரிப்பேன் யென்றுகர்னல்சொல்ல
அன்றுகழித்துச்சிலநாள் ஆனபிறகுமெள்ள
யெல்லாங்கபாத்துபோய் வரும்போதுநல்ல

வழிதனில்தாவி—கொண்டையனேக்கர்னல்
வணக்கமாய்மேவி

இத்தனைநாளுன்மேல் மெத்தப்பிரியமுற்றேன்
யிப்போதுன்னடை செப்பக்கவலையுற்றேன்.
சுத்தக்குடியனென்று சொல்லக்கேள்வியுற்றேன்
சூரத்தொழிலுனக்கு வேண்டாமென்றுபட்டேன்

யென்றதுகேட்டான்—கொண்டையன்மனமெல்லாம்
செந்தணலானான் அப்போ

பிழைக்குமென்பேட்டியில் பிசகிருந்தால்கேளு
பின்னலிப்படிவந்து சொன்னவன்யெந்தாளு
கொழுகொழுவெனவேண்டாம் கூசாதுரைத்துப்போடு
குறிப்புசொல்லாவிட்டால் நருக்குவேனிதோபாரு

கத்தியையெடுத்தான்—வெட்டிமடிவேனென்று
சத்தியம்வைத்தான் அப்போ

சிரித்துக்கொண்டேகர்னல் •வருத்தமன்தில்வைத்து
சாய்ப்பேயுன்சேதி மாயமுரைத்தானென்று
உரைத்தவுடனேகத்தி யுரையிலவனேபோட்டு
உருகுமெழுகதுபோல் மனமுமிகவேநொந்து

வீடுபோய்ச்சேர்ந்தான்—உரைத்தவிபரமெல்லாம்
முடிவாகச்சொன்னான் பெண்ணே

இப்படியென்மீதில் தப்பிதமுரைத்தோனை
எட்டுநாளைக்குள்ளே சட்டாக்குவேனென்று
ஒப்பவுரைத்துப்போட்டு ஓடிதுரையைக்கண்டு
ஒருவாரமிரண்டுநாள் வேணும்ராஜாவென்று

துரையைக்கேட்டானும்—தந்தவுடன்திரும்பி
விரைவாய்வந்தானும் அப்போ

கள்ளங்கபடுலேனு பெள்ளானும்நீக்கனி
கனுக்கோஒகமாட்டா செப்புத்தாநீக்கனி
னெல்லுகானுபைனு அப்தம்செப்பேவானி
னரிகிசம்பேஸ்தானு றேப்புபொத்துகானி

சத்தியம்சூடு—சம்பேதிநிட்சயம்
தப்பேதிகாது ஐயா

இட்லுகாசெப்பேதி மஞ்சிதிகாதையா
யிங்ககொஞ்சநீவு தினமுலுகூடையா
பட்டுகொண்டேனிண்ட பாதலுவொச்சையா
பனிகிருனிமாட்டா லாடனுஒத்தையா

மனசுலோஅன்சு—தர்மராஜுசுகதா
சநுவிதேதெல்சு

இம்சவொச்சினிகானி யிட்லாசெப்பினிவானி
யெட்டன்னுசம்பேதி நிட்சயமனுகொனி
புடமிலேனேனுண்டி பதிகினடு
பாபஞ்சுட்டுனனி செப்புதாவதியேமி

கொட்டேதிநிஜமே—னேனேமிவுண்டேதி
கூடசஸ்தானே

நன்னுநூபெண்ளாட சுகமேமிகண்டிவி
நறிக்கிதேஆபாப மெவரிக்கிசேரேதி
சின்னபடுசுனேனு யேடபோய்பதிகேதி
சதிவினவாரிகி பெள்ளாமாசெப்பேதி

சரிகாதுஜயா—வாடேபதுக்கிவுன்னி
சம்பவொத்தையா

இடுவண்டிபொய்செப்பி யென்னுள்ளுஉண்டேதி
ஈஸ்வராதயவுண்டே யெவரேமிசேஸ்துடு
தடிசினவாடிகி தன்றிசம்பேவாடு
தர்மமுசேசிதே பேறுபொகடுதோறு

இதிதோஷமையா—ஏஜென்மமெத்திறு
யிம்ஸவொச்சையா

என்றுமனைவிசொல்ல புருஷன்கோபங்கொண்டு
யின்னந்திரும்பாதென்று யெண்ணிமனைவிநோக
அன்றுயெழுதினவன் அழிப்பானோவிதியேக
ஆறிட்டசாபமோ நேரிட்டதின்றேடே (விங்)

## நொண்டிச்சிந்து.

ஐம்பது ரூபாயெடுத்தான் மனைவிக்கு ஆனமட்டும் தேறுத லை மிகவுரைத்தான் யின்பமாய்க் கடையடுத்தான் யிவனுக்கு யிச் சையான பொருளெல்லா மிச்சமாய்க்கொண்டான் வாசனைத் திர வியமும் நல்ல வளமான பூவகை தினுசுகளும் காசிபணம் பாரா மலே யிவர் கருத்துக் கிசைந்தபடி செலவழித்து வீட்டில்மனைவி யடுத்து சீக்கிரம் வெந்நீரும் வைத்தவளை முழுகவைத்து தோட் டாபிஸ் தோலையெடுத்து என்மேல் தூறுசொன்ன பாவியுயிர் வா ங்குவேனென்று மீறியேசீக்கிரம்நடந்து ரோல்கால் மெல்லென வரும்பொழுது எதிர்பார்த்து தாறுமாறுய்ப் போகாமலே பிஸ் தோலை தாராளமாய்வாங்கி நேராய்விட்டான் பொட்டென விழுந் துமடிந்தான் மச்சானும் தட்டுகெட்டுத் தடுமாறி எட்டிநடந்தான் சட்டெனத் திரும்பியுஞ்சுட்டான் அவனொரு கட்டடத்திற்குள் நுழைந்து கதவடைத்தான். (தந்தின தன)

## விருத்தம்.

ஒருகுறிதான் விட்டவுடன் பட்டுச்செத்தான்
யின்னொருவ னுக்குவுயிர் கெட்டியாலே
வருகுறியைத் தப்பித்து மறைந்துபோட்டான்
வஞ்சனை தான் மறுபடியுஞ் சுட்டோமானல்
தருமநெறி தனையுணர்ந்து வீடுசேர்ந்து
தன்னுடைய மனைவிமுகம் பார்த்துச்சொல்வான்
பருவசிறு பெண்ணணங்கே பயப்படாதே
பசியாறுவோமென்று பகர்ந்திட்டானே.

## நொண்டிச்சிந்து.

இருவர்க்கும் அன்னம்பகர்ந்தான் ஒரிலையில் யிருவருமொருமன தாகப்புசித்தார் சிறந்த நகைகளெடுத்தான் மனைவியைசித்திரப்பதுமைபோ லலங்கரித்தான் அரும்பு மலர்களெடுத்தான் உன்னிதமாய் அனங்கன் ரதியைப்போல் துலங்கவைத்தான் பட்டுப் புடவைகொடுத்தான் நல்ல படத்தின் உருவைப்போலதொடுத்துவிட்டான் இணங்கியிரு பேரும்படுத்தார் அவர்கள் இச்சைபோலே அநுபோகம் ஒத்துமேசெய்தார் பின்னுமிருபேரும்படுத்தார் மனம்போல போகவனுபோகமெல்லாம் போகவிடுத்தார் பூட்டிய நகையுடனே யின்னம் பெட்டியில் நூறுரூபா கொட்டியிருந்தேன் தட்டுமுட்டு வேட்டிகளெல்லாம் எடுத்துவுன் தாய்வீடுபோய்ச்சேர்ந்து பிழையுமென்றான் கேட்டாள் சிறுமாது கண்களில் கலகலவெனநீர் சொரியவிட்டு புருஷனைப்பிரிந்தபின்பு என்னுயிர் போனாலும் நல்லகதி யில்லையேயென்றாள், (தந்தின தன)

## விருத்தம்.

பணங்காசு நகைகொடுத்து பிழையுமென்றாய்
பாவிநா னப்படியே நடந்துவிட்டால்
யினமெல்லாம் சிலநாளே புகழ்ந்துகொள்வார்
யிதுவெல்லா மொழிந்திட்டால் தூறுசொல்வார்
மணவாளன் தனைவெறுத்த பாவிக்கெல்லாம்
மண்ணடைந்து போனாலும் மோட்சமில்லை
உனக்கென்று தலைகுனிந்த நாள்துடங்கி
உன்னுயிரு மென்னுயிரு மொன்றுதானே.

## கும்மி.

உன்னுடன் தானே மடிவேனென்று யிந்த உத்தமிசொன்ன மொழிகேட்டு, சின்னவயதுநீ சாகாதேபெண்ணே சீச்சீயுன்தாய் வீடு போடியென்றான். 1

போவதுயென்னுயிர் உன்னடிக்கேபின்னம் போக்கிடம்வேறில்லை மன்னவரே, ஆவதுஆகட்டும் என்னைமுன்னேசுட்டு அப்புறம்உன்னுயிர் மாளுமென்றாள். 2

வார்த்தையொன்றுக்காக நீயிறந்துயென்னை வையகமீதினில் விட்டுவிட்டால், பார்த்தவரென்னைப் பழித்திடுவாரப்போ பத்தினியென்றபேர் கிட்டாதையா. 3

சந்திரனில்லாப் புவிபோதும்நல்ல தாமரையில்லாக் குளம் போலும், தந்தியில்லாத் தலம்போலேநான் தாரிலிருந்தென்ன லாபமையா. 4

தீபமில்லாத மலைபோலும்ஒரு தெய்வமில்லாத தலம்போலும், கூபமில்லாத தலம்போலும்யிந்த குமரியிருந்தென்ன லாபமையா. 5

மங்கையுரைத்த மொழிகேட்டுஅந்த மன்னவன்புத்தி மிகவுநிறுத்தி, சிங்கமேயுன்னைப்போல் புத்திசாலியிந்த சீமையில்கிட்டுமோ வென்றணைத்தான். 6

எத்தனையாக வுரைத்தாலுமிந்த உத்தமிகூடத்துணிந்திடவே சித்தந்திரும்பியே சீட்டெழுதிக்கர்னல் சீமானுக்கப்போ வனுப்பிவிட்டு. 7

கடிதமெழுதியே கீழேவைத்துஅப்பா கட்டினமாது முகம் பார்த்து, முடிவானசேதி யுரைத்திடுவாய்பெண்ணே மோடியினிமே லிருந்தாக்கால். 8

உரைப்பதிலொன்றுமே யில்லையையாநான் உன்னுடன்கூட மடிவேனையா, புருஷனிறந்தப் பிறகிருந்தாலெனக்குப் பொல்லாதபேரு கிடைக்குமையா. 9

என்னென்றுசீட்டு யெழுதவானுமிந்த மன்னவன்கர்னல் துரைபார்க்க, என்னிடமாது யெனக்குமுடன்கட்டை யேறப்பெரும்படை வேணுமென்றான். 10

இட்டநகையைக் கழட்டவேண்டாமையா யென்னிடடிரசும் பிரிக்கவேண்டாம், சுட்டுயெறித்துநீ ராக்கவேண்டாமையா சீராய்ச்சமாதியில் வையுமையா. 11

என்னமாய்புத்தி யுரைத்தாலுமந்த கன்னியுயிரை மதிக்கவில்லை, பின்னும்பயப்பட சோதிக்கலாமென்று பெண்ணின்புஜத்திலே சுட்டானும். 12

எது சையாவென்னை சோதனைசெய்கிறீர் யிப்படிப்பாதைப் படுத்துகிறீர், வாதனைசெய்யாமல் சுட்டுவிட்டாலிந்தப் பாவியும் மோட்ச மடைவேனென்றாள். 13

ஒப்பிமனைவி யுரைத்திடவே அவர் உண்மைதானென்றுமன ந்துணிந்து, கைப்பிடியாயுதந்தானெடுத்துஅவர் கண்ணுனமாதை முன் சுட்டுவிட்டான். 14

முன்னுகப்பெண்டீரைச் சுட்டுவிட்டுயிவர் தன்னுயிர்போகத் துணிவுகொண்டு, அன்னைபோல்மாமி தனையழைத்து யென்னை ஆ தரவாகப்பிடியுமென்றான். 15

பட்டுவிழுந்து சுருண்டிருந்தாலப்போ பார்க்குந்துரைகளுக் கொப்பாது, தொட்டும்பிடித்து நிறுத்திவிட்டப்புறம் தூரப்போ வென்றிவர் கேட்டுக்கொண்டார். 16

காலையில்நாழிகை பத்துக்குள்ளே துரைகர்னலும் மற்றப்பெ ரியவரும், சாலத்துயர்கொண்டு பார்த்தழுதுமெத்த சத்தியவா னென்றே தழுவிக்கொண்டார். 17

சீட்டிலெழுதி யிருந்தபடிதானே செய்யுமென்றேகர்னல்தா னுரைக்க, நாட்டில்திரண்ட ஜெனத்திரளையப்போ னென்ன சொல்லுவேன் நேசர்களே. 18

குங்குமம்வாறி யிறைப்பவருமதைக் கூவிமுகத்தி லணிபவ ரும், மங்கையிவளைப்போல் உத்தமியாரென்று மகாஜெனம்சொ ல்லிப்புலம்பிடுமாம். 19

மன்னனும்மங்கை வருகையிலேசுத்தி மகாஜெனக்கூட்டம் நெருங்கையிலே, பொன்னுலகிந்திர னெண்ணிடலாமிந்தப் போ தக்குபேரணைப் பின்னிடலாம். 20

அரும்பைவாறி யிறைத்திடுவார்சிலர் ஐயையோவென்று ப தைத்திடுவார், யென்னவதிசயங் கலியுகத்திலே யிப்பேறுபட்டவ னுண்டோவென்பார். 21

முன்னால்சென்று மகிழ்ந்திடுவார்சிலர் பின்னால்துடர்ந்து பு கழ்ந்திடுவார், யென்னவதிசயங் கலியுகத்திலே யிப்பேறுபட்டவ ளுண்டோயென்பார். 22

எத்தனைகால மிவர்கதைசொன்னாலும் யின்னமுங்கேட்கலா மென்றிருக்கும், பத்தினிதன்கதை நேர்த்தியாயாவரும் பார்த்து மகிழுங்கள் புவியோரே. 23

உடன்கட்டையேறிய உத்தமிச்சித்து

முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

அஞ்ஞானவைரி

என்னும்

# மெஞ்ஞானத்தங்கம்.

இஃது,

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரால்

இயற்றப்பட்டு,




தமது

சென்னை சூளை

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1908.

58



உ

கடவுள் துணை.

# மெஞ்ஞானத்தங்கம்.



மெஞ்ஞானத்தங்கம் மேலானத்தங்கம்
அஞ்ஞானத்தங்கமெல்லாம் ஞானத்தங்கம்
அனித்தியமாகுமடி. க

தங்கத்திற்றங்கம் தனித்தங்கமொன்றிருக்க
பித்தளைத்தங்கத்திற்கு ஞானத்தங்கம்
பித்தாசைக் கொண்டாயடி. உ

பொன்னிலனேகம் பூஷணந்தானாகும்
தன்மைபோல்தெய்வமடி ஞானத்தங்கம்
தர்க்கமுதவாதடி. ௩

சாஸ்திரவேதம் சகலமுந்தான்பேதம்
மூர்த்தியொருத்தனடி ஞானத்தங்கம்
முதல்வனவன்றானடி. ௪

வேதமனேகம் வேடிக்கைதானாகும்
பேதமதில்நுழைந்தால் ஞானத்தங்கம்
பிறப்புக்கிடமாமடி. ௫

ஆத்திச்சுவடி அதையேகடைப்பிடிநீ
வேத்துச்சுவடியெல்லாம் ஞானத்தங்கம்
விபரீதமாகுமடி. ௬

அன்னைமுதற்றெய்வம் அப்பன்மறுதெய்வம்
பின்னைகுருதெய்வமடி ஞானத்தங்கம்
பிடிவாதஞ்செய்வாயடி. ௭

அண்டமும்மாயம் அகிலமுந்தான்மாயம்
பிண்டத்தில்வந்ததெல்லாம் ஞானத்தங்கம்
பொய்யாய்முடியுமடி. ௮

பிறப்புப்பிறப்பென்று பேசிமகிழ்வதெல்லாம்
இறக்குந் தொழிலுக்கல்லோ ஞானத்தங்கம்
எல்லாம் பிறந்தோமடி. ௯

எரும்புகடையானை யெண்பத்துநான்குவித
பிறப்பும்பிரமமடி ஞானத்தங்கம்
பேதமென்றெண்ணுதடி. ௧0

வேதபுராணம் விபரீதஞானம்
ஆதாரமில்லையடி ஞானத்தங்கம்
எல்லாம்மாராட்டமடி. ௧௧

ஒன்றுக்குஒன்று உயர்ஞானம்சொன்னாலும்
கண்டுபிடிப்பதற்கு ஞானத்தங்கம்
கருத்திலடங்காதடி. ௧௨

எட்டிலெழுதிவைத்த யெண்கோடிஞானமெல்லாம்
கூட்டுக்குதவாதடி ஞானத்தங்கம்
குருவருள்வேணுமடி. ௧௩

எட்டுக்கழகாக எழுதியஞானமெல்லாம்
பாட்டுக்கழகேயல்லால் ஞானத்தங்கம்
பசிதீரமாட்டாதடி. ௧௪

சாஸ்திரங்கற்றாலும் சமுசாரம்விட்டாலும்
சூஸ்திரங்காட்டுதற்கு ஞானத்தங்கம்
சுயகுருவேணுமடி. ௧௫

குருவில்லாஞானம் கோடிப்படித்தாலும்
வடிவில்லாப்பெண்ணதுபோல் ஞானத்தங்கம்
வாழ்க்கைக்குதவாதடி. ௧௬

எட்டாதவீண்கோலம் ஏதுக்கடிஜாலம்
அட்டாங்கயோகமெல்லாம் ஞானத்தங்கம்
அவத்தைக்குழலமடி. ௧௭

யோகநிலைநின்றாலும் உண்மைநிலைகண்டாலும்
தேகநிலையாவதற்கு ஞானத்தங்கம்
சித்தநிலைவேணுமடி. ௧௮

பேச்சையடக்காமல் பேரின்பஞ்சேராமல்
மூச்சையடக்கிக்கொண்டால் ஞானத்தங்கம்
முதலுக்கேமோசமடி. கசு

எந்தநிலைகண்டாலும் ஈனநிலையற்ருலும்
சிந்தைகலைநில்லாவிட்டால் ஞானத்தங்கம்
தெய்வநிலைகாணுதடி. உ௦

மூச்சையடக்கி முழுகிக்கிடந்தாலும்
பேச்சுக்கிடநதானடி ஞானத்தங்கம்
பலனென்றுமில்லையடி. உக

காற்றையடக்கி கண்மூடிக்கொண்டாலும்
கூற்றன்விடமாட்டானடி ஞானத்தங்கம்
குருவேஷமேதுக்கடி. உஉ

வாய்ஞானம்பேசுகிற வம்பர்கள்ஞானமெல்லாம்
பேய்ஞானமாகுமடி ஞானத்தங்கம்
பின்னென்றுமில்லையடி. உ௩

கல்வித்திறத்தால் கடைஞானம்சொன்னுலும்
சொல்லுக்குறுதியுண்டோ ஞானத்தங்கம்
சுகமொன்றுமில்லையடி. உ௪

உள்ளபடிஞானம் உண்மையுரைத்தாலும்
கள்ளஜெனங்களடி ஞானத்தங்கம்
கருத்தில்பொருந்ாதடி. உரு

வெரியர்குடியரைப்போல் விளையாடும்பிள்ளையைப்போல்
பெரியோர்கள்செய்கையடி ஞானத்தங்கம்
பாஷையும்வேருமடி. உசு

காலமொருமூன்றும் கருத்திலுணர்ந்தாலும்
ஞாலத்திற்சொல்லாரடி ஞானத்தங்கம்
நல்லோர்பெரியோரடி. உஎ

தலையைச்சிறைத்தாலும் சடையைவளர்த்தாலும்
நிலையிற்றரிக்காதவர் ஞானத்தங்கம்
நடைபிணமாகுமடி. உஅ

சாத்திரங்கற்றாலும் சதுர்வேதந்தீர்ந்தாலும்
சோத்திலடக்கமடி ஞானத்தங்கம்
சுயஞானியாகாரடி. ௨௯

வஞ்சம்பொறாமை வலதுசொல்ஆராமை
கொஞ்சமில்லாதிருந்தால் ஞானத்தங்கம்
குருக்கள்கிடைப்பாரடி. ௩௦

கபடுபொய்சூது களவுபிடிவாது
அகடுயில்லாதிருந்தால் ஞானத்தங்கம்
ஆசான்கிடைப்பாரடி. ௩௧

காற்றையடக்கும் கருதேடிக்கொண்டவர்கள்
சோற்றைவிரும்பாரடி ஞானத்தங்கம்
சுயஞானம்பேசாரடி. ௩௨

செத்தும்சாகாதவர்போல் சித்துவிளையாடுகிற
முத்தர்கிருபையிருந்தால் ஞானத்தங்கம்
முத்திகிடைக்குமடி. ௩௩

மாண்டவர்போலே மயக்கமதுகாட்டி
தாண்டவம்செய்வாரடி ஞானத்தங்கம்
தன்னையறிந்தோரடி. ௩௪

தன்னையறிந்த தலைவரடிபிடித்தால்
என்னகுறைச்சலடி ஞானத்தங்கம்
எல்லாங்கைக்கூடுமடி. ௩௫

சம்சாரத்தொல்லை சாதிப்பாராருமில்லை
அம்சமதுபோலிருந்து ஞானத்தங்கம்
அசையாமல்கேளடியோ. ௩௬

துக்கசமுசாரம் தொல்லையிதிலனேகம்
எக்காலமானாலுந்தான் ஞானத்தங்கம்
ஈடேரமாட்டாயடி. ௩௭

ஆண்டிகள்சன்யாசி அழகுப்பரதேசி
பூண்டகாஷாயமெல்லாம் ஞானத்தங்கம்
பொதிச்சுமையாகுமடி. ௩௮

காலமகுத்துவத்தால் கஞ்சிகிடைக்காமல்
கோலமெடுத்தாரடி ஞானத்தங்கம்
குருவேஷங்கொண்டாரடி. ௩௯

குடியர்வெறியர் குடும்பநிலையில்லாதோர்
தடியர்மடையரெல்லாம் ஞானத்தங்கம்
சன்னியாசியானாரடி. ௪௦

பெண்டுமரித்தோர்கள் பிழைக்கவடிகாணாதோர்
சண்டையில்வீடுவிட்டோர் ஞானத்தங்கம்
சாமியாரானாரடி. ௪௧

கல்வியறிவில்லாதோர் கைத்தொழிலிற்றேராதோர்
மெல்லமெல்லசாமியென்று ஞானத்தங்கம்
மின்முடிவளர்த்தாரடி. ௪௨

கொஞ்சம்பொருளிருந்தால் குடும்பத்தையேன்விடுவார்
பஞ்சம்பிழைப்பதற்கு ஞானத்தங்கம்
பரதேசியானாரடி. ௪௩

சோம்பலுடையோரும் சூதாடும்வம்பர்களும்
சாம்பசிவன்போலவே ஞானத்தங்கம்
சடையைவளர்த்தாரடி. ௪௪

சடையைவளர்த்தவரும் தலைமொட்டையானவரும்
கோடிபேர்கூடினாலும் ஞானத்தங்கம்
குருவில்லாசிஷ்யரடி. ௪௫

கட்டைதடியர்களும் கஞ்சாக்குடியர்களும்
மொட்டையடித்துக்கொண்டு ஞானத்தங்கம்
முழுச்சாமியானாரடி. ௪௬

ஆடித்திரிந்தவரும் அக்கிரமம்செய்தவரும்
பேடிப்பயல்களெல்லாம் ஞானத்தங்கம்
பெருஞ்சாமியானாரடி. ௪௭

சொல்லுங்குருக்களெல்லாம் சோற்றுக்கிடங்கொடுத்தால்
பல்லைத்திறப்பாரடி ஞானத்தங்கம்
பசையொன்றுமில்லையடி. ௪௮

கோமணஆண்டிகள் கோடாகோடிப்புவியில்
காமணம்காட்டிவிட்டால் ஞானத்தங்கம்
கலைஞானம்சொல்வாரடி. சகூ

கானகமும்மற்ற கடலேழ்கடந்தாலும்
ஞானிக்கிடையாதடி ஞானத்தங்கம்
நமக்கேன்கெருவமடி. ருo

கக்கத்தில்வேதம் கட்டிச்சுமந்தாலும்
அக்கரைச்சேருவது ஞானத்தங்கம்
அருமைதானாகுமடி. ருக

பாதக்குறடும் பலமானதாழ்வடமும்
காதிற்கவசமெல்லாம் ஞானத்தங்கம்
கடைவழிகாட்டாதடி. ருஉ

காஷாயவஸ்திரமும் கையில்பிருதுகளும்
வேஷாதியுள்ளதெல்லாம் ஞானத்தங்கம்
வீண்பிலிக்காகுமடி. ருங

பூசுவதும் பூணுவதும் பூசனைகள்செய்வதுவும்
பேசுவதும்ஏசுவதும் ஞானத்தங்கம்
பேரின்பந்தாராதடி. ருச

ஆடுவதும்பாடுவதும் ஆளடிமைக்கொள்ளுவதும்
ஓடுவதும்தேடுவதும் ஞானத்தங்கம்
ஒருஜாண்வயிற்றுக்கடி. ருரு

வல்லாளகண்டனென்று வாய்மதம்பேசுவதும்
இல்லாதையுண்டென்பதும் ஞானத்தங்கம்
எண்ஜாணுடம்புக்கடி. ருசா

வீண்கோலங்காட்டி வெருத்தாரைப்போல்நீட்டி
ஆண்கோலங்கொண்டதினால் ஞானத்தங்கம்
ஆனபலனென்னடி. ருள

குருவையறியாமல் குருதொட்டுக்காட்டாமல்
கருவையறிந்தவர்போல் ஞானத்தங்கம்
கண்கெட்டுநின்றாரடி. ருஅ

புண்பட்டநெஞ்சரெல்லாம் புகைசெய்துபாஷாணம்
கண்கெட்டுப் போனவர்கள் ஞானத்தங்கம்
கண்க்கிலடங்காதடி. ௫௯

புல்லையுண்டாக்குதற்கு புருஷனொருவனில்லை
வெள்ளியுண்டாக்குதற்கு ஞானத்தங்கம்
வெகுபேரலைவாரடி. ௬0

கும்பியழுக்கெடுக்க கோடிக்கொருவனில்லை
செம்பிலழுக்கெடுக்க ஞானத்தங்கம்
ஜெகமேயலையுதடி. ௬௧

கண்கெட்டவாதியெல்லாம் கண்டவிடந்திரிவார்
பண்பட்டவாதியைத்தான் ஞானத்தங்கம்
பார்க்கமுடியாதடி. ௬௨

வாதியரைப்புளுகன் மாந்திரிமுக்காற்புளுகன்
சோதிடம்சொல்பவன்றான் ஞானத்தங்கம்
சுத்தப்புளுகனடி. ௬௩

பூசாலியும்புளுகன் புலவன்பெரும்புளுகன்
ஆச்சாரியென்பவன்றான் ஞானத்தங்கம்
அண்டப்புளுகனடி. ௬௪

கூப்பிட்டழைக்குமுன்னே கூத்தாடும்தெய்வமெல்லா
காப்பாற்றமாட்டாதென்று ஞானத்தங்கம்
கருத்தில்நினைப்பாயடி. ௬௫

உடுக்கையடிக்குமுன்னே ஓடிவருந்தேவதைகள்
இடுக்கணகற்றாதடி ஞானத்தங்கம்
எல்லாம்வயற்றுக்கடி. ௬௬

போராடும்பேய்கள் பொல்லாதபேய்களடி
சாராயப்பேய்களெல்லாம் ஞானத்தங்கம்
சஞ்சலம்திர்க்காதடி ௬௭

ஆலமரதேவதைகள் அரசமரதேவதைகள்
சாலமரதெய்வமெல்லாம் ஞானத்தங்கம்
சஞ்சலம்தீர்க்காதடி. ௬௮

ஆடுபலிகேட்கும் ஐயன்பிடாரியெல்லாம்
கூடுவிட்டுப்போமுயிரை ஞானத்தங்கம்
கொண்டுவந்துதாராதடி. சுசு

தண்டுகமண்டலமும் தாவடமும்காவடியும்
கொண்டுசுமந்துவரும் ஞானத்தங்கம்
குடியரைநம்பாதடி. எo

பெரியோரடையாளம் பார்க்கஙிலவரமாம்
தெரியாமல்விட்டுவிட்டால் ஞானத்தங்கம்
திரும்பக்கிடைக்காரடி. எக

முத்திகரைக்கு முந்தும்பெரியோர்கள்
சித்தம்நினைப்பதெல்லாம் ஞானத்தங்கம்
சிவமென்றிருப்பாரடி. எஉ

கண்ணிற்படும்பொருளை கடவுளென்றேநினைப்பார்
மண்ணிற்பெரியோரெல்லாம் ஞானத்தங்கம்
மனத்துக்கடக்கமடி. எஙு

மனத்தைப்பலிகொடுத்து மானத்தைச்சுட்டெறித்து
இனத்தைவெருத்துவிட்டு ஞானத்தங்கம்
ஏழைபோல்நிற்பாரடி. எச

குந்துவார்படுப்பார் குழந்தையைப்போல்கிடப்பார்
மந்திபோல்சேட்டைசெய்வார் ஞானத்தங்கம்
மகாத்துமாவானோரடி. எரு

சொன்னதையேசொல்வார் சுர்ரென்றெழுந்திருப்பார்
பின்னும்விழித்திடுவார் ஞானத்தங்கம்
பெரியோரடையாளண்டி. எசு

விழிப்பார்நெரிப்பார்கள் வெட்டெனத்திட்டிடுவார்
பழித்தால்சிரித்திடுவார் ஞானத்தங்கம்
பரமமெஞ்ஞானியடி. எஎ

கூடயிருந்தாலும் கூப்பிட்டழைத்தாலும்
யாரையார்காண்பாரடி ஞானத்தங்கம்
யெல்லாம்பிரமமடி. எஅ

மனத்தையடக்க மாளாதநேகஜெனம்
இனத்தைப்பிரிந்தாரடி ஞானத்தங்கம்
ஏற்றக்கோலாகுமடி. எகூ

கடலைக்கடப்பனவும் கான்மலையிலேருவதும்
உடலைவளர்ப்பதற்கே ஞானத்தங்கம்
உற்றுநினைப்பாயடி. அ0

கண்கட்டுமோடிகளும் கருவித்தைஜாலங்களும்
உண்ணுமுணவுக்கல்லால் ஞானத்தங்கம்
உயிர்த்துணையல்லவடி. அக

கயற்றில்நடப்பதுவும் காடிப்புலிமிருகம்
பயிற்றிநடிப்பதுவும் ஞானத்தங்கம்
பசியின்கொடுமையடி. அஉ

ஊருராயோடுவதும் உயர்ஞானம்பேசுவதும்
சோரும்துணிக்கேயல்லால் ஞானத்தங்கம்
சொர்க்கத்துக்கல்லவடி. அங

கூலிக்கிஞானம் கொட்டியளப்பவர்கள்
வேலிக்கிமுள்ளதுபோல் ஞானத்தங்கம்
விட்டுப்பிரியாரடி. அச

தன்னையறிந்தோர்கள் தலைவனைக்கண்டோர்கள்
உன்னைமதிக்காரடி ஞானத்தங்கம்
உலகத்தைவேண்டாரடி. அரு

தெய்வத்திருவழியே தேசவெளிச்சமென்று
மெஞ்ஞானம்சொல்லுவதால் ஞானத்தங்கம்
மெதுவாய்த்திரிவாயடி. அசூ

நகர்வனஊர்வனவும் நடப்பனபறப்பனவும்
பகவான்விளையாட்டடி ஞானத்தங்கம்
பகையொன்றுமாகாதடி. அஎ

பூண்டுகள்தாபரமும் பெரியவிருக்ஷமுதல்
ஆண்டவன்சிருஷ்டியடி ஞானத்தங்கம்
அழிப்பனவாகாதடி. அஅ

தொட்டகுறையுடனே துடியாகமுன்னிழைத்த
விட்டகுறையிருந்தால் ஞானத்தங்கம்
மெஞ்ஞானங்கிட்டுமடி. ௮௯

ஊழான வூழ்வினையை ஒழித்தமெஞ்ஞானிகளும்
பாழானப்பெண்ணாசையால் ஞானத்தங்கம்
பல்லையிளிப்பாரடி. ௯0

சுடலைமெஞ்ஞானிமுதல் சுத்தமெஞ்ஞானிகளும்
விடலைப்பெண்கண்டுவிட்டால் ஞானத்தங்கம்
வேறெண்ணங்கொள்வாரடி. ௯௧

மெத்தநாள்யோகி மிகுஞானியானாலும்
சித்தினிப்பெண்ணைக்கண்டால் ஞானத்தங்கம்
சீலையவிழ்ப்பானடி. ௯௨

பெண்ணைத்துரந்தவர்கள் பூமியிலாருமில்லை
கண்ணன்கபாலிமுதல் ஞானத்தங்கம்
கட்டிச்சுமந்தாரடி. ௯௩

ஏரியிலேநீரிருந்தால் எவ்விடத்துப்பட்சிகளும்
சாரிவந்துசேர்வதுபோல் ஞானத்தங்கம்
சம்சாரவாழ்க்கையடி. ௯௪

பச்சைப்பயிரிடத்தில் பட்சிமுதல்மாமிருகம்
இச்சைவைத்து சேர்வதுபோல் ஞானத்தங்கம்
எல்லாம்வருவாரடி. ௯௫

குணமில்லாவிட்டாலும் குலமில்லாவிட்டாலும்
பணமொன்றிருந்துவிட்டால் ஞானத்தங்கம்
பலபேருரவாமடி. ௯௬

பணத்தைமதியாமல் பலயீனம்செய்யாமல்
குணத்தோடிருந்துவிட்டால் ஞானத்தங்கம்
கிட்டேநெருங்காரடி. ௯௭

உலகம்பணத்தாலே உரவும்பணத்தாலே
கலகம்விளைவதெல்லாம் ஞானத்தங்கம்
காசுபெருக்காலடி. ௯௮

காசுஇல்லாதொருவன் கடைத்தெருபோனாலும்
பேசுவாரங்கேதடி ஞானத்தங்கம்
இது-பூலோகவாழ்க்கையடி. ௯௯

பிணத்தைச்சுடும்புலைய பஞ்சமரானாலும்
பணத்தைத்திரந்துவிட்டால் ஞானத்தங்கம்
பழநாளுறவாமடி. ௧௦௦

அடுத்தஉரவானாலும் ஆடைகருத்திருந்தால்
தடுத்துநிருத்திடுவார் ஞானத்தங்கம்
தாட்சண்யம்பாரா ரடி. ௧௦௧

காணாப்பயலேனும் காப்புகொலுசிருந்தால்
வேணவணக்கமுடன் ஞானத்தங்கம்
வேண்டியழைப்பாரடி. ௧௦௨

அற்பசமுசாரம் அதற்குப்பலவிசாரம்
சொற்பமனிதரெல்லாம் ஞானத்தங்கம்
சொல்லிமகிழ்வாரடி. ௧௦௩

சொற்பசமுசாரம் சொன்னால்பலவிசாரம்
அற்பமனிதரெல்லாம் ஞானத்தங்கம்
ஆற்றித்திரிவாரடி. ௧௦௪

ஆற்றுப்பெருக்கதுபோல் அதிகவரவிருந்தால்
போற்றிப்பணிந்திடுவார் ஞானத்தங்கம்
பொருளுள்ளமட்டுமடி. ௧௦௫

செல்வங்குறைந்துவிட்டால் சிலவுக்குக்காணாட்டால்
இல்லாளுந்தூருசொல்வாள் ஞானத்தங்கம்
யாரும்மதியாரடி. ௧௦௬

பிள்ளைமதியாது பெற்றோருமேசிடுவார்
உள்ளசினேகிதரும் ஞானத்தங்கம்
ஒதிங்கிப்போய்நிற்பாரடி. ௧௦௭

பணத்துக்கழுவார்கள் பலபொருளுக்கழுவார்
குணத்துக்கழுபவர்கள் ஞானத்தங்கம்
கோடிக்கொருத்தரடி. ௧௦௮

செத்தப்பிணத்தருகே சாகும்பிணங்களெல்லாம்
சுத்தியழுவதென்ன ஞானத்தங்கம்
சூட்சமுரைப்பாயடி. க0கூ

ஆனைக்குதிரைகளும் அதிகாரமேன்மைகளும்
சேனைசிப்பந்தியெல்லாம் ஞானத்தங்கம்
சாம்போதுதவாதடி. கக0

ஆஸ்தியும்பாஸ்திகளும் அழகானகட்டடமும்
நீஸ்திதியானதெல்லாம் ஞானத்தங்கம்
பின்னேதுடராதடி. ககக

கொட்டிவைத்ததனமும் கோட்டைபோல்மாளிகையும்
பொட்டென்றுயிர்பிரிந்தால் ஞானத்தங்கம்
பின்னேதுடராதடி. கக௨

இருக்குயசுர்சாமம் அதர்வணவேதமுதல்
திரக்கப்படித்தாலுமே ஞானத்தங்கம்
தீர்க்காயுளில்லையடி. கக௩

தேடிவைத்தபொருளும் திரளானபந்துக்களும்
ஆடுமுயிர்போகையிலே ஞானத்தங்கம்
ஆறும்வரப்போரதில்லை. கக௪

ஆதிமறைவேதம் அறுகோடிசாஸ்திரமும்
ஓதுங்குருக்கள்கூட ஞானத்தங்கம்
ஒழியத்தான்வேணுமடி. கக௫

பெண்டீரகத்துமட்டும் பிள்ளைசுடலைமட்டும்
கண்டஜெனங்களெல்லாம் ஞானத்தங்கம்
கடைத்தெருமட்டுமடி ககசு

ஆண்டிப்பரதேசி யதிதிகள்யேழைகட்கு
வேண்டிக்கொடுத்ததெல்லாம் ஞானத்தங்கம்
விட்டுப்பிரியாதடி. ககள

செட்டென்வாழ்ந்தாலும் செங்கோல்பிடித்தாலும்
இட்டதருமமட்டும் ஞானத்தங்கம்
என்றும்பிரியாதடி. ககஅ

தர்மம்அதர்மமென்று தாரணியிலேயிரண்டின்
மர்மம்தெரிந்துக்கொண்டால் ஞானத்தங்கம்
மாபுண்ணியவானுமடி கககூ

எள்ளளவானாலும் இல்லையென்றுசொல்லாமல்
கிள்ளிக்கொடுத்திருந்தால் ஞானத்தங்கம்
கூடத்துடருமடி. க௨0

உன்பசியைப்போலே உலகத்தில்ஏழைகளின்
தன்பசிதீர்த்திருந்தால் ஞானத்தங்கம்
தனக்குதுணையாமடி க௨க

செல்வப்பெருக்காலே சீமையிலேழைகளை
மல்லுக்கிழுக்காதடி ஞானத்தங்கம்
மாளாநரகமடி. க௨௨

ஆதரவில்லாரை அடிமைகள்ஏழைகளை
வேதனைசெய்யாதடி ஞானத்தங்கம்
வெகுமோசமாகுமடி. க௨௩

சூதைவிரும்பாதே சூதாடப்போகாதே
பூதலமாண்டோரெல்லாம் ஞானத்தங்கம்
பரதேசியானாரடி. க௨௪

நளச்சக்ரவர்த்தியுடன் நாடாண்டபுரூருவனும்
துலையாதசூதாடியே ஞானத்தங்கம்
துரும்பாயலைந்தாரடி. க௨௫

தருமர்மனைவியுடன் தம்பிமார்நால்வர்களும்
கருமச்சூதாடியல்லோ ஞானத்தங்கம்
காட்டிலலைந்தாரடி. க௨௬

ஊற்றைச்சடலமிது உப்பிட்டபாண்டமடி
காற்றையடக்கிக்கொண்டால் ஞானத்தங்கம்
கற்பமிருப்பாயடி. க௨எ

கண்ணின்முன்னாலே காஷ்டத்தின்மேலே
எண்ணிறந்தோர்களெல்லாம் ஞானத்தங்கம்
யெரியுண்டுபோனாரடி. க௨அ

நீரர்யெரிப்பதென்று நேராகப்பார்த்திருந்தும்
போராட்டமேதுக்கடி ஞானத்தங்கம்
போர்க்கிடம்வேறேதடி. ௧௨௯

பேய்க்கும்சிலஞானம் பிடிப்பட்டுதானிருக்கும்
நாய்க்குமோர்ஞானமுண்டு ஞானத்தங்கம்
நமக்கேன்கெருவமடி. ௧௩0

உண்மையுரைப்போர்கள் உலகவிரோதியென்று
செம்மையாய்கேட்டிருந்தும் ஞானத்தங்கம்
ஜெகத்தில்நுழையாதடி. ௧௩௧

தவத்துக்கொருவரடி தமிழுக்கிருவரடி
சவத்துக்குநால்வரடி ஞானத்தங்கம்
ஜெகத்தின்வழக்கமடி. ௧௩௨

உண்மையுரைக்காதே உலகத்தையேசாதே
தண்மைபெருக்காதடி ஞானத்தங்கம்
தப்பித்திரிவாயடி. ௧௩௩

பொய்யரைச்சேராதே புலவரைசீராதே
செய்யாதகாரியத்தை ஞானத்தங்கம்
செய்யநினைக்காதடி. ௧௩௪

அற்பரைச்சேராதே ஆளடியைச்சீராதே
சொற்பபிழைகட்கெல்லாம் ஞானத்தங்கம்
சீரிமுனியாதடி. ௧௩௫

தெய்வமிகழாதே தீனரையேசாதே
பொய்மொழிபேசாதடி ஞானத்தங்கம்
பெருமோசமாகுமடி. ௧௩௬

கற்றதுகையளவு கல்லாதுலகளவென்
றுற்றுநினைப்பாயடி ஞானத்தங்கம்
உலகம்பலவிதண்டி ௧௩௭

கனிரசம்தேன்பாகு கற்கண்டுசேர்ந்தாப்போல்
முனிசாமிசொன்னதெல்லாம் ஞானத்தங்கம்
முதியோர்வெருக்காரடி. ௧௩௮

மெஞ்ஞானத்தங்கம் முற்றிற்று.

---

உ

தெய்வமேதுணை.

# மாட்டு வயித்தியம்.



இஃது,

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரால்

இயற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.



உ

கடவுள்துணை.

# மாட்டுவயித்தியம்.



பொது-விருத்தம்.

மனிதருக்குநோய்வந்தால் சொல்லுவார்கள்
மந்திரமும்வாகடமும் வந்துபேசும்
இனிதானபால்கொடுக்கும் பசுக்களுக்கும்
யெருதுக்கும்நோய்வந்தால் சொல்லேதப்பா
அனியாயமாய்மடிந்து போகுமென்று
அப்பனேசிறுமணவூர் முனிசாமித்தான்
கனிந்தபழம்போலுரைத்த முறைசெய்வோர்க்கு
கணபதியும்முனனிருந்து காப்பார்தானே.

அசீரணநோயின்குணம், தின்றயிறைபோலவே
சாணம்போடும் அடிக்கடி காத்துபரியும்.

நிவர்த்தி.



காற்பதற்குமிளகுரெண்டு பலமேதூக்கு
கண்மணியேவெற்றிலையில் பலந்தானஞ்சு
சேர்த்திரண்டும் அரைத்துவெந்நீரில்தாக்கி
செலுத்தப்பாஉள்ளுக்கு காலேவேளை
பார்த்திருந்தப்படிமூன்று நாளுஞ்செய்து
பக்குவமாய் கழுத்திலே சூடும்போடு
தீர்க்கவேபுண்ணியங்கள் மெத்தவுண்டு
யின்னமொருநோயகலப்பாகடுகேளே.

(வ-ம்.) வெத்திலேடு-பலம், மிளகு உ-பலம், ஒன்றாயரைத்துகால்படிவெந்நீரில்கலக்கி உள்ளுக்குபுகட்டவும் இப்படிமூன்றுநாள் கொடுக்கதீரும்மேற்கண்டிருக்கும்சூட்டைகழுத்தைசுத்திசுடவும்.

கக்கல்நோயின்குணம், தின்றதீவனத்தை அப்பித்தள்ளும் அடிக்கடிக்கு உடம்புமெலியும்.

நிவர்த்தி.

பாகங்கேள்வசம்புஒரு பலமுங்குப்பை
மேனியிலைநாலுபிடி கூடச்சேர்த்து
பாகங்கேள்யிரண்டையுமே மைபோலாட்டி
பசும்பாலில்கலக்கியிதை உள்ளுக்கேத்து

வேகமாய்கொள்ளாட்டால் நிறுத்திடாதே
வெதுப்புமடாநோயினுட துன்பத்தாலே
போகாட்டால்யென்னையுமீ நிந்திக்காதே
புகலுகிறேனின்னமொரு முறையுஞ்சூடும். ங

குப்பைமேனியிலை ச-பிடியும், வசம்பு ஒருபலமும் ஒன்ருய் அறைத்துபசும்பாலில் கலக்கி புகட்டவும் இந்தப்படி மூன்றுநாள் கொடுக்கத்தீரும்.

வேறுமுறை.

(வ-ம்.) சாதாரணமாய் காக்கையைப்பிடித்துகால்தலை குடல்ரோமம் எலும்புநீக்கி மற்றதையிடித்து காடியில்கலக்கி புகட்டவும்இந்தப்படி மூன்றுவேளை செய்பத்தீரும்இடதுவிலாவில் இதில்கண்டபடி சுடவும்.



சீதவேதுப்புநோயின்குணம்.

எச்சைவாயில் இடைவிடாமல் கற்ருழைசோறுபோல்
வடிந்துக்கொண்டேயிருக்கும் பின்னங்கால்நடுங்கும்,

நிவர்த்தி.

முறுங்கையிலைசாறுபடி ஒன்றுதூக்கு
முன்னமேகாடிமூன்று படியில்தாக்கு
சரியாகரெண்டுபலம் வெளிச்சிப்பட்டை
சாரித்துமெழுகுபோலரைத்துக்கொண்டு
கருவாகமுன்னுரைத்த வஸ்துவோடே
கலக்கியதைஉள்ளுக்கு புகட்டிவிட்டு
அரிந்துகொள்யிதிலிருக்கும் சூடுபோலே
அப்பனேயிடதுவிலாதன்னில்போடே. ச



(வ-ம்.) முருக்கிலைச்சாறு க-படியும், காடி ங-படியும் கலந்து அதிலே வெளிச்சிப்பட்டை உ-பலம் அரைத்துப்போட்டு குடிப்பாட்டத்தீரும் யிடதுவிலாவில் சூடுபோடவும்.

போகந்திநோயின்குணம்.

வலிப்புதோன்றும் காலைதூக்கிக்கொண்டு நிற்கும்வரையில்
நீர்வடியும் யிளவளாய் சாணம்போடும் புல்திண்ணுது.

நிவர்த்தி.

பொன்முசட்டைசமூலமடா பலந்தான்பத்து
போட்டுரவில்ஒருஜாமம் யிடித்தேயப்பால்



பின்னமிலாபசும்பாலே விட்டுநீதான்
பிழிந்துஅறைப்படிசரமே யெடுத்துக்கொண்டு
முன்னுரைத்தநோயுள்ள யெருதுகட்கு
மூன்றுனாள்புகட்டிடவே தீருந்தீரும்
இன்னபடிசூடிதற்கு விபரமாக
இடதுவிலாதனிற்போட நோய்தானேது. ரு

(வ-ம்.) பொன்முசட்டைமூலம் ௧௦-பலங்கொண்டுவந்து உரலில்போட்டு யிடித்துபசும்பால் விட்டுவிட்டு பிசைந்து அரைபடிரசம் பிழிந்துக்கொண்டு உள்ளுக்குபுகட்டவும் இந்தப்படிமூன்றுநாள் செய்யவும் சூட்டை யிடதுவிலாவில் போடவும்.

எலும்புருக்கிநோயின் குணம், சிவந்தசாணம்போடும்.
நிவர்த்தி.



தும்பையிலைநாலுபிடி யுரிவிவந்து
துகளாமல்மைபோலே அரைத்துக்கொண்டு
வம்பேதுகாடியென்ற கஞ்சிக்காச்சி
வளமாகஅரைத்தவுண்டை போட்டுக்கிண்டி
தம்பிநீயெருதுக்கு யிதுவேபாகம்
தக்கபடிமூன்றுநாள் புகட்டியப்பால்
கம்பிதனைகாச்சியிட விலாவுதன்னில்
கண்டபடிபிசகாமல் மாட்டிப்போடே சு

(வ-ம்) தும்பயிலையில் ௪-படி கொண்டுவந்து அரைத்து காடிக்கஞ்சியில் கலக்கிபுகட்டவும் இந்தப்படிமூன்றுநாள்செய்யவும்.

நேதிநோயின்குணம், வயிரிறையும் வாயில்நீர்வடியும்சாணப் நாறும் கண்ணில் பீளைசாறும், நிவர்த்தி.

மலராதயெருக்கப்பூ பலந்தானஞ்சி
மைந்தனே நல்லசீரகந்தான்பாதி
கலந்திரண்டும்ஒன்றாக அறைத்துக்கொண்டு
காடியிலேகலக்கியதை புகட்டிப்போடு
விலகுமடாமூன்றுநாள் மருந்தையிந்து
விபரமாய்சூடிடது விலாவில்போட்டால்
தலமதனில்நோய்நீங்கி யெருதுமீளும்
தருமமிதைவிடவேற வுலகிலுண்டோ. எ

ஞண

(வ-ம்) எருக்கும்பூ மலராத பக்குவமாயுள்ளது ரு-பலம் நல்லசீரகம ௨௰-பலம் ஒன்றாய்அரைத்து காடியிலேபோட்டுக் கலக்கி புகட்டவும் இந்தபடிமூன்றுநாள்தரவும் யிடதுவிலாவில்சூடுபோடவும்.

வல்லாளநோயின்குணம்.
நீர்சிவந்து ரத்தம்போல் யிரங்கும்.
நிவர்த்தி.

தென்னம்பூம்பாளையது ஒன்றுவாங்கி
தேரினதாய்நெல்லிக்காய் படியேதாக்கி
இன்னிரண்டும் நன்றாகயிடித்துக்காடி
தண்ணீரில்கலக்கியிதைகாட்டவேணும்
யின்னபடிமூன்றுநாள் தவராதீந்து
யெழுதிவைத்தபடிசூடுபோடவேணும்
மன்னவனேயிடதுவிலாதன்னில்போட்டு
மாட்டுக்குஅபாயமில்லை மனம்நோகாதே. அ



(வ-ம்) நெல்லிக்காய்படி-க தென்னம்பாளை-க ஒன்றாயிடித்து காடித்தண்ணீரில்கலக்கி புகட்டவும் இந்தப்படி மூன்றுநாள்கொடுக்கவும் யிடதுவிலாவில் சூடவும்.

சாணத்துடன் உதிரம்விழும்வியாதிக்குமருந்து
நிவர்த்தி.

நிலக்குமிளவேர்பட்டைபலமிரண்டு
நேரவே அரைத்துபசுந்தயிரில்போட்டு
கலக்கியேகுடிப்பாட்டவேணுமப்பா
கைகண்டமுறையிதுவேமூன்றுநாளும்
நிலவரங்களில்லாமல் செய்துபாரு
நெஞ்சியிலும்கழுத்தினிலும் சூடவேணும்
பலவிதமாய் யோசிக்கவேண்டாமையா
பாரிலிதைவிடவேரே முறைதானுண்டோ. கூ



(வ-ம்) நிலக்குமிழிவேர் உ-பலம்கொண்டுவந்து நேரஅரைத்து பசுந்தயிரில் கலக்கிப்புகட்டவும் இந்தப்படி மூன்றுநாள் கொடுக்கவும் நெஞ்சிலும் கழுத்திலும் சூடவும்.

நீராழியின்குணம், நீராயிரங்கும் நாளுக்குநாள்
உடல்கரைந்துமெலிந்து விடும்நன்றாய்
தீவனந்தின்னாது நிவர்த்தி

அஞ்சிபலம்சருள்ளி யெடுத்துக்கொண்டு
சரஞ்சிபலஞ்சேரு கற்றாழைசேர்
கொஞ்சமடாமிளகுத்தூள்பலந்தானொன்று
கூடவேதிப்பிலித்தூள்பலந்தான்கூட்டு
துஞ்சவேஅரைத்துஜெலந் தனில்கலக்கி
தூயவனேயிந்தபடி மூன்றுனாள்தான்
அஞ்சாமல்குடிப்பாட்டி மூன்றுனாளில்
அப்பனேயிடதுவிலா தன்னில்சூடே. கO



(வ-ம்) மிளகுத்தூள் க-பலம் திப்பிலித்தூள் க-பலம்கத்தாழை சோறு கం-பலம் சருள்ளி ரு-பலம் ஒன்றாய்போட்டுஅரைத்துவெந்நீரில்கலக்கி புகட்டவும் இந்தப்படி மூன்றுநாள்செய்து இடதுவிளாவில் சூடவும்.

## கோரைவீக்கத்தின் குணம்.

### நிவர்த்தி.



கன்னத்தில் வீங்கி இரைதின்னாதுகுன்னிக்கொண்டிருக்கும் இந்தப்பிரகாரமே வீக்கத்திற்சுடவும்.

இதுபோல்கழுத்தில்சுடவும் ௯௩

## நெஞ்சில்பாரைபோல்வீங்கும்குணம்.

### அதற்கு மருந்துஞ்சூடும்போடநிவர்த்தி.



நல்லெண்ணைகால்படிதான் அளந்தெடுத்து
நல்லமஞ்சள்கிழங்குதன்னை பிடித்தசாறு
சொல்லுவதேன் கால்படிசார்பிழிந்துக்கொண்டு
சோதித்தமிளகுபலம் ஒன்றுதூக்கி
கல்வத்தில்அரைத்துமுன் மருந்தில்தூவி
காச்சியேஉள்ளுக்கு புகட்டுவாய்நீ
நல்லமுறையிதுபோலே மூன்றுநாளும்
நடத்தியபின்வீக்கத்தில்சூடும்போடே.

(வ-ம்) கூரல் யெண்ணெ வ-படியில் பச்சைமஞ்சள் கிழங்கையிடித்தசாறு கால்படி பிழிந்து ஒருபலம் மிளகுத்தூள் செய்துபோட்டு கலக்கி கொடுக்கவும் இந்தமுறை மூன்றுநாள்செய்யவும் வீக்கத்தின்மேலே சூடுபோடவும்.

## குடல்முருக்குநோயின்குணம்.

### கிடந்தஇடத்தில்கிடக்கும்காலெசெருக்கும் சாணமிடும்.

### நிவர்த்தி.



நாய்பாகல்யிலைச்சாறு படிதானென்று
நல்லபசும்மாலதிலே படிதானூத்தி
தோய்ந்தவெண்ணெயுருங்குநெய்படியரிக்கால்
தொந்தித்துகலக்கியிதைஉள்ளுக்கேத்து
பேய்த்தனமாயிருக்காதேநமைத்தாளில்
பலமிரண்டுஅகில்பட்டைசாடிதன்னில்
தோய்த்துநன்றாயூரவைத்து அரைத்தவூட்டு
தொடுத்திடுவாய்சூடிதற்கு நெஞ்சில்போடே.

(வ-ம்) நாய்ப்பால்இலைச்சாறு படி-க, பசுவின்பால்படி-க, பசும் நெய் படி அறிக்கால் ஒன்றாய்க்கலந்து புகட்டிமறுநாள் அகிலபட்டையைபிடித்துகாடியில் ஊரவைத்துபுகட்டவும்நெஞ்சில்சுடவும்.

## ஈரல்முட்டிநோயின்குணம்.

தீவனந்தின்னாது பல்லை நெறநெறவென்றுகடிக்கும்
வயிறூதும் கண்ணில்பீளைசாறும் இரத்தம்போல்நீர்வடியும்
புழுக்கைபோல சாணம்போடும் நிவர்த்தி.

பிரண்டைதண்டுப்பிடியொன்று பரித்துக்கொண்டு
பேசியதோர்மதுக்காரை வேரின்பட்டை
இரண்டையுமேஇரண்டுபிடி ஒன்றாய்ச்சேர்த்து,
யிடித்துநன்றாய் மயனம்போல்அரைத்துக்கொண்டு
திரமானகாடியிலே கலக்கியப்பா
தேக்கிடுவாய்எருதுக்குமூன்றுநாளும்
இருபுரமும்கழுத்துமுதல்வால்வரைக்கும்
யிதுபோலேசூடிதற்குபிழுத்துபோடே.



(வ-ம்) பிரண்டைத்தண்டுபிடி-க, மதுக்காரைவேர்பட்டைபிடி-க, இவைகளை மயனம்போலஅரைத்து காடியில்கலக்கி புகட்ட தீரும் மேற்படி சூட்டை கழுத்திலிருந்து வால்வரையிலும் யிழுத்துச்சுடவும்.

## வெங்கோடிநோயின்குணம்.

உடல்நடுக்கும் மூக்கில்இரத்தம்விழும் குண்ணிக்கொண்டு
நிற்கும் இரைதின்னாது நிவர்த்தி.

மதுக்கரைவேர்ப்பட்டையொடு வெள்ளைப்பூண்டு
மைந்தனேவகைக்குபலம் மூன்றுவாங்கு
பதராதேயெருதுக்குவியாதியென்று
பலம்ஒன்றுவசம்புஅதின் கூடசேர்த்து
பதமாகஅரைத்துவென்னீரில்தாக்கி
பக்குவமாயிந்தமுரைமூன்றுநாள்தான்
இதிலுரைத்தபடிசூடு குரிப்புகண்டு
யிடதுவிலாதனில்போட்டால் யேதுநோயே. கச



(வ-ம்) மதுக்காரைவேர்பலம் ரு வெள்ளைப்பூண்டுபலம் ரு-வசம்பு பலம் க இவைகளையரைத்து இளவெந்நீரில்கலந்து புகட்டவும் சுக்கு க-பலம் எடுத்து சிறுநீர்விட்டு யிடித்து உலர்த்தி சல்லாக்கந்தையை ஒடிந்து நாசியில் நசியமிடவும்.

ஊதடைப்பன் நோயின்குணம் வயறூதும் கண்சிவக்கும்
வாயில்நீர்வடியும் இரைதின்னாது நிவர்த்தி

மிளகிதற்குரெண்டுபலம் வேணும்வேணும்
மதுக்கரைவேர்பட்டைபலம் ஐந்துவேணும்
அளவிதற்குவெள்ளுள்ளி பலமிரண்டு
ஆகுமடாஒன்ருக அரைக்கவேணும்
தளரமனம்வேண்டாம்நீ காடியென்ற
தண்ணீரில்கரைத்தப்பா உள்ளுக்கேத்து
அளவாகயிந்தமுறை மூன்றுநாளும்
ஆனபின்னேயிடதுவிலா தன்னில்சூடே. கரு

(வ-ம்) மிளகு பலம் உ மதுக்கரைவேர் பட்டை பலம்ரு-வெள்ளுள்ளி பலம் உ ஒன்ருக அரைத்துகாடிநீரில் கரைத்து புகட்டவும் இந்தப்படி மூன்றுநாள் செய்வும் இடதுவிலாவில்சூடவும்.

நல்வாரிநோயின்குணம் இரத்தமாய்நீர்விடும்
நெஞ்சு வீங்கும்நிவர்த்தி.



நல்வாரிநோய்தனக்கு பக்குவந்தான்
நங்கையரே ஓரிலை தாமரைசமூலம்
வில்நேர்ந்தபுருவமுள்ள விழியணங்கே
விஷ்ணுவிடகாந்திசெடி யிவைஇரண்டும்
சொல்வதேனிருவகையும்சமமாய்கொண்டு
சுரபியிடமோருவிட்டு பிடித்துநன்றாய்
புல்லவேஒருபடிசார் பிழிந்துகொண்டு
புகட்டுவாயிந்தமுறை மூன்றுநாளே. கசு

(வ-ம்) விஷ்ணுகிரந்தி சமூலம் ஓரிலை தாமரை சமூலம் சமமாய்கொண்டுவந்து உரலில்போட்டு பசுவின்மோர்விட்டு யிடித்து ஒருபடி சார் பிழிந்துக்கொண்டு உள்ளுக்கு புகட்டவும் இந்தப்படி மூன்றுநாள் செய்யவும் இதற்குசொல்லிய சூட்டை இடது விலாவில் சூடவும்தீரும்.

பரங்கிநோயின்குணம்.
தேகமெங்கும் கொப்பளம்போல் வெடித்து
மீன்சிலம்புபோல்அசறும்ரோமமும்உதிரும்
நிவர்த்தி.

அத்திகனிப்பிஞ்சியிலே பழமிரண்டு
அதிமதுரம்கூடவே பலமிரண்டு
பத்தினியேயிருள்ளி பலமிரண்டு
பாங்கானலவங்கபட்டை பலமிரண்டு
இத்தனையும்யிடித்துநன்று யரைத்துகொண்டு
யேந்திழையேகழுநீரில் கலக்கிக்காட்டு
மெத்தயில்லைமூன்றுநாள் யிந்தபாகம்
மெல்லியரே தீராட்டால்வேறேகேளே. கஎ

(வ-ம்) அத்திப்பிஞ்சு அதிமதுரம் ஈருள்ளி இலவங்கப்பட்டை இதுகளைவகைக்கு உ பலம் வீதமாய்நிறுத்து ஒன்ருய்போட்டு யிடித்துநன்ருய் அரைத்துகழுநீரில்கலக்கிபுகட்டவும் மூன்றுநாள்செய்து பார்க்கவேணும் தீராவிட்டால் வேறேபாகமும் சூடும்கூறுகிருர்.

இதுவுமது.

வேப்பிலையைஉரிவிவந்து உரலில்பாட்டு
விதமாகக்காடிவிட்டு யிடித்திடித்து
காப்பிட்டகரத்தாளே ஒருபடிசார்
கணக்காகவேபிழிந்து யெடுத்துகொண்டு
தோப்பிலுள்ள யீரவெங்காயந்தன்னை
துகளவேரெண்டுபலம் அறைத்துப்போட்டு
சாப்பிடவேயெருதுக்கு யிந்தபாகம்
சடங்காமல்மூன்றுநாள் செய்துபாரே. கஅ

(வ-ம்) வேப்பிலையைஉரலில் போட்டுகாடிவிட்டு யிடித்துயிடித்து ஒருபடி சாறுபிழிந்துகொண்டு அதிலே ஈரவெங்காயத்தை இரண்டுபலம் அறைத்துப்போட்டு கலக்கி உள்ளுக்குபுகட்டவும் இந்தப்பிரகாரம் மூன்றுநாள் செய்யவுந் தீரும் இடதுவிலாவில் இதுபோல் சூடுபோடவும்.

நாவநோயின்குணம்.

குன்னிக்கொண்டு நிற்கும் செவி தாழும்

இதற்கு நிவர்த்தி.

முலைப்பால்தான்படியரிக்கால் கரந்துக்கொண்டு
முற்றினதோர் தேங்காய்ப்பால் பதினென்று
கலைவிழியின்நேராளே நல்லயெண்ணை
கால்படியேபோதுமிவை சொல்லக்கேளு
கலக்கிடுவாய்முப்பொருளும் ஒன்ருயூத்தி
கண்மணியே யிதுபோலே மூன்றுநாள்செய்
நிலைக்குமோ வந்தநோய் குடியேபோச்சு
நீயதற்கு யிருபுறமும் சூட்டைபோடே. கக

(வ-ம்) தேங்காய்பால் ஒருபடி நல்லெண்ணை கால்படி முலைப்பால் அரிக்கால்படி ஒன்ருயூத்தி நன்ருய்கலக்கி உள்ளுக்கு கொடுக்கவும் இந்தப்படி மூன்றுநாள்செய்யத் தீரும் இரண்டு பக்கம் விலாவிலும் சூடுபோடவும்.

தவளைநோயின்குணம்.

பிள்ளைகள் தவிழ்தல்போலத் தவிழும் நாலுகாலும்

இதற்கு நிவர்த்தி

குப்பையிடமேனியிலை சுழலாவாரை
கொண்டுவா வகைக்குப்பலம்பத்துவீதம்



அப்படியேஉரலிலிட்டு யிடித்துக்கொண்டு
ஆரணங்கேகாடியிலே கலக்கினாலும்
கைப்பிடியாய்ப்பிழிந்துச்சார்யெடுத்தானாலும்
கலவத்தில் மைபோலே அரைத்தானாலும்
யெப்படியென்றாலுமதை உள்ளுக்கேத்து
யிந்தபடி மூன்றுநாள் செய்துபாரே. ௨0

(வ-ம்) குப்பைமேனியிலை ம-பலம் சழுலாவாரையிலை ம-பலம் இவைகளை நன்றாயிடித்து காடிநீரில் கலக்கியாவது இடித்து சார்பிழிந்தாவது அல்லது காடிவிட்டரைத்து உருண்டைசெய்தாவது உள்ளுக்கு கொடுக்கவும் இந்தப்பிரகாரம் மூன்றுநாள் செய்யவும்தீரும் இந்தப்படி வலதுவிலாவில் சூடுபோடவும்.

இதற்கே வேறுமுறை.

(வ-ம்) தைவேளை ம-பலம் குப்பைமேனியிலை ம-பலம் தும்பயிலை ம-பலம், மிளகு ஒருபலம், வெள்ளைப்பூண்டு ஒருபலம் இவைகளை ஒன்றாயரைத்து மொத்தைசெய்து உள்ளுக்கேத்த மேற்படி தவளைநோய்தீரும்.

## மேதாவிநோயின் குணம்.

நெஞ்சடைத்து தொண்டைக்கட்டி செறுமும் நிவர்த்தி.



அன்னமேமிளகுத்தூள் பலமேஒன்று
அதுபோலே திப்பிலித்தூள் பலந்தானென்று
சொர்னமேபசுவின்நெய் தனிற்குழப்பி
சோதிப்பாயெருதுக்கு கொடுத்துநீதான்
யின்னமேன்யிந்தமுறை மூன்றேநாள்தான்
யீந்துப்பார் நோயென்றவார்த்தையேது
அன்னமேஇதிற்குறித்த சூடுதன்னை
அடிவயிற்றிற்போடென்றே னறிந்துகொள்ளே. ௨௧

(வ-ம்) மிளகு ஒருபலம் திப்பிலி ஒருபலமும் மயனம்போல் அரைத்து பசுவின்நெய்யில் குளப்பிகொடுக்கத் தீரும், இந்தப்படி மூன்றுநாள் செய்யவும் இதில் கண்டிருக்கும் சூட்டைப்போல் கீழ் வயரென்கிற அடிவயற்றில் சூடவும்.

## கதவடைப்பன் நோயின்குணம்.

கொம்பைச்சுற்றிவீங்கும் வாய்திரவாதுகண்சிவக்கும் நிவர்த்தி.



இந்துப்புபலங்கானு சொல்லக்கேளு
யேந்திழையேபெருங்காயம் பலமேகானு
சந்தமாய்நீர்விட்டு மைபோலாட்டி
சாரிப்பாய்பசும்பால்தான்உழக்கேபோதும்

இந்தபடிகலக்கியதை யிந்துபோடு
யிதுபோலேமூன்றுநாள்செய்தேபாரு
வந்தநோய்சொல்லாம லோடும்பாரு
வாவென்று அழைத்தாலும் யிடந்தானேது. உஉ

(வ-ம்) இந்துப்பு நால்பலம், பெருங்காயம் கால்பலம், ஒன்றுயனைத்துகால்படி பசும்பாலில் கலக்கி புகட்டவும் இதுபோலமூன்றுநாளைக்கி கொடுக்கவும் தீரும்.



இடதுபக்கம் மேல்கொண்டைமுதல் வலதுகால்வரையிலும் இந்த சூட்டை யிழுத்து போடவும் அல்லது இந்தப்படிக்கே யிருவிலாவிலும் சுடவும்.



கொம்பைசுற்றி வீங்கியிருக்கு மென்று முன்கூரியதற்கு கொம்புமேல் உள்வீக்கத்தை சுற்றிச்சுடவும்.

## தலைப்புதுநோயின் குணம்.

காலைவெட்டிக்கொண்டு நிற்கும்மனிதனைப்பாயும் உடல் மெலியும் பொய்மேச்சலாய்மேயும் நிவர்த்தி.



விளக்கெண்ணை கரியுப்பு வெள்ளைப்பூண்டு
வசம்புடனே அத்தியிட வேரின்பட்டை
அளவாக நாயுருவி யிலையாடா று
அளவெல்லாஞ் சொல்லுகிறே னிடிக்க வேணும்
களக்கமா யரைத்துமுத லெண்ணை தன்னில்
கலக்கியே புகட்டிவிட வியாதிபோச்சு
துலக்கமா யிடதுவிலா பக்கந்தானே
துஞ்சாம லிதைப்போலே சூடும்போடே. உங

(வ-ம்.) விளக்கெண்ணை படி-க, மற்றவை வகைக்கு ஒருபலம் வீதமாக எடுத்திடித்து நன்றாயறைத்து மேற்படி எண்ணெயில் கலக்கிப் புகட்ட தீரும். இந்தப்படி இடதுவிலாவில் சுடவும்.

## அங்கிநோயின் குணம்.

இருவிழியும் இரத்தமபோல் சிவக்கும் நிவர்த்தி.

துளசியிலை ஐந்துபலம் நிறுத்தெடுத்து
துகளவே அறைத்தாவின் மோரில்போட்டு
கலக்கியே புகட்டிவிடு வியாதிபோகும்
கண்மணியே இந்தமுறை மூன்றுநாள்செய்



துலக்கமா யிடதுவிலாப் பக்கமாக
தோற்றுகின்றபடிசூடு போட்டுவிட்டால்
நிலைக்குமோவந்தநோய் குடியேபோச்சு
நேரிழையேயிந்தமுறை கைவிடாதே.

(வ-ம்.) துளசியிலை ரு-பலம் நிறுத்து அரைத்து பசுவின்மோரில்கலக்கி புகட்டவும் இந்தப்படி மூன்றுநாள்செய்யத்தீரும். இடதுவிலாவில் சுடவும்.

## தாளுந்துநோயின் குணம்.

அருவருப்பாய் மேயும், மனங்கொண்டு யிரை தின்னாது,
அடிக்கடி தண்ணீர்குடிக்கும்,
மனிதரைக்கண்டால் பாயும் நிவர்த்தி.

முத்தினதோ ராவாரை யிலையானாலும்
மொய்குழலே பட்டையது அகப்பட்டாலும்
துவைத்துநன்றாய் படியரிக்கால் சார்பிழிந்து
தோகையரேநல்லெண்ணெசமனாய்சேர்த்து
சித்தமதுகலங்காதே யிந்துபாரு
சிதருமடிநோய்களெல்லாம்பனியைப்போலே
மெத்தெனவே யிந்தமுறை மூன்றுநாள்தான்
மெல்லியரே யிடதுவிலாதன்னில் சூடே.



(வ-ம்) முத்தின ஆவாரையிலையாவது பட்டையாவது யிடித்து அரிக்கால்படி சாறுபிழிந்து அதுபோலவே நல்லெண்ணெசேர்த்து கலந்துபுகட்டவும் தீரும், மூன்றுநாளைக்கி யிந்தமுறை செய்து பின்இடதுவிலாவில் சுடவும்.

## செங்கநோயின் குணம்.

தலைக்குத்திட்டுநிற்கும் இரை தின்னாது
நிவர்த்தி.

கர்ப்பூரவல்லிச்சார் படிதானென்று
கலக்கவே நல்லெண்ணெ படிதான்காலு
சொற்பூத்தவொளியிலாளே யிரண்டுமொன்றாய்
தொநதித்துப்புகட்டிவிட நோயங்கேது
விற்பூத்தவிழியாளே யிந்தபாகம்
விதமாகமூன்றுநாள் செய்தபின்பு
கற்பூத்தபடியிடது விலாவைப்பார்த்து
காச்சியேமாட்டிவிடு சூட்டைத்தானே.

(வ-ம்) கற்பூரவல்லி சமூலங் கொண்டுவந்துயிடித்து படிசாறு பிழிந்து அத்துடன்கூடகால்படி நல்லெண்ணெகலந்து புகட்டவும் தீரும் இதுவேமுறை மூன்றுநாள்செய்யவும் இந்தப்படி இடது விலாவில் சுடவும்.

## மூக்கடைப்பன் நோயின் குணம்.

மூக்கடைத்துக்கொண்டு குருகுருவெனச் செருமும் ஊதும் நிவர்த்தி.

தைவேளையிலையோடு கரியும்பாகும்
தையலரேகுப்பையிட மேனியாகும்
மைவிழியே கண்டங்கத்திரிப்பழந்தான்
கணக்கில்லை சமபாகம் வசம்புஞ்சேறு
ஐவகையும் சமமாக நிறுத்துக்கொண்டு
ஆரணங்கே சிறுநீர்விட்டிடித்துக்கொள்ளு
பையவே சீலையிலே முடிந்துகொண்டு
பக்குவமாய் நாசியிலே பிழிந்துபோடே. ௨௭



(வ-ம்) கண்டங்கத்திரிபழம் கரியுப்பு தைவேளையிலை வசம்பு குப்பைமேனியிலை இவைகளை சரியிடையாயெடுத்து சிறுநீர் விட்டு யிடித்துசீலையில் முடிந்து மூக்கில் பிழியத்தீரும் கரண்டிரசம் பிழியலாம், இந்தப்படி இருவிலாவிலும் சுடவும்.

## இந்துநோயின் குணம்.

(வ-ம்) நாலுகாலும் தளர்ச்சியாயிருக்கும் இதற்கு நிவர்த்தி இதில்கண்டிருக்கிற சூலம் போல் நாலு காலிலும் முழங்கால் களிலும் நெஞ்சிலும் சூடிவிடத் தீரும்.



கண்ணிலும்வாயிலும் நீர்வடியும்சாணமாய்பீசும் கழியும் நாற்றமடிக்கும் நிவர்த்தி.

இண்டமென்ற செடியினிட கொழுந்துவாங்கு
யேந்திழையே விளாயிலையும் வகைதான்ரெண்டு
கொண்டுவாமும்மூன்று பிடியிரண்டும்
கொட்டிவிடுமூன்றுபடி தண்ணீர்க்குள்ளே
செண்டாடும்படிபோலே கலக்கிப்போடு
செலுத்துவிடுஉள்ளுக்குயிதுவேபாகம்
கண்டபடி உழலாதே மூன்றுநாளும்
கருத்தாகயிந்தமுறை தந்துபாரே.



(வ-ம்) விளாயிலை மூன்றுபிடியும் இண்டங்கொழுந்து மூன்று பிடியுங்கொண்டுவந்து அரைத்து மூன்றுபடி தண்ணீரில் கலக்கி புகட்டவுந் தீரும் இந்தப்படி மூன்றுநாள் கொடுக்கவும் இடதுவிலாவில் சூடுபோடவும்.

## கோக்கைநோயின் குணம்.

வயிறாதும் அறுவருப்பாய் மேயும் செவிதாழும் நிவர்த்தி.

யேலமொடு மிளகு கருஞ்சீரகந்தான்
யேந்திழையேநல்ல சீரகமும்சுக்கு



காலவே யிவையெல்லாம் வகைவகைக்கு
சரிபாகபலம்ஒன்றாய் நிறுத்துவந்து
கோலமாயறைத்ததனை வழித்துக்கொண்டு
கொடுத்திடுவாய் சிறுநீரில் கலக்கியேதான்
நாலிடமாம் செவிநாசி கண்களுக்கும்
நாயகமே மும்மூன்று-துளிதான் தாக்கே. ௩௰

(வ-ம்) கருஞ்சீரகம் நற்சீரகம் சுக்கு மிளகு ஏலம் வகைக்கு ஒருபலம்வீதமாய் கொண்டுவந்துயிடித்து அறைத்து சிறுநீர்விட்டு கலக்கிபுகட்டவும்உடனே கண் செவி நாசி இதுகளில் மும்முன்று துளிவிடவும் இந்தப்படி மூன்றுநாள் செய்யவுந்தீரும் இது பிரகாரம் இருவிலாவிலும் ஏரலைப்பற்றியும் சுடவும்.

## வாய்கிரந்திநோயின்குணம்.

வாய்வீங்கும் வாயில்-நீர்வடியும் நிவர்த்தி.



(வ-ம்) கருணைக்கிழங்கு அல்லது காட்டுக்கருணைக்கிழங்கு ரு-பலம் கொண்டுவந்து அரைத்துமோரில் கலக்கி புகட்டவும் இந்தப்படி காலில்சுடவும்.

## உதிரிநோயின்குணம்.

மயிரைச்சிலிர்த்துக்கொள்ளும்
அடிக்கடி கழியும் தண்ணீராயுங்கழியும் நிவர்த்தி.



(வ-ம்) விடத்தைக்கொழுந்து ௧௦-பலம் ஈருள்ளி ௧௦-பலம் இவைகளை அரைத்து எருமைமோரில் கலக்கிகொடுக்கவும் இந்தப்படி மூன்றுநாள் கொடுக்கத்தீரும் இதுபோல இடதுவிலாவில்சுடவும்.

## தவளைமூக்கடைப்பன்குணம்.

மூக்கடைத்து நெடுமூச்செறியும் தடுமாறும் நிவர்த்தி.



(வ-ம்) மிளகு திப்பிலி சீந்தியிலை இதுகள்சமமாயெடுத்து அரைத்து சிறுநீர்விட்டு கலந்துநாசியில் பிழியவும்தீரும் இந்தப்படி மூக்கில் சுடவும்.

இந்தப்படி தலைசுற்றிச்சுடவும்.

அம்மணிச்சிலந்தியின் குணம்.

முன்னங்கால்முதல் தொப்புள்வரையும்வீங்கும் நிவர்த்தி.

தலைச்சுருளிவேர் ங-பலம், வள்ளிவேர்பட்டை ங-பலம் ஒன்றாயரைத்துவென்னீரிலேகலக்கிபுகட்டவும்தீரும் மேற்படி இரண்டுவேறுப அரைத்துவீக்கத்தில் தடவிவரத்தீரும் இந்தடபடி நெஞ்சில்சுடவும்.



நாரைக்கால்நோயின் குணம்.

வயருவீங்கும் வாயில்நீர்வடியும்

மயிர் சிலிர்க்கும் கால்வளையு ய்கூனிநிற்கும் கிமிராது நிவர்த்தி.

(வ-ம்) தரைப்பழுப்பு ஈருள்ளி சமமாயிடித்து அரைபடி சாறு பிழிந்துகட்டவும் மூன்றுநாள் செய்யத்தீரும்.

இந்தப்படி இடதுவிலாவிலே சூடுபோடவும். ஓம்ஸ்ரீ

---

வசனமாகச்சொல்லிய

# மாட்டு வயித்தியம்.

---

மாட்டுக்குநோயுண்டாமலிருப்பதற்குசெய்ய வேண்டியசாந்தி.

செவ்வாய்க்கிழமையிலே, சிவனார்கிழங்குகொண்டுவந்துகொட்டாயிற் சுட்டுத்தறியண்டையல் பொங்கலிட்டு பொங்கினசாதமும் கிழங்குங்கட்டுத்தரியிலும் வாசற்படியிலும் புதைத்துவைக்கவேண்டும் எப்படிப்பட்ட நோயும் வரவொட்டாமற் காக்கும்.

கோமாரிக்குச்சாந்தி.

திங்கட்கிழமையிற் கொடிவேலியிலையைப் பறித்துக்கொண்டுவந்து செவ்வாய்க்கிழமை உதையத்துக்கு முன்வாசலிற்பொங்கலிட்டுபகவானுக்குப்படைத்து வாசலிலுங்கொட்டாயிலும், புதைக்க சாந்தியாகும்.

புல்தின்னமல் திகைத்துநிற்குமாகில் (வெக்கையென்று) பெயர்.

பக்குவம்—கற்பூரவள்ளியிலைச்சாறும் நல்லெண்ணெயும் கலந்துஉள்ளுக்குகொடுத்து விலாவில் சுட சொஸ்தமாகும்.

நாலுகாலும்வீங்குமாகில் (ஆனைவாதம்) என்றுபெயர்.

முதலாவது பக்குவம்-எந்த உபமான ஊராகிலும் பட்டுஎன்கிற ஊரிலிருக்குஞ் சதுரக்கள்ளியில் ஒரு கிளை வெட்டிக்கொண்டு வந்து கறணை கறணையாயரிந்து ஒருமண் பாண்டத்திற்போட்டு பதக்கு தண்ணீர்வார்த்து

குறுணி தண்ணீராகக் காச்சியிரக்கி வைத்து ஒருபெரியசட்டியினுல்மூடி குப்பையாயிருக்குமிடந்தேடி பள்ளந்தோண்டி அப்பள்ளத்துக்குள்இரண்டு நாளைக்கு புதைத்துவைத்து மூன்ரும்நாளெடுத்து கையினுல்தண்ணீரைத் துழாவி மூன்றுநாள் உள்ளுக்குகொடுக்க சொஸ்தமாகும்.

## குறட்டைவிடுமாட்டுக்கு பக்குவம்.

மாட்டை பதினமாய்த் தரையிற்றள்ளி எருமுட்டைநெருப்புக்கும்பியில் எருக்கங்கழியொன்றை நுழையவைத்து எடுத்துச்சுடசுட இரண்டு மூக்கிலு முருவவிட்டுத் திருப்பி பின்பு சும்பாளும்இளுப்பைபுண்ணுக்குங் கலந்துகரைத்து சுடவைத்து விசேஷமாய் நாயற்றுக்கிழமையில் வார்க்கிறது இந்தப்படிக்கு இரண்டு இரண்டு அல்லது மூன்றுவாரம் வார்த்துவர குணமாகும் குறட்டையிருந்தவிடஞ் சொல்லாமலோடிப்போகும் கைகண்டமுறை.

மாடு பலயீனத்தால் மெத்த யிளைத்திருந்தாலும் அல்லது எவ்வளவு புஷ்டியாய் தீனிபிடித்துத் தின்னும் நாளுக்குநாள் பார்வையில்லாமலிருந்தாலும் புஷ்டியாகும்படியான தாசாமருந்து அல்லது. ரிவாவா.

மணக்கத்தையரிசிமாவு உளுந்துமாவு வகைக்குபடி-உ பனங்கருப்புட்டி க0 வெங்காயம் பலம் கஉ முந்திவெங்காயத்தைதோலுரித்துப்போட்டு பொடியாயரிந்து மேற்படிதினுசுகளில் கலந்து க0-தேங்காய் நெற்றின் பால் பிழிந்துபிசைந்து ீதங்காய்ப்பிரமாணம் உருட்டிகொடுத்துவர புஷ்டியாகும்.

அல்லாமலு மற்ளுருவிதம் - ஆதிவாரந்தோறும் ஆழ்ந்தநீரில் நீஞ்சலடித்து சாணத்தைக்கறைத்து சுமார் ஒருபடி பாலுஉ.ள்ளுக்கு வார்க்கிறது இப்படி இரண்டு மூன்றுமுறைசெய்யவும் கைகண்டமுறை.

மாட்டுக்கு கண்ணிலே பூவிழுந்தால் செய்யவேண்டியபக்குவம், அரைப்படி பசுவின்பால் ஆழாக்கு உப்புபோட்டு நன்ருய்ச் சுண்டக்காச்சி மைபோலவரைத்துப் பத்துநாளைக்கு கண்ணில்போட்டுவர கரைந்துபோகும்.

(மூலத்தின்குணம்) உட்காந்தாப்போல சாணமிடும் பக்குவம்பேய்துமுட்டிவிரையும் கிளிஞ்சிசதையு மரைத்துகழுநீரில் கரைத்துக்கொடுக்கவும்.

(சீதைவெக்கையின்குணம்.) மூக்கிலேதண்ணீர்விழும், வெடிக்கும்உடம்புசுடும், மேயமாட்டாது பக்குவம் எள்ளு அரைநாழி படி-பசுவின்பாலிற் போட்டு பூரவைத்து கறைத்துக்கொடுக்கவும்.

(மாட்டுக்கழுத்துப்புடிப்புகண்டால்) பக்குவம்எருக்கன்பாலுடன்நல்லெண்ணெ அல்லதுவிளக்கெண்ணெசேர்த்துபிடரிமுதல்முதுகுவரையில்தடவி இருபக்கமுங்கழுத்தும் பிடரிநீங்க மற்றயிடங்களில் சூடுபோடவும் சொஸ்தமாகும்.

மாட்டுவயித்தியம்

முற்றிற்று.



உ

தெய்வமேதுணை.

அகஸ்தியரருளிச்செய்த

# பாலகிரகதோஷ

பரிகாரக்கண்ணாடி.



இஃது,

சிறுமணவூர்

## முனிசாமிமுதலியாரால்

இயற்றப்பட்டு,


தமது

சென்னை சூளை

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.




53

# நூதன புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| சுதேச கைத்தொழில் சாஸ்திரம், விலை ரூபா | 1 | 0 | 0 |
| சுகந்த பரிமள சாஸ்திரம் | 0 | 8 | 0 |
| சிவசொரூபசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| சரீரசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| விவாக சாஸ்திரம் | 0 | 8 | 0 |
| சகுனசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| ருதுஜெனனசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| நஷ்டஜாதகம் | 0 | 8 | 0 |
| நவகண்ட ஆரூடம் | 0 | 8 | 0 |
| பதிவிரதைகள் சரித்திரம் | 0 | 12 | 0 |
| உலகவிசித்திரக்கதை | 1 | 0 | 0 |
| இங்கிலீஷ் தமிழ் வைத்திய சிகாமணி | 3 | 0 | 0 |
| பிரபஞ்ச உற்பத்தி | 2 | 0 | 0 |
| சண்டாளர் சகவாசம் | 0 | 8 | 0 |
| வேதாந்த ஜட்ஜ்மெண்ட் | 1 | 0 | 0 |
| குடும்ப சனியனென்னும் அகடவிகட சம்சாரி | 0 | 4 | 0 |
| ருஷியா ஜப்பான் யுத்தம் | 0 | 4 | 0 |
| வியாசர்விபரீதம் | 0 | 4 | 0 |
| கண்கட்டுவித்தை 1000 | 0 | 10 | 0 |
| நாரதர்கலகம் | 0 | 6 | 0 |
| ஷை 2-ம் பாகம் | 0 | 4 | 0 |
| தெய்வகுணவெளிச்சம் | 0 | 8 | 0 |
| இந்தியா சமையல் சாஸ்திரம் | 0 | 8 | 0 |
| நூதன கலியாணப்பாட்டு | 0 | 4 | 0 |
| போலீசு ஆக்ட்டு | 0 | 4 | 0 |
| தேவஸ்தான ஆக்ட்டு | 0 | 4 | 0 |
| ஸ்டாம்பு ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| 8-வது ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| சாட்சி ஆக்ட்டு | 0 | 12 | 0 |
| தஸ்தாவேஜு ஆக்ட்டு | 1 | 4 | 0 |
| இந்தியன்பினல்கோட்டு | 3 | 0 | 0 |
| கிராம முனிசீப் கோட்டு | 3 | 0 | 0 |
| இந்துலா | 2 | 0 | 0 |

இப்படிக்கு.

சி. முனிசாமி முதலியார் கம்பெனி.,

பெரம்பூர் பாரெக்ஸ் போஸ்டு, மதராஸ்.



உ

கடவுள் துணை.



# பாலகிரகதோஷ

## பரிகாரக்கண்ணாடி.



### காப்பு விருத்தம்.

புத்திரப்பேரில்லாமல் கவலைகொண்ட
புண்ணியர்கள் மனக்குறையைச்சொல்லொணாது
சத்திரங்கள்சாவடிகள் தண்ணீர்ப்பந்தல்
சாலைபலசோலைகுளங் கோயில்கட்டி
எத்தனையோதவமிருந்து நதிகளாடி
இடமெழுதியுண்டுபல விரதங்காத்து
புத்திரனையின்றெடுத்து வளர்க்குங்காலை
பொல்லாதகிரகதோஷம் பிடிக்கும்பாரே.

ஒண்ணனவருஷமுதல் குழந்தைகட்கு
ஒண்டிருந்துதொத்துமடா கிரகதோஷந்தான்
எண்ணாமல்பலபலவாய் நினைவுகொண்டு
எலாதவைத்தியங்கள் செய்துகேட்டு
கண்ணனபிள்ளைகட்கு மருந்தையீந்து
கைசோறுமானிடர்க்கு சஞ்சிவித்தான்
விண்ணவர்க்குத்தற்பொருளாய் விளங்குகின்ற
விநாயகனன்னடிதொழுது விளம்புவேனே.



சிசுபிறந்த முதல்நாள் முதல்மாசம் முதல்வருஷம்
தாட்சிவாட்சியென்னும் பெயர்தரித்த
மோகனாங்கிதேவதைவந்தணுகும்.

வாந்திபண்ணும் சுரமடிக்கும் பாலுண்ணாது
வளமானதிரேகமெல்லாம் மினுமினுக்கும்
காந்தியாய்கண்ணிரண்டுந் திறவாதப்பா
கழிந்தாக்கால் தண்ணீரைப்போலேவோடும்
போந்தவேபூனைகுரல் போலேஅழும்
பொல்லாதபலவிதமாய் விகாரஞ்செய்யும்
சாந்தியில்லாசகலமாய் கூறிவைத்தோம்
சாஸ்திரத்தின்முறைப்படியே செய்துபாரே

இதற்குப்பரிகாரம்.

ஞாயிற்றுக்கிழமையில் பச்சரிசியுடன் உப்பிட்டுப்பொங்கி தயிர்வார்த்துப்பிசைந்து ஆண்பாவைசெய்து புதுசட்டியில் வைத்து அந்தபாவைக்கு காதோலை கருமணி பஞ்சவர்ணநூல் கருப்புவஸ்திரம் பலவகை புட்பஞ்சூட்டி எள்ளு நெற்பொறி நவதானியம் பஞ்சவர்னசாதம் ஆட்டுக்கறி முட்டை புண்ணாக்குகீரைரொட்டிவஸ்து பழம் தாம்பூலம் தட்சனை இவைகளைச்சுற்றிலும் வைத்து சந்தனந்தெளித்து தூபதீபம் கொடுத்து நிவேதனஞ்செய்து மந்திரம் பாலக்கிரகமோகனாங்கி பாலக்கிரகதோஷநிவர்த்திஐயும் கிலியும் சவ்வுமென்று இப்படி கஉ-தடவைசெபித்துகுழந்தையை தாயின்மடியில்வைத்து கிரகம் அல்லதுபேயின் பெயரை எழுதராஞ்சொல்லி இருவரையும் கூ-தடவை சுற்றும்போது சொல்லுமந்திரம்.

மூலமந்திரம் ஓம் ஓங்காரமாக அம்மை அதன்தன்னோடும் ஆங்காரமும் ஆயுசும் அதிகமுண்டாகும் சுவாகா

இந்தமந்திரத்தை ௱அ-தரஞ் செபித்து குளக்கரையில் வைக்கவும் இதுவே யிதிலுள்ள பதினாறுக்கும் மூலமந்திரம்.

பின்பு நாயுருவிக்குக்காப்புகட்டி வேர்பிடுங்கி மஞ்சநூல்சுற்றி இதனடியில்கண்டிருக்கும் சக்கரத்தை செப்புத்தகட்டிலெழுதி நூல்சுற்றியவேரை சக்கரத்துள்வைத்துச் சுருட்டி அவல்கடலை தாம்பூலம் புஷ்பம்வைத்து தேங்காயுடைத்து தூபதீபம் கொடுத்து நிவேதனஞ்செய்து இந்த மந்திரத்தை ஜெபிக்கவும்.

அரி அரி சிவ சிவா அரி·ஓம் சிவாஇப்பிள்ளைக்கு சகலதோஷங்களும் நிவாரணமாக ௱அ உருஜெபித்து குளிசத்திற்குமூன்றுவருண நூல்சுற்றி குழந்தைகட்குகட்ட சகலதோஷம் நிவர்த்தியாகும்.




சிசுபிறந்த இரண்டாநாள் இரண்டாமாசம்
இரண்டாம்வருஷம் வைத்திரிநீலகண்டியென்னும்
பெயரைத்தரித்ததுற்கையானது வந்தணுகும்.

அதின்குணம்.

இரண்டானவருடத்தின் பாலனுக்கு
இளைக்கின்றவருத்தங்கள் யென்னசொல்வேன்
வயிருப்பும் தலைச்சாயும் பேதியாகும்
வாந்திபண்ணும் தேரையைப்போல் மெலிந்துபோகும்
மிரளுமதுஅலறியழும் கண்சிவக்கும்
மேனியெல்லாம்வேர்வைவிழும் கொட்டாவித்தான்
சுரமடிக்கும் வயிரிறையும் திடுக்கிட்டுத்தான்
துள்ளியழும் பொல்லாததோஷத்தாலே

இதற்குப்பரிகாரம்.

திங்கட்கிழமையிலே அரிசியுடன் தும்பயிலைபோட்டுச் சமைத்து கறியில் குப்பைமேனியிலைபோட்டு வேகவைத்துஇரண்டையும் ஒன்றாகசேர்த்து வெள்ளாட்டுப்பால்விட்டுப் பிசைந்து ஆண்பாவைபண்ணி புதுச்சட்டியில்வைத்து காதோலை கருமணிபஞ்சவருணநூல் பட்டுவஸ்திரஞ்சாற்றி தாமரைப்பூசூட்டி எள்ளு வெல்லம் பச்சரிசி தாம்பூலம் தட்சணைவைத்து நவதானியம் சாதம் கோழிமுட்டை கச்சகருவாடு வடை சுண்டல் அவல்கடலை புண்ணாக்குகீரை கள்ளுசாராயம்பழம் தேங்காய்ரொட்டிசுருட்டுஇவைகளை பாவைச்சுற்றிலும்வைத்து நெய்யினால் ஐந்துதிரி கொளுத்திவைத்து மஞ்சள்துணியில் அரைக்காசுமுடித்து பாவைக்கெதிரில் வைத்துநெய்யினால்ஐந்துதிரிகொளுத்திவைத்து மஞ்சள்துணியில் அரைக்காசுமுடித்து பாவைக்கெதிரில்வைத்து தூபதீபம்கொடுத்து நிவேதனஞ்செய்து குழந்தையை தாயின்மடியில்வைத்து கிரகத்தின்பேரை கக-தரஞ்சொல்லி பெட்டைக்கோழிசுற்றி மந்திரம் ஓம் ஸ்ரீயும்பாலக்கிரகதோஷம் நிவர்த்தி ஐயும் கிலியும் சவ்வுமென்று இந்தப்படி கஉ-தடவை செபித்து இருவருக்கும் பாவையெடுத்து கூ-தடவைசுற்றி முன்சொல்லிய மூலமந்திரத்தை ராஅ ஜெபித்து இரவில் எ-மணிக்கு பைரவன் கோயில்பக்கம் வைக்கவும்.

பின்புவேளைக்குகாப்புகட்டி வேர்பிடுங்கிவந்து இதனடியிற் கண்டிருக்கிற சக்கரத்தை செப்புத்தகட்டிலெழுதி வேரைத்தகட்டினுள் வைத்துச்சுருட்டி மூன்றுவர்ணநூல் சுத்திவைத்து தாம்பூலம் புஷ்பம் பழம் அவல்கடலைவைத்து தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்துச் சொல்லு மந்திரம்.




அரிஓம் தன்மதேவர் தாரணியளந்தநம்பி நீலகண்ட மாயா சொரூபா சர்வதோஷமும் படுபடு ருங் சூறுங்கு மசிமசிநமசிவாய

சிவாவென்று ௱அ-உரு ஜெபித்து குளிசத்தை வலதுபுறத்திற்கட்டசகல தோஷமும் நிவர்த்தியாகும்.

சிசுபிறந்த மூன்றுநாள் மூன்றுமாசம் மூன்றுவருஷம்
விரோதகன்னியெனும் காளிதேவதை வந்தணுகும்

இதின்குணம்.

கண்களிலேபீளையது சேரும்நெஞ்சு
கனல்போலேயெரியுமப்பா பாலுண்ணுது
கண்சோறும்வெளுப்பாக பேதியாகும்
கல்போலேவயிருப்பும் தலையைச்சுற்றும்
எண்ணவேகயர்போலே உடல்முறுக்கும்
யிளைப்புமிகவுண்டாகும் சுரமடிக்கும்
பண்ணுதகோலமெல்லாம் பண்ணுமப்பா
பாலருக்குமூன்றுவ தாண்டிற்றுனே.

இதற்குப்பரிகாரம்.

சோமவாரத்தில் குடுவையரிசிச்சோறு கருவாடு நெற்பொறி பொரிமாவு இவைகளைப்பிசைந்து பெண்பாவைசெய்து புதுசட்டியில்வைத்து காதோலை கருமணி சந்தனம் கதம்பம் பஞ்சவருணநூல் செகப்பு வஸதிரஞ்சாத்தி மந்தாரைபுட்பஞ்சூட்டி சாதம்புண்ணுக்கு அரைக்கீரைபுரட்டல் கருவாடு அவல்கடலை சுண்டல் முட்டை ரொட்டிசுருட்டு வஸது இவைகளை பாவைச்சுற்றிலும் வைத்து மஞ்சள் துணியில் கூ-காகமுடித்து கரும்புபெட்டைக்கோழி காவுகொடுத்து தேங்காய்பழம் தாம்பூலம் தட்சணை தூபதீப நிவேதனஞ் செய்து மந்திரம் ஓங்காளி பாலக்கிரகதோஷநிவர்த்தி ஓம் ஆம் உம் ஐயும் கிலியும் சவ்வும் சர்வகிரகதோஷம் நிவர்த்தியென்று கசூ-தடவை ஜெபித்து கொடிக்கள்ளி ந-கிளையுள்ளதில் நெய்த்திரிசுற்றி தீபமேற்றி கிழக்குமுகமாக தாயின்மடியில் குழந்தையைக்குந்தவைத்து கிரகத்தின்பெயரைச்சொல்லி மூலமந்திரம் ௱அ-தரஞ்செபித்து பாவையெடுத்து கூ-தடவை இருவரையுஞ்சுற்றி மாலைநேரத்தில் ஊருக்குமேற்கு சோலைக்கெதிரில் வைக்கவும்.

பின்பு முருங்கைக்குக் காப்புகட்டி சிவ் வங் ஓங் நகரிங்யென்று வேர்பிடிங்கிவந்து இதனடியில் கண்டிருக்கும் சக்கரத்தை செப்புத்தகட்டிலெழுதி வேரேவைத்துச்சுருட்டி புஷ்பஞ்சூட்டி அவல்கடலை பழம் தாம்பூலம் தட்சணைவைத்து தேங்காயுடைத்து தூபதீபம் கொடுத்துச்சொல்லும்.

மூலமந்திரம் ஓம்அர சிவா ஓம்சிவாய அகோரகோர தந்தரூபா உடம்புகுளிர சர்வதோஷமும் பரிகரி படுபடுபட்சிபடுசிவாவென்று ௱அ-ஜெபித்து குளிசத்திற்கு மஞ்சள்நூல்கற்றி குழந்தைக்கு வலது புரத்திற்கட்டவும்.




சிசுபிறந்தநாலாநாள் நாலாமாதம் நாலாம்வருஷம்.

உருத்திரகாலாக்கினியென்னும் பைரவிதேவதை

வந்தணுகும் அதின்குணம்.

தேங்காய்பூசிதறினாற்போல் பேதியாகும்
தாயாரைகைவிடா தழுதிருக்கும்
பாங்கானதிரேகமெல்லாம் சிலிசிலிக்கும்
பாலனுக்குவாய்தனிலே நுரையுந்தள்ளும்
யேங்கியழும்வயருப்பும் சுரமடிக்கும்
இரண்டுவிலாசுழித்திருக்கும் நடுக்கும்தேகம்
வாங்காமல்கைகால்கள் சுருக்கிக்கொண்டு
வலிக்குமடாஉச்சியது துடிக்கும்பாரே.

இதற்குப்பரிகாரம்.

மங்களவாரத்தில் உளுத்தமாவுஞ்சோறும் பசுநெய்விட்டுப் பிசைந்து பெண்பாவைசெய்து புதுசட்டியில்வைத்து காதோலை கருமணிபஞ்சவர்ணநூல் பச்சைவஸ்திரம்சாத்தி வெள்ளெருக்கம் பூசூடி சாதம் ஆட்டுக்கறிபுரட்டல் அரிசிரொட்டி நெற்பொறி நவதானியம் புண்ணாக்குகீரை நெத்திலிகருவேட்டின்தலை கோழிமுட்டை கள்ளு சாராயம் சுருட்டு தேங்காய் பழம் தாம்பூலம் தக்ஷிணைவைத்து குங்குமம் கதம்பம் கூ-காசு அவயவங்களில்வைத்து தூபதீபம்கொடுத்து நிவேதனஞ்செய்து புள்ளிசாவல் விபூதிகொடுத்து வடக்குமுகமாகதாயார்மடியில் குழந்தையைக் குந்தவைத்து மந்திரம் ௱அ-ஜெபித்து மந்திரம் ஓம்பாலக்கிரக பயிரவி ஓம் ஆம்-ஸ்ரீயும்-கிரியும்-ஐயும்-கிலியும்-சவ்வும்- சர்வபாலகிரகதோஷ நிவர்த்தியென்று கஅ-தடவை ஜெபித்து பாவையை கூ-தடவை இருவரையுஞ்சுற்றி உச்சிநேரத்தில் சுடுகாடு அல்லது ஆற்றங்கரையில் கொண்டுபோய்வைத்து பாவையின்வாயில் கள்ளை ஊற்றிவிட்டு வரவும்.

பின்புநத்தைச்சூரிக்குக் காப்புகட்டி சிவயநமவென்று வேர்பிடுங்கிவந்து யிதனடியிற்கண்டசக்கரத்தை செப்புத்தகட்டிலெழுதி வேரை அதனுள்வைத்து சுருட்டி மஞ்சள்நூல்சுற்றி வைத்து புஷ்பம்தாம்பூலம் தக்ஷிணைபழம் அவல்கடலைவைத்து தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்து சொல்லுமந்திரம்.

அரிஓம்சிவாயநம சடசட பிறபிற அகோரவீரபத்திரா வாவா இப்பிள்ளைக்கு சகலதோஷமும் உடம்படுசுவாகாவென்று ௱அ-தரம்செபித்து குழந்தைக்குச்செய்ய சகலதோஷம் நிவர்த்தியாகும்.




சிசுபிறந்தஐந்தாநாள் ஐந்தாமாசம் ஐந்தாம்வருஷம்
ஆகாசபாதிரமென்னும் ஜின்னுதேவதை
வந்தணுகும் இதின்குணம்.

ஐந்தானவருடத்தில் கொடியதோஷம்
அப்பனேகுரல்கம்மி யழுகும்பாலன்
மந்தமாம்வயிருப்பும் பாலுண்ணாது
மலமெல்லாம்பலவிதமாய் கழியும்பாரு
விந்தையாய்விலாவெலும்பு வுயர்ந்திருக்கும்
வேகமாய்சுரமடிக்கும் வயர்சுரக்கும்
தொந்தமாய்கரப்பான்போல் சிரங்குகாணும்
தொந்தரைகள் பலவிதமாய் ஐந்தாமாண்டே.

இதற்குப்பரிகாரம்.

ஆதிவாரத்தில் பச்சரிசிமாவில் பசும்பால் ஊற்றிப்பிசைந்து பெண்பாவைசெய்து காதோலைகருமணி பஞ்சவர்ணநூல் மஞ்சள்வஸ்திரம் புதுச்சட்டியில்வைத்து எருக்கம்பூ சூடி பொங்க

விட்டு வெல்லம் நவதானியநெற்பொரி தாம்பூலம்புஷ்பம் பழம் செஞ்சாவல் காவுகொடுத்து சுருட்டு அவல்கடலைதேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்து நிவேதனஞ்செய்து குழந்தையைதாயின்மடியில் வடக்குமுகமாகவைத்து எலுமிச்சம் பழமறுத்து இருவரையுஞ்சுற்றி சட்டியிலிட்டு மூலமந்திரத்தை ஜெபித்து ஓம்ஜின்னுசகலபாலகிரகதோஷம் நிவர்த்தியென்று ௩௧ தடவை ஜெபித்து கிரகத்தின்பெயர்சொல்லி பின்புபாவைபெடுத்து கூ- தடவை இருவரையுஞ்சுழற்றி மாலைநேரத்தில் பிடாரிகோவில் பக்கத்தில்வைக்கவும்.

பின்பு ஓரிலைதாமரைக்குக்காப்புகட்டி மசிநயவவென்றுவேர்பிடுங்கிவந்து இதனடியில்கண்டிருக்குஞ் சக்கரத்தை செப்புத்தகட்டிலெழுதி வேரைவைத்துச்சுருட்டி புஷ்பஞ்சூடி அவல் கடலைபழம் தாம்பூலம் தட்சணைவைத்து தேங்காயுமுடைத்து தூபதீபங்கொடுத்துச்சொல்லும் மந்திரம்.

ஓம் நீலிகபாலி திரிசூலி - சண்டாளி-அரிஓம் - இப்பிள்ளை தோஷம் இரங்கிபடுசுவாகா சிவாவென்று ௱அ ஜெபித்து குளிசத்தை குழந்தைக்குக்கட்ட சகலதோஷம் நிவர்த்தியாகும்.




குழந்தைபிறந்தஆறுநாள் ஆறுமாதம் ஆறும்வருஷம் வைத்திரியென்னும்பெயர்தரித்த கன்னிதேவதை வந்தணுகும் அதின்குணம்.

காலவீங்குஞ்சொக்கிருக்கும் உடல்வெளுக்கும்
கழுத்துமுதல்முகமெல்லாம் வேர்வைகாணும்
பாலதனைவேண்டாது தாகங்கேட்கும்
பாலனுக்குமுதுகெலும்பு நிமிர்ந்துபோகும்

சாலவேசுரமடிக்கும் விலாவெலும்பு
சதைக்குமேல்காக்குமடா வயருவீங்கும்
நாளைக்குழருவியாதி போலேகாட்டும்
நம்பாதேசாந்தியுடன் செய்துநீக்கே

இதற்குப்பரிகாரம்.

ஆதிவாரத்தில் அரைத்தமஞ்சள்சோறு தூதுவேளையினிலை இலுப்பைப்புண்ணாக்கு இவைகளைப்பிசைந்து ஆண்பாவைசெய்துபுது சட்டியில்வைத்து காதோலைகருமணி சந்தனங்கதம்பம் பஞ்சவருணநூல் கருப்புவஸ்திரஞ்சாற்றி மந்தாரைபுஷ்பஞ் சூட்டி சாதம்புண்ணாக்கு அரைக்கீரைபுரட்டல் கருவாடு அவல் கடலை சுண்டல் முட்டை ரொட்டி சுருட்டுவெஸ்து இவைகளைப் பாவைச்சுற்றிலும்வைத்து மஞ்சள் துணியில் கூ-காசு முடிந்து வைத்து கருப்புபெட்டைக்கோழி காவுகொடுத்து தேங்காய் பழம் தாம்பூலம்தக்ஷணை தூபதீபநிவேதனஞ்செய்து மந்திர ஓங் காளி பாலக்கிரகதோஷநிவர்த்தி ஓம் ஆம் உம் ஐயுங்கிலியு சவ்வும் சர்வகிரகதோஷ நிவர்த்தியென்று கசு தடவைசெபித்து கொடிக்கள்ளி ங-கிளையுள்ளதில் நெய்த்திரிசுற்றி தீபமேற்றி கிழக்கு முகமாகதாயின்மடியில் குழந்தையைக் குந்தவைத்து கிரகத்தின்பெயரைச் சொல்லிமூலமந்திரம் ௱அ தரஞ்செபித்து பாவையெடுத்து கூ-தடவை இருவளையுஞ்சுற்றி மாலைநேரத்தில் ஊருக்குமேற்கு சோலைக்கெதிரில் வைக்கவும்.

பின்புகுப்பைமேனிக்குக் காப்புகட்டி வேர்பிடுங்கி மஞ்சள் நூல்சுற்றி இதனடியில்கண்டிருக்குஞ் சக்கரத்தை செப்புத்தகட்டிலேழுதிநூல்சுற்றியவேரை சக்கரத்துள்வைத்து சுருட்டி அவல்கடலைதாம்பூலம் புஷ்பம்வைத்து தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்து நிவேதனஞ் செய்து இந்தமந்திரத்தை ஜெபிக்கவும்.

அரிஅரி காலதூதா எம்தூதா ஓம் இப்பிள்ளைக்கு சகல தோஷங்களும் நிவாரணமாக ௱அ உருஜெபித்து குளிசத்திற்கு மூன்றுவருணநூல்சுற்றி குழந்தைக்குகட்ட சகலதோஷம் நிவர்த்தியாகும்.



குழந்தைபிறந்தஏழாநாள் ஏழாமாசம் ஏழாவருஷம்
உருத்திரகாளரியென்னு மாரியம்மை
வந்தணுகும் அதின்குணம்.

குரல்கம்மியழுகுமடா சுரமுங்காணும்
குழந்தைக்கிஉச்சியது பள்ளமாகும்
புருவமதுதுடிக்குமடா கண்ணீர்வடியும்
பூமியிலேபுரண்டழுகும் மிரண்டுப்பார்க்கும்
திரேகமது பச்சைநிறமாகக்காட்டும்
திரண்டயிரு புருவமது துடிக்கும்பாரு
சிறந்ததொருபிள்ளைக்கு ஆறுமாண்டின்
செய்யுமாயிந்தவிஷ தோஷமெல்லாம்

இதற்குப்பரிகாரம்.

மங்களவாரத்தில் பச்சரிசிமாவால் பெண்பாவை செய்து புதுசட்டியில்வைத்து காதோலை கருமணி பஞ்சவர்ணநூல் கருப்புவஸ்திரம்சாத்தி வெள்ளெருக்கம்பூசூட்டி சாதம் கருப்புபெட்டைக்கோழி எருக்கம்பூ ஆட்டுக்கறிபுரட்டல் அரிசிரொட்டி நெற்பொரி நவதானியம் புண்ணாக்குக்கீரை நெத்திலி கருவாட்டின்தலை கோழிமுட்டை கள்ளுசாராயம் சுருட்டு தேங்காய்பழம் தாம்பூலம்தட்சணை வைத்து குங்குமம் கதம்பம் ௯-காசு அவயவங்களில்வைத்து தூபதீபம்கொடுத்து நிவேதனஞ்செய்து புள்ளிசாவல் ஆகுதிகொடுத்து வடக்குமுகமாக தாயார் மடியில் குழந்தையைக் குந்தவைத்து மந்திரம் ௱அ ஜெபித்து மந்திரம் ஓம்பாலக்கிரகபைரவி ஓம்-ஆம்-ஸ்ரீயும்- கிலியும்-ஐயும்-கிலியும் - சவ்வும் சர்வபாலக்கிரகதோஷ நிவர்த்தியென்று ௧அ தடவை ஜெபித்து பாவையை ௯-தடவை இருவரையுஞ்சுற்றி உச்சிநேரத்தில் சுடுகாடு அல்லது ஆற்றங்கரையில் கொண்டு போய்வைத்து பாவையின் வாயில்கள்ளை ஊற்றிவிட்டுவரவும்.

பின்புவில்வமரத்திற்கு காப்புகட்டி நமசிவயசிவயமென்று வேப்பிலையும் கோழியிறகும் பெலியிட்டுவேர் பிடுங்கிவந்து இதனடியில் கண்டிருக்குஞ் சக்கரத்தை செப்புத் தகட்டிலெழுதி வேரைவைத்துச் சுருட்டிமஞ்சள்நூல்சுற்றி மஞ்சள்பிள்ளையார் சுத்தி அதற்கெதிரில் குளிசத்தைவைத்து புஷ்பஞ்சூட்டி தாம்பூலம் தட்சணை பழம் அவல்கடலைவைத்து வேப்பிலையரிசியுங் கலந்து ௬-மொந்தையில் பொங்கலிட்டுவைத்து தேங்காயுடைத்து தூபங்கொடுத்து சொல்லுமந்திரம்.

ஓம் சிவா இப்பிள்ளைக்கிச் சர்வதோஷமும் படுவென்று ௱அதரஞ்செபித்து குழந்தைக்குக்கட்ட சர்வதோஷம் நிவர்த்தியாகும்.




சிசுபிறந்தஎட்டாநாள் எட்டாமாசம் எட்டாம்வருஷம்
சுப்பிரமாதங்கியென்றும் பேர்தரித்த பகவதிதேவதை
வந்தணுகும் அதின்குணம்.

தலைச்சுழலும்கண்சுழலும் அலர்ந்துபோகும்
தண்ணீர்போல்பேதியாகும் வாந்திபண்ணும்
நிலைதவிரகளைப்புண்டாம் தலையும்சாயும்
நினைக்கவொண்ணுபலவிதமாய் கனவுகாணும்
அலருமடாசுரங்காயும் சிரங்குகாணும்
அப்பனேகண்திறவா திருக்கும்பாரு
பலவிதமாய் இதுபோலே விகாரம்பண்ணும
பாலருக்கு எட்டானவருடந்தானே.

இதற்குப்பரிகாரம்.

சோமவாரத்தில் பச்சரிசியுடன் பால்சோறு பாவற்காய் தயிர்வார்த்துப்பிசைந்து ஆண்பாவைசெய்து புதுசட்டியில்வைத்து அந்தபாவைக்கு காதோலை கருமணி பஞ்சவர்ன நூல் கருப்புவஸ்திரம் பலவகைபுட்பஞ்சூட்டி எள்ளு நெற்பொறி நவதானியம் பஞ்சவர்ணசாதம் ஆட்டுக்கறி முட்டை புண்ணுக்குகிணாரொட்டிவஸ்து தாம்பூலம் தட்சணைச் சுற்றிலும்வைத்து சந்தனந்தெளித்து தூபதீபம்கொடுத்து நிவேதனஞ்செய்து மந்திரம் பாலக்கிரகமோகனங்கி பாலக்கிரகதோஷநிவர்த்திஜயுங்-கிலியும் சவ்வுமென்று இப்படி கஉ தடவை ஜெபித்து குழந்தையை தாயின்மடியில்வைத்து கிரகம் அல்லது பேயின்பெயரை எழுதாஞ் சொல்லி இருவரையும் கூ-தடவை சுற்றி ஓம்பகவதி பால கிரக்

தோஷநிவர்த்தியென்று கசு-தடவை ஜெபித்து இருவணாயும் சுசு தடவைசுற்றி அந்திநேரம் அரன்கோயிலுக்கெதிரில் ஆலமரத் தடியில்வைக்கவும்.

பின்புஊமத்தனுக்குக் காப்புகட்டி நங் மங் சிங் யென்று வேர்பிடிங்கி இதனடியில், கண்டிருக்குஞ் சக்கரத்தை செப்புத் தகட்டிலெழுதி வேரைவைத்துச்சுருட்டி மஞ்சள்நூல்சுற்றிபுஷ் பஞ்சூட்டி தாம்பூலம் பழம் அவல்கடலைவைத்து தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்து சொல்லுமந்திரம்.

ஓம் ஆங்காரி வேதாளி சர்வதோஷநாசி இப்பிள்ளை தோஷம்பட்சிகனயா படுபடு வாவாவென்று ாஅ செபித்துகுழந்தைக்குக்கட்ட சகலதோஷ நிவர்த்தியாகும்.




சிசுபிறந்தஒன்பதாநாள் ஒன்பதாம்மாசம் ஒன்பதாம்வருஷம்
குணத்திவாயக்கினியென்னும் பெயர்தரித்த
குடோரிதேவதை வந்தணுகும்
அதின்குணம்.

மஞ்சளாய்பேதியாகும் கண்கள்வீங்கும்
மைந்தனதுகாலிரண்டும் பின்னும்பாரு
கொஞ்சுகின்றமுகமதுதான் வெளுத்துகாணும்
குழந்தையதுநித்திரையது செய்யாதண்ணேன்
துஞ்சவேசுரமடிக்கும் வயர்கடுக்கும்
தூக்குமடாயிரண்டுவிலா உயர்ந்துப்போகும்
அஞ்சாதேயிதற்குள்ளே பரிகாரந்தான்
அடுத்தாப்போலுரைத்திட்டோம் செய்துநீக்கே

## இதற்குப்பரிகாரம்.

ஆதிவாரத்தில்செம்பாளையரிசிச்சோறும்சந்தனமுங்கலந்து பிசைந்து பெண்பாவைசெய்து புதுச்சட்டியிலேவைத்து காதோலைகருமணி பஞ்சவர்ண நூல் சிகப்புவஸ்திரஞ்சாற்றி செவ்வலரிப் புட்பஞ்சூட்டி பழம் அவல்கடலை ரொட்டி வஸ்து சுறுட்டு சாதம்புண்ணாக்குக் கீரை கதம்பப்பொடி தூவி தூபதீபங்கொடுத்து கருப்புசாவல்பலியிட்டு மூலமந்திரம் ௱அ ஜெபித்து கிரகத்தின்பெயரைச்சொல்லி கிழக்குமுகமாக தாயார்மடியில் குழந்தையைகுந்தவைத்து ௯ காசு அவயவங்களிலும் தாம்பூல தட்சணைவைத்து ஓம் பாலகிரக குடோரி ஐயுங் கிலியும் சவ்வும் பாலகிரகதோஷநிவர்த்தி இப்படி ௱௧ தடவைஜெபித்து பாவை யெடுத்து ௯-தடவைசுற்றியிரக்கி அந்திநேரத்தில் மேற்படி திசையில் குளத்துகீழ்கரையில் வைத்து கணபூதமென்றுசொல்லி பாவையின்வாயில் கள்ளுவார்த்துவரவும்.

பின்புமூக்குரட்டைக்குக்காப்புகட்டி ஓம்சிவாயநமவென்று வேர்பிடுங்கிவந்து இதனடியில் கண்டிருக்கும் சக்கரத்தை செப்புத் தகட்டிலெழுதி வேரை அதனுள்வைத்து சுருட்டி பழம் மஞ்சள்நூல்சுற்றி வைத்து வெள்ளைபுட்பஞ்சூட்டி பழம் அவல் கடலை தாம்பூலம்தட்சணைவைத்து தேங்காயுடைத்து தூபதீபங் கொடுத்துச்சொல்லும்மந்திரம்

ஓம் ஆங்காரி வேதவேதாளி சருவபக்ஷணி பிள்ளைதோஷ மட்சணி படுபடு சுவாகாவென்று ௱அ உருஜெபித்து குளிசத்தை குழந்தைகட்குக்கட்ட சகலதோஷ நிவர்த்தியாகும்.



சிசுபிறந்தபத்தாம்நாள் பத்தாம்மாதம் பத்தாம்வருஷம்.
ஆகஞ்சிகாலாக்கினிதேவியென்னும் பெயர்தரித்த ருத்திரி
தேவதை வந்தணுகும்.

அதின்குணம்.

தேகமேமெலிந்துபோம் பேதியாகும்
திடமானகைகால்கள்வலிபோற்காணும்
வேகமாய்சுரமடிக்கும் முருவேமாறும்
வயர்கடுக்கும் சிலந்தியின்கட்டிகாணும்
சோகமாய்மூர்ச்சையது வந்துமாரும்
சூளுவாககால்கைகள் நோயுண்டாகும்
பாகமாயிதற்குடனே பரிகாரந்தான்
பாட்டின்கீழ்கூறிவிட்டோம்பகர்ந்துகொள்ளே

மங்களவாரத்தில் பச்சரிசி சோறு அவித்தநாணைக்கிழங்கு கறி நெற்பொரி பொரிமாவு இவைகளைச் சேர்த்து பிசைந்து பெண்பாவை பண்ணி புதுசட்டியில்வைத்து காதோலை கருமணி பஞ்சவர்ணநூல் கருப்புவஸ்திரம் சாத்தி சந்தனஞ்செலுத்தி வெள்ளைப்புஷ்பஞ்சூடி அவல்கடலை தாம்பூலம் தக்ஷணைவைத்து சாதம்புண்ணாக்குக்கீரை சுருட்டு வஸ்துபழம் கூ காஸ் முடிந்து வைத்து தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்து மூலமந்திரம் ளஅ தரஞ்செபித்து வேற்குமுகமாய் தாயார்மடியில் குழந்தையை குந்தவைத்து மந்திரம் ஓம் ருத்திரஜயுங்கிலியுஞ் சவ்வும் சருவபாலகிரகநிவர்த்தி இப்படி கஉ தடவை செபித்து பாவையெடுத்துகுழந்தைக்கு கூ தடவை பேயின்பேரைச்சொல்லி அந்திவேளையில்கிழக்குத் திசையில் வைக்கவும்.

• பின்புநிலஆவரைக்குள் காப்புகட்டி ஓஓ ஆஆ சீசீ வையென்று வேர்பிடுங்கிவந்து இதனடியிற்கண்டிருக்குஞ்சக்கரத்தை செப்புதகட்டாலெழுதி வேரைவைத்துச்சுருட்டி மஞ்சள்நூல் சுற்றிவைத்து புஷ்பஞ்சுற்றி தாம்பூலம் தக்ஷணை பழம் அவல் கடலை தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்து மந்திரம்.

அரிஓம் அரகசி அகாரமந்திர ஆங்கோரசுருபா!! அகோரபட்சி இப்பிள்ளைக்குத்தோஷம் படுபடு வாவாவென்று ளஅ ஜெபித்துருளிசத்தை குழந்தைகட்கு சகல தோஷம் நிவர்த்தியாகும்.




சிசுபிறந்தபதினோராநாள் பதினோராமீ பதினோராம்வருஷம்
பஞ்சம்மாதிரிமாகாளியென்னும் பேர்தரித்தஜடாதரி
வந்தணுகும் அதின்குணம்.

அடிக்கடிக்குசுரமடிக்கும் வேர்வைகாணும்
அப்பனேசிகரந்தான் மஞ்சளாகும்
துடிதுடிக்கும்திரேகமெல்லாம் வீக்கமாகும்
துகளுமடாநாவதுதான் வரண்டுப்போகும்
கடுகடுக்கும்வெறிகுணங்கள் அதிகமாகும்
கண்டபடிசேஷ்டைசெய்யும் வயர்தானுப்பும்
படித்திட்டதோஷங்கள் நிவர்த்திசெய்து
பாலருக்குஉயிர்கொடுத்து பாதுகாரே

இதற்குப்பரிகாரம்.

சுக்கிரவாரத்தில் எருமைப்பால்விட்ட பச்சரிசிச்சோறும் குறிஞ்சானிலைபோட்டு சதைத்தகறி ஒன்றாகச்சேர்த்துப் பிசைந்து ஆண்பாவைபண்ணி புதுசட்டியில்வைத்து காதோலை கருமணி பஞ்சவர்ணநூல் செகப்புவஸ்திரம் சாத்தி சந்தனஞ்செலுத்தி வெள்ளைப்புஷ்பஞ்சூடி அவல்கடலை தாம்பூலம் தக்ஷிணைவைத்து சாதம்புண்ணாக்குகிளை சுருட்டு வஸ்துபழம் கூ-காஸ் முடிந்துவைத்து தேங்காயுடைத்துதூபதீபங்கொடுத்து மூலமந்திரம் ௱அ தரஞ்செபித்துவடக்குமுகமாய் தாயார்மடியில் குழந்தையை குந்தவைத்து மந்திரம் ஓம் ஜடாதரி ஐவுங்கிலியுஞ் சவ்வும் சருவபாலக்கிரகநிவர்த்தி இப்படி கஉ- தடவை செபித்து பாவையெடுத்துகுழந்தைக்கு கூ-தடவை பேயின் பேரைச்சொல்லி அந்திவேளையில் நாலுசந்துகூடும்படியான அரசமரத்தடியில் வைக்கவும்.

பின்புளருக்கஞ்செடிக்கு காப்புகட்டி ஓஓஆஆசுவாகாவென்றுவேர்பிடிங்கிவந்து இதனடியிற்கண்டிருக்குஞ்சக்கரத்தைசெப்புத் தகட்டிலெழுதி வேரைவைத்துச்சுருட்டிமஞ்சள் நூல்சுற்றிவைத்து புஷ்பஞ்சுற்றி தாம்பூலம் தக்ஷணைபழம் அவல்கடலைதேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்து மந்திரம்.

அரிஓம் அரகசி அகாரமந்திர மாகாளி சத்திரூபாயம்மே ஐயுங்கிலியும் சவ்வும் இப்பிள்ளைக்குத்தோஷம் படுபடு வாவாவென்று ௱அ செபித்து குளிசத்தை குழந்தைக்குகட்ட சகல தோஷம் நிவர்த்தியாகும்.




சிசுபிறந்தபனிரண்டாநாள் பனிரண்டா௴ பனிரண்டா௵
அரக்கிஉச்சங்கியென்னும்பெயர்தரித்த நீலிதேவதை
வந்தணுகும் அதின்குணம்.

கண்வலையும்வாந்திபண்ணும் கொடிபோல்துவளும்
கதிரவன்போல் காயுமடாவிக்கல்காணும்
தண்ணியதுகேட்குமடா பேய்போல்திரியும்
தவளைசொரிபோலுடலில் சிரங்குகாணும்
யெண்ணைபோல்திரேகமெல்லாம் மினுமினுக்கும்
யிளவலாய்மஞ்சளைப்போல் பேதியாகும்
பன்னிரண்டாம்வருஷத்தின் தோஷஞ்சொன்னேன்
பக்குவமாய் பரிகாரஞ்செய்துநீக்கே.

## இதற்குப்பரிகாரம்.

சோமவாரத்தில் பச்சரிசிமாவில் பசும்பாம் ஊற்றிப்பிசைந்து ஆண்பாவைசெய்து காதோலை கருமணி பஞ்சவர்ண நூல் பச்சைவஸ்திரம் புதுச்சட்டியில்வைத்து வேப்பிலையுஞ்சூடி பொங்கலிட்டு பருத்திக்கொட்டை நவதானியநெற்பொரி தாம்பூலம் புஷ்பம் பழம் செஞ்சாவல் காவுகொடுத்து சுருட்டு அவல்கடலை தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்துநிவேதனஞ்செய்து குழந்தையைதாயின்மடியில் வடக்குமுகமாகவைத்து எலுமிச்சம்பழமறுத்து இருவரையுஞ்சுற்றி மூலமந்திரத்தை ௱அ செபித்து மந்திரம் ஸ்ரீயும் கிலீயும் ஐயும் சவ்வும் சகலபாலகிரதோஷம் நிவர்த்தியென்று கஅ தடவைசெபித்து கிரகத்தின் பெயர்சொல்லி கூ-தடவை இருவரையுஞ்சுற்றி இரவில் எ மணிக்கு வூருக்குவடக்கு ங-சந்து கூடுமிடத்தில் வைக்கவும்.

பின்பு வட்டக்கிலுகிலுப்பைக்குக் காப்புகட்டி ஓம்-சிங்-உ-உ-சி-சி-அ-வென்றுவேர் பிடுங்கிவந்து இதனடியில்கண்டிருக்குஞ் சக்கரத்தை செப்புத்தகட்டிலெழுதி வேரைவைத்துச்சுருட்டி புஷ்பஞ்சூட்டிஅவல்கடலைபழம் தாம்பூலம் தட்சுஷணைவைத்து தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்துச் சொல்லும் மந்திரம.

ஓம் நீலிகபாலி ஆம்-தேவி திரிபுரமாங்காளி சிவாநந்தி அம்மேதாயே இப்பிள்ளைதோஷம் இரங்கிபடுகொய்யாசிவாவென்று ௱அ செபித்து குளிசத்தை குழந்தைக்குக்கட்ட சகலதோஷம் நிவர்த்தியாகும்.



## சிசுபிறந்தபதிமூன்றுநாள் பதிமூன்றும்மீ பதிமூன்றுவருஷம் உச்சங்கியென்னும் பெயர்தரித்த பிடாரி தேவதை வந்தணுகும் அதின்குணம்.

பார்த்தவர்கள்பயித்தியங்கள் யென்றேசொல்லி
பண்ணுமடாகுணங்களெல்லா மாறிப்போகும்
காத்திருந்துஜன்னியென்ற தோஷந்தொத்தும்
கண்ணிரண்டில்ஒருபார்வை மறைந்துபோகும்
தேர்த்துவிடும்பேதியாகும் வெதுப்புண்டாகும்
விதவிதமாய்பலபலவாய் விகாரஞ்செய்யும்
போத்தெறிந்து பதின்மூன்றுவருஷமென்று
பக்குவமாய்பரிகாரம் பாகஞ்செய்யே.

## இதற்குப்பரிகாரம்.

மங்களவாரத்தில் பச்சரிசிமாவால்பெண்பாவைசெய்துபுது சட்டியில்வைத்து காதோலை கருமணி பஞ்சவர்ணநூல் கருப்பு வஸ்திரம்சாத்தி வெள்ளெருக்கம்பூசூட்டி சாதம் கருப்புபெட்டைக்கோழி எருக்கம்பூ ஆட்டுக்கறிபுரட்டல் அரிசிரொட்டிநெற்பொரி நவதானியம் புண்ணாக்குக்கீரைநெத்திலிக்கருவாட்டின் தலை கோழிமுட்டை கள்ளுசாராயம் சுருட்டு தேங்காய்பழம்தாம்பூலம் தட்சணை வைத்து தூபதீபம்கொடுத்து நிவேதனஞ்செய்து புள்ளிசாவல் ஆகூதிகொடுத்து வடக்குமுகமாக தாயார்மடியில் குழந்தையைக் குந்தவைத்து மந்திரம் ௱அ-ஜெபித்து மந்திரம் ஓம்பாலக்கிரகபைரவி ஓம்-ஆம்-ஸ்ரீயும்-கிலியும்-ஐயும்-கிலியம்-சவ்வும்சர்வபாலக்கிரகதோஷநிவர்த்தியென்று கஅ-தடவை செபித்து பாவையை கூ-தடவை இருவரையுஞ்சுற்றி உச்சிநேரத்தில் ஊருக்குவடபுறத்தில் மாடுகட்டும் கொட்டாயிக்கெதிரில் வைக்கவும்.

பின்பு வட்டக் கிலுகிலுப்பைக்குக் காப்புகட்டி நங் மங் சிங் யென்று வேர்பிடுங்கி இதனடியில் கண்டிருக்குஞ் சக்கரத்தைசெப்புதகட்டிலெழுதிவேரே வைத்துச்சுருட்டிமஞ்சள்நூல் சுற்றி புஷ்பஞ்சூட்டி தாம்பூலம் பழம்அவல்கடலைவைத்து தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்து சொல்லுமந்திரம்.

அரிஓம் ஆங்காரி சிவாசிவாவென்று ௱அ-செபித்து குழந்தைக்குக் கட்டசகலதோஷம் நிவர்த்தியாகும்.



## சிசுபிறந்தபதினாலாம்நாள் பதினாலாம்மீ பதினாலாம்வரு மாடனென்னும்பெயர்தரித்த உக்கிரவீரன் வந்தணுகும் இதின்குணம்.

வயற்றுநோயுண்டாகும் குளிருங்காயும்
 வாய்வுதான்அதிகரித்து பேதியாகும்
நோய்கண்டபிள்ளையைப்போல் மெலிந்துபோகும்
 நிலையாதுபலவிதமாய் பேதியாகும்
யயித்தியம்பிடித்தவர்போல் அலையவேண்டாம்
 பதினான்காம்வருடத்தின் தோஷங்கண்டால்
வயித்தியங்கள்செய்துடலை கெடுக்கவேண்டாம்
 வளமானபரிகாரஞ் செய்துநீக்கே.

### இதற்குப்பரிகாரம்.

சுக்கிரவாரத்தில் எருமைத்தயிர்வார்த்தசோறு நாய்க்சீரகம் வழுதலங்கத்திரிக்காய் சமைத்து இவைகளைப் பிசைந்து ஆண் பாவைசெய்து புதுச்சட்டியிலேவைத்து காதோலை கருமணி பஞ்சவர்ணநூல் வெள்ளைவஸ்திரஞ்சாற்றி செவ்வலரிப்புட்பஞ் சூட்டி பழம் அவல்கடலை ரொட்டிவஸ்து சுருட்டு சாதம் புண் ணாக்குக்கீரை கதம்பபொடி தூவிமதுமாமிசம் கஞ்சா ஆட்டுக் கறிவைத்து தூபதீபங்கொடுத்துமந்திரம் ஓம் பாலக்கிரககுடோ ரி ஐயுங் கிலியும் சவ்வும் பாலக்கிரகதோஷ நிவர்த்தி இப்படி சூ-தடவைசெபித்து தாயார்மடியில் குழந்தையைக்குந்தவைத்து கிரகத்தின் பெயரைச்சொல்லி மூலமந்திரம் ௱அ செபித்து பா வையெடுத்து கூ-தடவை சுற்றியிரக்கி அந்திநேரத்தில் முச்சந் தில் வைக்கவும்.

பின்புகுட்டி விளாவுக்குக் காப்புகட்டி சிவயநமவென்று வேர்பிடுங்கிவந்து யிதனடியிற்கண்ட சக்கரத்தை செப்புத்தகட்டிலெழுதிவேரை அதனுள்வைத்துசுருட்டிமஞ்சள்நூல்சுற்றி வைத்து புஷ்பம்தாம்பூலம் தக்ஷிணைபழம் அவல்கடலைவைத்து தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்து சொல்லுமந்திரம்.

அரிஓம் சிவாயநம சடசட ·பிறபிற அகோரவீரபத்திராவாவா அந்திமாடா உதிரபெலிமாடா ஓம்பட்சி படுசிவாயா நமசிவசிவாவென்று இப்பிள்ளைக்கு சகலதோஷமும் உடம்படுசுவாகாா அதரம்செபித்து குழந்தைக்குச்செய்ய சகலதோஷம் நிவர்த்தியாகும்.




குழந்தைபிறந்தபதினைந்தாநாள் பதினைந்தாமீ பதினைந்தாவருஷம் பேய்ச்சியம்மனென்னும்பெயர்தரித்த மயானருத்திரி வந்தணுகும் அதின்குணம்.

பதினைந்குவருடத்தின் தோஷஞ்சொன்னேன்
பரிகாரம்அதற்குடனே அடுக்காய்சொன்னேன்
விதியாலேமுடிவானல் யாராலுண்டு
வினையிருந்தால்முடிவேது யின்னங்கேளு
பதியாமல்சுரமடிக்கும் பற்கடிக்கும்
பதருமடாநாய்போலே சிதரும்பாரு
ததிவேளைபலவிதமாய் நுழையவேண்டாம்
தக்கபடிபரிகாரம் செய்துநீக்கே.

இதற்குப்பரிகாரம்

ஆதிவாரத்தில் பச்சரிசிமாவில் பசும்பால்விட்டுப் பிசைந்து பெண்பாவைசெய்து புதுசட்டியில்வைத்து காதோலை கருமணி சந்தனங்கதம்பம் பஞ்சவருண நூல்கருப்புவஸ்திரஞ்சாற்றிபச்சரிசி பொங்கலிட்டுயிளநீர்பாணக்கங்கரும்புவெள்ளரிக்காய்பழம்

நெத்திலிமதுமாமிஸம அரைக்கீரைபுரட்டல் கருவாடு அவல்கடலைசுண்டல் முட்டை ரொட்டி சுருட்டு வஸ்து இவைகளைப்பாவைச்சுற்றிலும் வைத்துமஞ்சள் துணியில் கூ-காசு முடிந்துவைத்து கரும்புபெட்டைக்கோழி சாவுகொடுத்து தேங்காய்பழம் தாம்பூலம் தக்ஷிணை தூபதீபநிவேதனஞ்செய்து மந்திரஓங்காளி பாலக்கிரகதோஷநிவர்த்தி ஓம் ஆம் உம் ஐயுங் கிலியுஞ் சவ்வும்சர்வகிரகதோஷ நிவர்த்தியென்று கசூ-தடவைசெபித்து கிரகத்தின் பெயரைச்சொல்லி தாயின்மடியில் குழந்தையைக்குந்தவைத்து இருவரையுஞ்சுற்றி தூபதீபம்வைத்தவுடன் வேப்பமரத்தடியில் வைக்கவும்.

பின்பு வாசலில் வட்டமாகமெழுகி நெல்போட்டு புதுகலசத்தில் கும்பம்வைத்து வேப்பிலையணிந்து அம்மனைப்போல பாவித்து பலபுஷ்பஞ்சூட்டி சாதம் கறிசமையல்போட்டுஅரைத்தமஞ்சளை குழந்தையைப்போல்செய்து வேப்பிலைசுற்றி சாவல் பலியிட்டு தன் பின்பு திருநீற்றுப்பச்சைச்சுக்காப்புகட்டி ௬ எலுமிச்சம்பழம்காவுகொடுத்து ஓம் சிங் வங் யென்று வேர்பிடுங்கிவந்து இதனடியில் கண்டிருக்குஞ்சக்கரத்தை செப்புத்தகட்டிலெழுதி வேரை வைத்துச்சுருட்டி மஞ்சள்நூல்சுற்றி புஷ்பஞ்சூட்டி தாம்பூலம் தட்சணை பழம் அவல்கடலைவைத்து தேங்காயுடைத்து தூபங்கொடுத்து சொல்லுமந்திரம்,

அரி அரி மயானருத்திரி பேச்சிவா நமா ஆங்காளிவீரி உத்தண்டபேச்சி சிசுபண்ணியென்று கைகூப்பி சின்னபரச்சாளி ஓம் ருத்திரபேச்சிவா நமசிவாயவென்று இப்பிள்ளைக்குசகலதோஷங்களும் நிவாரணமாக ௱அ-உருஜெபித்து குளிசத்திற்குமூன்றுவருண நூல்சுற்றி குழந்தைக்குகட்ட சகலதோஷம் நிவர்த்தியாகும்.




சிசுபிறந்தபதினாரும்நாள் பதினாறும்மீ பதினாறும்வருஷம்
தெய்வகன்னியென்னும் பெயர்தரித்த பாலமோகினி
வந்தணுகும் அதின்குணம்.
பருவமடாபதினாறும் வருடந்தன்னில்
பாலருக்குஎவ்வனமும் அழகுண்டாகும்

சிரசுநோய்காணுமடா திருஷ்டியாலே
சிறுவருக்குமுகம்வெளுக்கும் கைகாலோயும்
அருமையாய்பரிகாரம் செய்துநீக்க
அவனியிலேயாருமே தெரிந்துக்கொள்ள
சிறுமணவூர் முனிசாமி
சிவகாமிவிலாசத்தி லச்சிட்டாரே.

## இதற்குப்பரிகாரம்.

சுக்கிரவாரத்தில் உளுந்துமாவில் பெண்பாவைசெய்து புது சட்டியில்வைத்து காதோலை கருமணி பஞ்சவருணநூல்பட்டுவஸ்திரம் சுகந்தமல்லி தவனம் புட்பஞ்சூட்டி பழம் அவல்கடலைரொட்டிவஸ்து பொங்கல் சுண்டல்வடை தோசை பரமானம்சந்தனம் சர்க்கரை வங்காளப்பச்சை துவரம்பருப்பு பச்சரிசி வாசனையுள்ளபுட்பம் தாம்பூலங் தட்சணைவைத்து மந்திரம் ஐயும் கிலியும்சவ்வும் சர்வபாலக்கிரகதோஷ நிவர்த்தியென்று ௱௮ ஜெபித்து ௨௧ எலுமிச்சம்பழமறுத்து குழந்தைதலைசுற்றி எறிந்துவிடவும்.

மந்திரம்-ஓம் பாலக்கிரக-பாலமோகினி ஐயும் கிலியும் சவ்வும் பாலக்கிரகதேவகன்னி சர்வபாலகிரகதோஷ நிவர்த்தி இப்படி ௭ தடவை ஜெபித்து ௩ தடவைசுற்றி ஆற்றங்கரை... க்கவும்.




பின்பு கஞ்சாங்கோரைக்குக் காப்புகட்டி ஓம்சிவாய நமாவென்று வேர்பிடுங்கிவந்து இதனடியில் கண்டிருக்கும் சக்கரத்தைசெப்புத்தகட்டிலெழுதி வேரை அதனுள்வைத்து சுருட்டி பழம் மஞ்சள் நூல்சுற்றி வைத்து வெள்ளைப்புட்பஞ்சூட்டி பழம் அவல்கடலை தாம்பூலம் தட்சணைவைத்து தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்துச் சொல்லும் மந்திரம் அரிஓம் ஆங்காரிவேதவேதாளி ஓம் ஜடக்ஷணி பிள்ளைதோஷபட்சணி பாலமோகினி சிசுவதனை உருக்குங்கன்னி ஐயும் கிலியும் படு படுபடு சிஞ்சினபட்சி படுபடுசுவாகாவென்று ௱௮ உருஜெபித்து குளிசத்தை குழந்தைக்குக்கட்ட சகலதோஷ நிவர்த்தியாகும்.

பாலக்கிரகதோஷம் முற்றிற்று.

---

உ

சிவராமஜெயம்.

திருடுபிடிக்கும் சாஸ்திரமென்னும்

# களவுநூல்சாஸ்திரம்.



இவை-சிறுமணவூர்

## முனிசாமிமுதலியாரால்

இயற்றப்பட்டு


தமது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1899.

மதராஸ் பெரம்பூர்போஸ்டு வெங்கடேசபத்தன்தெருவு.



உ

சிவராமஜெயம்.

---

திருடுபிடிக்குஞ் சாஸ்திரமென்னும்

# களவுநூல்சாஸ்திரம்.

## திருமால்துதி.

களவுநூற்றன்னைக் கருத்துடனோத
அளவிலானாரண னடியிணைகாப்பே.

---

## நூல்வரலாறு.

அளவில்லாதுலகேழும் நிறைந்துநின்ற
ஆதிபராபரத்தினுட அருளைவேண்டி
களவானபொருளிருக்குந் திசையையமற்றைக்
கண்டெடுத்தோர்நிறங்குறியு மாணும்பெண்ணும்
உளவரியுங்கைநூலை வெளியாய்ச்சொன்னேன்
உதாசினமாய்ப்பேசாதே மடையமைந்தா
வளமானபுத்தியுனக் கிருந்தாற்கேளு
வல்லாட்டால்குக்கலைப்போல் வாயைமூடே. (க)

நாயிற்றுக்கிழமை களவுபோன பொருளுக்குப் பலன்.

மூடென்றால்வாய்மூடி மனத்தாற்கேளு
முதலானகிழமையடா ஆதிவாரம்
ஆடுகின்றவெப்பொருள்தான் காணவிட்டால்
அப்பனேயெடுத்தவர்க ளாணேயாகும்
தேடியேபலரையுநீ தூஷிக்காதே
திருடினவன்பரந்தமுகங் கருப்பனாகும்
வாடையிலேதெற்குதிசை போயிருக்கு
மவன்முகத்தில்தழும்பிருக்கு மறிந்துகொள்ளே.

விபரம்.

ஞாயிற்றுக்கிழமையதினம் களவுபோனது எந்தப்பொருளாயிருந்தபோதிலும் எடுத்தவர்கள் ஆண்பிள்ளை நிறத்தில்கருப்பன் பரந்தமுகமாயிருப்பான் முகத்தில் தழும்பிருக்கும் தெற்குத்திசை கொண்டுபோயிருப்பான். (உ)

அறிந்துக்கொள்ளவும்—இந்தநூல் இதுவரையிலும் எட்டுப்பிரதியில் இருந்தமையால் மறைப்பாக வைத்துக்கொண்டு வெகுபேர் சீவனஞ் செய்துவந்தார்கள்.

அறிந்திடுவாய்திங்களென்ற கிழமைதன்னில்
அகத்துடையபொருள்துதான் காணுவிட்டால்
பிரிந்தபொருள்பெண்ணெடுத்து மறைத்தாளப்பா
பெரும்பாடியாயிருப்பாள் காதுநீட்டம்
சுருண்டமயிருயிருக்கும் கூந்தலப்பா
சொல்லுவளோவலங்கார மாகச்சொல்வாள்
தெரிந்துகொள்உள்வீட்டு மனிதராகும்
திருடினதுமுயரத்தி லிருக்கும்பாரே.

உயரமென்றாலாகாய மல்லகண்டாய்
ஓடுமுதல்பரணியந்த வலசற்குள்ளே
அயந்தபொருளுன்வீட்டு தென்கிழக்கில்
அகப்பட்டுயிருக்குதடா வறிந்துபாரு
வியர்த்தமாய்ப்போகாது முன்னோர்வாக்கு
வெகுசூட்சபுத்தியுனக் கிருக்கவேணுங்
கயர்போட்டுச்சொல்லுவார் சிலதுநூலோர்
கருவென்றுமையென்றுங் கலங்கிடாதே.

விபரம்.

திங்கட்கிழமையில் களவுபோனபொருளை வஞ்சித்தவர் வீட்டுமனிதர் பெண்ணாய்ப்பிறந்தவள் அவள் கூந்தல் சுருண்டரோமமாயிருக்கும் காது கொஞ்சம் நீண்டிருக்கும் பெரும்பாடியாயிருப்பாள் நடுத்திரங்கருப்பு அவள் பேசுகையில் அழகாயிருக்கும் களவுபோனவஸ்து வீட்டுக்கு வுயரவிருக்கும் அதாவது ஓடு அல்லது பரணிவலச்சல் முதலான யிடங்களிலிருக்கும் அந்தவீட்டுக்குள் தென்கிழக்குமூலையில் தேடவும் இந்தநூலை வைத்துக்கொண்டு தான் அஞ்சனம்போடுகிறேனென்றும் மைபோடுகிறேனென்றும் சிலபேர்பிழைத்தார்கள். ()

செவ்வாய்க்கிழமை களவுபோனபொருளுக்குப் பலன்.

கலங்காதே செவ்வாயிற் களவேபோனல்
கண்டெடுத்தமனிதரவ ராணேயாகும்
பலன்கேளு நடுத்தரமாம் வர்னமுள்ளான்
பாவியவன் முகத்திலொரு தழும்புமுண்டு
விலங்கதுபோல் திரேகமது நீண்டிருக்கும்
விட்டபொருள் கட்டிலிலே யொளித்துவைத்தான்
நலங்காமல் வடமேற்கு யிடத்திற்றனே
நம்மதென்ற பொருளிருக்கும் நம்பிப்பாரே.

விபரம்.

செவ்வாய்க்கிழமை களவுபோன பொருளையெடுத்தவன் ஆண்பிள்ளை நடுத்திரமான நிறமுள்ளவன் திரண்டசரீரமுள்ளவன் அவன் முகத்தில் தழும்புண்டு களவுசெய்தபொருளைக் கட்டிலில் ஒளித்துவைத்திருக்கிறன் வடமேற்கு இடத்தில் பார்க்கவும். (௪)

புதன்கிழமை களவுபோன பொருளுக்குப் பலன.

பாரப்பாபுதன்கிழமை களவுசெய்தோன்
பார்வைக்குமஞ்சள்நிற மாயிருப்பான்
கூறப்பாவழகுள்ள புருடனென்றே
குடிமிவெகுகுறுகலடா வஞ்சாதீரன்
தேரப்பாதன்னகமாம் வீட்டுக்குள்ளே
தென்மேற்குமூலையிலே தேடச்சொல்லு
சீரப்பாஇன்னூலைக் கண்டபேர்கள்
செப்புவார்குறியென்றும் வசியமென்றே.

புதன்கிழமையில் களவுபோன வுடமையை யெடுத்தவன் ஆண்பிள்ளை மஞ்சள் நிறமாயிருப்பான் அதாவது அதிகசிகப்பன் அழகுள்ளபுருஷனுயிருப்பான் குருகினமயிருள்ளவன் தென்மேற்கு மூலையில் தேடவும் கிடைக்கும். (௫)

வியாழக்கிழமையில் களவுபோன பொருளுக்குப்பலன்.

வசியமென்றகுருவாரங் களவேபோனல்
வஞ்சித்தோனுங்களிட பந்துவாகும்
அசைத்தபொருளசேதமே யாகாதப்பா
அகப்படவோநாள்செல்லும் அடையாளங்கேள்

நசையென்றமுகமதுதான் பரந்திருக்கும்
தலையிலேநெடுக்கவொரு குறிப்புப்பாரு
விசையானயின்னூலை மறைவாய்வைத்து
வெகுபேர்கள்பிழைத்தமொழி வெளியிட்டேனே.

விபரம்.

வியாழக்கிழமையில் களவுபோனவுடமை யெடுத்தவன் ஆண்பிள்ளை பொருட்காரருடைய பந்துவு அதாவது யினத்தான் பரந்தமுகந் தான் அவன்தலையில் நெடுக்க ஓர் அடையாளமுண்டு அகப்பட நாள் செல்லும். (௬)

வெள்ளிக்கிழமையில் களவுபோன பொருளுக்குபலன்.

வெள்ளியிலேசென்றபொருள் உளவைக்கேளு
வாலீபக்காரியடா யெடுத்தமாது
விள்ளவேமஞ்சள்நிற மாயிருப்பாள்
வயற்றிலொருஅடையாள மிருக்கும்பாரு
கள்ளவேபிரத்தியட்ச மானதிட்டில்
கன்னியவள்குந்திருப்பாள் கண்டுகொள்ளு
தெள்ளவேதென்மேற்கு மூலைதன்னில்
தேடவேயின்னூலால் தெரிந்துகொள்ளே.

விபரம்.

வெள்ளிக்கிழமையில் களவுபோன பொருளை யெடுத்தவள் வாலீபக்காரி மஞ்சள்நிறமாயிருப்பாள் அவள்வயிற்றில் ஓர்அடையாளமுண்டு அவள் பிரத்தியட்சமான தீட்டமாய் குந்தியிருப்பாள் தென்மேற்கு மூலையில் சொல்லவும். (எ)

சனிக்கிழமையில் களவுபோன பொருளுக்குப் பலன்.

சனிக்கிழமைகளவான பொருளின்மார்க்கம்
சாற்றுகிறேன்குறிகள்முதல குணத்தைக்கேளு
கனிவானவுன்னுடைய பந்துதானே
கண்டெடுத்தான் கொடுக்கநாளதிகமாகும்
வினையாலேகால்கோண லாய்நடப்பான்
வெட்டுபோல்தலையிலொரு குறிப்புமுண்டு
பனைபோலேபெரும்பாடி யாயிருப்பான்
பயந்துதானேகொடுப்பான் பார்த்துகேளே.

விபரம்.

சனிக்கிழமையில் களவுசெய்தவன் சொந்தபந்து பெரும்பாடியாயிருப்பான் கால்கள் கொஞ்சம் கோணலாய் நடப்பான் தலையில் ஓர் அடையாளமுண்டு அகப்பட நாளாகும் ஆனாலும் பயந்து கொடுத்துவிடுவான் கேழ்க்கவும். (அ)

வாரபலன்-முற்றிற்று.

---





சிவராமஜெயம்

# பன்னிரண்டு லக்கினத்திற்குப்பலன்



விருத்தம்

பொருள்தனைபரிகொடுத்து மனதுநொந்து
போக்கிடங்கள்தெரியாமல் புத்திமாரி
அரிவாளிஜோசியனே யையாவென்று
ஆவலொடுவுன்னைவந்து கேழ்ப்பாராகில்
பிரியமவர்கேட்குமப்போது மைந்தா
பேசுகிறலக்கினத்தைப் பார்த்துக்கொள்ளு
திரமானமேஷமது நின்றுதானால்
திருடினவன் பிராமணனு மென்றுசொல்லே.

(இ-ள்) எந்தவாரத்தில் களவுபோனாலும் ஜோசியனைவந்துகேழ்க்கும்போது மேஷலக்கினமானால் பிராமணனெடுத்தானென்று சொல்லவும் அல்லது லக்கினம்பார்க்கத் தங்களுக்கேதெரிந்தால் களவுபோய் எத்தனைநாளானபோதிலும் தேடிக்காணாமல் களவுபோச்சுதென்று மனதில் திடப்பட்டபொழுது லக்கினத்தைப்பார்த்து யெந்த லக்கினம் நிற்கிறதோ அதைக்கொண்டு யின்னாரென்றுதெரிந்துக்கொள்ளவும்.

சொல்லையிலேரிஷபமது நின்றுதானால்
க்ஷத்திரியனென்றலவோ பேசவேணும்
வல்லையிலேலக்கினமது மிதுனமானால்
வைசியனால்களவென்று வரையலாமே
தொல்லையிலேகடகமது தோன்றினக்கால்
துலைந்தபொருள்சூத்திரனு மென்றுசொல்லு
பல்லையிலேசிங்கமது நின்றுதானால்
பந்துவிடகைதனிலே பட்டுப்போச்சே.

(இ-ள்) கேழ்க்கும்போது ரிஷபலக்கினமானால் க்ஷத்திரியன் மிதுனலக்கினமானால் வைசியன் கடகலக்கினமானால் சூத்திரன் சிங்கலக்கினமானால் தன்பந்துக்களில் போயிருக்கிறதென்று அறியவும்.

கன்னியென்றலக்கினத்தில் காணுவிட்டால்
களவானபொருள்தனைப் பெண்ணெடுத்தாள்
தன்னுடையபெண்சாதி யெடுத்திருந்தால்
தங்குமடா துலாமென்ற லக்கினம்வந்து
பன்னடாவிருச்சிகமே வந்துதானல்
பரதேசத்தானென்று பகரலாமே
என்சொல்வேன்தனுசென்ற லக்கினமானல்
எங்கையோவைத்தவனே மலந்திட்டானே.

(இ-ள்) கன்னியாலக்கினமானல் ஸ்ரீயெடுத்தாள் துலாலக்கினமானல் தன்பெண்சாதி யெடுத்திருக்கிறள் விருச்சிகலக்கினமானல் அன்னியதேசத்தானல் போய்விட்டது தனுசுயென்ற லக்கினமானல் கைமறதியாகவைத்து மறந்துவிட்டான்.

மகரமென்றலக்கினத்தில் காணுவிட்டால்
மனையிலேவுள்ளறிந்த தோழரப்பா
திரமானகும்பமதில் காணுவிட்டால்
தாய்வமிசத்தாரெடுத்து மறைத்தாரப்பா
கனையறிந்தமீனத்தில் காணுவிட்டால்
கண்மணியேஉன்னுடைய பிள்ளையாகும்
விபரமாய்ப்பலரறிய வேணுமென்று
விளம்பினேன்சிறுமணவூர் முனிசாமித்தான்
குறையறைகள்சேர்ந்தாலும் பொருப்பீரென்று
கோடியாய்வர்தனங்கள் கூறினேனே.

களவுபோனஉட்மை யிருக்கிறதிற்கு.

மேஷமானல் பர்வதத்தில், ரிஷபமானல் ஊரில், மிதுனமானல் அக்கினிதிசை, கடகமானல் வடக்கே, சிங்கமானல் தெற்கே, கன்னியானல் நிருதி, துலாமானல் வீட்டிற்குப்பின், விருச்சிகமானல் மேற்கே, தனுசானல் கிழக்கே, மகரமானல் வாயு, கும்பமானல் ஈசான்யம் மீனமானல் சலத்தில் என்றறியவும்.

மகரலக்கினமானல் உள்ளறிந்த சினேகிதன் கும்பமானல் தாய்வம்சத்தார் எடுத்தார்கள் மீனமானல் தன்னுடைய பிள்ளையே யெடுத்தானென்றறியவும்.

களவுநூல் சாஸ்திரம்

முற்றிற்று.

---

உ

சிவராமஜெயம்.

# அவுஷதவிளம்பரம்.

(*)

பல்அசைவு, கடுந்தல், குத்தல், இரத்தம் முதலானஎல்லாவித பல்நோவுக்கு(வச்சிரதந்தப்பொடி) 1-டப்பி விலை அணா-4-

இடுப்பு, அரை, துடை, சந்து, கழுத்து, மார்பு, இதுகளில் உண்டாகும் மேகப்படை, காரிகப்படை இதுகட்கு (சண்முகத்தைலம்) விலை அணா, 0 12 0

பக்கவாய்வு-பெருவயரு-வெள்ளை-இருமல் இதுகட்கு(அக்கினிகுமாரச்சூரணம்) விலை. 1 0 0

தலைமயிர்கள் கருப்பாயும் நெருக்கமாயும் வளரும் தலைசுண்டுகள் நீங்கும் மயிர்வளரும்தையிலம் விலை 1 0 0

கண்ணெரிச்சல்-கண்புகைச்சல் கண்ணில் நீர்வடிதல் பித்தமயக்கம் கபாலச்சூடு முதலானதற்கு (வில்வாதித்தைலம்) 1 8 0

மேகவெள்ளை கொருக்கு பிடிப்பு சகலத்திற்கு (தேவசஞ்சீவிஎண்ணெ)விலை ரூபா- 2 0 0

முறைக்காச்சல் முதலான எல்லாசுரத்திற்கு (தசாவதாரக்குளிகை) விலை 0 12 0

சாதாரணஇருமல். கோழைஇருமல், சத்தியிருமல், புகையிருமல், நெஞ்சு கொரு கொருப்பு முதலானதற்கும் (இராமபாணச்சூரணம்) விலை ரூபா 1 0 0

தாம்பூலத்துடன்ஒருமாத்திரை தின்றுவர வாதபித்தசிலேட்டுமம், ஜலுப்பு, சீதளம், தலைபாரம் தீரும் முகவசீகரமுண்டு, 60-மாத்திரையடங்கிய (தாம்பூலக்குளிகை)விலைரூபா 1 0 0

லேகியம் சூரணம் 20-நாள் சாப்பிட்டுவந்தால் இந்திரியத்தைக்கெட்டிப்படுத்தி நல்லபலத்தையுண்டு பண்ணும் புணர்ச்சியாரம்பத்தில் தானேகலிதமாகாமல் நீடித்திருக்குய் (லேகியம் சூரணம்) டப்பி 2-க்கு விலை ரூபா 2 0 0

சூதகம் வர எட்டு நாளைக்கு முன பேதிக்கு சாப்பிட்டு மறுநாள் முதல்காலை மாலை, இரண்டுவேளையும் ஒவ்வொருமாத்திரை சாப்பிட்டுகொஞ்சம் வென்னீர் குடிக்க வேண்டும். நின்றிருக்கிர சூதகத்தையும், கிரமந்தப்பி வருகிற சூதகத்தையும் கிரமப்படுத்தி அதினா லுண்டாகும்கடுரமானவயிற்றுநோய், கிரமந்தப்பிவரும்தலைவலிமுதலிய துர்க்குணங்களை நிவர்த்திசெய்யும் சூதகபந்தமாத்திரை விலை ரூபா 1 0 0

சிறுமணவூர்-முனிசாமிமுதலியார்
சிவகாமிவிலாச அச்சுக்கூடம்
பெரம்பூர்போஸ்டு மதராஸ்.

உ

கடவுள் துணை.

கள்ளுகடைசிந்து யென்னும்

# குடியர்சிந்து.



இவைசெஞ்சி,
ஏகாம்பரமுதலியாரவர்களால்
இயற்றப்பட்டதை,

பூ. சு. குப்புசாமிமுதலியாரது
ஸ்ரீசுந்தரவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

சென்னை - புரசை:
1906.



உ

கடவுள் துணை.

# கள்ளுகடைசிந்து.



விருத்தம்.

நம்பினோனிருந்தகள்ளே நாடியையறிந்தகள்ளே
தம்பியுந்தகப்பன்பாட்டன் தலம்பரைக்கண்டகள்ளே
வம்புநீசெய்தாய்கள்ளே வருவையோசொல்வாய்கள்ளே
சொம்புபோல்குடுவைகள்ளே சோறுபோல்கொதிக்குங்கள்ளே
தங்கம்போலானகள்ளே தைரியங்கொடுக்குங்கள்ளே
எங்களைவளர்க்குங்கள்ளே யெங்கேபோய்யொளித்தாய்கள்ளே
சிங்கம்போலானகள்ளே ஜெயிலுக்குஅனுப்புங்கள்ளே
பொங்கியேவழியுங்கள்ளே புறப்பட்டுவருவாய்கள்ளே.

ஆனந்தக்களிப்பு.

ஜாடியேஉனக்கொருகும்பிடு அந்தசாராயங்குடித்தாக்கால்பேதியெடுக்குது புட்டியேயுனக்கொருகும்பிடுஅந்த பீரைக்குடித்தாக்கால்சோரைக்கெடுக்குது கள்ளேஉனக்கொரு கும்பிடு அந்த கஞ்சாவடித்தாக்கால் நெஞ்சைவுலர்த்துது மரமேஉனக்கொருகும்பிடு அந்த மதத்தையிழுத்தாக்கால் பலத்தைக் குரைக்குது எப்போவருவாயோகள்ளே உனக்கிதுஞாயமல்லாநீ யெழுந்துவாகள்ளே

இ-ம்நாதநாமக்கிரியை-ஆதிதாளம்

பல்லவி.

வந்துதேகள்ளு ஈஸ்வரனைப்போல வந்துதேகள்ளு.

அநுபல்லவி.

வந்துதுபார்கள்ளு வாகனங்கருவாடு
நொந்துயிருந்தபேரை நெட்டித்தள்ளிக்கொண்டு வந்து

சரணங்கள்.

ஆதிவிலைகளெல்லாம் அடிமாண்டுபோச்சுது
அஞ்சணு-ஆரணு படியொன்றுஆச்சுது
சோதியதன்சுருக்கம் சூரியனுக்குமேது
சுள்ளைகடித்துக்கொண்டு உள்ளுக்கு கள்விட்டால்
யெழும்புதேபோதை தலைக்குமேல்கைதூக்கி
கடிக்குதேபல்லை

ஆரணுபோனாலும் ஆட்டின்மயிரேபோச்சி
அ.துகுடுக்கும்போதை காட்டுப்புலியும்சீச்சி
பாரில்பட்டையும்பத்தாய். குழந்தைகுடிக்கும்பாச்சி
பாட்டாகள்ளுஒருமூச்சி பாணந்தடுத்துபோச்சி-வந்
ரகுபதிகடைக்கள்ளு ராவெல்லாம்குடையுது
ரவுண்டுடாணுக்கள்ளு கிருக்குகள்வாங்குது
பரைச்சேரிகடைக்கள்ளு பாடுது ஆடுது
பாழுஞ்சுடுகாட்டுக்கள்ளு தலைக்கிழாய்துள்ளுது
இதுவென்னகள்ளு பலவைதொட்டிக்கள்ளு
ஒழுவுதே சொள்ளு
பெண்சாதியெதிர்த்தாக்கால் பணிச்சென்றுமாட்டுது
பிள்ளைநயினவென்றால் சொள்ளையிலடிக்குது
தன்பேச்சிப்போல்வந்தால் தட்டிக்கொடுக்குது
தடுத்துச்சொன்னால்பல்லை கடித்துமுடுக்குது
எடுக்குதேக்கிருக்கு நாலுபேர்பிடித்தாலும்
யிழுக்குதே முறப்பு.

குடியர்-அலங்காரம்-வெண்பா.

காலைக்குடியரெல்லாம் கவைக்குதவார்கள்குடிப்பார்
வேலைக்குப்போகார் வெரியனைப்போலலைவார்
சிலர்வறுமைவந்தபோது வேலைக்கும்போவார்
தருமமோகுடியருக்குத்தான்.

புரு- முக்கிமுக்கிகஷ்டப்பட்டுகேளடி பெண்ணே
மூணுபணங்கொண்டுவந்தேன்பாரடி கண்ணே
பக்குவமாய்செலவுபண்ணடி பெண்ணே
பாட்டாக்கள்ளுக்கொருபணந்தாக்கடி கண்ணே
பெ- கள்ளைமறந்திடடாகுடிகாரப் பாவி
காலையில்குடியாதடாசதிகாரப் பாவி
பிள்ளைகுட்டிபெத்தாயோடாசண்டாள பாவி
யின்னம்புத்திவல்லையோடாகுடிகாரப் பாவி
புரு- சேனைநாள்பழக்கமடிமுட்டாளு பெண்ணே
ஜென்மத்திலேவூரிப்போச்சேகெட்டண்டி கண்ணே
நானுமட்டுங்குடித்தேனென்றுயெண்ணாதே பெண்ணே
நாலுமூணுதலம்பரைபாய்நடக்குது கண்ணே
பெ- குடிக்கேனென்றசத்தியங்கள்பண்ணையே பாவி
குடல்பழுத்துதென்றுகதைசொன்னையே பாவி
ஜாதிகள்ளுஉன்குலக்குப்போதாதே பாவி
சாப்பிட்டாலும்வீண்சண்டைகள்செய்யாதே பாவி
புரு- மனவருத்தப்படுவதாலேகேளடி பெண்ணே
மாஜினமாகினும்தின்னுவாரண்டி கண்ணே

துணதுமெண்ணுமேபசாதடிமூட்டாளு பெண்ணே
துட்டுகூடகுறைந்துபோச்சிதூக்குது கண்ணே

பெ- பணம்போனாலும்போகுதையாயெந்தன் கணவா
பங்கியுண்டைபழக்கவேண்டாம்யெந்தன் கணவா
குணத்தின்படியேநடப்பேனையாயெந்தன் கணவா
கும்மாமட்டும்கொடுக்கவேண்டாம்யெந்தன் கணவா

புரு- கும்மாமட்டும்கொடுப்பதில்லைகேளடி பெண்ணே
குடிக்கமட்டும்ஒத்தைபணந்தாக்கடி கண்ணே
சும்மாசும்மாசொன்னேனென்றுயெண்ணாதே பெண்ணே
சோத்துப்பானையெகிரிப்பூடுந்தவறினல் கண்ணே

பெ- சோத்துப்பானையெகிரிபோனல்கேளடா பாவி
உன்சூத்துதாண்டாகாஞ்சிப்போகும்குடிகார பாவி
நேத்துசொன்னசத்தியத்தைமறந்தாயே பாவி
நெஞ்சிமட்டும்நெட்டிவிட்டுவந்தாயே பாவி

புரு- குடியருக்குசத்தியங்களேதடி பெண்ணே
கூச்சலிங்கேபோடவேண்டாம்கேளடி கண்ணே
படியடித்துபோதைகொஞ்சம்காணண்டி பெண்ணே
பணமிருந்தால்பட்டைகுடித்துவருவண்டி கண்ணே

பெ- பட்டைமூஞ்சில்லயிடிவிழுககுடிகார பாவி
பாட்டாவுடன்பட்டைசேர்ந்தால்மோசண்டா பாவி
கஷ்டப்பட்டுபணத்தைவீணய்அழிக்காதே பாவி
காலங்கருப்பானதினல்சொன்னேண்டா பாவி

புரு- பணம்போனலும்சட்டம்போச்சிகேளடி பெண்ணே
பாட்டாயடித்தால்கையுங்காலுமுறைக்குது பெண்ணே
கணக்குபார்த்துகுடிக்காவிட்டால்கேளடி பெண்ணே
காலணகையில்கூடக்கிட்டாது பெண்ணே

பெ- ஓயாகுடிகுடியாதடாசண்டாளப் பாவி
உத்தியோகத்தில்மண்ணுவிழும்குடிகாரப் பாவி
ஏழைவயரெறியயெறியசதிகாரப் பாவி
எப்படியும்நாசமாவாய்குடிகாரப் பாவி

புரு- உத்தியோகம்போனலென்தன்சட்டம் போச்சடி
ஊருடமையில்லாவிட்டால்வெறியு மேதடி
எத்தனைபேர்யேமாளிகள்வூரில் பாரடி
எவனகிலுங்கொடுத்துபோறன்உனக்கு யென்னடி

பெ- பஞ்சைபோலேகற்றகல்விபடிக்காதே பாவி
பாரினுள்ளோரெல்லாம்வுன்போல்குடித்தாரோ பாவி
செஞ்சியேகாம்பரம்கவியைக்கேளடா பாவி
சுகப்படுவாய்புவிமீதில்குடிக்காதே பாவி

## விருத்தம்.

பெருமானேதரிசனமே சொல்லக்கேளாய்
பேருனபச்சைமுளகா யுப்புங்கூட்டி
கரடானநாக்கின் நுனி நடுவில்வைத்து
கள்ளதனைப்படியிலூற்றி நுரையைத்தள்ளி
அரகராவென்றுவுள்ளே செலுத்திவிட்டால்
ஆதிசிவனயன்மாலு மெதிரேநிற்பார்
பிரியமாய்மதுசெய்யு மருத்துவத்தை
பரிட்சித்துக்கொண்டவற்கு மோட்சந்தானே.

நாதநாமக்கிரியை-பல்லவி.

சாதுகளைக்கெடுக்குதையா பாழுங்கள்ளுயிது

அநுபல்லவி.

சாதுகளைக்கெடுக்குது சாப்பிட்டால்வெரிக்குது
பாதைபடுத்துது பவுஷைக்கெடுக்குது-சாது

சரணங்கள்.

பிரியமாயழைக்குதையா பாழுங்கள்ளுயிது
படிவாங்கிநெட்டுதையா பாழுங்கள்ளுயிது
பிரியமாயழைக்குது படிவாங்கிநெட்டுது
வெரிகொடுத்தாதிட்டுது வெளியேநெட்டிதள்ளுது சாது

கண்டவரைகூட்டுதையா யிந்தகள்ளு
கடன்வாங்கசெய்யுதையா யிந்தகள்ளு
கண்டவரைகூட்டுது கடைகடைக்குவோடுது
சண்டையைவலிக்குது தெண்டங்கொடுக்குது சாது

காலையிலழைக்குதையா தலைநோவுகள்ளு
காப்புகட்டிதிரிகுதையா தலைநோவுகள்ளு
காலையிலழைக்குது கடையில்குந்தவைக்குது
வேலையைகெடுக்குது வீண்சண்டைபோடுது சாது

காசிருந்தாலழைக்குதையா பாழுங்கள்ளுயிது
கடன்கேட்டால்முறைக்குதையா பாழுங்கள்ளுயிது
காசிருந்தாலழைக்குது கடன்கேட்டால் முறைக்குது
மோசப்படுத்துது மூலையிலேவொரங்குது சாது

ஓரக்கங்கொடுக்குதையா கள்ளுயில்லாவிட்டால்
உட்கார்ந்துறங்குதையா அதுஊமையைப்போல்

ஒரக்கங்கொடுக்குது ஒருபடிமுறைக்குது
வெரிபெடுத்தால்யெரையுது வேதம்படிக்குது சாது

வஞ்சனையாய்சொல்லவில்லை யிந்தகள்ளைநான்
வழக்கத்தைசொன்னேனையா யிந்தமதுவைநான்

வஞ்சனையாய்யிதைவிட்டு வழிபடுவாய்புவிமீது
செஞ்சியேகாம்பரங்கவியை சித்தத்திலேநிதம்பாடு சாது

வேறுமெட்டு.

ஒகநெலகாபடினபாடு ஆரந்தா அடிகிசூடுஜாடியே கள்ளுஜாடியே பீருபுட்டிசெய்தமோசம் பீப்பாதண்ணியைக்கேட்டுபாருஜாடியே கள்ளுஜாடியே, போசேடப்புடுசுருக்கெண்டாதி போயினவத லகுளமிலேதுபுட்டியே கள்ளுபுட்டியே, கள்ளுவொச்சினமாட்டவினிகாலிவானுபயப்படுந்தி காவடி கள்ளுகாவடி, இத்தனைநாள் பட்டபாடு யாரைக்கேட்டால் தெரியப்போகுது குடுவையே கள்ளுகுடுவையே, சிறுமணவூர்முனிசாமி செப்பிசெப்பி நவ்வினுடு மொந்தையே கள்ளுமொந்தையே.

நாதநாமக்கிரியை-பல்லவி.

கரமாயிபோச்சி புகையிலையப்பியாசத்தை
கற்றவர்பேச்சு.

அநுபல்லவி.

வரியுமதிகமாச்சி வாடுங்குடிகள்பேச்சி
பிரியமாய்சுருட்டு பொடியுங்கருப்பாச்சி-கர

சரணங்கள்.

கடனென்றுபொடிகேட்டால் காதைமுடுக்குது
கட்டும்பொடியானாலும் துட்டுக்குவொயர்ந்தது
பட்டணத்தில்புகையிலைப்பேச்சி பாழாயிபோச்சுது
பந்தர்புகையிலைப்பேச்சி யந்திரம்பரக்குது
துட்டுக்கொருகரண்டி சிட்டிக்கைபொடியாச்சி
தொல்லையாம்புகையிலைக்கு பல்லோர்பரக்கலாச்சி
மட்டிபுகையிலைநேசங் கற்றதேபகையாச்சி
மறந்துவிடுவோமென்றால் மனமுங்கலங்கலாச்சி

புகையிலையின்பேச்சி காலணாகொடுத்தாலும்
ஒருயிலையாச்சி இப்போ

கள்ளுகடைசுருட்டும் கடையாய்பறந்துபோச்சி
காம்புக்கும்விலைமிஞ்சி கருப்பாய்பரக்கலாச்சி
தள்ளிவைத்தபுகையிலை தங்கம்குவிக்கலாச்சி
தம்படிக்கும்ஒரு சுருட்டும்சின்னதாச்சி
ஓயாமல்சுருட்டு பிடிப்போர்ஒறங்கலாச்சி
உதவாதகோர்வையும் பதமாய்ஒத்துப்போச்சி

வாயிலடக்குவோர்க்கு வயறும்பெரிந்துபோச்சி
வாட்டமாய்பத்தடம் பார்த்தவர்கள்பேச்சி
கருவலாய்ப்போச்சி கெஞ்சாயிழுப்போர்கள்
கலங்கிடலாச்சி

ஆமூர்புகலேபேச்சி அதிகாரம்பெரிதாச்சி
அதற்குமுன்கோர்வை பயந்துயெகரலாச்சி
ஊத்தங்கரைபுகலே பார்த்ததேவிலையாச்சி
உள்ளூர்புகலேயெல்லாம் நல்லவிலையுமாச்சி
பந்தரின்புகலே சொன்னதுசொன்னவிலே
துள்ளுதேமேலே

அஞ்சாமல்புகலேக்கு அதிகாரம்பெரிதாச்சி
அவனியிலதுசேஷ்டை அடக்கினல்சுகமாச்சி
செஞ்சியேகாம்பரங் கவியாலெழுதலாச்சி
சீமையிலுள்ளோர்கள் பார்த்துமகிழலாச்சி-கர

ஆனந்தக்களிப்பு.

பரிபூரணனந்தபோதம் னேற்று
பகலெல்லாம்மழைபெய்து சுவரெல்லாவோதம் பரி

சாருயப்புட்டியைநம்பு அதை
சாப்பிட்டால்கொடுக்குதே அளவற்றதெம்பு
கைபிக்கிசெலவில்லைகொம்பு யாரை
கண்டதேகுத்திஞல் கயளுதேகெம்பு பரி

பெற்றதாய்சொல்லேக்கேளாதே உந்தன்
பெண்டாட்டிபிள்ளேக்கி கஞ்சிவார்க்காதே
உற்றூரைஊரில்சேர்க்காதே உந்தன்
ஆயுசுக்குமொருகாசு தருமஞ்செய்யாதே பரி

பெற்றதாயாரை தடிகொண்டுமொட்டு
பெற்றதகப்பனேயும்பாட்டனேயும் வீட்டைவிட்டோட்டு
உற்றூரைவுறவாரைமாட்டு இந்த
ஊரிலுள்ளோர்மேலே கட்சியுங்கட்டு

தருமஞ்செய்யாதிருமனமே நாளே
கருமத்தைசெய்தாலே கடைத்தேறலாமே.

முற்றிற்று.





உ

கடவுள்துணை.

## வேலன்பட்டை சாராயவேடிக்கை வெண்பா.

பட்டைசாராயமதைப் பலகாலும்பரிட்சித்து
முட்டமுட்டயுண்டுமெய் மறந்தோர்க்கு - கட்டாகக்
காலேகுடியாவிட்டால் கைகாலுமேநடுக்கும்
வேலையெலாங்கெடுக்கும் பட்டைவெறி.

### சி ந் து.

காசிவலிக்குதையா பாழும்பட்டையிது
காத்தாபரக்குதையா பாழும்பட்டை
காசிவலிக்குது கடன்கேட்டால்முறைக்குது
மூச்சுவிடுமுன்னமே முக்காலளக்குது
நிண்ணால்நுரைக்குதையா பாழும்பட்டையிது
நெருப்பாயளக்குதையா பாழும்பட்டை
நிண்ணால்நுரைக்குது நெருப்பாயளக்குது
தண்ணியைப்போல்மாளுது தங்கம்குவிக்குது
குடித்தால்குமட்டுதையா யிந்தபட்டையென்
குடலைமுருக்குதையா பாழும்பட்டை
குடித்தால்குமட்டுது யென்குடலைமுருக்குது
படுத்தயிடத்திலே பாயோடழுத்துது
அஞ்சாமலுண்டுவிட்டா விந்தபட்டை
அவதிபடுத்துதையா பாழும்பட்டை
செஞ்சியேகாம்பரஞ் சொல்கவிபோலச்
செரியாயிருக்குதையா பாழும்பட்டை.

ஸ்ரீ

ராமஜெயம்.

---

சித்திரகுளாவென்னும் பெண்ணின்

# கெடையாட்டம்.




இஃது,

சிறுமணவூர்

## முனிசாமி முதலியாரால்

இயற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1908.



உ

கடவுள் துணை.

கெடைமீதில்நடிக்கும்

# சர்க்கஸ்வித்தை.



இராகம்-தங்கப்பண்.

வடக்கேவெகுதூரம் வளப்பமுள்ளதேசமது - பிரான்பூருக் கடுத்த பிசகிலாஅட்டகிடா- என்றுமிகப்பேர்கொண்ட இணையில் லாவூரினிலேதங்கிவசித்திருக்கும் தாஷ்டீகமானவர்கள்- மாதாபி தாக்கள்மகாவித்தைக்கற்றவர்கள்-அவ்விருவர்தங்களுக்கு அமை ந்திடும்மைந்தர்களில் - பெரியதொருபெண்ணுக்கு பெயர்சித்திர குளாவென்றும்-சின்னதொருபெண்ணுக்கு சிறப்பானகன்னுவெ ன்றும்- நற்பெயர்தானமைத்து நலமுள்ளவித்தைகளாம்- கெடை யின்மேலாடுவித்தை கீழ்கரணம்போடும்வித்தை-அந்தர்பலடிகளு ம் அனுமந்தபாச்சல்களும்-விச்சுளிபாச்சல்களும் விசித்திரவிநோ தங்களும்-சொல்லிமுடியாத சொகுசானவித்தைகளும்-அற்புதவித் தைகளும் அருமையாய்க்கற்பித்து-சமஸ்தானங்கள்தனிலே தாட் டியாய்மிகவாடி.- பரிசுகள்தான்வாங்கி பண்புடனிருக்கையிலே- கோர்ட்டுவழக்காகக் குணமாகவிப்பொழுது- புத்திரர்புத்திரிகள் புகலும்மனைவியுடன்- வளப்பமுள்ள கடையுடன் வகையாய்ப்பிர யாணப்பட்டு-பேர்பெற்றசென்னைநகர்பிசகிலாலயிட்டவுசு-சமுத்தி ரகரையோரம்சார்ந்ததோர்மைதானத்தில்-வந்துயிறங்கியவர்-வள ம்பெரியதகரக்கடை-புண்ணியவான்கள் புகலும்ஏகப்பநாய்க்கர்- இருவர்களுதவியினுல் இன்பமுடன்கோட்டைதனில்- பாசுகளும் தான்வாங்கி பண்பாய்மைதானத்தில்

## பெண்ணின் அலங்காரம்.

இராகம் - தங்கப்பண்.

தங்கியிருந்தவர்கள் தனிமையாயப்பொழுது ஆட்டங்களாடு தற்கு அணைவருமெழுந்திருக்க சிறப்புதனைவகித்த சீரானசித்திரா ளா சீவிசினுக்கருத்து சிமிள்போலே கொண்டையிட்டு கொண் டைக்கு யேத்ததொரு குணமுள்ளபூவுகளாம்மல்லிகைமுல்லைகளை வயங்கவேதான்முடித்து நெற்றியிற்றிலதமதை நேராகத்தான்தரி

த்து மூக்குத்திசிந்தாக்கு முகமழகாய்புல்லாக்கு கையில்கரிவளை யல் கலகலெனத்தானசைய பட்டுரவிக்கைதனை பாங்காகவேயுடுத்தி அரையினில்சல்லடம் அழகாகத்தான்போட்டு அதன்பேரில் கச்சைதனை அடைவாயிறுக்கிக்கட்டி மாராப்புசீலைதனை வலுவாயிழுத்துடுத்தி பயல்மான்குட்டியைப்போல் படபடெனத்தானடந்து தங்கைதமயனுடன் தம்பிமார்தன்னுடனும் மாதாபிதாவினுடன் மைதானந்தன்னில்வந்து,

கெடைதனக்கு முன்பாகவே-கடவுளை
கிருபையுடன் தோத்தரிப்பாள்

இந்திராதிதேவர்களை யிருதயத்தில்தானினைந்து மந்திரவுச்சாடனம் மனதினில்தியானித்து தந்திரக்கயிறுதனை தன்கையால் தான்பிடித்து காலின்பெருவிரலால் கயிற்றில்மிகவூணி எட்டிநடந்ததுபோல் இயல்பாகத்தானேரி ஒட்டிமிகத்தொங்கும் - உகமையுள்ளபாணுவை எட்டியேதான்பிடித்து இருகாலால்தாங்கியிதோ

அந்தரமாய்நிற்கிருள்பார்-இந்த
அதிசயத்தைப்பார்த்திடுங்கள்

---

இராகம் - நாதனுமக்கிரியை - ஆதிதாளம்.

மந்திரம் பாரீர் கெடையாடும்அதிசயத்
தந்திரங்கேளீர்

அநுபல்லவி.

மந்திரம்பாரிந்த மானிடஜெனனத்தில்
பெண்ணாப்பிறந்தவள் பெரியகெடையிலாடும் (மந்தி)

சரணங்கள்.

அறுபத்துநாலடி ஆனவுயர்கெடை
அந்திரமாய்நட்டு தந்திரக்கயர்தொட்டு
சறுவும் சற்பம்சாறை போலேகயரைதொத்தி
சற்றேனும்பயமின்றி உச்சியின்மீதேரி

காலினாற்பிடித்து அந்தர்ப்பள்டி உள்டி
கவிழ்ந்தாப்போல் அடுத்து

காலால்கழலைப்பற்றி கரத்தைப்பின்னாலெட்டி
கரகரகரவென சிரத்தைக்கீழாய்வாங்கி
தாளில்கயற்றைக்கிட்டி தலைக்குமேல்கால்நாட்டி
தங்கியிருக்கும்ஜெனம் அங்கம்பதரும்படி (மந்)

ககனமளாவியக் கம்பியின்மேல்மாது
கண்ணிமைமாற்றுமுன் யெண்ணற்றசுழலாகி
விதனமகலஜெனம் ஆனந்தம்பெருகிட
வேடிக்கைவெகுவிதம் வாடிக்கையாய்செய்யும் (மங்)

கூடுவிட்டுகூடுபாயும் வித்தைகள்கோடி
கோர்த்தசங்கிலிசரம் பார்த்துபுகுந்துநாடி
ஓடிக்கயற்றுமேலே காலைத்தலைக்குமேலே
ஊணிக்கரங்களாலே ஜாணின்வயற்றுக்காலே (மங்)

பெரியவள்பேர் சித்திர குள மெனப்பேசுவார்
பெற்றமகளின்பேர்தான் ரத்தினமெனச்சொல்லுவார்
அரியவித்தைகள்கற்றோ ரப்பனும்மகள்மாதும்
யெல்லாமிதுவேவேலை யென்றும்வழக்கத்தாலே (மங்)

தொங்குகிறதடியை தொடையால்மிகயிறுக்கி
பங்கமில்லாமலே பல்டியடிப்பதுபோல்
அங்கையாய்மிகத்தாங்கி அதிரமல்கான்கட்டி
சங்கையில்லாமலே சட்டென்றுநின்றிடும் (மங்)

தடியையொருதொடையில் தாங்கிவலுவிற்றொங்கி
படியினுள்ளோர்கள் பார்த்துமனங்களிக்க
அடவுடன்சுழுத்தினில் அந்தத்தடியைமாட்டி
அந்தரமாய்த்தொங்கும் விந்தையாகுமிந்த (மங்)

சித்திரகுளாவென்னும் சிறப்புப்பெயர்வகித்த
உத்தமப்பெண்ணவள் உகமையாய்த்தானுடும்
எத்தனையோவித்தை யெவருமதிசெயிக்க
புத்திதனில்மதித்து போகிறுளுச்சியில் (மங்)

கன்னுவென்னும்சின்ன பெண்ணுனவளிதோ
பின்னுல்காலைமாட்டி முன்னுல்கவிழ்ந்துவீழ
இன்னுளிதுநெடுநா ளெங்குங்கண்டதில்லை
என்னுவதிசெய மென்றுமிகச்சொல்லும் (மங்)

நாடியுச்சிதனி லேறிச்சித்திரகுளா
நீடிக்காலால்சப்பளம் சாடிமிகப்போட்டு
கூடியசபைதனை நாடிபகவானைத்
தோடிராகத்தாலே பாடித்துதித்திடும் (மங்)

இராகம் - தோடி - ஆதிதாளம்

பல்லவி.

அற்புதசர்க்கஸின் பெருமையைச்சொல்லுவேன்
அன்பர்களேசற்றுகேளீர் - இந்த
அவனியிலிதுவரை யெவரும்நடித்ததாய்
கூறுவாருமிலைப் பாரீர்.

சரணம்.

தற்காலம் சென்னைக்கு தூரம்வடதேசம்
தன்னகர்விட்டொருமாது
தந்தையும்மைந்தரும் மாதுடன்மூவரும்
தனித்துவந்தாரே யிப்போது - அவர்
கற்றிடும்வித்தைகள் மெத்தவுண்டாமதில்
கண்டமட்டும் சொல்வோம் மீது
ககனமளாவிய சம்பத்தின்மேலாட
கற்றதேதந்திரம் தோது
கழரத்திர மொருவர்க்கில்லை யவரற்புத மெவருக்கிணை
கண்டார்மன மண்டாதென திண்டாடிட ஒண்டொடியாள் (அற்)
மேகமளாவிய நாற்பத்துநாலடி
மேலுயரங் கெடைபாராய்-நல்ல
மேன்மைதுரைமக்க ளெல்லாரும்பிரமித்து
முழிக்குறார் சுத்திலும் தேராய்
சாகத்துணிந்தவோர் ஜெட்டியையேரடா
வென்றாலும் அஞ்சுவான்தூராய்-இது
சாமிச்செயலல்லோ பெண்ணுய்ப்பி ... தவள்
சபையைபிரட்டுரார்கூறாய்
சண்டப்படை கண்டற்புத மென்றோடவே அண்டத்திலே
சகரக்குழ லெனுவேஅல ... திலேசழல் மிகுதந்தர (அற்)

---

நொண்டிச்சிந்து.

மந்திரமகிமையைக்கேள்-இந்த
மண்டலத்திதுவரை கண்டதுமில்லை
அண்டரும்புகன்றதில்லை-மகா
பெருமைதங்கியபதி னெட்டுசித்தரும்
இப்படியுரைத்ததில்லை-இந்த
வதிசயம்போலுலகில் பார்த்ததுமில்லை
பிரான்பூரெனயெவரும்-வடதிசை
பேசியநகருக்கு அடுத்திடமாம்
அட்டகிமாவெனும்பதியாம்-அங்கே
வசிப்பவராமந்திரங்கள் செபிப்பவராம்

காளியும்காட்டேரி-துஷ்ட
 கருமுனிசெபமுனி சங்கிலிமுனி
மாடனும்மதுரைவீரன்-அகோர
 வீரனுடன் அறுமுகன் கணபதியும்
சத்தியும் சாம்பசிவன்-கெட்ட
 சண்டாளக்கருவுகள் யெட்சணியும்
மோகினிடாகினியும்-இந்த
 மூவுலகிலுண்டான தேவதைகளை
க்ஷணத்தில்வசியமிடுவார்-ஆகாத
 சத்துருவைகணத்திலே வதைத்திடுவார்
இப்படியவர்வலிவாம்-அடி
 யெடுத்தபிடங்களெல்லா மிவர்முகமாம்
எதிர்ப்பாரொருவ ரில்லையாம்-அந்த
 கெடையேரியாடுபவ ரொருவரில்லையாம்
பெருமையருமைதாங்கி-அவர்
 பிறந்துவளர்ந்தநக ரதைநீங்கி
சென்னைநகரைநோக்கி அவர்
 சிறந்தமந்திரவலி வதைத்தாக்கி
கோட்டைமைதானமிரங்கி விளக்குக்
 கூண்டுக்கருகில்கெடை யதைத்தாக்கி
ஆடிடும்பெருமைதனை-யினி
 யறைந்திடக்கேளுமென றறவினரே. (தந்தின)

## உச்சியிலாடும் வித்தைகள்.

### (தெம்மி.

பாம்புபோல்தொங்கும கயர்பிடித்துமாது
 பற்றியேசரரைபோ லேதொடுத்து
தாம்புகயற்றிலே யேறிப்போகும்வேகம்
 தங்கியிருந்தோர்கள் குடல்நடுங்கும். க
ஒத்தைக்கயறு மிதைப்பிடித்து-மாது
 ஓங்கியமெத்தைமே லேருதல்போல்
மெத்தத்துரிதமா யேரிப்போகும்வேகம்
 பத்துதேநம்மக் குடல்பார்த்து. உ
யேரிக்கயரை விடுத்துவிட்டுமாது
 இரண்டுகாலுந் தொடுத்துக்கொண்டு
சீரியநாகம்போல் உள்டியடிக்கிற
 சீக்கிரம்பாருங்கள் நேசர்களே. ௩
கைப்பிடிகூடக் கிடையாதொருகம்பி
 கையாலேமாது தொடுத்துக்கொண்டு
யெப்படிமல்கான்போல் கட்டியேபின்னூாள்
 யென்னவதிசயம் நேசர்களே. ௪

தந்திரஜாலங்கள் செய்பவரேஒரு
வேளைதிகைத்து முழித்திடுவார்
அந்திரந்தன்னிலே பெண்ணுப்பிறந்தவள்
ஆடவதிசயம் நேசர்களே. ௫

பல்டியும்உல்டியும் தானடித்தாளதோ
பதுமைபோல்தலைகீழாய் தொங்குகிறுள்
விள்ளவொண்ணுஜெனம் சுற்றிலிருப்போர்க்கு
வந்தனம்கூடவும் செய்யுகிறுள். ௬

நித்தமொருவேலை காட்டுகிறுளொரு
நிமிஷமொருவித்தை மாற்றுகிறுள்
சுத்தியேரூப மெடுத்தாளோயில்லை
சாமியேவந்து உதித்தாரோ. ௭

மல்கான்வேலை முடிந்தபின்புமாது
மந்திரக்கோலை யெடுத்துக்கொண்டு
உல்லாசமாக சிரித்துக்கொண்டுமாது
உச்சியில்யேருவாள் நேசர்களே. ௮

உச்சியிலேறி அலகுப்பார்த்துமாது
உள்ளத்தில்சற்குரு தாள்நினைந்து
கச்சையில்அலகு முனைசொருகிமாது
கவிழ்ந்து படுத்தாள் நேசர்களே, ௯

கவிழ்ந்துஅலகை சொரிகிக்கொண்டுமாது
கையையுங்காலும் விடுத்துவிட்டு
செவந்தசூரியன் போலேகரகர
வென்றுசுழலுருள் நேசர்களே. ௧௦

குலாலன்சக்கரம் போலேசுழலையிய்
கூட்டமாம்கீழே ஜெனங்களெல்லாம்
கலகலவென்று குடல்நடுங்கியவர்
கைகளையேந்துருர் நேசர்களே. ௧௧

இப்படிகீழே ஜெனங்களெல்லாமையோ
யென்னமோயேதோ வெனமயங்க
மைப்படிகண்ணுள் பம்பரம்பானுவை
மாற்றச்சுழலுவாள் நேசர்களே. ௧௨

முதுகிலலகை சொரிகிக்கொண்டு அவள்
மேல்புரமாகத் திரும்பிக்கொண்டு
கதம்பம்காற்றிலே மின்னுவதுபோலே
கன்னிசுழலுவாள் நேசர்களே. ௧௩

மெத்தவுயரத்தில் மாதிருந்துயிந்த
மேலானவித்தை தனைப்புரிய
பெற்றதகப்பனும் கீழிருந்துஅப்போ
பேசுவான்கூட்டந் தனைப்பார்த்து. ௧௪

அறைவித்தைகற்றவர் கட்டவேண்டாமையா
கால்வித்தைகற்றவர் கெட்டவேண்டாம்
முழுவித்தைகற்ற துரைகள்வந்தாலே
முடியால்வணங்கி துதிப்பேனென்றான். கடு

பெண்பிள்ளையாடுறாள் கட்டவேண்டாமையா
கட்டினாலும்வெட்ட ஓடவேண்டாம்
யென்வித்தைபின்னாலே காட்டுவேனென்றவன்
ஏழைபோல்வந்தனம் செய்திடுவான். கசா

வயற்றின்கொடுமை பெனவுரைப்பார்சிலர்
வாயிலேவந்தபடி யுரைப்பார்
யென்னகொடுமைபி தென்றாலுமையோ
இந்தவதிசயங்கண்டதுண்டோ. கஎ

வயற்றில்பிறந்ததொரு குழந்தையந்த
வஞ்சியோகொஞ்சம் வயதுடையாள்
கயற்றில்பெரிய விரல்கோத்து அதோ
கரணமடிக்குறாள் நேசர்களே. கஅ

உரியிலேகாலை சொருகிக்கொண்டு ஐயோ
ஊஞ்சலைப்போலவே தாங்கிக்கொண்டு
சிரியக்குழந்தை யதாடும்பெருங்கஷ்டம்
சீமையிலெங்குமே கண்டதில்லை. ககூ

வித்தையறிந்தவர் கஷ்டமரிந்தவர்
வெண்ணைபோல்நெஞ்சங் கரைகரைந்து
நித்தந்தனவான்கள் பரிசுகொடுத்தாலும்
நேருமேகஷ்டம் புவியோரே உ0

தகரக்கடைத்தொழில் வியாபாரஞ்செய்கின்ற
தர்மவான்ஏகப்ப நாயகர்தான்
பகரக்கெடையாடும் யேழைகளைசொந்த
பாலரைப்போலே காப்பாற்றுகிறார். உக

நிக்கத்தரிக்கயிடங்கொடுத்து அவர்க்கு
நித்தமும்புத்திமிகத் தொடுத்து
பெற்றமகவுபோல் சார்க்கலானாரந்த
புண்யவானாலே பிழைக்கலானார். உஉ

அருமைப்பெருமையுந் தானறிந்துஅவர்
ஆடலைக்கண்டு மனந்துளர்ந்து
சிறுமணவூர்முனிசாமி பாடித்தர
சிவகாமிவிலாசத்தில் அச்சிலிட்டான். உங

கெடையிலாடும்வித்தை
முற்றிற்று.

---

உ

தெய்வமேதுணை.

1906வரு அக்டோபர்மீ 20உ சனிக்கிழமை

மூடப்பட்ட

அர்பத்நெட்டவுசின்

# அனியாயச்சிந்து.

இஃது,

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரால்

இயற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

உ

கடவுள் துணை.

# அர்பத்னெட்டவுசின்
# அனியாயச் சிந்து.

வெண்பா.

பேர்பெற்ற சென்னை பீச்சாங் கடக்கரையில்
ஆர்புத்தி னெட்டா ரதிசயத்தை—சீர்பெற்ற
செந்தமிழாற் சொல்லசிவ காமியரு ளேங்கரனார்
கந்தமலர்த் தாணிதமுங் காப்பு.

பின்முடுகு வெண்பா.

ஆறுதலை யானளித்த ஆறுதலை யானடியைப்
பேருதலை யின்றிப் பிடித்தக்காற்—றேறுதலை
உண்டுயிக முண்டுபர முண்டுசுக முண்டுகன
முண்டுபல சித்தியெலா முண்டு.

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

ஆசைபொல்லாது அர்பத்னெட்டவுசுமேல்
தோஷஞ்சொல்லாது

சரணங்கள்.

தேசதேசமெங்குங் கப்பல்நடக்குதென்றும்
தினகரன்போல்பல கொடிகள்பறக்குதென்றும்
மோசமற்றதர்ம வட்டிகிடைக்குதென்றும்
மூவிருதலைமுறை யாகசெழிக்குதென்றும்
நம்பவைத்தாயே பாழும்பணமேயிப்போ
வம்புசெய்தாயே

மழைக்குமுன்னிடிமின்னல் மாறிவருவதுண்டு
மாதர்பிரசவமுன்னே யிடைதுடைநோயுண்டு
கொழுத்தஜுரத்தின்முன்னே குளிரும்நடுக்கலுண்டு
குஞ்சரத்தணிமுன்னே கெர்ச்சனைத்தொனியுண்டு
கெடுதிக்குமுன்னே சமரசகுணமெல்லாந்
தடுமாறுஞ்சொன்னேன்—அதுபோல்

ஸ்டீமர்கப்பலென்ன ஜலத்தில்முழுகிப்போச்சா
சேர்ந்தபணத்தைக்கள்ளர் புகுந்துதிருடிபோச்சா
தீர்ந்ததுகைபலர்க்கு திரும்பக்கொடுக்கலாச்சா
திடமானவர்த்தக முழுதுமொடுங்கிப்போச்சா

எப்படிபோச்சு யிரவும்பகலுஞ்சிப்பாய்
பாராக்களாச்சு

அல்லும்பகலும்காவல் அகலாதிருந்துகார்த்தும்
அணியணியாய்மாட்டர் லெட்ஜர்குறிப்புலீஸ்டும்
பில்லுஞ்செக்குஞ்சாட்சி பேர்நாட்டுங்கைநாட்டும்
பணத்தைவெளியில்வாங்க கொடுத்தவன்படும்பாடு

பஞ்சியின்பாடே லஞ்சமில்லாட்டாலுங்
கொஞ்சமல்லவே

இத்தனைதொடர்வழக் கிட்டுக்கொடுக்கும்பணம்
எத்தனையோகாவல் சுற்றியிருக்கும்பணம்
மெத்தநீண்டநாளாய் மிதந்துவளர்ந்தபணம்
மேல்வெள்ளம்வந்தாற்போல் யாருக்குந்தெரியாமல்

பறந்துதான்போச்சோ கடலின்சுரங்கவழி
யிறந்துதான்போச்சோ

கேள்விமுறையுமில்லை கேட்டாலும்பதிலில்லை
கிட்டிப்போட்டபூட்டு தொட்டுத்திறப்பாரில்லை
பாழுக்கிறைத்தாற்போல பலபேர்கள்படுந்தொல்லை
பணமேபணமேயென்று பிணம்போலிளித்தார்பல்லை

இனிப்பெருந்தொல்லை யேழைகள்பாடெல்லாம்
வயற்றுக்கேசள்ளை

பந்தியில்வஞ்சனை கூடாதென்பதுபோலே
பணக்காரரேழைக ளெல்லார்க்குமொருக்காலே
மிந்திபிந்தியென்ற கெடுவுமில்லாமலே
மின்னற்கொடியைப்போலே யிங்லாண்டுவழியாலே

தந்தியினாலே லாஸ்டாயிப்போச்சென்று
வந்துதெனரூரோ—அந்த

தந்திவந்தசெய்தி தகவலையார்கண்டார்
தாணியேழைகட்கு எந்ததுரைகள்விண்டார்
முந்தியிப்படிவரு மென்றுதான்யார்கண்டார்
மூடிப்பூட்டு போட்ட பிறகல்லோபலர்கண்டார்

போலீசார்வந்தார் காவலும்பாராவும்
சிரீசாய்நின்றார்—அப்போ

கண்டாரும்விண்டோருங் கைதொழில்செய்வோரும்
கால்நடையாய்பீச்சு வழிநடைஜெனங்களும்
அண்டையயலிலுள்ள ஆபீசர் ஹவுசாரும்
அணிபோல்திரண்டுகண்ணை மணிபோலசிமிட்டாமல்

சூழ்ந்துக்கொண்டாரே வெகுபேர்மனதுநொந்து
தாழ்ந்துக்கொண்டாரே—அப்போ

பணத்தைக்கொணர்ந்துகட்டிவைத்தோர்வாயிலும்பூட்டு
பார்த்தோர்கள்கேட்போர்கள் பலபேர்வாயிலும்பூட்டு
சினத்தமொழிசொல்பல ஜெனத்துவாயிலும்பூட்டு
சிறியோர்கள்பெரியோர்மெத்த முதியோர்வாயிலும்பூட்டு

பூட்டென்றபேச்சே சென்னைமுழுதுமன்று
பெருங்கூச்சலாச்சே

வட்டிக்காசைபட்டோர் வயறுமெரிந்துப்போச்சு
வட்டியை யசலோடு சேர்த்ததொகையும்போச்சு
கட்டினபின்கண்ணில் காணுதொழிந்துப்போச்சு
கனவிலும்நினைவிலும் பணமென்றபெருமூச்சு

கடைகெட்டுப்போச்சு இனி-பிறரைநம்பும்பேச்சு
படைசெத்துப்போச்சு

அரிசிகுறைமரக்கா ளளந்தபணமும்போச்சு
அதிகவட்டிக்காசை பட்டதுகையும்போச்சு
நிறைகுறையாய்சேர்த்து நேர்ந்தபணமும்போச்சு
நேற்றின்றுந்திண்ணாமல் சேர்த்தபணமுமபோச்சு

வெறும்பேச்சியாச்சு செக்குப்புத்தகமெல்லாம்
வெளுத்தல்லோபோச்சு

குடும்பகாப்புக்காக கொடுத்தபணமும்போச்சு
கோயில்தருமமெல்லாங் கூண்டோடழிந்துப்போச்சு
கடும்பசிக்கெதிர்பார்த்தோர் கண்ணீர்சொரியலாச்சு
கஞ்சிக்கேசிலபேர்கள் பஞ்சாய்பறக்கலாச்சு

முழுமோசமாச்சு வட்டியென்கிறபேச்சு
அசலோடேபோச்சு

கணவனற்றபெண்கள் காலஜீவனம்போச்சு
காசிஜவுளிஷாப்பு வர்த்தகர்பணம்போச்சு
பணக்காரரேழைகள் பாரத்துகையும்போச்சு
பலயேழைகுடும்பங்கள் நிலையேகலங்கிப்போச்சு

பெருவெள்ளமாச்சு அதை-நம்பியிருந்தோர்பேச்சு
படுபள்ளமாச்சு

தூரதேசத்தவர் துகையுந்துலைந்துபோச்சு
துலுக்கர்தமிழ்செட்டி ஐயமார்துகைபோச்சு
பாரிஉத்தியோகஸ்தர் பலத்தமணியும்போச்சு
பலநாளாய்ஜீவித்த சிலபேர்கலங்கலாச்சு

ஏக்கமுண்டாச்சு லட்சத்துகைகளுக்கு
தூக்கமேபோச்சு

ஸ்கூல்தருமபண்டு என்னமாய்முடியுமோ
ஏழைகுடிகள்பொழு தெப்படிவிடியுமோ
புஸ்தகசொசைட்டி பொருட்கென்னபுரியுமோ
போகப்போகப்பதில என்னென்றுதிரியுமோ
விசனப்படாதீர் வட்டிவரவல்லாமல்
அசலெப்போகண்டீர்—அதுபோல்

இன்னஞ்சிலதுகால மெண்ணிப்பொருத்துக்கொள்வீர்
எல்லாக்கணக்குங்கவர்ண் மெண்டார்கள்சோதிப்பார்
நன்மைதுன்மைநடு நிலைமைதெரிந்துக்கொள்வார்
நாட்டின்அபிப்பிராயல் கேட்டும்பதிலுசொல்வார்
பொருமையேபெரிது அவசரப்படுவது
பொருளுக்குஅரிது—ஆனல்

தன்கைபொருளுந்தொழில் தன்னுயுதமுமற்ற
தரணியில்பிறர்கையில் தரும்பேதைபதரென்று
சொன்னதருமநீதி சும்மாயிருந்திட்டாலும்
சென்னைமுழுதுமிப்போ சிலாமணியாச்சுது
இதுதெரியாதா முன்னோர்கள்பழமொழி
பழுதாமென்பீரா

ஆனைவாயில்கரும் பன்றேஜீரணமாச்சு
அலைகடல்வீழ்பொரு ளார்கையில்வசமாச்சு
பூனைகண்ணில்பட்ட பாலெங்கேதயிராச்சு
புலியைத்துணைபிடித்த ஆடெங்கேநிலையாச்சு
ஆசைபொல்லாது அர்பத்னெட்டவுசின்மேல்
தோஷஞ்சொல்லாது.

---

## கும்மி.

கட்டிச்சுகித்த மனைவிகளைச்-சொந்த
கால்வழிப்பிள்ளை பௌத்திரனை
துட்டுக்குக்கூட மதியாமலர்பத்தி
னெட்டில்கொடுத்த பணம்போச்சே. க

காலாகால மிருக்குமென்று-வெகு
காலத்துக்காதர வாகுமென்று
மாலாய்சர்வ பொருளும்விற்று ரொக்க
மாக்கிக்கொடுத்த பணம்போச்சே. உ

சின்னஞ்சிறிய குழந்தைகட்கு வய
தேறுமளவும் விசனமற்று
தின்றுவருமென் றர்பத்தினெட்டுக்கு
தேடிக்கொடுத்தப் பணம்போச்சே. ௩

மைனர்வயது கடந்துசரியான
மார்க்கத்தில்பிள்ளை வருமளவும்
உயிலுமெழுதியே அர்பத்தினெட்டுக்கு
ஓடிக்கொடுத்தப் பணம்போச்சே. ௪

பிரபலமாகப் பிழைத்தபெரியோர்கள்
பேரழியாம லிருக்குமென்று
உரியபொருளெல்லாம் சேகரித்துப்பெரும்
உண்டிபோல்வைத்த பணம்போச்சே. ௫

காலமழைக ளில்லாமையிலுள்ள
காணிவிளைவு குறுகினதால்
மூலதிரவியம் யாவுமொருமிக்க
மூட்டைபாய்த்தந்த பணம்போச்சே ௬

கைத்தொழிலொன்றும் பழகாமல் பல
கனத்தவர்த்தகஞ் செய்யாமல்
மெத்தெனக்காலங் கழிப்போமென்று மைனர்
மேலேகொடுத்த பணம்போச்சே. ௭

ஆயிரத்துக்கைந்து ஆறுலொருலட்ச
மைன்னூறுவுற்பத்தி யாக்குமென்று
சேயர்க்கறியாமல் தாயார்தந்தையர்
சேர்த்துக்கொடுத்த பணம்போச்சே. ௮

மாமியகத்துடை சீதனமும் மைனர்
காலத்துபாகஞ் சுயார்ச்சிதமும்
க்ஷேமம்பெறவெகு காலத்திற்காய்-துகை
செய்துக்கொடுத்த பணம்போச்சே. ௯

கைம்பெண்கள்ஜீவித காலமட்டு மலர்
கணவர்கள்தக்க முயற்சியுடன்
நம்பிக்கையாகவே அர்பத்தினெட்டாரை
நம்பிக்கொடுத்த பணம்போச்சே. க௦

எத்தனையோதேவ ஸ்தானபண்டு வெகு
யேழைகட்காக ஸ்கூலுபண்டு
அத்தனைச்சொத்தையும் அர்பத்தினெட்டு
அபக்கென்றுபோட்டு விழுங்கினதே. கக

சென்னையிருபத்தோர் ஜில்லாமுதலந்த
சீர்மைவரையில் பணக்குறிப்பை
கண்ணிவைத்தாற்போல அர்பத்தினெட்டு
கடக்கென்றுபோட்டு விழுங்கினதே. க௨

ஆனாலுஞ்சொந்த மனிதருக்கு அந்த
ஜாதியார்வெள்ளை துரைகளுக்கும்
தானாய்கொடுத்திட்ட அற்பத்தினெட்டு
தமிழர்பணத்தை விழுங்கினதே. க௩

யாசகத்திற்கிடாய் வீடுவீடுதோறும்
யாசகஞ்செய்த சுதேசிபணம்
மோசமென்றெண்ணும லெண்ணாயிரம்ரூபாய்
மொத்தமாய்ப்போட்டு விழுங்கினதே. க௪

ஏழைப்பணத்தை மிழுங்கியேப்பமிட
யெத்தனைநாளாய்க் கார்த்ததுவோ
பாழுமர்பத்தினெட் டவுசின்யெண்ணத்தை
பகவானுஞ்சொல்லித் துலைக்கலையே. க௫

ஜோசியனும்வந்து சொல்லலையே ஒரு
சொர்ப்பனங்கூடவுங் காணலையே
பேசிக்கொண்டிருந்த அர்பத்தினெட்டுமேல்
பூட்டையும்போர்ட்டையுங் காட்டினனே. க௬

சீமைக்குப்பிரான்ச்சி யவுசாச்சே வெகு
சீராய்பிழைத்த பிழைப்பாச்சே
நாமத்தைப்போடுமென் றெண்ணுமலேழைகள்
நம்பிக்கொடுத்த பணம்போச்சே. க௭

துறைமுகவர்த்தகஞ் செய்யுதென்று தூர
தேசமெல்லாங்கப்ப லோடுதென்று
சரியாய்நீதி நடக்குமென்று மன
சாட்சியாய்த்தந்த பணம்போச்சே. க௮

பண்டுகள்கட்டி வயறெரிந்து அந்த
பாவிகள்செய்வது மோசமென்று
கொண்டுவந்துபெருங் கட்டடமென்றதில்
கும்பலாய்வைத்த பணம்போச்சே. க௯

இனியொருகாற்றெகை வந்திடுமோ ஜெக
தீஸ்வரன்கண்ணுந் திறந்திடுமோ
அனியாயமாக வொழிந்திடுமோ இதை
யாரறிவார்பர மேஸ்வரனே. ௨0

பாதிக்குப்பாதியும் வந்திடுமோ பல
நாளைக்கருத்து வொழிந்திடுமோ
ஆதிக்குச்சம்மத மாயிடுமோ அதை
யாரறிவார்பர மேஸ்வரனே. ௩௧

பெட்டியில் வைக்கவுங் கள்ளர்பயங் கொட்டி
பூமியில்வைக்கவும் பூதபயம்
எட்டிபலபல வர்த்தகஞ்செய்யவும்
யெத்தனையோபணத் தால்பயமே. ௨௨

வைக்கவுங்காக்கவு மாகாமல் ஒரு
வர்த்தகஞ்செய்யவும் போகாமல்
கைக்குலேசாகவே வட்டிக்காசைப்பட்டு
கடலில்போட்ட கதியாச்சே ௨௩

வயற்றுக்குண்டு களிக்கலையே நல்ல
வஸ்திரங்கட்டித் துலைக்கலையே
நயத்தசொல்லையும் பில்லையுஞ்செக்கையும்
நம்பித்துலைத்த கதியாச்சே. ௨௪

நெய்யாய்ப்பாலாய் தின்னலையேதெய்வ
நேர்த்திக்கடனுங் கொடுக்கலையே
ஐயோமெத்தையும் மேடைகளும்நம்பி
ஆற்றிக்கரைத்த புளியாச்சே. ௨௫

ஆயிரங்காலந்த னானும் பணம்
ஆள்கொள்ளியென்றிதைச் சொன்னதுபோல்
காயிதச்செக்குகள் தூதனுப்பிக்கடற்
கரையைக்காட்டித் துலைந்ததுவே. ௨௬

எண்ணாயிரமயிற் கப்புறமாமிங்கி
லாண்டுதுரைமக்கள் தன்னைநம்பி
பெண்ணுமாணும்பண மெண்ணிக்கொடுத்திப்போ
பாதைப்படுவ ததிசயமே. ௨௭

போனதைப்பற்றிப் புலம்பாதீர் வரும்
பொருளைப்பற்றி மகிழாதீர்
யானைக்குந்தன்னடி சரக்குமென்பதை
யாருமறிவீர் ஜெகத்தீரே. ௨௮

அருணாலவு முலகுக்குள்ளே தினம்
ஆவதழிவதைப் பாடுகிற
சிறுமணவூர்முனி சாமிதமிழ்க்கவி
சென்னைபத்ராதிபர் சொன்னதுவே. ௨௯

முற்றிற்று.

உ

கடவுள் துணை.

ஆப்ரிக்கா அமெரிக்கா

முதலான யிடங்களில் பெயர்பெற்ற

# ஸீக்வாஜெயக்கொடி.

(o)

இஃது,

சிறுமணவூர்,

முனிசாமிமுதலியார்

அவர்களால்

இயற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1906.

29



உ

கடவுள் துணை,

# ஸீக்வாஜெயக்கொடி.

## மின்முடுகு-வெண்பா.

எத்தனைதே வெத்தனைதே ரெத்தனையூ ரெத்தனையா
ரெத்தனைமா முத்தர்வர வித்தரையில்—நித்தமுமே
காணக்கண் ணுண்டறையக் கருத்துண் டவராலே
போனபிணி யுண்டோ புகல்.

### நாதநாமக்கிரியை-சிந்து-பல்லவி.

விதிவிட்டுப்போச்சு—ஸீக்வாஜெயக்கொடி
யுதவிவந்தாச்சு (விதி)

### அநுபல்லவி.

விதியிட்டு மதிகெட்டு நிதிகொட்டித்ததியுற்று
பதியற்றிடுஞ்சென்னைப் பட்டணத்தாருக்கு (விதி)

### சரணங்கள்.

அரனென்றும் அயனென்றும் அரியென்றும் நரியென்றும்
அருளென்றும் பொருளென்றும் அம்மைக்காளிகளென்றும்
குரமென்றும் குறியென்றும் குகனென்றும் மகனென்றும்
குண்ணென்றும் மலையென்றும் கோயில்குளங்களென்றும்

காசியென்றோடி—பின்னும்ராமேச்சுரம்
ஆசைகொண்டாடி—சொந்த

பெண்டுப்பிள்ளைகள்நாடி பணமும்யினமுங்கூடி
பெருத்தமலைகள்காடு பொய்கைநதிகளாடி
கண்டவிடத்துக்கோடி கைப்பணம்விரையாடி
காத்தாய்பரக்குமிந்தக் காசினியோருக்கு (விதி)

இருளல்லமருளல்ல யேமஜாமமுமல்ல
யெட்சணிகுறியல்ல தட்சணைப்பரியல்ல
கருவல்லகுருவல்ல கல்லுப்புல்லுகளல்ல
காளிகூளியுமல்ல காட்டேறிமுனியல்ல

வசியமுமல்ல—மூளைச்சூரானைப்போல
பெசிவதுமல்ல—வெருஞ்

சுக்கல்லமிளகல்ல சூதுவாதுமல்ல
செத்தச்சமாதியு மற்றவிடமுமல்ல
பத்தெட்டுபரியல்ல பத்தியமுறையல்ல
பரமோஆரமோசென்னை பட்டணத்தாருக்கு (விதி)

சாயுச்யபதவியைச் சார்ந்தமஸ்தான்தன்னை
சண்டாளர்சிலர்கூடித் திண்டாடவிட்டார்கள்
நேயமாய்ப்பேரின்ப நெறிகின்றடிம்மியை
நெடுகக்கயறுகட்டி அகட்டாயிழுத்துப்போட்டார்

கிணற்றினில்விழுந்து—யிறந்தபொன்னியையொரு
கணத்தினிலெடுத்து—யிந்த

உலகத்துப்பிணியெல்லாந் தீர்க்ககார்க்கத்தெய்வம்
உண்டாச்சுப்பாதாளங் கண்டாச்சுப்பாரென்று
கலகப்படுத்தியெட்டுத் திசையுங்கயறுகட்டி
கைதட்டிஞரந்த பொய்கட்டல்லவேயிப்போ (விதி)

மொண்டிமுடங்களின்னம் மொழியும்விழியும்சில
முடக்கும்பிடக்கும்பல மடக்கும்வியாதிகளெல்லாம்
கண்டிக்கக்கலியுகங் கார்க்கப்பராபரம்
ககனமார்க்கமாக புவனத்தில்வருவதாய்

பைபிலின்படியோ—யிந்துமார்க்கம்போல
மிடியெல்லாம்மிடியோ—முன்னே

துலேந்தயுகங்கள்மூன்றும் துணைசெய்நாராயணன்
துஷ்டரைசிஷ்டைசெய் அஷ்டலட்சுமிவாசன்
கலியுகமதையாள் கலிக்காவதாரமாய்
கண்ணன்வருவாரெண உண்மையாயுலகெங்கும் (விதி)

கண்காட்டிகால்காட்டி கைகாட்டிமெய்காட்டி
காயம்வாளம்பூரம் வீரம்ரசத்தைத்தின்று
புண்ணாகிப்புழுவாகி பொய்யாகிமெய்வாடி
புத்திமயங்கிநடு மத்தியில்முடமாகி

போகவேண்டாமே—வீக்வா துரையைநாளும்
நோகவேண்டாமே—ஐயா

யேழைக்கிவிலையில்லை யிம்சைப்பத்தியமில்லை
இரண்டுமூன் றுநாலு எண்ணற்றதுகையில்லை
மோழைமுடங்களின்னம் மொண்டிஜண்டிகளெல்லாம்
மூடினத்திறைகொஞ்சம் ஜாடித்திறக்குமுன்னே (விதி)

வாதபேதமான வாய்வுசேர்முடக்குகள்
வரட்டுத்திருட்டுப்பெண்கள் கொடுக்கும்கொருக்குவெள்ளை
சீதயெறிப்புமற்ற சில்லரைப்பல்லுநோய்
சீக்வாயின்பேர்சொன்னல் போக்குகள் காட்டுதாம்

புறப்பட்டுவாரும்—பதினைந்துநிமிஷத்தில்
பாதையைத்தீரும்—ஐயா

அங்கேசென் றுதீர்க்க அவமானப்படவேண்டாம்
அப்படியாகாட்டால் கைப்பிடியொருரூபாய்
தங்கிவாங்குவமென் று தாமதப்படவேண்டாம்
தள்ளுக்கிள்ளிமெள்ள கொள்ளுவாயொருபுட்டி (விதி)

அஞ்சறைமணிநேரம் மிஞ்சினல்வாராது
அப்பாலிப்பாலென் று தப்பினல்வாராது
கொஞ்சத்துக்கஞ்சினல் வஞ்சநோய்தீராது
குத்துவெட்டுதிட்டு பட்டுகெட்டாயினும்

கோட்டைமைதானம்—சென்றொருபுட்டியை
கொள்வதுபாயம்—இன்னம்

இரண்டொருமாதமே யிருக்குமவர்சகாயம்
இதுவேளைதப்பினல் நோயால்வருமபாயம்
திருட்டுவயித்தியர்பேச்சு தேடுவதவனயம்
தீரமாய்சீக்வாவென் றொருதிரமுனைத்தாலும் (விதி)

---

## நொண்டிச் சிந்து.

சென்னையெனும்பதியோரே—ஐயா
சீக்குக்காரேவலிவு போக்குக்காரே
கன்னிகள்நோய்க்காரே—கால்கை
முடக்குக்காரே மெத்தயிடக்குக்காரே
பித்தயெறிச்சற்காரே—யிடுப்பு
பிடிப்புக்காரே பல்லுகடுப்புக்காரே

சத்தியிரும்பல்காரே—வாய்வினல்
சாய்ந்தவரேஉடம்பு காய்ந்தவரே
பாரிசவாய்வுக்காரே—ஐயா
பட்டவரேமெத்த கெட்டவரே
நாரியர்நோயாலே—திரேகம்
நலிந்தவரேமெத்த சலிந்தவரே
விரல்கள்குறைந்தபேரே—மேகத்தால்
வெந்தவரேவுடம்பு நொந்தவரே
வயித்தியர்விட்டபேரே—ஐயா
வாழ்ந்தவரேபணந் தாழ்ந்தவரே
பயித்தியம்பிடித்தவரே—பணத்தை
யழித்தவரே நோய்கொழுத்தவரே
பாயில்படுக்கவேண்டாம்—காசிபணம்
அழிக்கவேண்டாம் உயிரை ஒழிக்கவேண்டாம்
வயித்தியஞ்செய்யவேண்டாம்—அவரை
வணங்கவேண்டாமெதிரில் சுணங்கவேண்டாம்
வீரம்பூரந்திண்ணவேண்டாம்—உடம்பு
வேகவேண்டாம் வீணுய்—சாகவேண்டாம்
பத்தியங் கார்க்கவேண்டாம்—ஐயா
பயம்வேண்டாம் அபஜெயம்வேண்டாம்
சென்னையின்னம் பலஊரார்—முடங்களை
தீர்த்ததைக்கேள் கண்ணுல் பார்த்ததைக்கேள்
நடக்காதமுடவர்களை—சீக்வா
நடக்கச்சொன்னுர் ஒட்டம் பிடிக்கச்சொன்னுர்
தடியூணுமுடவர்களை—க்ஷணத்திலே
தாண்டச்சொல்வார்கோல்வேண்டாமென்பார்
பதினைந்துவருஷமதாய்—சாயபு
பட்டுக்கிடந்தான் பாரிசத்தால்கெட்டுநடந்தான்
யிவனுக்கும்பெரும்பாதை—மேதரவன்
யேங்கிநடந்தான்கோலை தாங்கிநடந்தான்
ராமசாமிசெட்டியொருவன்—வியாதியஸ்தன்
ரங்கையனுய்க்கனெருவன்—கெங்கையனும்
சோமசுந்திரபிள்ளை கெங்குரெட்டி
வீரமுதலி முத்துசாமிமுதலிகள்
ஞனென்னும்பத்தனெருவன்—சுப்புபத்தன்
கன்னியொருவன்பர பொன்னனெருவன்

யிப்படிபேர்களுரைத்தால்—யேடு
யெட்டாதென்றேகதை விட்டேனின்றே
யித்தரையில் வியாதித்தீர்ந்தோர்—கணக்கு
யெண்ணப்படுமோ தொகை-சொல்லப்படுமோ
ததியிதுவென்றேயெண்ணி-சீக்குவாவை
தாவிவாருங்கள் பிணிபோவக்கோருங்கள் (தந்தின)

---

## கும்மிப்பாட்டுகள்.

சீர்பெரும்சீமை தனிற்பிறந்து—புவி
செங்ககோலரசி யுரவடைந்து
கார்கவிழ்பூமி வலமாகவேவந்த
கருத்தைக்கேளும் நோயாளிகளே. 1

சீமைமெச்சுகின்ற தங்கமையாயிவர்
சீக்குத்தீர்க்கவந்த சிங்கமையா
தாமதம்செய்து யிருக்கவேண்டாமுடன்
தன்னைப்பாருங்கள் நோயாளிகளே. 2

காத்துள்ளபோதிலே தூத்திக்கொள்ளுமென்று
கற்றவர்சொன்ன மொழியகன்று
பார்த்துக்கொள்வோமென் றிருக்கவேண்டாம்
பாதையைத்தீரும் நோயாளிகளே. 3

புலத்தியர்பார்த்துக் கெடுவுவைத்து அவர்
போகாதென்றுவிட்ட நோய்களெல்லாம்
க்ஷணத்தினில்சீக்குவா தெரிசனங்கண்டதும்
செல்லுதாம்வியாதி நோயாளிகளே. 4

சென்னைவயித்தியர் தூங்கிவிட்டார்—சில
தேசவயித்தியர் வாங்கிவிட்டார
பன்னிடும்சீக்வா துரையாலே—நம்ம
பாதையொழியிது நேசர்களே. 5

ஆயிரமானத்துகையாலே—வண்டி
வாராகச்செய்த நெரியாலே
வாயுவென்கிற நோய்களெல்லாமிப்போ
வானம்பறக்குதே நேசர்களே. 6

இந்திரனேறும் விமானம்போலேயவர்
தந்திரமாய்ச்செய்த வண்டியிலே

மந்திரத்தாலுந் தீராதவினையெல்லாம்
யெந்திரம்போலே பறக்குதையா. 7

சென்னையில்மட்டுமே தீர்ப்பதல்ல—சில
தேசங்கள்மட்டுமே பார்ப்பதல்ல
பன்னவெகுதுலே தீவாந்திரமெல்லாம்
பார்த்துவருகிறார் நேசர்களே. 8

சென்னையில்விற்பனை பதின்மூவாயிரம்
சேர்ந்தபணத்துகை தனையெடுத்து
அன்னைபோல்கார்க்கும் மெட்ருஸ்பாங்கியில்
அன்பாய்துரையவர் கட்டிவிட்டு. 9

காஞ்சிபுரமென்னும் நகர்தனில்தான்வந்து
காக்காய்போல்துரை சுத்தினதால்
வேண்டும்வேண்டாமலே மூவாயிரரூபாய்
விற்பனையாச்சுது நேசர்களே. 10

கொஞ்சம்விற்பனை யானதினால்துரை
கோபமனதுடன் ஊரைவிட்டு
சந்தடிசெய்யாமல் வேலூர்நகர்வந்த
சட்டத்தைச்சொல்லுறேன் நேசர்களே. 11

ஒண்ணரைவாரம் கோட்டைமைதானத்தில்
உத்தமன்விற்பனை செய்ததைக்கேள்
கொஞ்சநஞ்மல்ல எண்ணாயிரம்ரூபாய்
குவிந்ததுபாருங்கள் நேசர்களே. 12

இத்தனைவைதியர் உலகத்திருந்தென்ன
யென்னசுகத்தை யடைந்தார்கள் அவர்கள்
கஷ்டப்பட்டஒரு மூலிகைத்தன்னாலே
கணக்குவழக்குண்டோ துகையுரைக்க. 13

எப்பொருள்யார்வாயிற் கேட்டிடினுமதை
மெய்ப்பொருள்காண்ப தரிதெனவே
முப்பவர்சொல்லிய மூதறிவாமதை
முந்தியுணருங்கள் நேசர்களே. 14

சீக்வாசிந்து-முற்றிற்று.

(*)

உ

கடவுள் துணை.

தாராசசாங்க

# அலங்காரம்.





இவை செஞ்சி,

ஏகாம்பரமுதலியாரவர்களால்

இயற்றப்பட்டதை,

பூ. சு. குப்புசாமிமுதலியாரது

ஸ்ரீசுந்தரவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை - புரசை:

1906



உ

கடவுள் துணை.

# தாராசசாங்க அலங்காரம்.

## விநாயகர்காப்பு.

வெண்பா.

தாராயலங்காரமதை தரணிமிசைத்தானின்று
ஏராருஞ்செந்தமிழா லியம்பவே—காராரும்
கந்தருக்குமூத்தக் கரிமுகவனிருகமலம்
தொந்தமுடனே தொழுகுவோம்.

தெம்மாங்கு.

அத்திரிமாரிஷியின் பத்தினியாமனுசுவையாள்
சுத்தமுடனீன்றெடுத்த சந்திரனைத்தானுமல்லோ நன்

அலங்காரம்.

பிரகஸ்பதியி னிடத்திலையா
பெட்பாயழைத்து சென்றுரையா
உரியமைந்தனை விடுத்தாரையா
உற்றகலைகள் படிக்கவையா-அப்போ
குருவுமகிழ்ந்தார் கொண்டுகளித்தார்
பிரியத்தோடும் பாடமுரைத்தார் நன்று

தெம்மாங்கு.

விந்தையுடனப்பொழுது விளங்கும்நல்லகுருவிடத்தில்
சந்திரனுந்தானுமல்லோ தான்படித்திருக்கையிலே நன்

அலங்காரம்.

தேவயிந்திரன் வேழ்விநின்று
திகழாய்முடிக்க யெண்ணங்கொண்டு
மேவிகுருவை யழைக்கயன்று
மெத்தமனமுங் கொண்டுநன்று-ஐயா
பத்தினிதாரை தனையழைத்தார்
சுத்தமுடனே சேதியுரைப்பார் நன்று

தெம்மாங்கு.

ஆசைக்கிளிரத்தினமே யரிவையரேதாரையேகேள்
நேசமுடனிந்திரனர் நடத்தும்நல்லவேள்விக்கிப்போ நன்று

அலங்காரம்.

பெண்ணேபோயி வாரனேடி
பெட்பாநீயு மிருந்துநீடி
கண்ணேமதியை பார்த்துக்கோடி
கருத்தாயென்போ லவனேதேடி
பாலன்பசிக்கப் பார்க்காதோடி
பண்பாயன்னம் படைப்பாயோடி
வேலைகள்மெத்த வைக்காதோடி
வேளைபோஜனந் தவறாதோடி
சித்தம்வையடி சீராய்நீயடி
சுத்தம்வையடி சேயனேப்பாரடி நன்னு

தெம்மாங்கு.

தேவகுருவுமப்போ தானுறைத்தமொழிகேட்டு
ஆவலுடன்தாரையப்போ அடிபணிந்துயேதுரைப்பாள் நன்

அலங்காரம்.

என்னவார்த்தை புகன்றீரையா
என்னைத்தனிய விருக்கவையா
சொன்னீர்மனது துணிந்திமையா
சோருதெந்தன் தேகமையா-ஐயா
எப்படியிருப்பேன் எவ்விதஞ்சகிப்பேன்
ஒப்பினுனிருப்பேன் ஓதிடபொருப்பேன் நன்னு

தெம்மாங்கு.

எப்படியிருப்பேனென்று யேந்திழையேசொல்வதென்ன
செப்பமுடனுனக்குத்துணை சந்திரனுந்தானிருக்க நன்னு

அலங்காரம்.

எனக்குபதிலா யுனக்குபெண்ணே
இருக்கசந்திரன் தானுங்கண்ணே
உனக்குயென்ன வருத்தம்பெண்ணே
உடனேபோயி வாரேன்கண்ணே
மதியைபத்திரம் வைத்துகொள்ளு
பதியைபத்திரம் பார்த்துகொள்ளு நன்னு

விருத்தம்.

விந்தையுளதேவகுரு வியாழன்தானும்
விளங்கவேதாரையற்கு வுரிதிசொல்லி
தொந்தமுடன்சிஷியரை கூட்டிக்கொண்டு
துலங்கவேயிந்திரனுர் பதிக்கேயேக

பந்தமுள தாரையதன் பின்புதானும்
பாலனும்சந்திரன்மேல் மையல்கொண்டு
சிந்தையதுமிகவாடி விரகமீறி
சிறப்பிப்பாள்சந்திரனை கரப்பிப்பாளே.

## நொண்டிச்சிந்து.

தாரையவளப்பொழுது சந்திரனை தானழைத்துசரசமுடனே துவுரைப்பாள், மாரனேகுருவுரைத்த வாக்கின்படி மரவாமலென்ம னம்போல்நீயுநடப்பாய், சீராகமதியேநீயும் இன்று ஸ்தானங்கள் செய்திடவாடாயென்று, நேராகத்தானழைத்து பொற்கிண்ணத்தில் நிரையவேசம்பங்கி எண்ணெயுங்கொண்டு, சந்திரனைக்குந்தவைத்து அப்போ சதுராகத்தாளங்கள் போட்டுதேய்த்து, விந்தையுடன்ப ன்னீரும் வென்னீரும் வேணதுகொண்டுமே விளாவியேயப்போ, சுத்தமுடன்அருப்புதேய்த்து நன்ருய் சீராகஸ்தானமது செய்து வைத்து, பத்திபயிர்கோதிதுவட்டி பின்பு பாங்கானபரிமளங்களோ ங்கிடபூசி, நெற்றிக்குத்திலர்தமிட்டு கெண்டை நேரானவிழிகளுக் குமையதுதீட்டி, உற்றதோர்பணிகள்பூட்டி பட்டுடுத்தி உள்ளமகிழ் ந்தெலவே தாரையவள், தலைவாழையிலைப்போட்டு நல்ல தக்கபதார் த்தமொடு அன்னம்படைத்து, கோலமுடனுண்டபின்பு சந்திரனை கோதையவள்பார்த்துமப்போ யேதுவுரைப்பாள். (தந்தினதன)

தெம்மாங்கு.

கட்டிக்கரும்பேயென் கண்மணியேசந்திரனே
கிட்டியொருமுத்தந்தந்து தொட்டுயென்னைபாருயோடா நன்

அலங்காரம்.

பாலாநீயு மிங்குத்தானே படிக்கவந்த நாளாய்நானே
மேலாமையல் கொண்டிட்டேனே மருமமின்று விண்டிட்டேனே
இது-தருணமிதுவே கூடவாரும் தடுத்துமொழி கூராய்நேரும்
குருவுமிங்கு யில்லைப்பாரும் கூச்சமில்லா தென்னைச்சேரும்
பஞ்சணைமீது வந்துட்காரும் வஞ்சிவிரகம் தீர்த்துக்காரும் நன்

தெம்மாங்கு.

தாரையுரைத்தமொழி தான்கேட்டுசந்திரனும்
கோரியேசிவனேயென்று கொப்பெனவேயேதுரைப்பான் நன்

அலங்காரம்.

தாயேயென்ன வார்த்தையம்மா தனையனோடிச் சொல்லாதம்மா
ஞாயமிதுந் தானோவம்மா நாட்டிலெவற்கு யடுக்குமம்மா-அம்மா
பிரியமுடனே யீன்ருளோர்தாய் பேசுந்தமயன் பெண்டீரோர்தாய்
அரியகுருவின் பத்தினியோர்தாய் அடுத்தநேசன் மனவியோர்தாய்

அம்மா-அன்னியமாதர் இச்சையாகாது
பன்னியேநரகில் மூழ்கப்போகாது நன்

தெம்மாங்கு.

பாவமதுயனுகாதுப் பகரக்கேள்சந்திரனே
ஆவல்கொண்டயென்விரகந் தீர்த்திடுவாய்கூடும்புண்ணியம்

அலங்காரம்.

கோதைதமையல் தீர்ப்பாயின்று
கோடிபுண்ணிய முனக்குமுண்டு
வாதுயென்னுடன் செய்யாதின்று
வஞ்சிபடும் துயரங்கண்டு
இருக்கிபிடித்து யென்னைசேரும்
நெருக்குபிடித்து நேராய்கூடும் நன்

தெம்மாங்கு.

அரியாதபாலனென்னை யம்மாநீயிப்பொழுது
சரியாகக்கொண்டுமிப்போ சரசமோதநீதியோதான் நன்

அலங்காரம்.

அம்மாஅம்மா சருணமம்மா அடிமையென்னை காருமம்மா
எனக்குசிலவு தாருமம்மா எந்தன்பதிக்கு போரேனம்மா
வாருமென்றும் கூடுமென்றும் வணையுமென்றும் பிணையுமென்றும்
சேருமென்றும் செப்புமென்றும் சித்தசனை யோட்டுமென்றும்
பகருமொழியை கேளேனம்மா பழிக்குயாளு மாகேனம்மா நன்

தெம்மாங்கு.

பழியேதுபாவமேது பரிவுள்ளசந்திரனே
வழியாகயென்னைசேர்ந்து வருஞ்சுகத்தைபாராயோடா நன்

அலங்காரம்.

வஞ்சியெந்தன் முகத்தைப்பாரடா
வாகாய்மருவி சுகத்தைத்தேடடா
கொஞ்சியென்னுடன் வார்த்தையாடடா
கோலமதனைத் துரத்திவெல்லடா
போகமேமுத்தி பெரியவீடடா
புகலும்நீதிப் பேசக்கேடடா
ஆகமநூல்களை அப்பால்தள்ளடா
அரியமதநூல் படிக்குநடடா
வாழ்வுண்டாகும் வரிசைபெருகும்
தாழ்வில்லாமல் வயதுதருகும் நன்

தெம்மாங்கு.

ஏதுமரியாததொரு யென்னைநீயிப்படிக்கு
வாதுகள்செய்குவது வாகாததாயேயம்மா நன்

அலங்காரம்.

படித்துகொள்ளே போதுமம்மா
விடுத்தாலோடிப் போரேனம்மா நன்னு

விருத்தம்.

இந்தவகைதாரையவள் சந்திரனோடு
இதமாகப்பேசிதர்க்க மாடும்போது
விந்தையுளதாரைதனை யேமாற்றிவிட்டு
வெண்மதியும்விளங்கவே யோடிச்சென்று
நந்தவனந்தன்னிலே யொளித்திருக்க
நங்கையவள்காணும லலைந்துதேடி
தொந்தமுடன்தோழிமா ருடனேயன்று
தோகையருஞ்சந்திரனைத் தேடலுற்றாள்.

நொண்டிச்சிந்து.

மாதுயந்தத்தாரையவள் அப்போ மதிதனைக்காணுமல் மனமுரிகி, கோதையாள்தோழியுடன் கூடி கொப்பெனவே தேடிக்கொண்டுசெப்பமுடனே, பூங்காவனத்தைநாடி வந்து பூவையரும்பார்த்துக்கொண்டுவருகையிலே, பாங்காகசந்திரனும் அங்கு பதுங்கியே தானிருக்க தாரையுங்கண்டு, ஆவலோடுசென்றெலவோ அவனை அணைந்துப்பிடித்துகட்டி முத்தமுந்தந்து, காவலனேயதிதீரா பொல்லா காமனைஜெயிக்கவந்த பூமனேயென்று, சோமனே சுந்திராவென்று பலவாருய் சொல்லியேசந்திரற்கு மையலைப்பூட்ட, தாமவருமெய்மரந்து விரகமீறி தன்னிருகண்களுமேயிரண்டு, ஏதொன்றுந்தோற்றுமல் அப்போ எழிலாகசந்திரனுந்தாரையுடனே, கலையும்மான்போலும் கூடி கலந்துசுகங்களையு மனுபவித்து, நலமுடன்தானுமல்லோ இவர்கள் நாட்டமுடன்மனைக்குச்சென் றிருக்கையிலே (தந்)

விருத்தம்.

இப்படிக்குயிவர்கள்கூடி யிருக்கும்போது
இந்திரனூர்பதிக்குச்சென்ற வியாழன்தானும்
செப்பமுடன்மனைதனக்கு வந்துசேர்ந்து
சீருடனேயிருக்கின்ற நாளிலேதான்
தப்பிதமாய்தாரையற்குஞ் சந்திரற்கும்
தானடக்குஞ்சைகைதனை கண்டறிந்து
அப்போதேசந்திரனைத் துரத்திப்போட
அவன்வாடிப்புலம்புகின்ற வாறுகேளீர்.

தெம்மாங்கு.

விந்தையுள்ளதாரைதனை விட்டுவரமனமில்லாமல்
சந்திரனுமப்பொழுது தானழுதுமேதுரைப்பான்: நன்னு

அலங்காரம்.

போகமன மில்லையென்பான்
பெண்ணிளைசை விடலையென்பான்
தாகமெப்போ தீருமென்பான்
தையலையெப்படி பிரிவனென்பான்-அப்போ
தியங்கிதிகைத்து நடந்துகொண்டு
திரும்பிதிரும்பி பார்த்துக்கொண்டு
மயங்கியால மரத்தைக்கண்டு
மதியுங்குந்தி புலம்பிக்கொண்டு
ஏக்கமுற்றான் யேங்கிநின்றான்
தூக்கமற்றான் துடித்துநின்றான் நன்னு

தெம்மாங்கு.

போதவேசந்திரனும் புலம்பியிங்குயிருக்கையிலே
மாதுநல்லதாரையரு மனதுவாடியப்பொழுது நன்னு

அலங்காரம்.

மங்கையரும் மையல்மீறி மதியேமதியே என்றுகூறி
தங்கிதனிய நின்றுதேறி தாதியரையு மழைத்துசீறி
உள்ளசேதி தனையுரைத்தாள் சுற்றிதேடி வாடியென்றாள் நன்

தெம்மாங்கு.

அந்தநல்லதாதியரு மப்படியேதானுமேகி
சந்திரனைத்தேடிக்கண்டு சதுராகவப்பொழுது நன்னு

அலங்காரம்.

தாரையுரைத்த சேதியுரைத்தாள்
தக்கபடியே நின்றுபடித்தாள்
கூறிமதியின் குறையைபோக்கினள்
கொப்பெனதாரைமுன் வந்துவுரைத்தாள்-அப்போ
தாரைகேட்டாள் தட்சணமெழுந்தாள்
நேராய்சந்திர னண்டைவந்தாள் நன்

விருத்தம்.

மாதுயந்ததாரையன்று யிரவிற்றானும்
மதியினிடம்வந்துமப்போ மகிழ்ந்துபேசி
போதவேகொண்டுவந்த பலகாரமோடு
போஜனமுமுண்டுமெப்போ களித்துநன்றாய்

தோதாகாயிருவருமே கலந்தொன்றாக
தோகையரையழைத்துக்கொண்டு சந்திரன்றானும்
தீதிலாசந்திரமண் டலந்தான்தேடி
திகழாகத்தானவருஞ் சென்றிட்டாரே.

தெம்மாங்கு.

அப்போதுபிரகஸ்பதி யையரவர்தானுமல்லோ
தையலந்ததாரைதனை தன்மனையில்காணமல் நன்னு

அலங்காரம்.

மனைமுழுவதும் தேடிப்பார்த்து
மங்கையைக்காணு தகமும்வேர்த்து
சணமேஞான திருஷ்டியிற்பார்த்து
சந்திரன்கொண்டு போனதறிந்து
உடனேயிந்திரன் முன்னேவந்தார்
உற்றசெய்தி தனையுரைத்தார் நன்னு

## நொண்டிச்சிந்து.

இந்திரன்தான்கேட்டு அப்போ எங்குமில்லாகோபங்கொண்டு அங்கம்பதறி, பொங்கமுடனப்பொழுது சேகவனை போயியந்தசந்திரனைஞாயமுடனே, தாரையைவிடவேசொல்லும் அல்லது தகுந்திட்டால் சண்டைக்குமேவரவேசொல்லும், கூறியேயிந்தப்படியே சேகவனை கொப்பெனவேவாடாவென்று செப்பியனுப்ப, அப்படியேயவனுறைக்க சந்திரன் அதுகேட்டுசண்டைக்கு வருகுவீறென, தெப்பெனயிந்திரனும் தட்சணம் திரளாகசேனைகளைக்கூட்டிக்கொண்டு, சந்திரனைத்தேடிவருக அப்போ சதுராகசுக்கிராச் சாரியும் வந்து, விந்தையுடன்மதிதனக்கு காண வேணதோர்சேனைகளை தானுமமைக்க, இந்திரனும்சந்திரனும் அன்று இயம்பொண்ணு யுத்தமதுபுரியயிலே, சந்திரன்கைமேலோங்க அப்போ சதுர்முகனுருமல்லோ வோடியேவந்து, தொந்தமுடனிருவரையும் அமர்திருத்தி துலங்கவேயொருமிக்கத் தானபடுத்தி, தாரையைகுருவோடு கூட்டி தான்போகச்செய்துமல்லோ யனுப்பியப்போ, அவரவர்பதிசேர்ந்தார் இப்போ ஆசையோடுசெஞ்சி யேகாம்பரமும் பாடுங்கவியும் நீட இதனை படித்தவர்கேட்டவர் தான்வாழ்க. (தந்தினதன)

## தாராசசாங்க அலங்காரம் ..

முற்றுப்பெற்றது.





உ

கெங்கையம்மன் சிந்துயென்னும்

# குளிர்காச்சல்சிந்து.

## கெங்கையம்மன் கும்மியும்,

அடங்கியிருக்கின்றன.

---*---

### வெண்பா.

ஈசனதுசேயா மிந்திரன்மாற் றேவர்முதல்
பேசுங் கணபதியாம் பெரியவனை—ஆசையுடன்
தங்கமன மாற்றுதித்து தொல்லுலகில் காச்சல்குளிர்
கெங்கையம்மன் சிந்தருள்வேன் யான்.

### விருத்தம்.

அண்டரண்ட புவியேழும் நிரைந்தகெங்கை
ஆதிபரா பரஞ்சிரசி லணிந்தகெங்கை
கண்டபொருட் காதார மானகெங்கை
காசினியோர் ஜீவவுயி ரானகெங்கை
எண்டிசையும் பரவிவள ரினியகெங்கை
யெத்தொழிற்கு முதற்பொருளா யிருக்குங்கெங்கை
துண்டர்களைக் கண்டிக்க துரையாங்கங்கை
தூரியகெங்கை யம்மனது துணைக்கொள்வோமே.

### சிந்து.

சாஸ்திரரூபி ஜெகத்துக்கதிகாரி - உன்
சூஸ்திரமென்னசொல்வேன் கெங்கையம்மா
தொல்லைமிகவாகுதம்மா

பச்சிலைக்காரி பரமசிங்காரி - உன்
உச்சிதமென்னசொல்வேன் கெங்கையம்மா
உலகமரியாதடி

வருஷமொருஉருவாய் - வந்துஉலகமெல்லாம்
பரிட்சைகள்பார்ப்பதென்ன கெங்கையம்மா
(உன்) பாலராலாகுமடி

காச்சல்குளிரு கழுத்துத்தலைனோவு
பேச்சுபிரளவைத்தாய் கெங்கையம்மா
பின்னையார்காற்பாரடி

கைகாலும்ஓச்சல் - கடுப்புயிடுப்புவலி
மெய்யும்சலிக்குதடி கெங்கையம்மா
மெத்தப்புரட்டாதடி

அங்கம்நடுங்குதம்மா - அனலாய்பரக்குதம்மா
யெங்குமுன்மாய்கையம்மா கெங்கையம்மா
யின்னந்துணையாரம்மா

குத்தல்குடச்சல் - குளிரும்பெருங்காச்சல்
வைத்தவியாதியெல்லாம் கெங்கையம்மா
வாட்டிபுடைக்குதடி

குத்துயிரும்பலொடு கொடும்பித்தசீதளமும்
வைத்துகெடுப்பதென்ன கெங்கையம்மா
(நீ) வஞ்சனைக்காரியடி

பித்தமுதல்சீதளங்கள் பெருங்காச்சல்நின்றாலும்
குத்திரும்பல்போகலையே கெங்கையம்மா
குழந்தையுனக்கில்லையோடி

யிரும்போடியுன்மனது யீனுதபாவியோநீ
கருங்கல்லோசண்டாளிநீ கெங்கையம்மா
காளைமுறைகேழ்க்கலையோ

ஊரைக்கெடுத்துவிட்டால் உன்னைநினைப்பதாரு
பேரைக்கெடுக்காதடி கெங்கையம்மா
பழிதாங்கிக்கொள்ளாதடி

தஞ்சமெனத்தொழுது தாளில்விழுந்தபின்னர்
நெஞ்சிரங்காதெய்வமுண்டோ கெங்கையம்மா
நீயென்னபூதமடி

பூதமோபேயோ பிசாசோமிருகமோநீ
வாதுசெய்யாதடி கெங்கையம்மா
வயறெரியகாணுதடி

ஒன்றுமில்லாமல் - உலாவுங்குழந்தைகட்கு
கண்டவிடந்தனிலே கெங்கையம்மா
காச்சலடிக்குதடி

நீலகிரியைவிட்டு - நீதுடந்தனுள்முதலாய்
பாலர்வதையுதடி கெங்கையம்மா
பட்சம்வைத்தாளுமம்மா

பொம்பாயிசுத்தி - படுகளமாக்கிநீ
அம்புவியெல்லாந்துடந்தாய் கெங்கையம்மா
(நீ) அலேச்சல்படுத்தாதடி.

(நீ) யில்லாதமேதசம் - யெங்கென்றுசொல்லுவேன்
யெல்லாவிடங்களிலும் கெங்கையம்மா
உல்லாசமானயடி

உண்டுவிளையாடி - ஓடிவரும்பிள்ளைகளை
செண்டாய்படுக்கவைத்தாய் கெங்கையம்மா
செந்தணலாய்காயவைத்தாய்

உன்பேரைக்கேட்டால் - உலகம்நடுங்குதம்மா
யென்னபொடிதூவிவிட்டாய் கெங்கையம்மா
பெக்ஷணியக்காரியடி

யிடத்தைமெழுகிவைத்து - குட்த்திலே தண்ணிவைத்து
படைத்தாரே மஞ்சள்நாலே கெங்கையம்மா
பாக்குடன்வெத்திலேயும்

அஞ்சிபயந்து - அபயமெனத்தொழுது
மஞ்சள்நூல்கட்டிக்கொண்டோம் கெங்கையம்மா
மைந்தரைக்காருமம்மா

மூனுநாள்காச்சல் - முப்புரமும்பத்துமடி
வேணுமென்று நீதொடுத்தால் கெங்கையம்மா
யாரிருந்துசொல்வாரடி

யெண்சானுடலும் - யெரிந்துகுளிருதம்மா
உன்மகிமையாரறிவார் கெங்கையம்மா
ஊட்டமுங் கொள்ளலேயே

காப்பிதண்ணிரொட்டி - கசக்குதென்றுநெட்டி
சாப்பிட்டிருக்குறேமே கெங்கையம்மா
சாதத்தையூட்டாதடி

அன்னமுந்தள்ளி - ஆகாரந்தள்ளி
யென்னமாய்பிழைப்போமடி கெங்கையம்மா
யெள்ளளவுகண்பாரடி

உன்காச்சலென்றுநான் ஒடியாஸ்பத்திரியில்
சென்றுலும்சேர்க்கலேயே கெங்கையம்மா
ஜெகமேபுலம்புதடி

சர்வநோய்தீர்க்கும் - ஜனலாசுபத்திரியிலும்
தருமனேய்தீர்க்கலேயே கெங்கையம்மா
தந்திரமும் வேறில்லேயே

## வேறுமெட்டு.

ஈசன்முடிமேலிருக்கும் ஓ கெங்கையம்மா-நீ
யிவ்வுலகில்யேன்துடந்தாய் கெங்கையம்மா
காசினியைப்பார்க்கவென்றால் கெங்கையம்மா-யிந்த
காச்சலையேன்கொண்டுவந்தாய் ஸ்ரீகெங்கையம்மா

கண்ணனுடபிறப்பே கெங்கையம்மா
கர்த்தனிடமங்கையரே கெங்கையம்மா
உன்னுடையவல்லமையை கெங்கையம்ம-இந்த
உலகத்தில்காட்டாதடி கெங்கையம்மா

முப்புரமெரித்தவளே கெங்கையம்மா
மூவுருவாய்நின்றவளே கெங்கையம்மா-நீ
யிப்புவியைப்பார்ப்பதற்கு கெங்கையம்மா-இந்த
யிடுப்புநோவேன்கொண்டுவந்தாய் கெங்கையம்மா

மாயாப்பிரகாசியடி கெங்கையம்மா-இந்த
மண்ணுலகையீன்றவளே கெங்கையம்மா
தாயாய்வளர்ப்பவளே கெங்கையம்மா-இந்த
தலைவலியேன்கொண்டுவந்தாய் கெங்கையம்மா

வேதமுதலானவளே கெங்கையம்மா-இந்த
வெய்யலிலேவந்ததென்ன கெங்கையம்மா
காத்துநிழல்வேணுமென்றால் கெங்கையம்மா-நல்ல
காடுவனமில்லையோடி கெங்கையம்மா

அரியாதபாலரடி கெங்கையம்மா-இங்கே
யாரறிவாருன்பெருமை கெங்கையம்மா
தெரியாமல்போய்விடுவாய் கெங்கையம்மா-இந்த
தேசங்கலங்குதடி கெங்கையம்மா

## கும்மி.

கட்டுசோர்கட்டிநடப்பவர்க்கும் சில
கடைத்தெருசுத்திவருபவர்க்கும்
கிட்டியகாச்சல்குளிராலே மெத்த
கஷ்டப்படுகுதே கெங்கையம்மா

ஊர்வழிசெல்லத்துடர்ந்தவர்க்கும் தினம்
உள்ளத்தொழில்முறைசெய்பவர்க்கும்
ஆருமறியாமல்காச்சலைவைத்துநீ
ஆட்டிப்படைப்பதேன் கெங்கையம்மா.

## குளிர்காச்சல் சிந்து.

குத்தல்குடைச்சல்தலைநோவு வாய்
கூசவும்பித்தங்குளிர்காச்சல்
யித்தனை துன்பமும் உண்டுபண்ணுயுனக்
கென்னகோபமடி கெங்கையம்மா.

தெற்குவடக்குக் கிழக்குமுதலெந்த
திக்கும்பரவியேவாட்டுகிறாய்
யெப்பேர்க்கொத்ததோவுன்வடிவு அம்மா
யாரறியப்போரூம் கெங்கையம்மா.

காட்டினவல்லமைபோதுமம்மா உந்தன்
காச்சல்பொருக்க முடியாதம்மா
நாட்டைவிட்டுசற்றே நீங்கிவிட்டாலெந்த
நாளுந்துதிப்போமே கெங்கையம்மா.

அண்டமும்பிண்டமும்நீயாச்சே யிங்கு
ஆடும்உடலுயிர் நீயாச்சே
கொண்டணைக்க துணையாருமில்லை யிந்த
கொடியசுரம்நீக்கு கெங்கையம்மா.

தலைவலிகாச்சலை நீக்குமம்மா குளிர்
தரையில்படுக்கை யெழுப்புமம்மா
அலையுதேமக்களுலகமெல்லா மின்னம்
ஆருதுணைசொல்லு கெங்கையம்மா.

மெத்தபயந்துஉன்காப்பெடுத்து அவர்
முன்கையில்கட்டினமக்களுக்கு
சித்தந்திடுக்கிடவொட்டாமல் நீ
சீராய்காரடி கெங்கையம்மா.

தஞ்சமென்றுஉன்னைவேண்டிக்கொண்டு பின்னும்
தாளாமற்பற்பல யெண்ணங்கொண்டு
மஞ்சள்நூலோதியேகாப்புகட்டிக் கொண்ட
மக்களைக்காரடி கெங்கையம்மா.

சர்வவுலகும்நிறைந்தவளே அம்மா
சாட்சாதியீஸ்வரன் மங்கையரே
சிறுமணவூர்முனி சாமிகவிமாலை
சிந்தாமல்சாத்திக்கொள் கெங்கையம்மா.

குளிர்காச்சல்சிந்து முற்றிற்று.

---



உ

கடவுள் துணை.

சந்தைப்பேட்டை நகரின்கண் வீற்றிருக்கும்

# கெங்கையம்மன் கும்மி.

——(*)——

விநாயகர்-துதி.

உமையாள் திருமகனே உந்தனது சேவடியை
சிந்தைதனில் யான்துதித்து செப்புகிறேன்
புல்லறிவாளன் புகன்றயிக் கும்மிதனை
நல்லறிவளித்து நாடு.

## கு ம் மி.

கும்மியடிபெண்கள் கும்மியடி-குரு பாதங்காணவே கும்மி யடி, நம்மையாளுங் கெங்கையம்மாளை நாடிக்கும்மியடியுங்கடி.

சீரோங்குஞ்சந்தை பேட்டையில்வாழும் பேர்புகழுங்கெங் கை தன்னருளால், சிங்காரமாகவே இக்கும்மிசொன்ன சிறுவனை வந்து காத்திடுவாய். 2

விந்தையானயிச் சந்தைபேட்டையினில் வந்துகுடிகொண்ட யெங்கள்தாயே, சிந்தையுடனின் னுமைத்தைப்புகழ்ந்து சிறப்பாய் கும்மிப் பாடுதற்கு. 3

கோடானகோடி ஜனங்களுடன்வெகு மேளவாத்தியங்கள் தான்முழங்க, சந்தைபேட்டையினில் வீற்றிருக்கும் தாயைத்தே டிக்கும்மித் தமிழ்பாட. 4

மஞ்சளணிந்த திருமுகமுந்தாயே குங்குமபொட்டுடன் கஸ் தூரி, தங்கமுகத்தில் வெண்ணீறும்நீங்காமல் ஜோதிவடிவைப் பாருங்கடி. 5

திருக்கோவிலூர்மதுரு சந்தைப்பேட்டையினில் சதுராகவ ந்து அமர்ந்தவளை, சந்நதிமுன்பாக நின்றுக்கொண்டு அவளைச் சார்ந்துகும்மி யடியுங்கடி. 6

சர்க்கரைதேங்காய் தேன்கனியங்கொண்டு சந்நதிமுன்பாகத் தான்படைத்து, பத்தர்கள்பூசிக்குங் கெங்கையம்மாளை பகர்ந்து கும்மி யடியுங்கடி. 7

கெங்கையெனும்மாது தன்னைநோக்கியாரும் கையிலெடுத்து ள்ளே தியானம்பண்ணி, தங்காமல்கெங்கை சன்னதிமுன்பாகச் சார்ந்துகும்மி யடியுங்கடி. 8

கருதுஞ்சுருதிக் கெட்டாதகெங்கை மாதுசன்னதிமுன்பாக விஸ்தாரமாக நின்றுக்கொண்டு கையை வீசிக்கும்மி யடியுங்கடி.

சுற்றிவந்துவரங் கேளுங்கடி அவள் ஜோதிப்பிரகாசத்தைப் பாருங்கடி, தத்துவங்கள்தொண்ணூற் றுருங்கூடியவள் பக்தர்ச
பையைப் பாருங்கடி. 10

தூயமறைமுத லாராய்ந்துயிங்கே துலங்கியபக்தர் யாவர்களும், ஞாலம்பொருந்திய கெங்கைசன்னதியில் நாடிக்கும்மி யடி
யுங்கடி. 11

அன்னமும்பால் தேன்கனிசர்க்கரை அபிஷேகஞ் செய்யும் பக்தர்களே, அன்புடன்யாவரும்தென்புடன்கூடி அசையக்கும்மி
யடியுங்கடி. 12

தீராதவல்வினை தீர்ப்பதற்காகவே தென்புடன்வந்து அமர்ந்தவளை, சீராகயாவரும் நேராகக்கூடி சிறப்பாய் கும்மி யடியுங்
கடி. 13

கோவிலழகைச் சொல்லிமுடியாது கொம்பனையாள் மாது ஆலயத்தை, கோடானகோடி ஜனங்களுங்கூடி கும்மியடிப்புதை
பாருங்கடி. 14

நெற்றியில்திலர்தம் ஜோதிமின்ன அவள் நேர்விழிகண்கள் முகம்பார்க்க, நேராகயாவருஞ் சீராகக்கூடி நேர்த்தியாய் கும்மி
யடியுங்கடி. 15

கையில்கடகம் பளபளெனத்தங்க பதக்கம்கழுத்தில் ஜோதி மின்ன, பக்தர்கள்பூசிக்கும் கெங்கையம்மாளை பகர்ந்துகும்மி
யடியுங்கடி. 16

அரையில்வொட்டியாணம் ஜோதிமின்ன அவள் அன்பர்கள்யாவரும் சூழ்ந்துவர, அன்பாகயாவரும் தென்பாகக்கூடி அசை
யக்கும்மி யடியுங்கடி. 17

பாதச்சிலம்பு கலகலென பக்தர் பஞ்சாக்ஷரத்தை எடுத்துரைக்க பாபரகித பக்தர்கள்யாவரைப் பணிந்துகும்மி யடியுங்கடி.

காணிக்கைகொண்டு வருவாரும் அவள் பக்தர்சபையை நாடுவாரும், மாணிக்கமாகிய கெங்கையம்மாளை மகிழ்ந்துகும்மி யடி
யுங்கடி. 19

இப்படியாகவே அற்புதமாகவே ஒப்பில்லாகெங்கையை தப்பிதமில்லாமல், இன்பமாய்யாவரும் தென்புடன்கூடி இசையக்கு
ம்மி யடியுங்கடி. 20

சித்தம்கெங்கையை நாடுதடியடி சின்மயானந்தம் பெருகுதடி, மங்களமாகிய கெங்கையம்மாளை மகிழ்ந்துகும்மி யடியுங்கடி.

குஞ்சிதபாதத்தைக் கண்டேனடி யென் குறைகளைதீர்த்துக் கொண்டேனடி, அஞ்சாமல்யாவரும் நெஞ்சினில்நினைத்து அசை
யக்கும்மி யடியுங்கடி. 22

பக்தர்சபையைக் கண்டேண்டி அவள் சன்னதிமுன்பாக நின்றேண்டி மங்களம்புகழும் கெங்கைவாசலில் வாழிப்பாடுவோம் வாருங்கடி. 23

கேட்கும்வரத்தைக் கொடுப்பவளாம் இகட்சிப்பவரைக் கெடுப்பவளாம், தாட்சியில்லாமலே கெங்கையின்பாதம் தாழ்ந்து கும்மி யடியுங்கடி. 24

இன்பமதாகவிக் கும்மிதன்னையெடுத்து இயம்பியபக்தன் பவானியை, நன்பர்கள் யாவரும் இன்பமதாகவே நாடிக்கும்மி யடியுங்கடி. 25

இச்செகந்தன்னிலே கெங்கையைநாடி யேழையேன்பாடிய கும்மிதன்னில், குற்றங்குறைக ளிருந்தாலும் பிழை பொருத்துக் கும்மி யடியுங்கடி. 26

எத்திசைபோற்றிடும் கெங்கையம்மாளை யேற்றி தொழுகும் பெரியோர்கள், போற்றித்தவஞ்செய்யும் சித்தர்கள்யாவரும் பொருத்துகும்மி யடியுங்கடி. 27

மாதமும்மாரி பொழிந்திடவே இந்த மானிலமெல்லாம் தழைத்திடவே, காசினியோர்கள் சிறந்திடவேதமிழ் கற்றவர்கேட்போர் மகிழ்ந்திடவே. 28

இக்கும்மிதன்னை யெடுத்துப் படிப்போர்கள் இன்பமாய்ச் சொல்லி கேட்பவர்கள், பாட்டைத்துலைத்தோம் பாதையைவிட்டு பதவிபெற்றுநீ டுழிவாழ்வார். 29

ஆலதுபோலத் தழைத்தோங்கி என்றும் அருகுபோல் வேரோடி சீலமுடன், அவர்சுற்றங்களுட னேசிறந்துமென் மேலும் வாழி வாழியதே. 30

வாழி விருத்தம்.

கார்வாழி கதிர்மதியி னுடுக்கள்வாழி
கந்தனுக்கு முன்பிறந்த கணபதியும் தான்வாழி
தங்ககிரீடம்பூண்ட தாயெனும்சரஸ்வதியுந் தான்வாழி
யெங்கும்புகழ்பெற்ற கெங்கையம்மனும் தான்வாழி
பேர்வாழி பெரியோர்கள் தானும்வாழி
பேசிடும் சாஸ்திரங்க ளெல்லாம்வாழி
ஊழ்வாழி ஊரிலுள்ளோர் தானும்வாழி
உற்றகலை சிவகாமி விலாசம் சாலைவாழி.

கெங்கையம்மன் கும்மி

முற்றிற்று.

உ

தெய்வமேதுணை.

சிறுமணவூரென்று மருவும்
செழுமணவை

# ஆரூரம்மன்
## தோத்திரம்.

ஆசிரியவிருத்தம், போற்றிப்பத்து, சரணப்பத்து,
இவைகள் அடங்கியது.

இஃது,
ஷை சிறுமணவூர்
**முனிசாமி முதலியாரால்**
இயற்றப்பட்டு,

தமது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1908.

41



உ

தெய்வமே துணை.



சிறுமணவூர்

# ஆரூரம்மன் தோத்திரம்.



## கணபதிதுதி.

அஷ்டசத்திக் கதிபதியாகிய
இஷ்டசித்திக் கிறைவனைப்போற்றுவாம்.

## நேரிசைவெண்பா.

சென்னல் செழிக்குஞ் செழுமணவை யம்பதியில்
மின்னல் கொழிக்க மேவுவா—ளன்னையுமை
ஆரூரழகிப் பொன் னடிபோற்றும் பாவாண
ராரும் பிணியகலு வார்.

## ஆசிரியவிருத்தம்.

பூரணச்சந்த்ரோதயம்போலிலங்கியவருட்பொழிகின்றகருணைமுகமும், பூத்தமலர் மாலைதிகழ் மணமும் பளிச்சென்றுபொட்டிட்ட நெற்றியழகும், வாரணிக்குங்கும புயாசலத் தழகுமேல் வச்சிரமாங் கல்யவழகும், வைரமா ணிக்கச் சரப்பளிபதக்கமும் வர்ணபட் டாடையழகும், நாரணர்க்கிளையபே ரழகும் சிவத்தோடு நண்ணுமிட பாகவழகும், நான்முகன் அறுமுகன் யானைமுகனைப்பெற்று நாளுங்குளிர்ந்தவயறும், சீரணிதுலங்கவரு நாரணி காரணிஜெகமெலாம்பரிபூரணி, செழுமணவைமிகுசெம்மை செயநின்ற யெனதம்மை செல்வியா ரூரம்மையே.

உத்தம குணத்திசிவ சத்திபர முத்தியெழி லும்பர்கள் தொழும்பதத்தி, யுசிதசி தக்கமல மலர்முக வலங்காரி ஒப்பிலாப் பரமேஸ்வரி, நித்தியகல் யாணகுண மங்கள சுமங்கலி நிர்மலி நிதானிகௌரி, நீதமறையோதும் படிக்குதவு முபகாரி நீங்காத கருணாகரி, சத்திய வசனத்திசிவ போகசாம் ராச்சிய சதாநிஷ்க் களங்கயோகி சாதனை சதுஷ்டிய மிலாதபுன் மொழியுஞ் சகித்துகாத் தருள்குமாரி, சித்தாதி முத்தர்தொழு வித்தாரகா

ரணி ஜெகமெலாம் பரிபூரணி, செழுமணவை மிகுசெம்மைசெ யநின்ற யெனதம்மை செல்வியா ரூரம்மையே. (௨)

அற்புத சுகந்தமண மலர்பரி மளத்தழகி யழியாத கீர்த்தி யழகி, அண்டமுக டதிர்மேள வாத்தியச் சிங்காரி அதிவீரி கௌரிமாரி, கற்பூரசாம்ராணி யழகிபற் பலதேவர் கவிவாணர் போற்றுமழகி, கடகசு கங்கணவழகி யகிலபுவ னங்களுங் கார்த் துரட் சிக்குமழகி, தற்பர நிடப்புரத் தழகிபுவ னேஸ்பரி தயா நிதி விசாலநேத்திரி, தன்னிகரி லாதமென் மேலலங் காரிவெகு தாட்சண்ய முள்ளவழகி, சிற்பரி பராபரி புராதனி காரணிஜெ கமெலாம்பரிபூரணி, செழுமணவை மிகுசெம்மை செயநின்ற யெனதம்மை செல்வியா ரூரம்மையே. (௩)

என்னென்று சொல்லுவேன் யானுமொரு பிறவியென் றே னெடுத் தேன றிகிலேன், யெள்ளளவு நல்லகுண மில்லையேதொ ல்லையே யென்றுஞ் சுமந்தமிடியேன், பொன்னையே மதித்துவா ணாளெலாம் வீணா போக்கிலே போகவிட்டேன், பொய்யினே ன் மெய்யிலே ஊனையயோ யென்செய்வேன் புழுத்தமர மான கொடியேன், உன்னையே நம்பினேன் பின்னெனக் காருமிங்குற் றதுணை யில்லைகண்டாய், உள்ளபடி யிம்மொழியில் கள்ளமே யில்லையா னுன்கடமை காருமம்மா, சென்னியொரு நான்குடை யவன்பரவு காரணிஜெகமெலாம் பரிபூரணி, செழுமணவை மிகுசெம்மை செயநின்ற யெனதம்மை செல்வியா ரூரம்மையே.

உள்ளபடியிவ்வுட லெடுத்தபின் மன்னுயிர்க் கொருதுய ரிழைத்துமறியேன், உருப்பெரா முன்னிழைத் திட்டமா வினை யென் றுரைக்கப்பே ருரவுமில்லேன், கள்ளமன மோடும் படிக் கோடி யுலகைக் கலந்துத்திரிந்ததரிவேன், கல்லேருமரமென்ன வினையேரி யுடல்நொந்த காலத்தி லுனையடுத்தேன், தெள்ளுமறை மேலே தெளிந்தாடு தீபமே தெய்வகைலச்சிகரமே, தேனூ ரு குமுதவாய் ஞானோப தேசமே தெகிட்டாத யோகவாழ்வே, செல்வச் செருக்கருளும் வல்லியுமை காரணி ஜெகமெலாம்பரி பூரணி, செழுமணவை மிகுசெம்மை செயநின்ற யெனதம்மை செல்வியா ரூரம்மையே. (ரு)

மெய்யென்று மருவுபே ருடையபொய் யுடலிதனை மெய்யாய் நினைந்துமேலும், மேதினியின் மூவாசை யாலறிவுதடுமாறி வேடிக்கை யாய்த்திரிந்து, தையலர்க் கேவலா ளாகிக் கிடந்துமோர் சார்பும் பெறுமல்கெட்டுத், தாங்கொணு வூழ்வினைக் காளாய் மெலிந்தவென் ருழ்மையிங் கார்க்குரைப்பேன், தெய்வங்களுக்கெலா மேலான தெய்வமே தேவசாம்ராச்சியமுதலே, திக்கற்ற பாவியென் ருேலமிடு மடிமையென் றீவினையகற்றுமம்மா, செய்யமா மறையாதி முடிவான காரணிஜெகமெலாம்பரிபூரணி செழுமணவை மிகுசெம்மை செயநின்ற யெனதம்மை செல்வியா ரூரம்மையே. (சு)

உத்தம ருரைத்ததல மெத்தனைக ளத்தனையு மோடித்திரிந்துவந்தேன், ஊழ்வினை யகற்றுமா தீர்த்தமென் ருேதுபலஉதகமெல்லா மூழ்கினேன், எத்தனை விதத்துலக தெய்வத்தை வேண்டுவே னெள்ளள விரக்கமறியேன், யினிவேறு தலமேற மனமீறு தில்லையஃ தென்னென்று வினவுமளவில், அத்தனுலகுங் கமல வண்ணனுல குந்தேவ ரரியதிரு மாலினுலகும், அன்னையென் றுன்னையே பன்மறை விதித்தலும் ஆதிநீ யானதாலும், சித்தங் களித்தெனைக் கார்த்தருள் காரணி ஜெகமெலாம் பரிபூரணி செழுமணவை மிகுசெம்மை செயநின்ற யெனதம்மை செல்வியா ரூரம்மையே. (எ)

பூததயை யற்றென்ன பாதகமிழைத்தனோ பூர்வஜென்மத்துவினையோ, பொல்லாத காலமோ கிரகநடை கோலமோ பகைஞராற் செய்தவிதமோ, தீதான வுடலைத் துடர்ந்தவினை யோயெந்த தெய்வகோ பத்தின்செயலோ, தீராதவினையென்ப துலகத்தி லுள்ளதோ தேவினீ தீர்ப்பதரிதோ, மாதாபிதாவேறு திக்கில்லையென்றென் மனச்சாட்சியாய்நம்பினேன், மற்றெங்கு செல்லுவேன் சற்றே கடைக்கணுல் மைந்தனைப்பாருமம்மா, சீதா சமேதஸ்ரீ மாதவன் தங்கைநீ ஜெகமெலாம் பரிபூரணி செழுமணவை மிகுசெம்மை செயநின்ற யெனதம்மை செல்வியாரூரம்மையே. (அ)

பாராள வேணுமென் ருசிக்க வில்லையே பாக்கியங்கேழ்க்கவிலையே, பலவேறு வரமென்று மன்ருட வில்லையே பாவியென்

கேழ்வியெல்லாம், தீராமலென்னுடலில் போராடு கின்றவினை தீர்த்துகார்த் தருளம்மணி, தீனரட்சகியென்று பேர்பெற்றசெல்விநீ திவ்ய கோமளரூபினி, ஆராலுமரியாத ராஜராஜேஸ்வரி அகிலம் படைத்தகௌரி, அணுவளவு நீகிருபை செய்தளவிலெந்தனுட லழியாத பொன்னாகுமே, சேராடு குங்குமச் சிங்காரகாரணி ஜெகமெலாம் பரிபூரணி, செழுமணவை மிகுசெம்மை செயநின்ற யெனதம்மை செல்வியா ரூரம்மையே. (௯)

இப்படியி னுன்னடைக் கலமென்ற பேருக்கு யிருளான மாய்கையேது, எதிரொருவர் தானேது விதியேது வினையேது யின்னமொரு கிரகமேது, தப்பான நோயேது பிணியேது சனியேது தலைநா ளிழைத்ததேது, தயவற்ற பகையாளர்செய்வினைகளேதுலகில் தாரித்ர மென்பதேது, அப்பநீ யம்மைநீ அன்பானவுரவுநீ யாவுநீ யென்றடுத்தேன், அடியேனுடற்பிணி துடைத்தென்னையாளாக்கி யடிமைகொள வேணுமம்மா, செப்பரிய முப்பத் திரண்டறக் காரணி ஜெகமெலாம்பரிபூரணி, செழுமணவை மிகுசெம்மை செயநின்ற யெனதம்மை செல்வியா ரூரம்மையே. (௧0)

மங்களமிலங்குமுன் திருநாமம் வாழிமா மகிமையுலகெங்கும்வாழி, மறையாதி யாகமக் கலையெலாம் புகழ்கின்ற மலர்பாத கமலம்வாழி, சிங்கவா கனம்வாழி முத்தியாலு ராவுத்தர் ஜெயவீரர் தானும்வாழி, சென்னலொடு பன்னெனுந் தேங்குமா பூகமுஞ் செறிமணவை வயலும்வாழி, அங்கந் தளர்ந்துனைப் போற்றுமடி யாரெலா மனுக்குறைவு மற்றுவாழி அவ்வடியர் கூட்டத்து ளடிமை முனிசாமிக்கு மருள்தர நினைப்பையன்றோ, செங்கமல பீடத்தி லங்குசிவ காரணி ஜெகமெலாம் பரிபூரணி, செழுமணவை மிகுசெம்மை செயநின்ற யெனதம்மை செல்வியா ரூரம்மையே. (௧௧)

## ஆரூரம்மன் ஆசிரியவிருத்தம்

முற்றிற்று.

---

# ஆரூரம்மன்பேரில்

## போற்றிப்பத்து.

மதிமுகத் தழகிலோக மண்டலேஸ் பரியேபோற்றி
நிதிபெருந் திருமணாளன் நேரிளங் குமரிபோற்றி
கதியுனையன் றியில்லேன் கைலைநா யகியேபோற்றி
பதியினிற் சிறுமணூர்வாழ் பார்வதி போற்றிபோற்றி. (க)

வேதியன் முதலாய்மற்ற விண்ணவர்க் கரசிபோற்றி
பாதிமா மதியோன்றேகப் பங்குடை யவளேபோற்றி
நீதியங் கருணைவாழ்வே நித்தியகல் யாணிபோற்றி
ஆதியே ஆரூர்காக்கு மம்மணி போற்றிபோற்றி. (உ)

ஓதரு முலகுக்கெல்லா மொருத்தியே வுமையேபோற்றி
மாதவ முனிவர்தாழு மலர்பதத் தழகிபோற்றி
பாதக மிழைத்தவெந்தன் பழவினை தீர்ப்பாய்போற்றி
ஸ்ரீதரன் தங்கையாரூர் செல்வியே போற்றிபோற்றி. (ங)

கருணையெப் போதுநீங்காக் கண்ணுடை யவளேபோற்றி
அருணனுயிளையோன்றாழு மம்புயக் கமலம்போற்றி
ஒருதுணை யில்லேனெந்த னூழ்வினை தீர்ப்பாய்போற்றி
நருமணங் கமழுமாரூர் நாயகி போற்றிபோற்றி. (ச)

சேடனை யாழியென்னச் சிறுவிர லணிந்தாய்போற்றி
தேடரு சிம்மமூர்ந்த திரிபுரை புவனைபோற்றி
நாடரு முயிர்கட்கெல்லாம் நாயகி நடனிபோற்றி
பீடரு மாரூர்காக்கும் பகவதி போற்றிபோற்றி. (ரு)

சென்னியா ருடையதேவைச் செனித்துகண்களித்தாய்போற்றி
பன்னரு முலகுக்கெல்லாம் பற்பல ரூபிபோற்றி
தன்னிக ரில்லாத்தேவி தற்பரை காளிபோற்றி
இன்னிலத் தாரூர்காக்கும் ஈஸ்வரி போற்றிபோற்றி. (சா)

வானுலகத் தோர்க்கெல்லாம் வாழ்வளிப் பவளேபோற்றி
மீனமாந் துவசனுக்கு மாமினீ வாமிபோற்றி
நானுமோ ரடிமையெந்தன் நலிதுயர் தீர்ப்பாய்போற்றி
தேன்மொழி யாரூர்காக்குந் திரிபுரை போற்றிபோற்றி. (எ)

புட்பக விமானமேரும் பூம்பதத் தழகிபோற்றி
துட்டனு மகிடனுக்கை துலைத்தமுக் கண்ணிபோற்றி
இட்டார மடியார்பங்கி லிடைவிடா திருப்பாய்போற்றி
மட்டிலா வாரூர்காக்கும் மகேஸ்வரி போற்றிபோற்றி. (அ)

மூவரு முனிவர்மற்றமூர்த்திகண் முதல்விபோற்றி
சேவலங் கொடியோனன்னை ஜெகமெலாம் பெற்றாய்போற்றி
காவியங் கண்ணிபுண்ய கமலநாயகியேபோற்றி
பாவமில் லாரூர்காக்கும் பராபரிபோற்றிபோற்றி. (௯)

அத்தியை யீன்றானந்தத் தகங்களித் தவளேபோற்றி
சித்தியுஞ்செல்வமீய ஜெகமெலாம் நிறைந்தாய்போற்றி
சத்திய மாகநின்றாள் சரணமென் றடைந்தேன்போற்றி
நத்திய வாரூர்காக்கும் காரணி போற்றிபோற்றி. (௧0)

ஆரூரம்மன் போற்றிப்பதிகம்

முற்றும்பெற்றது.



# ஆரூரம்மன் சரணப்பத்து.

வாடா மலரே மணமே சரணம் வானோர்பணியும் மணியேசரணம்
கோடா வதனக் குமரி சரணம் குமரக் கடவுட் கரமேசரணம்
தேடாமுதலே திருவே சரணம் தேனே மானே தேவி சரணம்
ஓடா வுதகத் துரவார் மணவூர் உமையே சரணஞ் சரணம் சரணம். (௧)

கண்ணார் மணியே கண்ணே சரணம் கருதக்கிடையா கனியே சரணம்
பண்ணார் வேதப் பயனே சரணம் பதியே நிதியே பலமே சரணம்
விண்ணார் பரவும் விளைவே சரணம் வேதப்பொருளின் வித்தே சரணம்
தண்ணார் பொழில்சூழ் மணவூர் மேவுந்தாயே சரணஞ் சரணஞ் சரணம். ()

மதியேர் சடையோன் மாதே சரணம் மலைநே ருருவத் தலைவி சரணம்
துதிசேர் பாதந் துணைசெய் சரணம் துரியாதீதத் திரைவி சரணம்
பதியேர் மாரி வீரி சரணம் பாராள் பரமேஸ் பரிநீ சரணம்
நிதிசேர் மணவூர் நிலைபெற் றொளிரும் நிமலி சரணஞ் சரணஞ் சரணம். ()

செல்வக் கிரியே செல்வி சரணம் சிவனுக் கொருவன் மணியே சரணம்
அல்லற் களையும் அருளே சரணம் ஆதி ஜோதி அரசி சரணம்
எல்லைக் கிடையா யிரைவி சரணம் ஈசர்க் கிடபா லொளிர்வாய் சரணம்
முல்லைக் கமழும் சிறுநன் மணவூர் முதல்வி சரணஞ் சரணஞ் சரணம். (௪)

தவமார் முனிவோர் தயவே சரணம் தவளக் கமலத் தாயே சரணம்
சிவமோ டுரையுஞ் சத்தி சரணம் சிவபோ கத்தின் சுகமே சரணம்
பவமே போக்கும் பதியே சரணம் பலதே வதையின் பலமே சரணம்
திவலைக் கொழியார் தழுவும் மணவூர் தேவி சரணஞ் சரணஞ் சரணம். ()

மருவே மலரே மணமே சரணம் மதியே ரதியே பொதுவே சரணம்
உருவே வுடலே உயிரே சரணம் உள்ளே புரமே வெளியே சரணம்
திரையே யலையே தெளிவே சரணம் தேனே பாகே சுவையே சரணம்
கரையற் றவர்சூழ் மணவூர் மேவும் கண்ணே சரணஞ் சரணஞ் சரணம். ()

ஞானக் கருணை நயமே சரணம் நரைவெண் மலரேர் பதமே சரணம்
மோனச் சுகமார் முதலே சரணம் முத்திக் குருநன் வித்தேசரணம்
வானம்புவியும் வாழ்வே சரணம் வசனத் தாரேர் வல்லி சரணம்
தீனக் குரவோர் திகழும் மணவூர் திருவே சரணஞ் சரணஞ் சரணம். (எ)

துளபத் தோளான் துணைவி சரணம் தொல்லைக் களையுஞ் செல்வி சரணம்
களபக் கலவைக் கமலி சரணம் கதியென் றவரைக் காப்பாய் சரணம்
திலர்தத் தொளிசேர் வதனி சரணம் ததியென் றிடுமென் றிடர்தீர்சரணம்
வளமுற் றிடுநன் மணவூர் மேவும் வாழ்வே சரணஞ் சரணஞ் சரணம். (அ)

உலகீ ரேழுக் கொருதாய் சரணம் உம்பர்த் தொழுசங் கரியே சரணம்
தலமெவ் வுயிருந் தந்தாய் சரணம் தமியேன் வினைதீர்த் தாள்வாய் சரணம்
நிலமெங் கணுமே நிறைவாய் சரணம் நிதியே கதிவே றிலையுன் சரணம்
நலமே கொழியும் மணவூர் மேவும் நடுவே சரணஞ் சரணஞ் சரணம். (கூ)

இனியா ரையுமே வேண்டேன் சரணம் யானுன் னுடமை யடிமைசரணம்
பனிபோல்வினையைத் தீர்ப்பாய்சரணம் பதமேநிதமேதொழுவேன்சரணம்
கனியே கனவின் காட்சி சரணம் கண்டேனினியுன் கடமைசரணம்
தனியேன் சிறுநன் மணவூர் மதலைத் தானே சரணஞ் சரணஞ் சரணம்.

## ஆரூரம்மன் சரணப்பத்து.

முற்றுப்பெற்றது



உ

கடவுள் துணை.

# வாணியம்பாடியின்
# வெள்ளம்

முதற்பாகம்.



இஃது,

சூளை-முனிசாமிமுதலியாரா

லியற்றியதை

சென்னை ஜூனை,

தனலக்ஷ்மிநிர்த்தன அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.

1904



௮

கடவுள் துணை.

# வாணியம்பாடி வெள்ளம்.



விநாயகர் துதி-வெண்பா.

சித்திக்கும் புத்திக்கும் செய்ததமிழ்பாடலுக்கும்
முத்திக்குமுன்னிர்க்கும் முதலோனே-வித்தரையில்
வாணியமபாடிநகர் வகைதப்பிபோனதினால்
பாடினே னிக்கதைகண் பார்.

தெம்மாங்கு.

மங்கைக்குழலழகி மாந்துளிர்போல்வடிவழகி
சங்கையிலாவாணியம்பாடி சஞ்சலத்தைக்கேட்பமடி. (ந)

அலங்காரம்.

ஈசனருளால்பிறந்தோமடி யெடுத்தஜனனமழிவதோடி
காசிபணத்தைதேடநாடி கண்டுஅலேவர்கோடாகோடி.
பொன்பொருளுமவருவதில்லே பிள்ளைகள்கூட துடர்வதில்லே
கண்டுயேமன்வந்துவிட்டால் கடுகியோடிமருப்பதில்லே
பிள்ளைகளாட்டம் போவதுவோட்டம்
சகதையின்கூட்டம் சஞ்சலவாட்டம் (ந)

தெம்மாங்கு.

யித்தனேஜென்மத்திலும் யெடுக்கரிதுமானிடமே
கர்த்தனேநீநினேயாவிட்டால் காட்டில்வாழுமிருகக்கூடே (ந)

அலங்காரம்.

யிப்பபோமோபின்னேபோமோ யிரவுநங்கி நாளைபோமோ
செப்புமாதர்மயலிலழிந்தி சேர்குழியின்றிணத்தால்போமோ
காடுமரங்களடியில்போமோ கண்டநீரால்கொண்டுபோமோ
வீடுதிண்ணை தீயில்மாண்டு வெந்துசாம்பலாகிப்போமோ
பெரியோர் வாக்கின் மொழியைப்பாடு
பேணிப்பார்த்து அருளைத்தேடு (ந)

தெம்மாங்கு

யிப்படியாய்மானிடவர் யெண்ணிபார்த்துகுண்ணிடாமல்
கைப்பிடியாயுயிர்தனேயுங்காலே கொண்டுபோகிறானே (ந)

அலங்காரம்.

பஞ்சக்காலேசிலருண்டார் பாழுஞ்சுரத்தாலனேகர்மாண்டார்
மிஞ்சிவாங்கிபேதிகண்டு மெத்தஜெனங்கள்செத்துமாண்டார்
ஊழிக்காற்றின்பிளேக்கினாலும் ஓடிந்தரெயிலின்மேலத்தாலும்
ஆழியானஜெலத்தினாலும் அழிந்துஜெனங்கள்மிகவேமாண்டார்
யிப்படிமாண்டும் யெண்ணியோரார்
அற்புதக்கடவுளடியைத்தேடார் (ந)

தெம்மாங்கு.

சென்றதொருவருஷமதில் சென்னைரயில் தானொடிந்து
மங்கப்பட்டணமதனில்வீழ்ந்து மாண்டஜனமகணக்கிலுண்டோ

அலங்காரம்.

தொண்ணூற்தெட்டில்காலேஜிக்குள் துகையாய்ஜெனங்கள்கரிகிமாண்டார்
அந்தமானஸ்ரீகளாலே அனந்தங்குடைகள்கடத்திசெத்தார்
கண்டஊராம்கடப்பைதேசம் கனத்தவெள்ளப்பெருத்ததாலே
தங்கினவிடுபாழாய் தரையாயூருங்கிடப்பதாலே

குடிகளழுதார் பொருளையிழந்தார்
ஆடுமாடை தோற்றழுதார் (ந)

தெம்மாங்கு.

தர்மகுணசிமானவர் சர் யெஸ் ராமசாமி
ஆனபுள்ளமுதலியாரும் ஆனபொருள்சிலவுசெய்தார் (ந)

துணியளித்தார்மணியளித்தார் துண்ணுமுணவுக்கமுதளித்தார்
சிரியகுழந்தைபால்கொடுத்தார் தேவனைப்போல்பேரெடுத்தார்
ஏடல்லாசொல்நாகமமாளும் யெருதுவண்டியிலன்னமேத்தி
தாகம்பசியைத்தீர்த்தபோது தக்ககுடிகள்மனதேபூர்த்து

ஈசனவர்க்கு அருள்தருவார்
யென்றுங்குறையா பொருள்தருவார்

தெம்மாங்கு.

வீடுகளில்ரெண்டாயிரம் வெள்ளங்கொண்டுபோனதினால்
ஆடுமாடுபொருளொழிய அன்பர்குடிசாவில்லேதான் (ந)

அலங்காரம்.

பகலில்வெள்ளம்மிகுதிவந்து பாழாய்விடையுடைத்துத்தள்ளி
கருதியானமேடைமீது தங்கக்குடிகளோடி துள்ளி
பெண்டுபிள்ளை துணியிழக்க பெற்றதாயார்கைபிடிக்க
அண்டிருந்தமேடைமீதில் அன்பரோடி தங்கிநிற்க

மாடுபோச்சு வீடுபோச்சு
மற்றுமுள்ளசாமான்போச்சு (ந)

தெம்மாங்கு.

யிந்தனை துன்பமதில் யெண்ணரியா துன்பமடி
பத்தினியேவாணியம்பாடி பாழானசேதிபோடி

அலங்காரம்.

சொல்லவென்றால்குலைநடுங்கும் சேதிகேட்டால்மனமோகுன்னும்
அல்லவென்றயெழுதப்போனால் கையுங்காலும்மிகநடுங்கும
ஆற்றெனுதஜெனங்களுண்டு அதிலேபாழியிறந்ததுண்டு
சேத்திலசபங்கள் புதைந்ததுண்டு சீராய்கணக்கையெடுக்க தண்டு

மந்திபாகம்யெழுதிவிட்டேன்
பின்னால்ரெண்டாமபாகம்சொல்வேன் (ந)

இராகம் நாதநாமக்கிரியை ஆதிதாளம்.

பல்லவி.

இதுயென்னகாலம் வாணியம்பாடிபோன
அனியாயக்காலம்

அநுபல்லவி.

காலமென்றால்காலம் நீராலிரக்குங்காலம்
கொண்டமனைவிபிள்ளை கூண்டோடழியுங்காலம் இது

சரணங்கள்.

ஆயிரத்துலாயிரத்தினில் மூன்றுமாண்டினில்
அடுத்தநவம்பர்மாதம் கொடுத்தமாதமுதல்
நேயமாய்வருணனும் யிடியும்முமரல்கொண்டு
நேர்ந்தபத்துநாளும் பெய்ந்தமழையினாலே
உலகெங்குமவெள்ளம் பிரளயகாலம்போல்
தோண்டிற்றேபள்ளம அய்யோ
ஆடுமாடுகள்சாமான் அடித்துக்கொண்டோடவும்
அப்புரம்ஜெனத்தொகை வெள்ளத்தால்மாளவும
நேயமாய்ரெயில்கப்பி ஜெலத்தினுல்மூடவும
நின்றமரங்களெல்லாம் வேருடன்முரியவும்
இதுவென்னகாலம் அனியாயமாய்ஜெனம்
சாகவோனேரம் அய்யோ
வாணியம்பாடிக்கி மேற்கேமைகூறெனபார்
வாகானமங்கலம் யேரியென்றுகூர்வார்
நீடித்தஜெலமதில் மேவிப்பிடிக்குமென்பார்
நிலைதப்பியுடைந்தாலே ஊரேமுழுகுமென்பார்
உடைந்ததுபாரு யேரியின் அணைக்கட்டு
கரைந்ததுநேரு அய்யோ
பாலாற்றின்வெள்ளமோ மேலாய்பெருகியோட
பண்பாகயேரிநீர் ஒன்றாய்வந்துகூட
மேலானகனவெள்ளம் நிரோசுழல்கொண்டோட
நேர்ந்தவாணியம்பாடி ஊரேதனையாய்போக
முடித்தானேபாவி சனியன்குடிகளுக்கு
பிடித்தானேதோஷி அய்யோ
குடிகள்பரவையெலலாம கூச்சலடங்கிப்போச்சி
கும்புகும்பாய்ஜெனம வீட்டிலுரங்கலாச்சி
கடைஷாப்புஆபீசும் கதவையடைக்கலாச்சி
கண்டஜெனங்களெல்லாம கொண்டுநித்திரையாச்சி
நடுஜாமவேளை புதவாரம்பிரவென்று
சொல்வார்கள்மாலை அய்யோ
புருஷன்பெண்சாதியும் பேசியுரங்குவோரும்
பெற்றதாயைக்கட்டி நித்திரைபுரிவோரும்

அடுத்ததெருத்திண்ணை படுத்துவுறங்குவோரும்
அண்டிசொர்ப்பனங்கண்டு கண்டுமுழிப்போரும்
கண்டானேயேமன் சமயம்சமயமென்று
வந்தானேகாலன் அப்போ

சந்திலும்பொந்திலும வந்துஜெலசுருக்கம்
சதுரானபாலாரில் வெள்ளமிகநெருக்கம்
சிந்தைகலங்கவெள்ளம் நீரோசுழல்பெருக்கம
சேர்ந்தவாணியம்பாடி ஊரோமிகவேபள்ளம்
வந்துதேபாருபிரளயகாலமபோல்
புகுந்துதேநேரு அய்யோ

சென்னப்பேட்டையது சீரூய்முழுகிப்போச்சி
சேர்ந்தஆமூர்பேட்டை பாழாயழியலாச்சு
நின்றகோவிந்தபுரம் நீரால்மறைந்துப்போச்சு
நீடித்தவாணியம் பாடிதரையோடாச்சி
ரகியானின்பேட்டை பெரியப்பேட்டைகோட்டை
அழிந்துதேபாட்டை அய்யோ

ஆஸ்பத்திரிமேல்வெள்ளம அளந்தால்பத்தடிஜெலம்
அதன்பினபுகோட்டைக்குள ஜெலத்தாலவீடுகள்நாசம்
மேவிகச்சேரிக்குள் ஆள்ஜெலம்வெகுமோசம்
மேலும்நாகத்தாளி மண்ணுமேகுடிவாசம்
பிரேதங்கள்கூடடம வயருப்பிணாத்தங்கள்
ஊரெங்குமவாட்டம அய்யோ

தந்திகம்பிகளெல்லாம் துண்டுதுண்டாய்போச்சு
தாழ்ந்ததோர்போஸ்டாபீஸ் நீரால்மறையலாச்சு
நின்றஸ்டேஷன்மாஸ்டர் குடியோடுமுழுகிப்போச்சு
நேர்ந்தவாணியப்பாடி ஸ்டேஷனழியலாச்சு
அய்யய்யோபாவம் பிர்மன்விதித்தவிதி
அனியாயக்கோலம் அப்போ

வகைதப்பிவழிவிட்டு ஓடிமாண்டார்சிலர்
வாரைசுவர்ஒட்டால் வாதைப்பட்டார்பலர்
யிடித்தவீட்டின்கீழே நசிங்கிமாண்டார்சிலர்
யெட்டிநாகத்தாழல் ஒட்டிக்கிடந்தார்சிலர்
யிதுயென்னகோரம் யிப்படிஜெனம்செத்தால
ஆகுமோபாவம அய்யோ

புருஷன்பெண்ணுடைக்கட்டி போச்சுதென்றழுவாரும்
பின்னால்வெள்ளமவந்து தள்ளாடிவிழுவாரும்
வரிசையாய்நின்றமே வாடியழுவாரும்
வந்தவெள்ளத்தினில் மூழ்கியிறந்தோரும
யிதர்க்குள்ளேகுடிகள் காச்சுமூச்சென்றமே
விழித்தார்கள் நரர்கள் அய்யோ

ஆங்கங்கேபிணங்களும் கும்புகும்பாய்தூங்க
ஆனதோரசேத்தினில் தாவிப்புதைந்திருக்க
பொங்கமுடன்பிள்ளை பெத்தோர்பிடித்திரக்க
யோட்டநகையுடனே வீட்டில்மடிந்திருக்க
யிப்படியுண்டோ யிசனவனிருக்க
அழிவதுமுண்டோ அய்யோ
யேரிகுளங்களெல்லாம யெடுத்துப்பிணத்தைப்போட
யெட்டிப்பார்த்தவீட்டில் மிக்கசபத்தைக்காண
காடுமேடுகள்பிணம கண்டுமனமேவாட
கண்குரிதெரியாமல் திரேகம்வூதல்காண
யிப்படிமாண்டார்பெண்ணிலாசிலபிணம்
நகையுடன்சேர்ந்தார் அய்யோ
ஆயிரத்திரனூரு வீடுகள்மிகுகஷ்டம்
அதற்கேத்தலக்ஷத்தின் பொருள்களால்தான்கஷ்டம
மேலியிரத்தபிணம் கணக்கிடவெகுகஷ்டம்
மேலானமகம்மது கோஸ்சாகிப்பவர்கஷ்டம்
சொல்லவுமபோமோ அவர்பட்டகஷ்டத்தை
விள்ளவுமாமோ இப்போ
வீடுபொருளழிந்து வேதனைப்படுவாரும்
விந்தையானதிரேகம நொந்துமேயழுவாரும்
ஆகரவற்றுமே ஆஸ்பத்திரிபோவோரும்
அன்புடன்பிணங்களை மண்குழிசேர்ப்போரும்
இதுவென்னகாலம வாணியமபாடிபோன
அனியாயக்கோலம கும்மி.
கும்மியடிப்பெண்கள் கும்மியடியுஙகள்
கொண்டைகுலுங்கவே கும்மியடி
செம்மையாயிருந்தவாணியம்பாடியும்
சீரழிந்தகதைகேளுங்கடி. 1

சீபெறறயிங்கிலீஷ்கொடிபரக்கஉலகில்ஜெகமெங்குப்திரால்நிறைந்திருக்க,காரணமாகவேயிப்படிவந்ததை,கண்டுதெரியவேசொல்லுங்கடி.

பாலாற்றில்நீரோ மிகப்பெரிகிபின்னால், பண்பாய்அணைக்கட்டுதானுடைந்து, கோலாகாலமாய் ஊருக்குள்நீர்வந்து, கொடுமைசெய்ததைப் பாருங்கடி 3

ஆத்துக்கருகாமை வூரதுவாமபாரு. அன்பாய்சுற்றிலுமநீரதுவாம பார்த்திருக்கவேயிரவிலவெள்ளம்வந்து,பண்பாயழித்ததைப்பாருங்கடி.

மகம்மதியர்கூட்டம் சீமான்கள்ஊரில், மாட்சிமைதங்கிய கோமான்கள், உலகம்புகழவே வியாபாரவூரென்று உச்சிதத்தைச்சொல்லி பாடுங்கள் 5

செட்டிகள்வர்த்தகம் மிகநடக்கும் ஊரில், சீரானகாசி பிரண்டிருக்கும், அத்தனைபொருளை பாழக்கிவருணன், அன்பாயழித்ததைப் பாருங்கடி. 6

கட்டியவீடெங்கும் பாழாச்சுவூரில், கடைகள்முழுதெங்ம குரோ
ச்சு, சுத்தியநாகத்தாளிகள் மண்ணுமே சீராய்நிரைந்து குடியாச்சு. 7

ஆமூர்மெயில்பட்டிசுத்திலும் இருமஙகள. ஆனதோர்வெள்ளத்
தால் தான்முழுக தாழ்ந்தகுடிகள் யிடந்தெரியாமலே, சஞ்சலப்பட்ட
தைப் பாருங்கடி. 8

மயில்பட்டுஸ்டேன் முழிகினதாமாஸ்டர், மனைவிகுழந்தை யிரந்
ததுவாம், பொருத்தமாகவே கூண்டுடன்குடும்பம்,போனசிங்காரத்தை
ப்பாருங்கடி. 9

வீடுகள்வீழ்ந்து சிதைந்தார்கள்குடி, வேதனைப்பட்டு யிரந்தார்
கள், ஆவலுடன்பிள்ளை தூக்கியெடுக்கையில், அப்பவேவெள்ளத்தால்
மாண்டார்கள். 10

நாக்கைக்கடித்து சிலறிரந்தாரங்கே, நாடியேசந்தில் புதைந்திரந்
தார்,கூட்டங்கூட்டமாகவீடுகள்வீழ்ந்து குமிங்கிசிந்ததைப்பாருங்கடி.

தம்பியண்ணனென்று தானழுவார்சிலர், தாயைப்பிரிந்தோமென்
றேயழுவார், முந்தியவீட்டையும்பார்த்தழுதுஜெனம், மோசமென்றுத்
தரைவீழ்ந்தழுவார். 12

தந்தைவைத்த பொருளென்றழுவார்சிலர், தாரத்தைவிட்டுப் பிரி
ந்தோமென்பார், முன்பின்தெரியாமல வெள்ளத்திலலைந்து, மூழ்கியே
செத்தாராம் பாருங்கடி. 13

பாவிவருணனால்துன்பப்பட்டுஜெனம, பதைக்கவேகுழந்தைசோர
விட்டு,ஆவிபதரவேபாயுடன்செத்துமே,அன்பாயிருந்ததைப்பாருங்கடி

நித்திரைசெய்தவர் மெத்தவுண்டுநீரில், மேலேமிதந்தவர் வேணு
துண்டு, கத்திகத்திநீரில் செத்ததுண்டுஉடல், கால்கையூதியே மாண
டதுண்டு 15

யிப்படிபிணங்கள் தத்தளித்துநீரில், யெண்ணில்லாசனங்கள்தான்
மடிய, சித்தங்கலங்காமல் போலீசார்வந்துமே, சீராய்நிறைந்ததைப் பா
ருங்கடி. 16

வந்தவர்தந்தி யடித்தார்கள்சேலம், வாகானகலெக்ட ரோடிவந்தார்
கண்டுபொழுதென்று கொண்டபிணங்களின், காக்ஷியைக்கண்டாராம்
பாருங்கடி. 17

கங்குலிலிந்தப்படி நடக்கமறு, காலையில்கலெக்டர் வந்திருக்க, சங்
கைபற்றபிணம் ஆச்பத்திரிசென்றுமே, கொண்டுமேபார்த்தாராம் பா
ருங்கடி. 18

பார்த்தவுடன்பிணம் தூக்கிவிட்டாரப்பா, பண்பாய்குழிகளை தோண்டிவிட்டார், நாத்தமெடுத்தஜடலத்தை மண்ணின்கீழ், நங்கையே போட்டு புதைத்தாண்டி. 19

பொன்பொருளாஸ்தியும வாரதில்லைபின்னால், பிள்ளையுமகூடத்து டர்வதில்லை, நல்வினை தீவினையென் றுமபிரியாமல், நாடிவருவதைக்கோருங்கடி. 20

யிப்படிவெள்ளத்தால் தான்மடியஜெனம, யெண்ணிப்பார்த்தால் மனமகுன்ணிநிற்க, சொற்படிநடக்குஞ் சூளைமுனிசாமி, சொல்லியெழுதினான் பாடுங்கடி. 21



## குடிகள் படுந்துயர்.

இத்தனைபொருளழிந்து யெண்ணியெண்ணி குண்ணலானேன்
ஈஸ்வரா ஜெகதீஸவரா
ஆடுமாடுவீடுதோற்று அண்டிருந்தநிழலுந்தோற்றேன
ஈஸவரா ஜெகதீஸவரா
பெற்றதாயைதோற்றுவிட்டு பேதைபோலநின்றழுதேன் ஈ
அண்ணன்தம்பிபெண்டுபிள்ளை ஆத்துக்கிரையாக்கிவிட்டேன் ஈ
தாள்கல்மூடியிட்ட்வீட்டில் தங்கிவொன்றுய்சாகலானீர் ஈ
பொட்டிபொட்டியாய்துணிகள் கட்டிவைத்துமாண்டீர்களே ஈ
மேடுபள்ளங்கோரைப்பிலவில் மிதந்துனீங்களாழியக்கண்டோம ஈ
தங்கமொற்றதிரேகத்திற்கு பங்கமவரக்காரணமேன் ஈ
பாவியேமன்பெண்டுபிள்ளை பரதவிக்கசெய்து விட்டான் ஈ
யித்தனைபேருக்குமஒன்றுய் யெழுதினவன்பிர்மன்தானோ ஈ
மனிதர்குடிசெய்யுமவீட்டில் மண்கள்மேடுசேர்ந்துபோச்சே ஈ
ஆதிசிவன் தன்னருளோ அடியர்செய்ததீவினையோ ஈ
அஞ்சிபேர்கள்கப்பலேரி அரவமவரமாண்டீர்களே ஈ
தேடிவைத்தபொருள்களெல்லாம சிலரிஆற்றில்போகக்கண்டோம ஈ
சூளைமுனிசாமியவன் துயரங்கொண்டுபாடினானே ஈ

வாணியம்பாடியின் வெள்ளம் முற்றிற்று.



உ

கடவுள் துணை.

# அப்பர்பர்மாவென்னும்

# ஆவா சண்டை.

முதற்பாகமும் இரண்டாம்பாகமும்

அடங்கியிருக்கின்றன.

(○)

இஃது,

சிறுமணவூர்

முனிசாமி முதலியார்

அவர்களால்

இயற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1906.

39





அப்பர்பர்மாவென்னும்

# ஆவா சண்டை.

—(*)—

விநாயகர் துதி-நேரிசைவெண்பா.

இந்தியா வெனும்பதியி லிந்திரனைப் போலாளும்
லண்டனீ ரோப்பியர்கள் ரஞ்சிதத்தை—அண்டரிலும்
சாற்ற வரிதாகுஞ் சரிதையினை யான்புகழ்ந்து
போற்றுதற்கு வைங்கரன்றாள் பொது.

கு ம் மி.

கும்மியடிபெண்கள் கும்மியடிகுயின் விக்டோரிசெங்கோல் தழைத்தோங்க, செம்மையாகச்செய மங்களமென்றே சித்திரக்கு ம்மி யடியுங்கடி. 1

சீரோங்குமிங்கிலீஷ் துரைத்தனமாமிந்த செல்வச்செங்கோலைப் புகழ்வதற்கு, நீரோங்குஞ்செஞ்சடை நிம்பனருட்டும்பி நீண்டகணபதி யென் துணையே. 2

நீதியணுவேணுஞ் சோராமற்புவி நீடூழிகாலமுந் தவறாமல், ஆதியோடந்தமா யாளுங்கதைசொல்ல ஆறுமுகப்பெரு மாள்துணையே. 3

போகர்பரம்பரை நீண்டதுவுமிந்த பூமியெல்லாஞ்ஜெயங்கொண்டதுவும், வாகாய்ச்சொல்லி வழங்குதற்குகலை வாணிசரஸ்வதி தாட்டுணையே. 4

ஆளுமிங்லாண்டு அரசின்பெருமையென் னாயுளுள்ளமட்டுஞ் சொன்னாலும், மாளாதென்று மதித்துக்கொண்டேயொரு மனுவுகேட்கிறே னிந்துக்களே. 5

கண்டதைமேலாகச் சொன்னாலுமில்லை காணாதசேதியை விண்டாலும், விண்டலமண்டலந் தானறியயெந்தன் விகடக்கவிக்கு மனம்பொறுப்பீர். 6

முந்திதுலுக்க ரரசுக்குள்ளேநம்ம யிந்துக்கள்பட்ட கொடுந்துயரை, எந்தவிதமாகச் சொல்லவென்றாலுமிவ் வேடுங்குறுகிதே பெண்ணரசே. 7

முன்னாளிருந்த அரசர்மௌடீகத்தை மூவருஞ்சொல்ல வரிதெனவே, பன்னியநூல்களுஞ் சொல்லிருக்குஞ்சிலர் பார்த்திருப்பார்நாமுங் கேட்டிருப்போம். 8

கைத்தொழிலாய ஒவ்வொருவேலைக்குங் காண்டரியபல யந்திரங்கள், முத்தொழில்வேந்தனைப் போலமைக்கும்புத்தி முன்னுள்ளரசருக் கண்டிலமே. 9

தேவரிடுக்கண்ட விற்கவறுமுக வேல்கிருபைசெய்த வாறது போல், பூவுலகெங்கும் விக்டோரியரசாள புண்ணியமுந்தியென் செய்தனமோ. 10

காடுமலைகள் செடி-திருத்தல்பெருங் காற்றெனவேகும் ரயில மைத்தல், நீடுமுலகினை பேடைபோலேந்திய நீதியென்சொல்லு வேன் பெண்ணரசே. 11

தந்தியும்யந்திரம் குழையாச்சு-யிப்போ தானுய்நடக்கும் ரெயிலாச்சு, முந்தியிருந்த வரசரெல்லாமுமூ மூடர்களல்லவோ பெண்ணரசே. 12

அடக்காதவேந்த ரொருவரில்லையிவ ராளாபுவிநக ரெங்குமில்லை, இடிக்காதகோட்டைக ளொன்றுமில்லையிவ ரேவலில்லாவிடமெங்குமில்லை. 13

எந்தவிடமு னிறைந்தமுக்கண்ணுடை யீசனைப்போல்குடியாவற்றையும், மைந்தனையன்னை வளர்த்திடுவாறுபோல் மங்காத செங்கோல் நடத்தையிலே. 14

ஆவாயெனுமோர் பெருநகராமங் கடர்வனத்தேக்குவிஸ் தாரமுண்டாம், பூவாகுமிந்நகர் யிண்டியாவோல்டுக்கும் போதுமட்டும்வரி விப்பதுண்டாம். 15

செல்லுமானமர மத்தனையுமவர் சென்றுவாலாயமா யின்றளவும், தொல்லையிலாமல் வருவித்திருக்கையில் தோஷத்தைக்கேளடி பெண்ணரசே. 16

எத்தனையோநாளா யிறுமாந்திருந்தவன் யிம்மட்டும்நீர்வரக்கூடாதென்று, தெத்திலுஞ்சுற்றிலுங் காவல்வைத்தேயவன் தீராக்கோபம் விளைத்தாண்டி. 17

தீராக்கோபம் விளைத்ததுமன்றி-யிவன் தென்னவன்போலே கருவினதால், போராய்விளைத்தவன் வெல்லவென்றுநம்ம பூமியரசர் மதித்தனராம். 18

நன்மையாகப்புத்தி சொல்லிவந்தார்வெகு நாளாய்மனதும் பொறுத்துவந்தார், என்னமாகப்புத்தி போதிக்கினுமவன் யீனமொழியே தொடுத்தாண்டி. 19

இராவணனுக்கு விபீஷணன்புத்தி யிரவும்பகலு முரைத்தது போல், மராமரம்போன்றவன் தீபாவுக்குயிவர் மந்திரம்போலப் புகன்றனராம். 20

கடவுளென்றாலுந் தடையில்லையேநம்மைக் காக்குமிங்கிலாண்டு துரைகளுக்கு, நடனசபையொத்த பார்லிமெண்டுக்குள்ளே நாளொருவரா யோசித்தனராம். 21

நன்மைக்குஉத்தரம் விள்ளவில்லைவெகு நாளாய்பதில்மொழி சொல்லவில்லை, இன்னம்பொறுப்ப தழகல்லவென்றிவன் யேவலைச்சேகரம் செய்தனராம். 22

எவ்வளவென்று கணக்குரைப்பேனதை எத்தனையென்று முடியுரைப்பேன், கவ்வியமேகம்போல் சேனைதளங்களை கப்பலுக்கேத்த முயன்றனராம். 23

கடந்தஆயிரத் தொண்ணூற்றெண்பத்தி ஐந்தாம்வருடம் டிசம்பரிலே, துடர்ந்தாரிருபத் தாருந்தேதியில் தூண்டாம்படைதிரளாகக்கொண்டு. 24

சங்கமென்னப்படை தான்கவர்ந்துசத கோடியெனவேவி ஆயுதமும், பொங்குங்கடலென ஆக்ரகித்துயிவர் பெய்யும்மழைபோலத் துடர்ந்தனராம். 25

பெய்யுமழையெனத் தான்திரண்டுயிவர் போர்க்கோலங்கொண்டு வழிநடந்து, பையெனச்சென்ற வதிசயசிங்காரப் பாட்டாகக் கேளடி பெண்ணரசே. 26

(தெம்) கத்தியுள்ளவீரர்களுங் கால்பலமும்நால்வகையும்
சத்துகடல்கீழ்புரமாம் சென்னைக்கடலோரத்திலே
(சிந்து) கொண்டுவந்துதானிருந்துங் கூட்டப்பெரும்படைகள்
அண்டத்துமேகமென்ன ஆயிரமாயிரமாம்
பண்டுபலாதிகளும் படைக்கானவுண்டிகளும்
கண்டதில்கோடியென்றாய் கண்மணியேகேளடிநீ
(தெம்) படைகளுக்குப்போதுமட்டும் பருப்பரிசிகரிவகையும்
தடைதட்டுக்கப்பலுக்கு தந்தவகையென்னசொல்வேன்
(சிந்து) ஆடுகளுங்கோழிகளும் ஆனதொருமுட்டைகளும்
கோடியெனபாத்துகளுங் கூட்டுப்பொடிகளுடன்
காடைக்கவுதாரிகளும் கனியின்பலவகையும்
தேடியமைத்தபின்பு தேன்மொழியேகேளடிநீ
(தெம்) மாமிசங்கள்தானறுந்தா மன்னர்சிலர்க்குன்னிதமாய்
ஆவினெய்யும்ரொட்டிவெண்ணை அறிங்ழநல்லசர்க்கரையாம்
(சிந்து) கப்பலைத்தாண்டுதற்கு கமாண்டன்சீப்பவர்கள்
சொற்படிபட்டாளமெல்லாஞ் சொகுசாகத்தான்பிரிக்க
மைப்படிகண்ணியர்முதல் மக்களும்மிக்கவரும்
எப்பவருவீரென்று யீஸ்வரனைக்கோறினராம்
(தெம்) வாழ்த்திவிடைவாங்கி வண்மையுடன்கப்பலிலே
பூர்த்தமலர்ச்சரம்போல் போர்நகரைநாடினராம்
(சிந்து) பர்மாவெனும்பதியை பாங்காகத்தானடுத்து
நிர்மலமாகவேதான் நின்றொருகோணமதில்
துர்மனத்தீபாவென்னும் துரையின்னகர்முழுதும்
தர்மதுரைப்படைகள் தடம்போலநிறைந்தனராம்
(தெம்) பையனவேசென்றுயிவர் அப்பர்பர்மாநகரம்போயி
ஐராவதிபார்த்துயிவர் ஆனந்தமாயேதுசொல்வார்.

ஆவாசண்டை முதல்பாகம் முற்றிற்று.

************************************************************************

உ

கடவுள் துணை.

ஆவாசண்டை

# இரண்டாம் பாகம்.

## நொண்டிச்சிந்து.

ஆவாயெனும்பதியை சுத்தி அடர்வனத் துடனகர் பெருமை யைக்கேள் தீபாயெனுமரசன் அவன் திருத்தமும் பொருத்தமுங் குறித்திடுவேன் இந்திர னிவன்தாண்டி தெய்வ இந்திரலோகமும் வேறே யிருக்குதென்று பந்தியந்தொடுக்காதே இந்த பட்டணத் தைக்கிட்டியட்ட லட்சுமிகளும் குடியுளரெனயெவரும் புகழ்ந்து டன் கூறிடு வாரதைத் தேறிடுவோம் ஐராவதினதியும் நகர் அடுத் துளதாம்வனம் தொடுத்துளதாம் வெய்யவரிடக்காந்தி அங்கே வெறுப்பிலையாம் அதி சுருக்கிலையாம் பையவேமொழியாளும் அ ண்டம் பார்த்திடும்போதேமழை கோர்த்திடுமாம் பேர்த்திடும்மி டங்களெல்லாம் வஜ்ர வாரைகளாம்ரத்ன பாரைகளாம் கிரடிமுடி க்குகளில் கெட்டி முத்துகளேபெரும் புத்துகளாம் சுற்றிலும்வண ப்பெருக்கின் உவப்பினை சொல்லவென்றுலதி வல்லவர்யார் தில் லையங்கடவுளர்வாழ் கயிலங்கிரி யெனப்பரவியபெருமலையாம் இ டைபலஜாதிகுகையாம் அதி யிருளெனதாவிய காவுகளாம் ப டையெனப் பெரும்புலியாம் விடும் பங்தெனப் பறந்திடும் மான் பெருக்காம் யானைக ளொருவெளுப்பார் அங்கே அடுத்தடுத்தொ ட்டங்கள் வட்டமிடுமாம் திட்டெனச் சிறுத்தைகளாம் பெருந் திரளெனமலயினக் குரள்வளமாம் திசையாமிருநான்கும் தேக்கு கள் தேறிடு மாமண்டம் சீரிடுமாம் காரிருளெனச்சூழ்ந்து விருட் சங்கள் கருத்துளதாமெங்கும் பெருத்துளதாம் பொருத்தங்கனி னமனந்தம் யிருந்தாலும் புத்தியிலேயதி மத்திபனும். தந்தின

## கும்மி.

நகரின்பெருமை தனைப்புகழ்ந்துயிந்த நால்வகைச்சேனை தள ங்களெல்லாம், சுகமாய்ப்பேசி யிருக்கையிலேயந்த தோதகப்பா வியென் செய்தாண்டி. 1

ஆரணியந்தன்னி லொளியவிட்டானதன் முன்னமேஐரா வ தியைவிட்டான், காரணமேது மறியாண்டிகடும் பாவியென்வஞ்ச கம் செய்தாண்டி. 2

துற்புத்திமீறி துடித்தாண்டியவன் தூண்டுகோல்தன்னை யிழ ந்தாண்டி, கற்பனையற்று மெலிந்தாண்டியந்த காலத்துக்கோல மெடுத்தாண்டி. 3

கதிரோனைக்கண்டா லொடுங்குவதுங்கருங் கங்குலைக்கண்டால் கதும்புவதும், எதிராகநின்றவன் யுத்தஞ்செய்யாமலே யீனத்தொழிலே புரிந்தாண்டி. 4

எப்போதும்யுத்தம் புரிந்தறியான்யீ ரோப்பியர்நீதியுங் கேட்டறியான், முப்போதுமுண்டு உறங்குவதன்றி முன்பின்னறியாண்டி பெண்ணரசே. 5

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்-பல்லவி.

எடுத்ததேசண்டை ஆவாமேலிங்லாண்டு
தொடுத்ததேகுண்டை

அநுபல்லவி.

தொடுத்தார்கள்பார்குண்டை தூரியன்மேலர்ச்சுனன்
விடுத்தஅஸ்திரம்போலே விரைவிலொன்றுநூறாய் எடு

சரணங்கள்.

திருட்டும்பிரட்டுமவர் உருட்டுமுரட்டுதன்மை
திரமாய்த்தெரிந்தொரு புறமாய்ப்பட்டாளத்தை
நிறுத்திபீரங்கிகள் நீட்டியிடைகளெல்லாம்
நிறையுங்கடலைப்போலே வளையடுபுபாக்கிகள்
பொரிந்திடத்தாட்டி செடிகள்மரங்களெல்லாம்
யெரிந்திடமாட்டி—எங்கும்
கிடுகிடுகிடுவென்று கிழிந்தாற்போலாகாயம்
படபடபடவென்று பளுத்தாக்கள்தீர்ந்துடன்
துடரத்துடரவொன்றின் பின்னொருகோடியாய்
தூற்றஆவாசேனை காற்றின்பஞ்சியைப்போலே எடு
மூலபலப்படை முனைகண்டஸ்ரீராமன்
மூச்சுவிடுமுன்னந்த ராட்சதப்படைகளை
காலபுரத்துக்கன்று கட்டணம்போல்தந்த
கதையாச்சுரணக்களம் மலையாச்சுபிணக்களம்
ஒன்றின்மேலொன்றாய் சிலதுசேனை
ஓய்ந்துபோய்கின்றார்—அப்போ
பொழியுந்துப்பாக்கிகள் பொருந்துமுன்பீரங்கி
போக்கொன்றுந்தெரியாமல் தாக்கிடசேனைகள்
விழிகள்பிதுங்கினோரும் மொழிகள்மறந்தபேரும்
விதியைநினைந்தபேரும் மதியைவெறுத்தபேரும் எடு
தாளொடிந்தபேரும் தலைகளறுந்தபேரும்
தட்டெனவிழுந்தபேரும் சட்டெனமடிந்தபேரும்
கால்களொடிந்தபேருங் கரங்கள்முறிந்தபேரும்
களையாய்விழுந்தபேரும் தலையற்றுருண்டபேரும்
தாவியபேரும் தண்ணீர்தண்ணீரென்று
கூவியபேரும்—துலுக்கர்

பாணிபாணியென்று பதைத்தோருங்குதித்தோரும்
பார்க்குமுன்துப்பாக்கி பட்டுவிழுந்தபேரும்
வீணுக்குமடிந்திட வாய்த்துதோவென்பாரும்
வீட்டுமுகமாய்நோக்கி ஓட்டம்பிடித்தபேரும் எடு
சத்யமாய்ச்சண்டைக்கு வரவில்லையென்பாரும்
சலாமென்னைவிட்டிடும் சாமொன்று அழுவாரும்
சுற்றுமுற்றும்பார்த்து பிணத்துக்குள் நுழைவாரும்
சுருண்டுசுருண்டுசிலர் செத்தாற்போலிருந்தாரும்
சிப்பாய்கள்சிலபேர் தோர்ப்பேனோபாரொன்று
துப்பாக்கியெடுப்பார்
எடுத்துபிடித்துஓங்கி யேனென்றுமுடுக்கையில்
யீசன்திரிபுரம் யெரித்தகதையைப்போலே
சிரித்துபீரங்கியை சீண்டிடவொருக்காலே
செண்டுபோலெகிறிட பந்துபோலுருண்டிட எடு
குளிருங்காய்ச்சலுங் கூண்டோடேபோச்சென்று
கூறும்பழமொழி போலேயாவாசேனை
திரளாகும்நால்வகை தீர்ந்தபின்தீபாவை
தீண்டிடதுரைமக்கள் தாண்டியேநகர்சுற்றி
பாராக்கள்போட்டு அரசர்க்குடையநீதி
தோராமல்கார்த்து
கார்த்துபின்னரசனைக் காவலுடனேகொண்டு
கடல்வழிபோனடையுடன் சென்னைதனைக்கண்டு
சீர்த்தப்பணியுமவன் சயனக்கட்டிலுமன்றி
சிம்மாசனமொன்றே யிம்மானிலம்பேராய் எடு

## கும்மி.

அரசனைத்தீட்டி வசமாக்கிதங்கள் ஆயுதபாணிக்குள் ஆளாக்கி, திரையாங்கடல்வழி ஸ்டீமரின்மூலமாய்ச் சென்னைக்குத்தாண்டினார் பெண்ணரசே. 1

மன்னனும்மன்னவன் தேவியுமாயவன் மானகராண்ட சிம்மாதனமும், சென்னியிற்பூண்ட கிரீடமுஞ்செங்கோலும் சென்னைக்குவந்ததே பெண்ணரசே. 2

சித்திரக்கட்டிலும் ரத்தினப்பெட்டியும் ஜீவமாணிக்கப் பணிகளுடன், எத்தனைக்கோடியோ கம்பளமாமெச்சிற் றம்பலம்பூமி மதிப்பிடமோம். 3

வச்சிரக்குத்துக்கால் மேஜைகளும்நல்ல வாணிப்பவழநாற்காலிகளும், பச்சைகள்நாட்டிய பூஜையினசனம் பட்டணங்கண்டுதே பெண்ணரசே. 4

கிட்டியரம்பை காவலில்வைத்திட கெற்பவதியா மரன்மனைவி, விட்டாலுமென்னுயி ருன்னடியேயென் வேணவிதனத் துடனடந்தாள். 5

மங்கையுமன்னனும் பொற்பணியுமங்கே மற்றுமுண்டான
வுயிர்த்துணையும், கங்கையைக்கண்களில் சோரவிட்டுஅவர் கப்ப
லைக்கண்டு மெலிந்தனராம். 6

வெள்ளானை தன்னுயிர் விட்டதுவும்நம்ம வீட்டுத்துஜஸ்மரம்
பட்டதுவும், கொள்ளைக்கொடுத்து மெலிந்திடவோபெண்ணே
கொடியசகுனம் பலித்ததடி. 7

கருவுதரித்திட்ட வேளையின்தோஷமோ கர்த்தனமைத்த தி
துதானோ, தருமயிடரும் புரிந்தறியேனடி தையலேயென்விதி வந்
துதடி. 8

சொற்பனங்கண்டது மெய்யாச்சேநான் தொல்லுலகாண்ட
து பொய்யாச்சே, கற்பகோடிகாலம் அழியாதென்றது கனவாய்
முடிந்துதே பெண்ணரசே. 9

எதைநினைந்துநான் தேறுவேண்டிபெண்ணே யாருக்குயெ
ன்துயர் கூறுவேண்டி, பத்தினியேயுன்னைப் பார்க்கப்பார்க்கமன
ம் பாகாயுருகுதே பெண்ணணங்கே. 10

பாவியாமென்விதி நீர்நினைந்துஎந்தன் பத்தாவேயுன்விதி நா
ணினைந்து, கூவியழுதாலும் ஆவதில்லையொரு கோரிக்கைகேட்ட
ரு ளையாவே. 11

ஏதேதோயெண்ணி மயங்குகின்றீரையா யெண்ணத்தைத்
தூண்டி புலம்புகின்றீர், மாதுடநீநாமிவ் வாழியில்வீழ்ந்து மடிந்
தால்மற்றொரு தோஷமில்லை. 12

எண்ணறக்கற்று யெழுத்தறவோதினும் பெண்புத்திபின்னிடு
மென்றுசொல்லும், வண்ணத்தைப்போலேநீ முந்தாதேயின்னம்
வந்தவிதியெல்லாங் கண்டிடுவோம். 13

அப்படியும்விதி போட்டிருந்தாலிந்த ஆழியிற்றானே மடிந்தி
டுவோம், கைப்பிடியாகப் பிடித்தவர்செய்திடுங் காட்சியைக்காண
லாம் பெண்ணணங்கே. 14

எக்கமிட்டுபல யெண்ணமுற்றேசிற கறுந்தகிள்ளைபோல் தா
னிருக்க, அப்போதுசீக்கிர மாகவேசென்னையில் சேர்த்திட்டசே
திநா னென்னசொல்வேன். 15

சென்னைத்துறையிலே வந்திறக்கியவன் செம்பொன்மணிக
ளைத் தானிறக்கி, மன்னவன்றன்னை நடத்திடவேதுயர் மட்டடங்
காம லழுதாண்டி. 16

சென்னையிலேசில நாள்நிறுத்தியவர் சீர்த்நிப்பிசகாமல் கார்
த்திருந்து, பின்னுலிரத்தின கிரிக்கனுப்பிய பெருமையைஎன்சொ
ல்வேன் பெண்ணரசே. 17

ஆவாயெனும்நகரி லேயிங்கிலீஷ் அரசரின்கோர்ட்டுகச்சே
ரிமுதல், தீவானம்தீர்வையு முன்சிபாலாபீசும் தீரமாயமைத்தா
ரே பெண்ணரசே. 18

ஆவாசண்டை இரண்டாம்பாகம் முற்றிற்று.

உ

கடவுள் துணை.

# நாகூர் ஆண்டவர்

# தெரிசனக்கும்மி.

நாகூர் க்ஷேத்திர அலங்கார

ஆநந்தக்களிப்பு.

இரண்டும் அடங்கியிருக்கின்றன.

இஃது,

சிறுமணவூர்,

முனிசாமி முதலியார்

அவர்களால்

இயற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

30



பிஸ்மில்லா கிற்றகுமா னிற்றகீம்.

---

## நாகூர் ஆண்டவர்

# தெரிசனக்கும்மி.

---

### இரசூலுல்லா வணக்கம்.

கூறும்நாகூர் குரிக்கும் ஆண்டவன்
பேறுமாந்தர் பிரியமுடன் கும்மி
மீறும்பத்தி விளங்கி வியற்றிட
கோறுமேநபி நாயகம் போற்றுவாம்.

### கும்மி.

கும்மியடிப்பெண்கள் கும்மியடி குரு
நபிகள்பாதங் குணப்படுத்தி
நம்மையாளும்நாகூர் ஆண்டவன்பாதத்தை
நாடிக்கும்மியடியுங்கடி அவனை தேடிகும்மியடியுங்கடி.

அஷ்டதிசைபுகழ் மேவுந்தலங்களில்
அற்புதமாம் நாகூர்பதியில்
இஷ்டமாய்தாழ்ந்திடும் மீருசாகிபை
இணங்கிக்கொம்மி யடியுங்கடி. ௨

கோடியுகந்தவஞ் செய்தாலுமந்த
கோரியைப்பார்க்க முடியாது
காரிழையேநர ஜென்மங்கடைத்தேற
கண்ணினல்பார்க்கலாம் வாருங்கடி. ௩

அண்டத்தளாவிய கோரிசிங்காரமும்
அற்புதவெள்ளியின் வாசற்காலும்
சண்டப்பிரசண்ட நகபத்துமுழக்கும்
சாற்றுமலங்காரம் பாருங்கடி. ௪

பேரிகைதஞ்சாவூர் வாத்தியமும்நல்ல
பெரியடமாவின் முழக்கமுடன்
சாரிவருமீரு சாகிப்பின்பாதத்தை
சார்ந்துகும்மி யடியுங்கடி. ௫

எட்டுத்திசையும் பரிமளசந்தனம்
எழிலாம்வத்தியும் சக்கரையும்
மட்டுப்படாமலே ஆண்டவன்கோரியில்
மலைபோல்வாரதைப் பாருங்கடி. ௬

கப்பமெல்லாமேயிவர் கடமை கரை
தட்டினால்கார்ப்ப திவர்கடமை
ஒப்பியேபிரார்த்தனைக் காரர்கடமை
ஓயாநடைகளைப் பாருங்கடி. ௭

பக்கிரிசேனை வெகுகோடி வரும்
சன்னியாசிகூட்டம்பலகோடி
சக்கரைபாத்தியா செய்யுஞ்ஜெனங்கள்
சந்தடிகூட்டத்தைப் பாருங்கடி ௮

வெள்ளிவிளக்கிலுந் தங்கவிளக்கிலும்
வேணசரவிளக் காதியிலும்
உள்ளமகிழவே நெய்யாலெரிகிற
உண்மையதிசயம் பாருங்கடி. ௯

தங்கவிளக்கு இருபுரமாந்தனி
வெள்ளிவிளக்கு பலபுறமாம்
யெங்குமதிசயம் தண்ணிவிளக்கு
யெரிகிறசத்தியம் பாருங்கடி. ௧௰

ஏழுமலையுள்ள மாடங்களாமதில்
யெண்ணவணங்கா புறாக்கூட்டம்
வாழுமதிசயம் ஆண்டவன்மகிமை
வாழ்த்தமுடியுமோ கேளுங்கடி- ௧௧

சொல்லுமலங்கார வாசற்பெருமையும்
தோற்றும்நபிமார்கள் வாழிடமும்
பல்லுயிர்யாரும் போற்றுமகிமையை
பார்க்கமுடியுமோ பாருங்கடி. ௧௨

நாகூரென்று நினைத்தாலும் நர
ஜென்மங்கடைத்தேறும் சென்றாலும்
வாகாய்சன்னதி கண்டாலுஞ் சொர்க்கம்
வாய்க்குமென்றேயடியுங்கடி. [illegible]

எத்திசையினும் நட்சத்திரம்போலே
யெறியுமலங்காரம் பாருங்கடி. ௩௰

அவரவர்பற்பல வெண்ணங்கொண்டு நாகூர்
ஆண்டவன்மீதிலே பாரம்வைத்து
சோர்ந்துநித்திரை செய்கையி லவர்க்கு
சொற்பனம் சாதிப்பார் பாருங்கடி. ௩௧

அத்தர்புனுகு பனிநீரும் நல்ல
அழகானசிகிச்சா பரிமளமும்
நித்தமும்சாம்ப்ராணி வத்தியுடன்புகை
நேராயளிப்பதைப் பாருங்கடி. ௩௨

நாலுபுறமு மதிலோரமதில்
நடுவிலெங்கினும் சத்திரமாம்
கால்பதினாயிரம் மண்டபம்போலவே
கட்டியிருக்குது பாருங்கடி. ௩௩

முன்னேபெரியவர் சொன்னமுறைப்படி
முத்திதருந்தேவ ஆலயத்தை
நன்னயமாக அமைத்தபாயினுள்
நடக்குமகிமை பாருங்கடி. ௩௪

அல்லாவுதாலா வாசாரமாளியில்
அழகுசெம்பொன் மாளியினில்
பல்லாண்டாயுசும் பலித்திருக்கவே
பரமதீட்சம் பாருங்கடி. ௩௫

பத்தர்கள்வாழி பதிவாழி நல்ல
பளிங்குகோரிக் கொடிவாழி
சித்தர்துதித்திடும் தஞ்சாவூர்மன்னவன்
செய்துவைத்தகோரி தான்வாழி ௩௬

பூரான்கொடியு மிகவாழி தினம்
போற்றும்பகீர்கள் சுகம்வாழி
ஆறுந்துதித்திடும் நாகூரம்பதி
ஆயிரங்கோடி யுகம்வாழி ௩௭

நாகூர் மீறுசாகிப் தெரிசனக்கும்மி
முற்றுப்பெற்றது.



பிஸ்மில்லா கிற்றகுமா னிற்றகீம்.

நாகூர்க்ஷேத்திர அலங்கார

# ஆனந்தக்களிப்பு.

பல்லவி.

நாகூரைப்பார் மன்க்கண்ணே—நர
ஜென்மங்கடைத்தேறவே துதிபண்ணே — நாகூ.

சரணங்கள்.

ஆகமம்போற்றிடுமூரு நல்ல
அறிவாளரெங்குங் குடிகொண்டவூரு
ஏகப்பரவெளியூரு இது
வென்றுமழிவில்லா பொன்னிறவூரு — நாகூ.

பந்தமறுத்திடுமூரு பரி
பக்குவமாக்கிப் பதந்தருமூரு
நிந்தையகற்றிடுமூரு நல்ல
நெறியைக்கொடுத்து நிலையருளுமூரு — நாகூ.

நஞ்சையறுத்திடுமூரு ஐயா
நல்லறிவீந்து நலந்தருமூரு
நெஞ்சைத்திருத்திடுமூரு நல்ல
நேசங்கொண்டார்களை போஷிக்குமூரு — நாகூ.

வாசங்கள்வீசியவூரு நல்ல
வற்புதக்காட்சி விளைத்திடுமூரு
தேசமெல்லாம்புகழூரு நல்ல
சின்மயமான சுகந்தருமூரு — நாகூ.

சொற்பனம்பேசிடுமூரு வாயால்
சொல்லாமற்சொல்லி சுகந்தருமூரு
கற்பகத்தைப்போன்றவூரு தினம்
கண்ணுக்குக்கண்ணருள் காட்டியவூரு — நாகூ.

எத்திசைப்புகழுமூரு எங்கும்
யார்க்குந்திருஷ்டாந்திர மெய்திடுமூரு
துஷ்டரைச் சிஷ்டைசெய்யூரு நல்ல
துய்யமனத்தோர் துணையாகுமூரு — நாகூ.

சித்தியளித்திடுமூரு இந்த
ஜென்மநோய்தீர சீராக்குமூரு
முத்தியளித்திடுமூரு நல்ல
முத்தருறவு முயற்றிடுமூரு நாகூ

ஆதரவாகியவூரு கெட்ட
அஞ்ஞானம்போக்கி யருள்தருமூரு
போதமளித்திடுமூரு நல்ல
புத்திகொடுத்துப் பொதுவாக்குமூரு நாகூ

மன்னர்மகிழ்ந்திடுமூரு இகம்
மண்ணுலகெங்குந் துரத்திடுமூரு
தன்னிகரில்லாதவூரு திருத்
தாளைக்கொடுத்துத் தலைகாக்குமூரு நாகூ

கோரிவிளங்கிடுமூரு சர்வ
குற்றமகற்ற குருவானவூரு
பேரோ அதற்குநாகூரு என்றும்
பொய்யாதபேர்க்கருள் செய்திடுமூரு நாகூ

அண்டமெலாந்தொழுமூரு இந்த
அவனியெட்டுத்திசை கவனிக்குமூரு
பண்டேவெகுநாளையூரு இந்த
பாருங்கடலும் பரவியவூரு நாகூ

சூடப்புகைகமழூரு நல்ல
சுத்தமெய்ஞ்ஞானந் துலங்கியவூரு
வாடைகஸ்தூரியினூரு யெங்கும்
வண்டினமொய்க்கவறம்பெற்றவூரு நாகூ

பூரான்கொடித்திகழ்ஊரு இந்த
பூமண்டலமெங்கும் போற்றியவூரு
ஆதாரமேதருமூரு அரு
ளானந்தமீறிய அரசாளவூரு நாகூ

பார்புகழ்சிறுமணவூரு இந்த
பாடலைச்செய்தேன் முனிசாமிபேறு
ஆர்க்குந்துணைசெய்யக்கூறு வளர்
ஆண்டவன்தாளை யகத்தினில்சேரு நாகூ

நாகூர் ஆண்டவர் தெரிசனக்கும்மி
முற்றுப்பெற்றது.

---

உ

தெய்வமேதுணை.

1906வூ அக்டோபர்மீ 20உ சனிக்கிழமை

மூடப்பட்ட

ஆர்பத்நெட்டவுசின்

# அனியாயச்சிந்து.

இஃது,

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரால்

இயற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

42

உ

கடவுள் துணை.

# அர்பத்னெட்டவுசின்

# அனியாயச் சிந்து.



### வேண்பா.

பேர்பெற்ற சென்னை பீச்சாங் கடக்கரையில்
ஆர்பத்தி னெட்டா ரதிசயத்தை—சீர்பெற்ற
செந்தமிழாற் சொல்லசிவ காமியரு ளங்கரனர்
கந்தமலர்த் தாணிதமுங் காப்பு.

### பின்முடுகு வேண்பா.

ஆறுதலை யானளித்த ஆறுதலை யானடியைப்
பேருதலை யின்றிப் பிடித்தக்காற்—றேறுதலை
உண்டுயிக முண்டுபர முண்டுசுக முண்டுகன
முண்டுபல சித்தியெலா முண்டு.

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

### பல்லவி.

ஆசைபொல்லாது அர்பத்னெட்டவுசுமேல்
தோஷஞ்சொல்லாது

### சரணங்கள்.

தேசதேசெமங்குங் கப்பல்நடக்குதென்றும்
தினகரன்போல்பல கொடிகள்பறக்குதென்றும்
மோசமற்றதர்ம வட்டிகிடைக்குதென்றும்
மூவிருதலைமுறை யாகசெழிக்குதென்றும்
நம்பவைத்தாயே பாழும்பணமேயிப்போ
வம்புசெய்தாயே

மழைக்குமுன்னிடிமின்னல் மாறிவருவதுண்டு
மாதர்பிரசவமுன்னே யிடைதுடைநோயுண்டு
கொழுத்தஜுரத்தின்முன்னே குளிரும்நடுக்கலுண்டு
குஞ்சரத்தணிமுன்னே கெர்ச்சனைத்தொனியுண்டு
கெடுதிக்குமுன்னே சமரசகுணமெல்லாந்
தடுமாறுஞ்சொன்னேன்—அதுபோல்

ஸ்டீமர்கப்பலென்ன ஜலத்தில்முழுகிப்போச்சா
சேர்ந்தபணத்தைக்கள்ளர் புகுந்துதிருடுபோச்சா
தீர்ந்ததுகைபலர்க்கு திரும்பக்கொடுக்கலாச்சா
திடமானவர்த்தக முழுதுமொடுங்கிப்போச்சா

எப்படிபோச்சு பிரவும்பகலுஞ்சிப்பாய்
பாராக்களாச்சு

அல்லும்பகலும்காவல் அகலாதிருந்துகார்த்தும்
அணியணியாய்மாட்டர் லெட்ஜர்குறிப்புலீஸ்டும்
பில்லுஞ்செக்குஞ்சாட்சி பேர்நாட்டுங்கைநாட்டும்
பணத்தைவெளியில்வாங்க கொடுத்தவன்படும்பாடு
பஞ்சியின்பாடே லஞ்சமில்லாட்டாலுங்
கொஞ்சமல்லவே

இத்தனைதொடர்வழக் கிட்டுக்கொடுக்கும்பணம்
எத்தனையோகாவல் சுற்றியிருக்கும்பணம்
மெத்தநீண்டநாளாய் மிதந்துவளர்ந்தபணம்
மேல்வெள்ளம்வந்தாற்போல் யாருக்குந்தெரியாமல்
பறந்துதான்போச்சோ கடலின்சுரங்கவழி
பிறந்துதான்போச்சோ

கேள்விமுறையுமில்லை கேட்டாலும்பதிலில்லை
கிட்டிப்போட்டபூட்டு தொட்டுத்திறப்பாரில்லை
பாழுக்கிறைத்தாற்போல பலபேர்கள்படுந்தொல்லை
பணமேபணமேயென்று பிணம்போலிளித்தார்பல்லை
இனிப்பெருந்தொல்லை யேழைகள்பாடெல்லாம்
வயற்றுக்கேசள்ளை

பந்தியில்வஞ்சனை கூடாதென்பதுபோலே
பணக்காரரேழைக ளெல்லார்க்குமொருக்காலே
மிந்திபிந்தியென்ற கெடுவுமில்லாமலே
மின்னற்கொடியைப்போலே பிங்லாண்டுவழியாலே
தந்தியினாலே லாஸ்டாயிப்போச்சென்று
வந்துதென்றாரோ—அந்த

தந்திவந்தசெய்தி தகவலையார்கண்டார்
தரணியேழைகட்கு எந்ததுரைகள்விண்டார்
முந்தியிப்படிவரு மென்றுதான்யார்கண்டார்
மூடிப்பூட்டு போட்ட பிறகல்லோ பலர்கண்டார்
போலீசார்வந்தார் காவலும்பாராவும்
சிரீசாய்நின்றார்—அப்போ

கண்டாரும்விண்டோரும் கைதொழில்செய்வோரும்
கால்நடையாய்பீச்சு வழிநடைஜெனங்களும்
அண்டையயலிலுள்ள ஆபீசர் ஹவுசாரும்
அணிபோல்திரண்டுகண்ணை மணிபோலசிமிட்டாமல்

சூழ்ந்துக்கொண்டாரே வெகுபேர்மனதுநொந்து
தாழ்ந்துக்கொண்டாரே—அப்போ

பணத்தைக்கொணர்ந்துகட்டிவைத்தோர்வாயிலும்பூட்டு
பார்த்தோர்கள்கேட்போர்கள் பலபேர்வாயிலும்பூட்டு
சினத்தமொழிசொல்பல ஜெனத்துவாயிலும்பூட்டு
சிறியோர்கள்பெரியோர்மெத்த முதியோர்வாயிலும்பூட்டு

பூட்டென்றபேச்சே சென்னைமுழுதுமன்று
பெருங்கூச்சலாச்சே

வட்டிக்காசைபட்டோர் வயறுமெரிந்துப்போச்சு
வட்டியை யசலோடு சேர்த்ததொகையும்போச்சு
கட்டினபின்கண்ணில் காணுதொழிந்துப்போச்சு
கனவிலும்நினைவிலும் பணமென்றபெருமூச்சு

கடைகெட்டுப்போச்சு இனி-பிறரைநம்பும்பேச்சு
படைசெத்துப்போச்சு

அரிசிகுறைமரக்கா ளந்தபணமும்போச்சு
அதிகவட்டிக்காசை பட்டதுகையும்போச்சு
நிறைகுறையாய்சேர்த்து நேர்ந்தபணமும்போச்சு
நேற்றின்றுந்திண்ணுமல் சேர்த்தபணமுமபோச்சு

வெறும்பேச்சியாச்சு செக்குப்புத்தகமெல்லாம்
வெளுத்தல்லோபோச்சு

குடும்பகாப்புக்காக கொடுத்தபணமும்போச்சு
கோயில்தருமமெல்லாங் கூண்டோடழிந்துப்போச்சு
கடும்பசிக்கெதிர்பார்த்தோர் கண்ணீர்சொரியலாச்சு
கஞ்சிக்கேசிலபேர்கள் பஞ்சாய்பறக்கலாச்சு

முழுமோசமாச்சு வட்டியென்கிறபேச்சு
அசலோடேபோச்சு

கணவனற்றபெண்கள் காலஜீவனம்போச்சு
கார்சிஜவுளிஷாப்பு வர்த்தகர்பணம்போச்சு
பணக்காரரேழைகள் பாரத்துகையும்போச்சு
பலயேழைகுடும்பங்கள் நிலையேகலங்கிப்போச்சு

பெருவெள்ளமாச்சு அதை-நம்பியிருந்தோர்பேச்சு
படுபள்ளமாச்சு

தூரதேசத்தவர் துகையுந்துலைந்துபோச்சு
துலுக்கர்தமிழ்செட்டி ஐயமார்துகைபோச்சு
பாரிஉத்தியோகஸ்தர் பலத்தமணியும்போச்சு
பலநாளாய்ஜீவித்த சிலபேர்கலங்கலாச்சு

எக்கமுண்டாச்சு லட்சத்துகைகளுக்கு
தூக்கமேபோச்சு

ஸ்கூல்தருமபண்டு என்னமாய்முடியுமோ
ஏழைகுடிகள்பொழு தெப்படிவிடியுமோ
புஸ்தகசொசைட்டி பொருட்கென்னபுரியுமோ
போகப்போகப்பதில என்னென்றுதிரியுமோ
விசனப்படாதீர் வட்டிவரவல்லாமல்
அசலெப்போகண்டீர்—அதுபோல்

இன்னஞ்சிலதுகால மெண்ணிப்பொருத்துக்கொள்வீர்
எல்லாக்கணக்குங்கவர்ண் மெண்டார்கள்சோதிப்பார்
நன்மைதுன்மைநடு நிலைமைதெரிந்துக்கொள்வார்
நாட்டின்அபிப்பிராயல் கேட்டும்பதிலுசொல்வார்
பொருமையேபெரிது அவசரப்படுவது
பொருளுக்குஅரிது—ஆனால்

தன்கைபொருளுந்தொழில் தன்னுயுதமுமற்ற
தரணியில்பிறர்கையில் தரும்பேதைபதரென்று
சொன்னதருமநீதி சும்மாயிருந்திட்டாலும்
சென்னைமுழுதுமிப்போ சிலரமணியாச்சுது
இதுதெரியாதா முன்னோர்கள்பழமொழி
பழுதாமென்பீரா

ஆனைவாயில்கரும் பன்றேஜீரணமாச்சு
அலைகடல்வீழ்பொரு ளார்கையில்வசமாச்சு
பூனைகண்ணில்பட்ட பாலெங்கேதயிராச்சு
புலியைத்துணைபிடித்த ஆடெங்கேநிலையாச்சு
ஆசைபொல்லாது அர்பத்னெட்டவுசின்மேல்
தோஷஞ்சொல்லாது.

---

# கும்மி.

கட்டிச்சுகித்த மனைவிகளைச்-சொந்த
கால்வழிப்பிள்ளை பௌத்திரனை
துட்டுக்குக்கூட மதியாமலர்பத்தி
னெட்டில்கொடுத்த பணம்போச்சே. க

காலாகால மிருக்குமென்று-வெகு
காலத்துக்காதர வாகுமென்று
மாலாய்சர்வ பொருளும்விற்று ரொக்க
மாக்கிக்கொடுத்த பணம்போச்சே. உ

சின்னஞ்சிறிய குழந்தைகட்கு வய
தேறுமளவும் விசனமற்று
தின்றுவருமென் றர்பத்தினெட்டுக்கு
தேடிக்கொடுத்தப் பணம்போச்சே. ௩

மைனர்வயது கடந்துசரியான
மார்க்கத்தில்பிள்ளை வருமளவும்
உயிலுமெழுதியே அர்பத்தினெட்டுக்கு
ஓடிக்கொடுத்தப் பணம்போச்சே. ௪

பிரபலமாகப் பிழைத்தபெரியோர்கள்
பேரழியாம லிருக்குமென்று
உரியபொருளெல்லாம் சேகரித்துப்பெரும்
உண்டிபோல்வைத்த பணம்போச்சே. ௫

காலமழைக ளில்லாமையிலுள்ள
காணிவிளைவு குறுகினதால்
மூலதிரவியம் யாவுமொருமிக்க
மூட்டையாய்த்தந்த பணம்போச்சே ௬

கைத்தொழிலொன்றும் பழகாமல் பல
கனத்தவர்த்தகஞ் செய்யாமல்
மெத்தெனக்காலங் கழிப்போமென்று மைனர்
மேலேகொடுத்த பணம்போச்சே. ௭

ஆயிரத்துக்கைந்து ஆறுலொருலட்ச
மைன்னூறுவுற்பத்தி யாக்குமென்று
சேயர்க்கறியாமல் தாயார்தந்தையர்
சேர்த்துக்கொடுத்த பணம்போச்சே. ௮

மாமியகத்துடை சீதனமும் மைனர்
காலத்துபாகஞ் சுயார்ச்சிதமும்
க்ஷேமம்பெறவெகு காலத்திற்காய்-துகை
செய்துக்கொடுத்த பணம்போச்சே. ௯

கைம்பெண்கள்ஜீவித காலமட்டு மலர்
கணவர்கள்தக்க முயற்சியுடன்
நம்பிக்கையாகவே அர்பத்திநெட்டானை
நம்பிக்கொடுத்த பணம்போச்சே. ௧௦

எத்தனையோதேவ ஸ்தானபண்டு வெகு
யேழைகட்காக ஸ்கூலுபண்டு
அத்தனைச்சொத்தையும் அர்பத்திநெட்டு
அபக்கென்றுபோட்டு விழுங்கினதே. ௧௧

சென்னையிருபத்தோர் ஜில்லாமுதலந்த
சீர்மைவரையில் பணக்குறிப்பை
கண்ணிவைத்தாற்போல அர்பத்தினெட்டு
கடக்கென்றுபோட்டு விழுங்கினதே. ௧௨

ஆனாலுஞ்சொந்த மனிதருக்கு அந்த
ஜாதியார்வெள்ளை துரைகளுக்கும்
தானாய்கொடுத்திட்ட அற்பத்தினெட்டு
தமிழர்பணத்தை விழுங்கினதே. ௧௩

யாசகத்திற்கீடாய் வீடுவீடுதோறும்
யாசகஞ்செய்த சுதேசிபணம்
மோசமென்றெண்ணாம லெண்ணாயிரம்ரூபாய்
மொத்தமாய்ப்போட்டு விழுங்கினதே. ௧௪

ஏழைப்பணத்தை மிழுங்கியேப்பமிட
யெத்தனைநாளாய்க் கார்த்ததுவோ
பாழுமர்பத்தினெட் டவுசின்யெண்ணத்தை
பகவானுஞ்சொல்லித் துலைக்கலையே. ௧௫

ஜோசியனும்வந்து சொலலலையே ஒரு
சொர்ப்பனங்கூடவுங் காணலையே
பேசிக்கொண்டிருந்த அர்பத்தினெட்டுமேல்
பூட்டையும்போர்ட்டையுங் காட்டினனே. ௧௬

சீமைக்குப்பிரான்ச்சி யவுசாச்சே வெகு
சீராய்பிழைத்த பிழைப்பாச்சே
நாமத்தைப்போடுமென் றெண்ணாமலேழைகள்
நம்பிக்கொடுத்த பணம்போச்சே. ௧௭

துறைமுகவர்த்தகஞ் செய்யுதென்று தூர
தேசமெல்லாங்கப்ப லோடுதென்று
சரியாய்நீதி நடக்குமென்று மன
சாட்சியாய்த்தந்த பணம்போச்சே. ௧௮

பண்டுகள்கட்டி வயறெரிந்து அந்த
பாவிகள்செய்வது மோசமென்று
கொண்டுவந்துபெருங் கட்டடமென்றதில்
கும்பலாய்வைத்த பணம்போச்சே. ௧௯

இனியொருகாற்றெகை வந்திடுமோ ஜெக
தீஸ்வரன்கண்ணுந் திறந்திடுமோ
அனியாயமாக வொழிந்திடுமோ இதை
யாரறிவார்பர மேஸ்வரனே. ௨௦

பாதிக்குப்பாதியும் வந்திடுமோ பல
நாளைக்கருத்து வொழிந்திடுமோ
ஆதிக்குச்சம்மத மாயிடுமோ அதை
யாரறிவார்பர மேஸ்வரனே. ௨௧

பெட்டியில் வைக்கவுங் கள்ளர்பயங் கொட்டி
பூமியில்வைக்கவும் பூதபயம்
எட்டிபலபல வர்த்தகஞ்செய்யவும்
யெத்தனையோபணத் தால்பயமே. ௨௨

வைக்கவுங்காக்கவு மாகாமல் ஒரு
வர்த்தகஞ்செய்யவும் போகாமல்
கைக்குலேசாகவே வட்டிக்காசைப்பட்டு
கடலில்போட்ட கதியாச்சே ௨௩

வயற்றுக்குண்டு களிக்கலையே நல்ல
வஸ்திரங்கட்டித் துலைக்கலையே
நயத்தசொல்லையும் பில்லையுஞ்செக்கையும்
நம்பித்துலைத்த கதியாச்சே. ௨௪

நெய்யாய்ப்பாலாய் தின்னலையேதெய்வ
நேர்த்திக்கடனுங் கொடுக்கலையே
ஐயோமெத்தையும் மேடைகளும்நம்பி
ஆற்றிக்கரைத்த புளியாச்சே. ௨௫

ஆயிரங்காலந்த னானும் பணம்
ஆள்கொள்ளியென்றிதைச் சொன்னதுபோல்
காயிதச்செக்குகள் தூதனுப்பிக்கடற்
கரையைக்காட்டித் துலைந்ததுவே. ௨௬

எண்ணுயிரமயிற் கப்புறமாமிங்கி
லாண்டுதுரைமக்கள் தன்னைநம்பி
பெண்ணுமாணும்பண மெண்ணிக்கொடுத்திப்போ
பாதைப்படுவ ததிசயமே. ௨௭

போனதைப்பற்றிப் புலம்பாதீர் வரும்
பொருளைப்பற்றி மகிழாதீர்
யானைக்குந்தன்னடி சரக்குமென்பதை
யாருமறிவீர் ஜெகத்தீரோ. ௨௮

அருணனுலவு முலகுக்குள்ளே தினம்
ஆவதழிவதைப் பாடுகிற
சிறுமணவூர்முனி சாமிதமிழ்க்கவி
சென்னைபத்ராதிபர் சொன்னதுவே. ௨௯

முற்றிற்று.

உ

கடவுள் துணை.

# துர்முகி வருடத்தின் தொந்திரவு.

இஃது,

சிறுமணவூர்

## முனிசாமி முதலியார்

அவர்களால்

இயற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1905.

27



உ

தேவிசகாயம்.

# துர்முகிவருஷத்தின் தொந்திரவு.

—⋊*⋉—

## தர்மதேவதை வணக்கம்.

### கலி விருத்தம்.

தன்மமானெறி தாட்சண்யமின்றி
துன்பமேபுரி துன்முகித்தன்னுடை
கன்மனத்தின் கடுநடைபேசிட
தன்மதேவதை தாட்டுணையாகுமே.

### எண்சீர் விருத்தம்.

இந்தயுகம்நான்கிலுமே கலியொன்றேக
இருந்தயுகம்மூன்றிலுமே யிமையோர்யார்க்கும்
பந்தமுறத்தொடுவழக்குங் கலகமூட்டும்
படுபாவிநாரதன்றன் பாழ்தவத்தால்
வந்துதித்ததுன்முகியே கொடியபாவி
வாஞ்சையில்லாசண்டாளி முண்டைமோப்பி
நிந்தையிதென்றறியாத காளிநீலி
நீசெய்தவனியாயம் நிகழ்த்துவேனே. 1

கருணையில்லாதுன்முகிமா கொடியதுரோகி
காய்ந்துகாய்ந்தே கெடுத்தாய்துலாத்தின்மட்டும்
பெருமைவருமென்றேநீ விருச்சிகத்தில்
பேய்ந்துபேய்ந்தேகெடுத்தாய் பெட்டைநாரி
அறுவகைநால்தானியமும் விற்றுன்போனா
ஆய்ந்தோய்ந்துபாராம லீலயச்செய்தாய்
தெருவிலினியுன்பேரைச் சொல்லிச்சொல்லி
சிரிக்கவைப்பேன் மூதேவிசீச்சீபோடி. 2

### பல்லவி கண்ணிகள்.

துர்முகியின் தொந்தரைப்பாரீர்—ஐயா
துர்முகியின் தொந்தரைப்பாரீர்

தர்மநெறிசற்றுமில்லா
பர்வதக்குமரியருள்

துர்முகிதொந்தரைசொல்லா
பாலகனடிமுடிமேல் (துர்)

அநுபல்லவி.

சூரியன்முதலாயாறு நேரியில்வாரமிருக்க
கோரரூபதுன்முகியும் தாரதன்மியங்கற்றுச்

சனியுடன்கூடவே பிறந்தாள்—அன்றுமுதல்
பனிகளும்பெய்யாமலே செய்தாள் [ல்

கேட்டைமூட்டைசெவ்வாயென்றுநாட்டிலுளோர்சொல்வதுபோ
ஓட்டமாகதுன்முகியும் ஓடிவரும்பாச்சலிலே (துர்)

சரணங்கள்.

எதிரிலமாவாசை கொணர்ந்தாள்—அந்தப்படியே
முழுதிலுங்கெடுக்கத் துணிந்தாள்

காய்ந்துபோயுலகமெங்குந் தீய்ந்துபோய்க்கொடிசெடியும்
மேய்ந்துபிழையாடுமாடும் மாய்ந்துவிடும்படிதினம்

யெரிப்பாயெரித்துவிட்டதே—முப்புரத்துமீதுசிவன்
சிரிப்பாய்சிரித்துவிட்டதே

இத்தகையெரித்துவிட யெத்தனைநாளாகப்
பத்தமற்றதுன்முகியும் சித்தத்திலிருத்தினதோ

நல்லார்கள் பொல்லார்களில்லையா—இவ்வுலக
மெல்லாமிதற்கேக பகையா

ஆகிலுங்கடல்நெடுகே மேவிடுந்தீவுகள்தோறும்
தாவிடுங்குடிப்பயிரை சாவியாய்க்கரிந்துதிர

இப்படியெரிப்பதடமா—ஒருவிதத்தில்
செப்பவும்நாவுக்கடங்குமா ஒரு

கையினல்டிக்கினுமோர் கையினலணைக்கவென்று
வையகமொழியைப்பொருள் செய்யாமலித்துன்முகிதான்

எட்டுதிக்குமொருதிட்டமாய்—கருப்புசத்தம்
அட்டகாசமாகக்கொட்டுமா இந்த

வாதனையாலேயுலக மாதியந்தமுங்கருப்புச்
சேதியினல்மானிடர்கள் ஞாதியற்றலையும்போதே

வர்த்தகருக்குப்பெருங்கொள்ளையா—அவரவர்கள்
சொன்னதுசொன்னதே விலையா அவர்

மானியம்பாழாகிநவ தானியங்குறைந்திட்டாலும்
ஏனிந்தப்பலசரக்கும் ஜானுக்குமுழவிலைபோல்

ஒன்றிற்கிரண்டாகயேறுமா—எத்தனைநாள்மழையில்லை
யோசித்திட நேரமாகுமா

வாணியன்றன்னுசைபெருங் கோணியுங்கொள்ளாதெனவே
நானிலப்பழமொழியை மானிடரறியாமலே

ஏருமாருய்தானியங்கட்டி—கொஞ்சகொஞ்ச
கூறுகூருய்கடைகளிற் கொட்டி

இப்படியேமானமது யெப்பொழுதுங்காயுமினி
சொற்படிஜெனங்கள்வாயில் தப்படியடிப்போமென்று

யெண்ணமதுகொண்டிருக்கவே—கடவுளிதை
கண்திறந்து பார்த்துவிடவே

சாகரத்தையேகிளப்பி மேகக்குடத்தேநிறப்பி
ஏககாலத்தேகலக்கப் போகவிட்டவாறதுபோல்

அடங்கொண்டிருபத்தெட்டுநாள்—இரவுபகல்
குடங்கொண்டுகொட்டுமதனுல்

மட்டமட்டக்கூரைவீட்டை தொட்டுதொட்டென்றேகிளப்பி
வட்டமானகட்டடத்தை கொட்டிதரைதிட்டமாக்கி

வீடுதோறும்நீர்நுழையுதே—குழந்தைகுட்டி
ஓடஓடப்பின்புரளுதே

இடிந்தவீடொருபுறம் சரிந்தவீடுங்கிளப்பி
யெரிந்தவீடுந்தரையில் படிந்தவீடுங்கூரையும்

எத்தனைகணக்கெடுக்கலாம் முன்சீபாலில்
அத்தனையும் வந்திருக்கலாம்



இ-ம்-நாதநாமக்கிரியை-தாளம்-ஆதி-பல்லவி.

தொந்தரைப்பாரீர் துன்முகிவருடத்தின்
தொந்தரைப்பாரீர்

அநுபல்லவி

சந்ததமுலகினோர் சாற்றுந்துன்முகிவருஷம்
சார்ந்தஅற்பிசிகடை நேர்ந்தகார்த்திகைமுதல் (தொந்)

சரணங்கள்

ஏறக்குறைசற்று யிருபத்திரண்டாண்டாய்
இந்தபரதகண்ட மெங்கினும்பலவாருய்
ஓரோரிடத்தில்மழை யுண்டில்லையென்பதாய்
உரக்கக்காய்ந்தும்பேய்ந்தும் திறக்கவெளிச்சமாகி

துன்முகில்பூராய்
கன்மனம்நேராய்

நெடியவுலகமெங்கும்
நின்றகொடிசெடிகள்
பொடிப்பயிர்நிலமெல்லாம்
போட்டவிரைகளெல்லாம்
பொரிந்திடக்காய்ந்து
யெரிந்திடத்தீய்ந்து

எட்டுதிசையுமிந்த
இருப்புக்குடிகளெல்லாங்
கட்டுதானியமென்ற
பெட்டிபேழைகள்முதல்
விழித்துக்கொண்டாரே
அழித்துக்கொண்டாரே

அங்கங்கேதானியம்
அடுத்தஅடுத்தவூர்கள்
எங்குங்கருப்புக்கூச்சல்
இதுவேசமயமென்று
எழுந்துக்கொண்டாரோ
தொழுதுக்கொண்டாரோ

ஊரெங்குமேழெட்டு
ஒருமட்டிவொருவாரம்
பாரெங்குமொருகட்டாய்
பாபத்துக்கஞ்சாத
படிகுறைத்தாரோ
சரிநிறைத்தாரே

அன்னத்தில்மண்ணிட்டு
அடுத்தோர்மனதுநோகக்
கன்னியர்விதவையர்
காட்டிக்கொடுத்துபின்னே
குறையளப்போனை
புறையுரைப்போனை

பஞ்சமாபாதக
படியைக்குறைத்தளக்க
இஞ்சொல்லாங் குருகூலி
ஈனத்தொழிலினோர்கள்
எண்ணிடவாமோ
யெழுதிடப்போமோ

ராளதுவரையிலும்

நெருப்புக்குளிகராகி
அடுப்புக்குயிரையாகி
புழுதிக்களங்களாகி
பொரியும்கரியுமாகி
பெரியவிருட்சமெல்லாம்
உலகம்

திட்டமாய்காய்ந்திட
கருப்புக்கிடந்தானென்று
கையின்யிருப்பையெல்லாம்
கொட்டிநிரப்பிவைத்து
நாட்டுப்புறங்களெல்லாம்
ஐயா

அழுதிடப்பாதாளம்
தொடுத்துசென்னையின்மட்டும்
யெழுப்பிடவர்த்தகர்
யெழும்பிதுடையைத்தட்டி
பகலுக்குள்பிரபுவாக

படிவிற்றதானியம்
யிருமூன்றுநாளைக்குள்
நாலைந்துபடியென்று
ஆபத்துதுரோகிகள்
ஆத்துமணலுங்கல்லும்
உண்ணும்

பின்னஞ்செய்கொடியோரை
கெடுக்கமுயலும்பேரை
கற்புக்கெடுத்தபேரை
ஒட்டம்பிடித்தபேரை
கண்ணினால்காணுமல்

ராமைந்துபேருக்கும்
நெஞ்சுவலுத்தபேர்க்கும்
யீயாதபேருக்கும்
மானங்கெடுத்தபேர்க்கும்
யேமன்செய்தண்டனை

ஆனைக்குமடிசற்று          மளவுசரக்குமென்று
அவனியோர்சொல்படி          மொழிபோலகிரகங்கள்
மோனைத்தவறிக்கொஞ்சம்          முறைதப்பிநின்றதால்
முடிவினில்சிலதுநாள்          மழைபெய்யாதிருந்ததென்

றெண்ணிக்கொள்ளாமல்          வர்த்தகர்வெகுதுரோகம்
பண்ணிவிட்டார்கள்          இந்த

துன்பத்தொழிலினலே          துகளுற்றவேழைகள்
தொழுதும்அழுதுமெத்த          பழுதற்றகோழைகள்
அன்பின்வழிநீரோடை          அறிந்திட்டபரம்பொருள்
ஆண்டவன்கிருபைக்கண்          ணீண்டிடப்புவிமீது

பேய்ந்ததைப்பாரீர்          உலகமேநீருக்குள்
தோய்ந்ததைப்பாரீர்          நேற்று

சித்திரைமுதலாக          மைத்தாருமாதமாய்
ஜீவகோடிகளியாரும்          சாகாக்கதியில்நேராய்
பத்தியெரியாக்குறை          பண்ணிகார்த்திகைமுதல்
பகலுமிரவுந்தின          மிருபத்துயெட்டுநாள்

படுமழைபிடித்து          கதிர்மதியைக்கூட
பிடரியிலடித்து          அவர்

செத்தார்பிழைத்தாரென்ற          சேதிதெரியாவண்ணம்
சாயைகாலையென்ற          பொழுதுமறியாதிண்ணம்
மொத்தமாயாகாயம்          முழுதுங்கறுத்தவண்ணம்
மூடியிரவும்பகல்          ஜாடிஜாடிவிட்ட

மோசத்தைப்பாரீர்          பூமிமுழுதுங்கொண்ட
கிலேசத்தைப்பாரீர்

காலமழையீதாகில்          காட்டுமேகதிரோணைக்
கங்குலிலென்ருலும்          திங்களுங்காயுமே
சாலஊழிக்காலம்          சந்தித்ததோயென்ன
சங்கடமோபூமி          யெங்கேமுழுகிப்போமோ

கலியுகம்போச்சோ          பிரளயம்பெருகிடும்
காலமிதாச்சோ

இப்படிப்பெருமழை          யெங்குமுழக்கமாக
யெட்டுத்திசைகள்தோறும்          செட்டிவெள்ளம்போக
தப்படியாய்நவ          தானியஞ்சரக்குகள்
தாறுமாருய்விலை          யேறுவதனியாயம்

தொந்தரைப்பாரீர்          துர்முகிவருடத்தின்
தொந்தரைப்பாரீர்.

## கு ம் மி.

காா்த்திகைக்குமுன்னே பஞ்சமென்று ஜனம்
காற்றிலடிபடும் பஞ்சதுபோல்
வேர்த்துக்கிடந்து விருக்கையிலேமழை
வெள்ளத்தைப்பாருங்கள் நேசர்களே. 1
கிருஷ்ணாநதிபெரும் பாளத்திலே யிந்த
துஷ்டமழையேக காலத்திலே
நஷ்டப்படுத்தியே போக்குவரத்தின்று
நாளைக்கும்வெள்ளம் பிரளுவதே. 2
விசாகப்பட்டண மாமந்தத்திக்கு
திசாதிசையெங்கும் பிசலடித்து
விசையதான ரெயிலுங்கிளம்பிட
முதரவடித்ததாம் நேசர்களே. 3
மதுரைஜில்லாவின் மேலூரைநோக்கியே
மாறிவருமுல்லை யாற்றினிலே
அதிரவேபெரும் வெள்ளமெடுத்து
அனேகவிடத்தைக் கிளப்பினதாம். 4
திருநெல்வேலியின் ஜில்லாபுரங்களைச்
சேர்ந்திடுந்தாம்பிர பரணியிலே
நிரம்பவெள்ளம் பெருகிவெகுமனே
நிலங்கள்கூடப் பிளந்ததுவே. 5
வைகையாற்றி லிருகரையுஞ் ஜலம்
வழியழகொண்டு நிலமுழுதும்
துய்யப்பயிர்களுந் தோட்டந்துரைகளுந்
தூக்கியெரிந்தது நேசர்களே. 6
சென்னையைச்சேர்ந்திடும் ராஜதானிமுதல்
ஜில்லாக்களெங்கு மழைபெருக்கம்
இன்னவிதமென்று சொல்லியெழுதவும்
யாரால்முடிந்தது நேசர்களே. 7
திண்டிக்கல்லில்பல பாகத்திலே மழை
தண்டுமிண்டாய்வெகு வேகத்திலே
அண்டையுள்ளசில யேரியுடையவே
கொண்டுபிரண்டுதாம் நேசர்களே. 8
இப்புவிநேரோ வடக்கதிலே மழை
கப்பியேமாருதங் காற்றதிலே
தப்பிவருகிற வேகத்திலேயிங்கு
கப்பலொதுங்கவும் பார்த்ததுவே. 9

காயும்போதெங்குங் கருப்புக்கூச்சலது
கண்டாலுமொப்பு மொருவிதத்தில்
பேயுமிப்போதுங் கருப்புசத்தமானல்
பூமிபொருக்குமோ நேசர்களே. 10
முன்னுளரசர்கள் நாளையிலிவ்வாறு
முழுதுங்கருப்புக் கிடமானல்
அன்னீதமாக மடியத்தடையில்லை
ஆகாதவ்வாறிந்த நாளையிலே. 11
தாதுமுதல்மூன்று ஆண்டுமெட்டுமிந்த
தாரெங்குங்கொண்டப் பெருந்திசில்
மாதுவிக்டோரியுந் தீர்க்கலையா நம்ம
மனம்போல்நித்தமுங் கார்க்கிலையா. 12
தெய்வலோகம் கருப்புரினும் எந்த
தீவாந்திரத்தில் வருப்புகினும்
திவ்யவரசு செலுத்தும்விக்டோரியாள்
தேசத்திலென்றுங் குறைவில்லையே. 13
அன்னையைப்போலே தயவுடையாள் பெற்ற
அப்பனைப்போல குணமுடையாள்
பொன்னெளிபோல நிறமுடையாள் இந்த
பூலோகமெங்கும் புகழுடையாள். 14
முந்தநாள்வேந்தர்கள் தீங்கையும்பாங்கையும்
மூதாக்கள்சொல்லவுங் கேட்டிருப்போம்
அந்தநாள்போலக் குடிஜெனங்களிப்போ
யாரும்பயப்பட வேண்டுதில்லை. 15
எப்படிப்பட்டக் கருப்புரினும் புவி
யெங்குமமழைக்கால் தங்கிடினும்
கப்பல்கப்பலாகத் தானியங்கொணர்ந்துக்
கார்ப்பாள்விக்டோரி மகாராணி. 16
இராணியின்செங்கோ லிருக்களவுமிந்த
ராச்சியமெட்டுத் திசையளவும்
நாணிபயப்பட வேணதில்லை யெந்த
நாளுஞ்சௌக்கிய முண்டாமே. 17
அகவிலைச்சொல்பவ ரேதாழ புவி
யாளும்விக்டோரி சுகம்வாழ்க
ஜெகத்துச்சங்கதி சொல்லுமுனிசாமி
செந்தமிழ்நாளுந் தழைத்தோங்க. 18

துர்முகிவருஷத்தின் தொந்தரவு

முற்றிற்று.



உ

கடவுள் துணை.

# பண்டின் பகழி.

## முதற்பாகம்.

(*)

மானைத்தரித்தோன் மகனெனவந்தொளிர்
ஆனைமுகத்தனை யஞ்சலிசெய்குவாம்.

### அவையடக்கம் வெண்பா.

சென்னைவளரிந்துக்கள் சீர்படவென்றேகருதி
பொன்வளரும்நிதியமைத்த புண்ணியர்கள்—நன்னயமாய்
வார்த்தைபிசகாதளிக்கு மன்பர்களைப்போற்றிசில
தூர்த்தர்களைக் கேள்மனதே துணிந்து.

---

### கும்மி.

சென்னைமுதற்பல தேசங்களின்சொற்ப ஜீவனஞ்செய்திடு மேழைகட்கு, தன்னிகராகவே பொன்னுதவுந்தன சாலையைப்பாருங்க ளன்பர்களே. 1

ஆதியிற்பண்டுக ளேற்படுத்தி-யனை வோரையும்பந்துக்க ளாகவெண்ணி, தீதுசெய்யாமல் செலுத்திவருவோரை தெய்வமென்றெண்ணலா மன்பர்களே. 2

ஏழைகளும்பல பேரும்பிழைக்கவே யெல்லாமுறைகளுந் தானமைத்து, கோழைபடாமல் கொடுத்துரட்சிப்போரைக் கோறித்துதிக்கலா மன்பர்களே. 3

உன்னிதமான பெயர்கொடுத்து-யிந்த வூரினிலெங்கும் நிதியமைத்து, அன்னையைப்போலே வுதவியசற்குணர் அடியைத்துதிக்கலா மன்பர்களே. 4

இவ்விதமாகவே நம்மிடசென்னையி லெங்குமுள்ளநிதி யாவற்றிலும், அவ்வியமில்லா துதவிவருகையில் ஆச்சர்பங்கண்டீரோ வன்பர்களே. 5

புலியைக்கண்டுபூனை சூடிக்கொண்டதுபோல் புல்லரெல்லாம் நிதி யேற்படுத்தி, வலியப்பலர்பொருள் சேகரஞ்செய்து வயிற்றைவளர்க்கிறா ரன்பர்களே. 6

தாரிற்பலரின் பொருள்பறித்து-தன் னாஸ்தியைப்போலே சிலவுசெய்து, பேனைக்கெடுத்து வெளியில்வருவோரை பேசத்துடரலா மன்பர்களே. 7

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்-பல்லவி.

அனியாயங்கேளீர் பண்டுகளேற்பட்ட
அதிசயம் பாரீர்

அநுபல்லவி.

இனியவார்த்தைகள்சொல்லி எந்தெந்தயிடத்திலும்
சனியன்துடர்ந்தாற்போல் ஐம்பங்காட்டிபறிக்கும் அ

சரணங்கள்.

கோட்டுகமிசுகள் மாட்டிவீதிகள்தோறும்
வாட்டமானமெத்தை வீட்டிற்குடியிருந்து
போர்டுபலகைமாட்டி நோட்டீசுதனைக்காட்டி
பேட்டைபேட்டைகள்தோறும் வீட்டிற்புகுந்தவர்
கையிற்கொடுத்து பற்பலயேழைகள்
மெய்யைக்கெடுத்து

தன்வசமாக்கிட தகுந்தமுறைகள்பேசி
முன்னால்போன்சுதண்டம் முக்கால்ரூபாய்தந்தால்
ஐந்நூறுஆயிரம் அடுக்காய்த்தருவமென்று
தன்பெண்டுபிள்ளைக்கு தங்கப்பணிகள்செய்யும் அ

இரளும்பெண்களுக்குச் சேருங்களொருபண்டு
உருண்டசுடலைக்கு ஒழியாமுன்னொருபண்டு
கருமசிலவுக்கு கட்டுங்களொருபண்டு
பருவப்பிள்ளைகட்கு பண்ணுங்கல்யாணபண்டு
பலவிதபண்டு ஏழைபணங்களை
இழுக்கிறபண்டு—பாரிலெவராலும்

சொல்லிமுடியாத சுத்தவெகுளியெல்லாம்
கல்வித்திறமையினால் கனத்தபெயர்கள்வைத்து
பல்லைத்திறந்துகாட்டி பசப்பிக்குடிகளை
தில்லும்பில்லுஞ்செய்து திருடாமற்பிழைக்கிற அ

நம்மைப்படைத்தயீசன் நமக்களிக்காமலே
இம்மையிலேற்பட்டு யிருக்கும்பலவேஷர்
செம்மைப்படச்செய்வா ரொன்றுமனதிலெண்ணி
கும்மியடித்துக்கொண்டே கொடுக்கிறீர்பணமெல்லாம்
ஐயையோவிதியோ உங்களுக்கிது
யார்சொன்னமதியோ—முன்னால்துல்ஸைமான்

ஐந்துக்கீரைந்து ஐம்பதுக்கொருநூறு
ஐந்நூறுக்காயிரம் அப்பால்தருவேனென்று
பஞ்சைப்பனாதியை பணப்பேய்பிடித்தோரை
பட்டம்பகலில்தானே பட்டுக்குல்லாய்போட்ட அ

ஊசமுருக்குவடை உண்டைவிற்றபணம்
தோசையிட்டலிகாப்பி துவரைவிற்றபணம்
தாசிவேசிகள்பணம் தவசுபிள்ளைகள்பணம்
பேசுங்குஜிலிபல தினுசுஆக்கர்பணம்
இதுவெல்லாமிழுத்து ஏழைபணத்தாலே
ஏகமாய்க்கொழுத்து
மாதத்துக்கிரண்டுக்கால் மகாசபைசேர்க்கையில்
ஈசன்செயலினு விறந்தவர்வார்சுகள்
ஆசையாய்ப்பணம்வரு மென்றப்போகேட்கையில்
பேசாதிருஆறு மாதம்செல்லுமென்ற அ
வண்ணாரப்பேட்டையில் வைத்தசாவுபண்டு
திண்ணமாய்க்கலியாண திரவியசேகரபண்டு
இன்னமிரண்டொரு யிடத்திலிருக்கும்பண்டு
கண்ணாரவும்பார்த்தோம் கட்டியுமேமார்ந்தோம்
இதுவென்னமோசம் ஐயையோயிதனாலே
ஏழைகள்நாசம்—இரண்டோர்வருடமுதல்
ஊரார்க்குதவியாக உத்தமகுணமுள்ளோர்
பேரால்ரிஜிஸ்டர்செய்த பெருத்தநிதிகளெல்லாம்
சீராய்நடத்தியே செலுத்திவருகுமவர்
பேரைக்கெடுக்கயிப்போ புறப்பட்டசிலபண்டின் அ

வேறு மெட்டு.

பணம்போச்சே பணம்போச்சே

ஆச்சர்யபெயர்கொடுத் தமைத்தசென்னைபண்டில்சிலர்-ஏச்சிடு
வாரென்றறியா தேழைகள்கொடுத்தபணம் போச்சே

தங்கநகைதாலிஉருவு தவலைசெம்புஅடகுவைத்து-இங்கிர்தமாய்
சாவுபண்டி லெண்ணியேகொடுத்தபணம் போச்சே

தன்கணவன்மாமிமுதல் தாய்தகப்பனறியாமல் - கன்னியர்கள்
ஓடிவெகு கருக்காய்கொடுத்தபணம் போச்சே

பச்சரிசிபுளிமிளகாய் பலதினுசுகடைகள்விற்று-உச்சிதமாய்மா
தமாத மோடியேகொடுத்தபணம் போச்சே

காய்கறியும்பால்தயிருங் கட்டைமுட்டைவிற்றுபணப் - பேய்பி
டித்துமாதந்தோறும் மின்பின்னாய்கொடுத்தபணம் போச்சே

முருங்கைக்கீரையகத்திக்கீரை முள்ளாங்கிபுதினாவிற்று-பெருத்
ததொகைவருமென்று பேசாமல்கொடுத்தபணம் போச்சே

சென்னைபெத்துநாய்க்கன்பேட்டை சேர்ந்தஅக்கிராரமதில்-உ
ன்னிதகல்யாணபண்டுக் கோடியேகொடுத்தபணம்போச்சே

காட்டில்சாணமெடுத்து கைம்பெண்சாதிமுட்டைதட்டி,- வாட்
டமாகசாவுபண்டில் வண்மையாய்க்கொடுத்தபணம்போச்சே

கொண்டவனைத்தூங்கவைத்து கொஞ்சுங்கள்ளபுருஷருடன்-க ண்டயிடத்தில்தூங்குங் கன்னிகள்கொடுத்தபணம் போச்சே
அங்கங்கேகூத்துநெல்குத்தி அரிசிவிற்றுகாசிசேர்த்து-எங்கெங் கேகல்யாணமென்று எழுதியேகொடுத்தபணம் போச்சே
கள்ளுசாராயம்மீனுங் கறிதோசைவடைவிற்று-துள்ளித்துள்ளி பண்டுகளில் தொகையாய்க்கொடுத்தபணம் போச்சே

முதற்பாகம்-முற்றிற்று.

---

## இரண்டாம் பாகம்.

### நூன்முகம்.

(தெம்) பண்டுபணந்தன்னைநம்பி பாரிலுள்ளமானிடர்கள்
கண்டசுகம்பேசுதற்கு கணபதியைத்தோத்திரஞ்செய்

சிங்காரச்சிந்து-பல்லவி.

வேடிக்கைபார்மனதே வீணாசைகொள்ளாதே
வீணாசைகொண்டுவீணாய் நாணமற்றுநிற்காதே

(தெம்) கண்மணியாம்சேயனுக்கு கலியாணஞ்செய்வதற்கு
வண்ணப்பதுமையைப்போல் வஞ்சியரைபார்க்கலுற்றார்

பெண்பார்க்குஞ் சிந்து.

மைந்தனுக்குப்பெண்பார்த்து மணஞ்செய்யவேணுமென்று
இந்தநகர்சுற்றியே பெண்ணிருக்குமிடத்திற்சென்று
சிந்தைமகிழ்ந்துன்மகளை சேயனுக்கேகொடுத்தால்
எந்தனதுமைந்தனைப்போ லிருவரையுங்காப்பேனென்றார்

பெண்வீட்டார் சொல்-தெம்மாங்கு.

சொன்னமொழிகேட்டவுடன் சொல்வதென்னபெண்மனையாள்
என்னபணிநீயளிப்பா யெவ்வளவுஆஸ்தியென்றார்

பிள்ளைவீட்டார் சொல்-சிந்து.

இப்படிநீர்கேட்டதினா லெனக்கோர்குறைவுமில்லை
செப்பிடுங்கல்யாணபண்டு சேர்ந்திடும்நிஷேகபண்டு
தப்பிலாதசாவுபண்டு தாரில்யாத்திரைபண்டு
இப்படியேழெட்டுபண்டு யென்பேராலிருக்குதென்றார்

பெண்வீட்டார் சொல்-தெம்மாங்கு.

தடையுனக்குச்சொல்வதில்லை தந்திடுவேனென்மகளை
இடையிலுள்ளபலமுறையு மேற்பாடுசெய்யுமென்றார்

(சிந்து) எட்டுபண்டுகட்டிருந்தா லென்னகுறைவுனக்கு
எட்டிரண்டுஆயிரமும் பதினாயிரமாச்சே
சட்டமாய்த்தருவேனென்று சாமியைப்போல்தலைவிரித்து
நட்டுவிட்டார்பந்தற்காலும் நம்பகமாய்வந்துகேட்டார்

(தெம்) இன்பமுடன் பண்டில்வந்து யிரண்டாயிரமுந்தாருமென்று
அன்புடனேகேட்டவனே பண்டாபீசிலேதுசொல்வார்
(சிந்து) பேருமென்னஊருமென்ன பேய்போலேதுள்ளுகிறாய்
ஆருக்குக்கலியாண மவசரமாயோடிவந்தாய்
உன்பேரிருக்குதாபாரு பினற்றுகிறாயிங்கேவந்து
ஆரடாகேட்பியூன் அப்பாலேதள்ளுமென்றார்

ஏமார்ந்தவன் சொல்-தெம்மாங்கு.

வயிற்றுக்குந்திண்ணாமல் என் வளவிலேயுஞ்சேர்க்காமல்
பைத்தியம்பிடித்தல்லவோ பாவிகளுக்கழுதுவிட்டேன்

பண்டாபீசர்-சிந்து.

கழுத்தைப்பிடித்துநெட்ட கையொருவனீட்டிவர
இழுத்துவெளியில்விட இன்னொருவனோடிவர
அழுதுவெளியில்வந்து அனைவர்க்குஞ்சொல்லுகையில்
பழுதுவருமென்றுசொல்லி பக்குவமாயுள்ளிழுத்தார்

பண்டாபீசர்-தெம்மாங்கு.

அறுபதுடன் நூறுநெம்பர் அனைவருக்குந்தந்தவுடன்
வருகுமப்பாவுந்தனுக்கு வந்தவுடன் தந்திடுவோம்

பண்டுகட்டி ஏமாந்தவன் கோமுட்டியிடம் சொல்லிபுலம்பல்.

பாவிகளைநம்பியையோ பார்த்துவிட்டேன்பெண்ணெனக்கு
ஈஸ்வரா ஜெக தீஸ்வரா
ஆறுமாதம்செல்லுமென்று அதட்டியேபேசுறார்கள் ஈஸ்
ஆறுதிங்கள்செல்லுமென்று அப்பொழுதேதெரிந்திருந்தால்ஈஸ்
கட்டிவிட்டுஇத்தனைநாள் காலொடியதிரியமாட்டேன் ஈஸ்
ஆறுமாதம்சென்றுமனைக் காசியுங்கொடுக்கவில்லை ஈஸ்
கலியாணஞ்செய்துவைத்தோர் கடனைக்கொடுக்கணுமே ஈஸ்
இதற்குநானென்னசெய்வே னெந்தன் தலைவிதியோ ஈஸ
ஆரையாசெட்டியாரோ-இந்த அனியாயங்கேளுமென்றான் ஈஸ்

கோமுட்டி-புலம்பல்.

ரெண்டுவேலுவொச்சுநகி பண்டுகட்டியேடிஸ்திரா
ஈஸ்வரா ஜெக தீஸ்வரா
நாபில்லபைனபண்டுகட்டி பெள்ளிகூடஅய்யிந்தீரா ஈஸ்
பிட்டகனிநெல்லாயா-ஒக துட்டுகூடயீயலேதே ஈஸ்
தன்றிபைனசாவுபண்டு தயிர்யமுகாகட்டிதிரா ஈஸ்
தன்றிசச்சிதினமுலேயி தத்தினமுசேஸ்தினிரா ஈஸ்
தயிர்யபடிஅடகபோதே தந்துனகிஒஸ்துன்னாரோ ஈஸ்

கோமுட்டிக்கும் தமிழனுக்கும் தர்க்கம்.

இருவருமாய்போயிகேட்போம் இங்கமீடனேனுறுனு ஈஸ்வரா
வாருமையாசெட்டியாரோ ஒரோ வாடுதக்ரனேனுறுனு ஈஸ்வரா

என்னஓய்பயப்படுருய் எமிருசனியுடைய்தி ஈஸ்வரா ஜெகதீஸ்வ
ரெண்டாயிரம்வாங்கித்தாரேன் ஆ பெண்டலந்தனுகுவொத்து ஈஸ்
பக்கத்திலேவந்துநில்லு பாசுகாலருனுபோரு ஈஸ்வரா ஜெகதீஸ்
சகாயஞ்செய்கிறேனையா சாமிதோடுநாகுவொத்து ஈஸ்வரா ஜெக
பயப்படாமல்வாருமையா பைனபடிகொட்டவஸ்துரு ஈஸ்வரா
அடிக்கவந்தால்நானிருப்பேன் அக்கடுண்டேவாடுதானே ஈஸ்வரா

## கும்மி.

கையைப்பிடித்து யிவனிழுக்க செட்டி காள்ளகுதெண்டமு வென்றுசொல்ல, ஐயாசெட்டியாரே வாருமென்றால்நா யப்பதோடுவென்று னன்பர்களே. 1

ஆயிரம்வெள்ளிக்கி ஆசைப்பட்டு அன்புடன்செட்டியைத் தானழைக்க, எமிருசனியுடு பட்டிந்தனிசொல்லி இறைச்சலிட்டோடுவா னன்பர்களே. 2

ஒட்டம்பிடித்தவன் செட்டியைக்கண்டிவன் ஒன்றுஞ்சொல்லாமல் விழித்திருக்க, நாட்டமுடன்முனி சாமிசொன்னுனிதை நாவலர்கண்டு மனங்களிப்பீர். 3

கல்வியிற்சிறந்த ஞானிகட்குங் கவி சொல்லுமுலகிற் புலவருக்கும், அல்லலறுந்தவ வடியார்க்கும் அனைவோர்க்கும்வந்தனம் அன்பர்களே. 4

இரண்டாம்பாகம்-முற்றிற்று.

---

## மூன்றும் பாகம்.

சேராதடா பண்டில் சேராதடா நீ
செத்தாலும் பண்டுபணம் வாராதடா

சீரானகனவான்கள் பண்டுகள்வைத்து இந்த
ஜெகத்திலனைவருக்கு முதவுகின்றார் அவர்
பேரைக்கெடுப்பதற்கு வீதிகள்தோறும்
புறப்பட்டார்சில்லறைப் பிரபுக்களெல்லாம்

கட்டாதடா பண்டு கட்டாதடா வுன்
கலியாணத்திற்கு பணம் கிட்டாதடா

சொன்னபடிநிறைவேற்றும் மானிகள்போலே யிவர்
சுருக்காகபண்டு வைத்தயிடங்களு
சென்னைபெத்து நாயகன்பேட்டையிலே
சிறந்தசாத்தாணியர் வீதியிலே நீ

போடாதடா பண்டு போடாதடா நீ
போட்டாலும் பில்லுகூட வாராதடா

இருபதாநெம்பருள்ள வீட்டிலேதானிவர்
வைத்துவிட்டார்பிள்ளைபெரும் பண்டுவொன்று
போனசுதண்டம்ரெண்டே முக்காலுரூபாய்
பிள்ளைபெற்றுரென்றுவந்தால் பத்தணுதண்டம் நீ சேரா
காரியதரிசிகள் நால்வருண்டு அவர்
காலனுக்கும்அகப்பட மாட்டார்கள்
சுப்ராயசெட்டியுடன் ராகவலுசெட்டி இன்னஞ்
சொல்லுங்குமாரசாமி முதலியொருவர் நீ சேரா
இளையாள்வார்நாய்க்கருட னுல்வரிடத்தில் இந்த
ஏழைசிலர்பிள்ளைபெற்று பணங்கேட்டால்
நாளைபின்னையென்றுதினந் தவணைவைத்தாரிவர்
நம்மால்முடியாதென்று சலித்துவிட்டார் நீ சேரா
ஏமாந்தகுடிகளி னிருப்பிடத்தை நான்
யெடுத்துச்சொல்வேனதை குறித்துக்கொள்வீர்
நம்புலையர்வீதி 38-ம்வீட்டில் இவரை
நம்பியேமாந்தவர் ஆறுபேர்கள் நீ சேரா
அம்மன்கோயில்வீதி மேல்வாடையிலே ஒரு
அம்பட்டனவன்பேர் வெள்ளையென்பார்
செம்மையாய்தருவாரொன்று மனைவியின்மேல்
சீராகக்கட்டியே மாந்துவிட்டான் நீ சேரா
காட்டிலுமோட்டிலும் பேட்டையிலும்யெந்த
ரோட்டிலும்வீட்டிலும் பாட்டைகளிலும்
போர்டுகள்நோட்டீசு மாட்டிக்கொண்டுநம்மை
வாட்டுங்கடையர்களைக் காட்டுகிறேன் நீ சேரா
மதராந்தம்பண்டிலே அகப்பட்டபேரையோ
மாடுகண்வித்துகட்டி புலம்புகிறார்
சதமாய்நடக்குமென்று வெளிச்சம்போட்டாரது
சாமிக்கும்பொறுக்காமல் சிஷ்டையடைந்தார் நீ சேரா
சென்னையடுத்தவண்ணுர் பேட்டையிலே சுமார்
ஐந்நூறுபேர்தலையில் கையைவைத்தார்
இன்னஞ்சிலதுபண்டு வியாச்சியத்தில்போய்
இருக்குதுகோர்ட்டுக்கும் நடக்குதப்பா நீ சேரா
கதைகள்விலாசமுதல் நாடகத்திலும் விடு
கதைகளிலும்பழ மொழிகளிலும்
இதைப்போல்மோசங் கேட்டவரார்பணம்
எடுத்தவரார்பண்டில் கொடுத்தவரார் நீ சேரா
இப்படியிவர்வயர் நிறைந்தவுடன் ஆபீஸ்
எடுத்தமென்றுர்பண்டு கலைத்தமென்றுர்
கைப்பிடியாய்பிடித்து நெம்பவொடுத்தால் கள்ளர்
அடித்தாரென்றுர்பரி கொடுத்தோமென்றுர் நீ சேரா

காஞ்சிபுரத்தில்பண்டு யேற்படுத்தி அந்த
கைக்களவர்மூளையெல்லா முரிந்துவிட்டார்
தான்சாகமருந்து தின்னுவாருன்டோ கடன்
தந்தாலும்வட்டிவரும் பிழைத்திடுவாய் நீ சேரா
அஷ்டபுஜத்திலொரு நிதியமைத்தாரப்பா
அதட்டிமிரட்டிபணம் பரித்துவிட்டார்
கஷ்டஜீவனஞ்செய்யுங் கைக்களரெல்லாமிது
கடனென்றழுதுவிட்டு ஸ்நானஞ்செய்தார் நீ சேரா
நம்புலியர்வீதி கல்யாணப்பண்டிலே சுமார்
நாநூறுபேர் தலையில் கையைவைத்தார்
வம்புகள்விளைந்து பெருங்கூட்டங்கூடி பணம்
வைகையிலேவிட்டமென்று வயறெரிந்தார் நீ சேரா

## ஆனந்தக்களிப்பு.

பணம்பணமென்றலையாதே முன்னால்
பட்டகடனிது வயறெரியாதே பணம்

அரிச்சந்த்ர னெனவிண்டு பேசி யிந்த
வகிலமெட்டுதிசை பறைகொண்டுவீசி
நெறியாளர் நாமெனப் பூசி வாசி
னெஞ்சடை கூட்டங்கள் பலமாச்சி சிச்சீ பணம்

நினைத்தவிடம் போர்டுகள் மாட்டி நிமிஷ
நேரமுஞ் சொக்காயை வாங்காமற் பூட்டி
ஜெனத்தொகை ஆயிரங் கூட்டி ஐயோ
சிறித்துக்கொண் டேநம்மை வாட்டுரூர் சிச்சீ பணம்

கள்ளரொன் றறியாமற் போச்சே வயற்
கட்டிக்கொடுத்தும் வெறும்பாழாய் போச்சே
விள்ளப்போ னால்பெரும் யேச்சே
வீணர்க்குத் தண்டனை நரகமே யாச்சே பணம்

இத்தனைப் பேர்பணம் பறித்தால் இது
எங்கேபோகுஞ் சாப மெல்லாருங் கொடுத்தால்
கர்த்தனே யேநொந்து வெறுத்தால் இந்த
கள்ளர்க்கெல் லாமேழா நரகமேயமைத்தார் பணம்

சொல்லும் சிறுமணவூர் வாழ் நல்ல
சுத்தகுணமுனி சாமியின் தன்னால்
பல்லோர்கள் செய்மோச மெல்லாம் இந்த
பாரறியப்பாடி யச்சிட்டன ரின்னாள் பணம்

பண்டின் பகழி-முற்றுப்பெற்றது.

---

உ

கடவுள் துணை.

## கும்பகோணம்

# மாமாங்கபுராண

சரித்திர வசனம்.

மாமாங்க புராண வசன காவியம்
11-அத்தியாயமுடையது.
விலை அணா 4.



கும்பகோண க்ஷேத்திர சங்கிரக
மாமாங்கதீர்த்த ஐதீகப்பட்டம்
விலை அணா 1.

ஷ ஸ்தலபுராண சரித்திரத்தைக்கொண்டு

சி- முனிசாமி முதலியாரால்

பிரசுரிக்கப்பட்டது.

**Pandit C. Munisawmy Mudaliar's Co.,**
**PERAMBUR BARRACKS POST MADRAS.**
**1909**

சிறுமணவூர்

முனிசாமி முதலியா ரவர்களது

# சொந்தப்பதிப்பு புத்தக விளம்பரம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| பிரபஞ்சவுற்பத்தி தமிழ் | 2 | 0 |
| ஷை இங்கிலீஷில் | 2 | 0 |
| ஷை தெலுங்கில் | 1 | 0 |
| வைத்தியசிகாமணி இ-த | 3 | 0 |
| சோதிடசிகாமணி | 3 | 0 |
| வேதாந்தஜட்ஜிமெண்டு | 1 | 0 |
| உலகவிசித்திரக்கதை | 1 | 0 |
| இன்பரசக்கோர்வை | 1 | 0 |
| கைத்தொழில்சாஸ்திரம் | 1 | 0 |
| விஷவயித்ய சிந்தாமணி | 0 | 12 |
| சரீரசாஸ்திரம் | 0 | 8 |
| சுகந்தபரிமளசாஸ்திரம் | 0 | 8 |
| பதிவிரதைகள்சரித்திரம் | 0 | 12 |
| மூலிகைமர்மம் | 0 | 8 |
| நவகண்ட ஆரூடம் | 0 | 8 |
| நஷ்டஜாதககணிதம் | 0 | 8 |
| சண்டாளர் சகவாசம் | 0 | 8 |
| தெய்வகுணவெளிச்சம் | 0 | 8 |
| இராஜ வம்ச பரம்பரை | 0 | 10 |
| கண்கட்டுவித்தை 1000 | 0 | 10 |
| நாரதர்கலகம் 2-பாகமும் | 0 | 8 |
| அகடவிகடசம்சாரி | 0 | 4 |
| சகுனசாஸ்திரம் | 0 | 4 |
| ருதுஜெனன ஜாதகம் | 0 | 4 |
| திருநேத்திர சிந்தாமணி | 0 | 4 |
| மதிகெட்டாநாடகம் | 0 | 5 |
| வன்னியநாடகம் | 0 | 8 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| திருத்தணி சந்நிதிமுறை | 0 | 8 |
| மாமாங்கபுராண வசனம் | 0 | 4 |
| சுருக்குப்பஞ்சபட்சி | 0 | 4 |
| வயித்திய சத்தகராதி | 0 | 4 |
| சகாதேவர்சோதிடநாடி | 0 | 4 |
| நூறுவருஷபஞ்சாங்கம் | 0 | 2 |
| நவக்கிரகபடம் | 0 | 2 |
| காசிபடம் | 0 | 1 |
| 1008-சிவலிங்கப்படம் | 0 | 4 |
| மாமாங்கப்படம் | 0 | 1 |
| பரமபதப்படம் | 0 | 1 |
| ஏழுமலைவெண்பா | 0 | 1 |
| வியாசன் விபரீதம் | 0 | 4 |
| ருஷியாஜப்பான்யுத்தம் | 0 | 4 |
| கொழுத்தச்சிறிப்பு | 0 | 6 |
| யூநானி அனுபோகவயித் | 0 | 8 |
| ஜகந்தர்ஷா சரித்திரம் | 0 | 8 |
| சமயல் சாஸ்திரம் | 0 | 8 |
| சிவவாக்கியம் 1000. | 0 | 8 |
| இராமாயணம் சுத்தப் பதிப்பு படங்களுடன் | 4 | 0 |
| விராடபர்வம் படம் | 0 | 12 |
| பட்டணத்தார் புராணம் படம் | 0 | 12 |
| சாட்சி ஆக்ட்டு | 0 | 12 |
| தஸ்தாவேஜுகளின் சட்டம் | 1 | 4 |
| தேவஸ்தான ஆக்ட்டு | 0 | 4 |

சிறுமணவூர் - முனிசாமி முதலியார் கம்பெனி,

பெரம்பூர் பாரேக்ஸ் போஸ்டு, மதராஸ்.



உ

சிவமயம்.



# கும்பகோணம்

# மாமாங்கபுராண

## வசனகாவியம்.

(சமஸ்கிருத சுலோகம்.)

சுக்கிலாம்பரதரம்விஷ்ணுஞ்சசிவர்ணஞ்சதுர்புஜம்
பிரசன்னவதனந்தியாயேசர்வவிக்நோபசாந்தயே
கும்பேசகும்பகோணசகுங்குமாருணவிக்கிரக
கரோதும்மகல்யாணங்கௌரிதேகாங்கசோபனம்.

முதலாவது

## சத்திரயாகவத்தியயம்.

நீர்வளமும் நிலவளமும் குடிவளமு மிகுந்த கும்பகோண க்ஷேத்திரமென்னுந் தலத்தில் பூர்வகாலத்தில் அனேகரிஷிகள் புண்ணியகரமாயிழிக்கிற ஆரணியங்களிலே பிரகாசிக்காநின்ற நைமிசாரண்ணிய க்ஷேத்திரத்திலே கௌதமி என்கிற நதிக்கரையில் பனிரண்டு வருஷத்திற்கொரு முறைசெய்யத்தக்க சத்திரயாகத்தைச் செய்ய

இச்சையாயுள்ளவர்களாய் சாஸ்திரப்படிக்கு ஆரம்பித்தார்கள். அவர்களுடைய நாமகரணமாவது கபிலர்-புலகர் - கற்கர்-தேவலர் - பயிரவர் - மூர்க்கவர் - காளவர் - மார்க்கண்டேயர்- நிபண்டகர்-போதாயனர்- வசு-பப்புரு-சவுனகர்-சுகர்-ஜெமதக்கினி-சதானந்தர்-வச்சர்-குச்சர்-அரிதகர்-பராசர்-பிருகு-சகத்தி-பர்வதர்-ரயிப்பியர்- கார்த்தியாயனர்-கௌசிகர்-கௌண்டிமியர்-கௌதமர்-ஆபத்தம்பர்- பரத்துவாசர்-கண்ணுவர்-காணர்-அத்திரி-அங்கிரசர்-சதாத்பர் - கண்டு- சாண்டில்லியர்-முனி-பாற்கவர்-அசிதர்-நாரதர்-சரபங்கர்-சரசர் - திருணபிந்து-சுமந்து-சுதீட்சனர்-அகஸ்தியர்-தேத்தாத்திரையர் - ரோமசர்மர்-தௌமியர்-அஷ்டாவக்கிரர்-தர்மாரமர்-தூம்பர்-காசிபர் இந்த ரிஷிகளும் இன்னமன்னியமாய் அசுரமார்க்காளாயும் அக்கினி கோத்திரனுக்குச் சமானமான பிரகாசமுள்ள ஆகாரங்களுடையவர்களாயும் பிராதகாலத்தில் ஓமஞ்செய்யப்பட்டிருக்கிற அக்கினி கோத்திரங்களுள்ளவர்களாயும் தபசினுல் சமுசயமில்லாதிருக்கிற விரதமுள்ளவர்களாயும் செபஹோம்பர்களாயும் சமஸ்தமான ரிஷிகளும் வேதாத்தியயன விரதத்தில் மிகுந்த அன்புள்ளவர்களாயும் நித்தியாக்கியான கோத்திரிகளாயும் அகங்கார மில்லாதவர்களாயும் காமக்குரோதாதி குணங்களினுலும் சமஸ்த குணங்களினுலும் துறந்து பாவமில்லாதவர்களாயும் ஆசையில்லாதவர்களாயும் மதமில்லாதவர்களாயும் நிர்மலமான அபிப்பிராயமுள்ளவர்களாயும் ஆச்சரியமில்லாதவர்களாயும் சுபமான ஆசாரமுள்ளவர்களாயும் ஆத்தியாத்மிகஆதிதெய்வ ஆதிபூதிகமென்கிற தாபந்திரயமில்லாதவர்களாயும் யோகாப்பியாசர்களாயும் எப்பொழுதும் விரததற்பரர்களாயும் உருத்திராட்ச மாலிகாபர்ணர்களாயும் திரிபுண்டராங்கிதமான சிரசுகளுள்ளவர்களாயும் பஞ்சாட்சரகேஷபர்களாயும் மனுஎக்கிய பூதெக்கிய தெய்வெக்கிய பிதிர்எக்கிய பிர்ம்மெக்கிய மென்கிற பஞ்ச எக்கியங்களுக்கு மிகவும் ஆதாரபூதர்களாயும் தளதளப்போடுங்கூடினபடிக செபமாலையை எப்பொழுதும் அங்குட்டதற்சனியினுல் திருப்பிக்கொண்டேயிருக்கிறவர்களாயும் விநாயகமூர்த்தியோடு கூடிக்கொண்டும் அம்மனேடே கூடிச்கொண்டிருக்கிற சய்பு சம்பந்தமான பஞ்சவிம்சத்திமூர்த்தி பேதங்களிலே வாசஞ்செய்துக்கொண்டிருக்கிற பரமசிவனிடத்தில் பரபரப்போடுங்கூடின பத்தித்தியான முள்ளவர்களான அனேகரிஷி கூட்டங்களும் அஷ்டாட்சர செபங்களினுலேவருவிக்கப்பட்டிருக்கிற சமஸ்தமான சுக்கிரின சம்மந்தங்களுள்ளவர்களாயும் பரமோற்கிஷ்டமாயும் சின்மாத்திர சொரூபமான பரப்பிரமத்தினி

டத்தில் வைக்கப்பட்டிருக்கிற சித்தவிர்த்தியுள்ளவர்களாயும் துளசி மணிமாலையை சிரசிலும் தாமரைக்காய் மணிமாலைபுயங்களிலும் மார்பிலும்தரித்துக்கொண்டிருப்பவர்களாயும் பரமசிவனுடைய லீலாபேதங்களாயும் மங்களகரங்களாயு மிருக்கிற கதையை சுருதி மிருதி புராணங்களிலே சம்மதங்களாயும் சம்சாரத்திலுண்டாகிய பாதைகளுக்கு அவிழ்தங்களாயிருக்கிற சிவசரித்திரங்களை கேட்க கோரிக்கையுள்ளவர்களுமான அனேகரிஷிகூட்டங்களும் கௌதமி நதிக்கரையில் நடக்கும் சத்திரயாகத்தைக்குறித்து வந்திருக்கிறார்கள்.

அப்போது சூரியமண்டலத்துக்குச் சமானமான பிரகாசமுள்ள சூதமா முனிவரைப்பார்த்து அவருக்குப் பிர்ம்மாசனங் கொடுத்துப் புண்ணியவான்களான முனீஸ்பரர்க ளஞ்சலி செய்து ஓய் சூதமா முனிவரே பிரசன்னமாய்விடும் நல்லக் கியானமுள்ளவராயும் நற்குலத்திற் பிறந்தவராயும் கங்காநதியி லுண்டான கமலத்தினுடைய பரிமளங்களோடும் கூடப்பிறந்ததாயும் சதுர்முகப் பிரம்மாவினுடைய பத்தினியாகிய சரஸ்வதி தேவியினுடைய கருணரசப்பிரவாகங்களாற் பூரணங்களான வாக்குவிஷயங்களினாலே நீங்கள் எங்களுடைய பாபதாபங்களைப்போக்கடிக்கவேணுமாகையால் ஓய்மகாமுனியே சமஸ்தமான புராணரகசியங்களையும்நீரறிவீர் சங்குசக்கர கெதானந்த பீதாம்பரதாரியான மகாவிஷ்ணுவினுடையநாபிக்கமலத்திலுண்டான பிரம்மதேவலோக உல்லாசங்களை நீரறிவீர் வியாசமகா முனிவருடைய அனுக்கிரகத்திற்கு பாத்திரமாயிருக்கிர சிவாத்மாவையுடையவ ராகையினாலே இப்பிரபஞ்சத்தில் நீரறியாத வஸ்துக்களொன்றுமில்லை ஐயா மகாத்மாவே பூர்வகாலத்திலேமுராசூரனுக்கு வயிரியான சக்கரபாணியினுடைய முக்கியமான புராண கதாமிர்தங்களை முன்னெங்களுடைய சுரோத்திரங்களினாலே கேட்கப்பட்டதுகள் பிரபஞ்சத்தி லுத்தமமான க்ஷேத்திர தீர்த்தங்களினுடைய சரித்திரங்களையும் மூன்றுலோகங்களிலும் ஆச்சரியகரமான கதாமிர்தமானது உங்களுடைய முகாரவிந்தத்தினின்றும் மிரதமயமாகப் பெருகிற்று அதை நாங்கள் சுரோத்திரமாகின்ற முகங்களினாலே மிகவும் பானஞ்செய்தபோசிலும் எங்களுக்குப் பூரணமானமனத்திர்ப்தியில்லாமலிருக்கின்றதையா முனீஸ்பரரே ஜெகத்பிரகாசமான சூரிய சந்திராக்கினி கோத்திரங்களே நேத்திரங்களாகவுடைய பரமேஸ்பரருடைய கதாமிர்தங்களினாலே திர்ப்தி பண்ணிவையுமையா பூர்வ காலத்திலே புராண சிரேஷ்டமான பிரமாண்ட புராணத்தில் பிரகடனஞ்செய்யப்பட்டிருக்கிற கும்பகோண க்ஷேத்திர வைபவங்களை

சூட்சமாக எங்களுக்குச் சொன்னீர் அந்த வைபவத்தைக் கொஞ்சம் விரிவாகச் சொல்லுமையாவென்று நைமிசாரண்ணியத்தில் சத்திரயாகத்திற்கு வந்து வாசஞ்செய்துகொண்டிருக்கிற அனேகம் பிர்மரிஷிகள் முதலானபேர்கள் ஸ்தோத்திரஞ்செய்தார்கள் அவர்களை சூதமகாமுனிவர் பார்த்து ஓ ரிஷிசிரேஷ்டர்களே உங்களுடையசித்தவிர்த்திகளைத் திறஞ்செய்துகொண்டு சமஸ்தபாபவினசகரமான கும்பகோணஸ்தலமகாத்மியத்தை சாவதானமாய்க்கேளுங்கள் முனீஸ்பரர்களே அந்த கும்பகோண க்ஷேத்திரத்தில் புண்ணியகரமான தீர்த்தங்களையும் சிவமகாத்மியங்களையும் மகாவிஷ்ணுவும்|பிரமனும் மற்றவானவருடைய வரவையு முங்களுக்கு விசேஷமாகச் சொல்லுகிறேன்.

அனேகவிதமான மகாபுண்ணிய ஸ்தலங்களுக்குள்ளே இந்தக் கும்பகோண க்ஷேத்திரமானது உத்தமோத்தமாயிருக்கின்றது. உலகத்தில் மனிதருக்கு போகமோட்சங்களைக் கொடுக்கத்தக்கது சர்வபாவங்களையும் போக்கடிக்கத்தக்கது, சர்வசித்திகரமாயிருக்கிறது, ஈரேழு பதினலு லோகங்களிலும் பிரசித்தமாயிருக்கிறது, சித்தசாரணகெந்தர்வ வித்தியாதரர்களினலே சேவிக்கப்பட்டிருக்கிறது, சமஸ்தமான தேவர்களுக்கும் ஸ்தானமாயிருக்கிறது சகலமுனிவர்களினலே எப்பொழுதும் நமஸ்கரிக்கத்தக்கதாயும் சிவபத்தர்களினலும், தியானயோகிகளான தபசிகளாலுஞ் சூழப்பட்டு சிவகணங்களினலெங்கும் நிறைந்திருக்கின்றது, இயமநியமப் பிராணயாமப் பிரத்தியாகார தியானதாரண நித்தியாசன சமாதியென்கிற அஷ்டாங்கயோக நித்தர்களான சனகசனந்தன் சனற்குமாரர் சனற்சுகாதர முனிவர்களினலே சேவிக்கத்தக்கதாயிருக்கின்றதுஅணிமாதி அஷ்டசித்திகளுக்குஸ் தானமாகயிருக்கிறது லோகங்களைப் பரிசுத்தஞ் செய்யாநின்றது மனிதர்களுக்கு சங்கரமான பாவங்களைப் போக்கடித்து சாந்தியைக் கொடுக்கப்பட்டது தரிசனத்தினலுங் கீர்த்தனத்தினலும் புண்ணியப் பிரதமாயிருக்கிறது தாபத்திரைய சமனமாயிருக்கிறது மனதிற்கு ஆனந்தகாரணமாயிருக்கிறதுமனிதருக்கு சித்தபரிசுத்திசெய்யாநின்றிருக்கிறது தேவர்களினலே எப்பொழுதும் சூழ்ந்திருக்கிறது மதமாச்சரிய லோபங்களில்லாதிருக்கிற இருபிறப்பாளர்களினல் நிறைந்திருக்கிறது பரமசிவனுடைய பதவிக்கு ஸ்தானமா யிருக்கிறது தெரிசனம் பண்ணினவுடனே பக்தசனங்களுக்கு கைலாசத்தைவிடப் புண்ணியகரமாயிருக்கிறது காசி - காள

